## புது வருட அறிவுறுத்தலும், உங்கள் உறுதி மொழியும்
( வலைதள வலைகளில் சிக்கிக் கொள்ளாதீர்கள்)




இப்போதெல்லாம் ஒருவர் நம்மைப் பார்த்துப் பழகிய சில நிமிடங்களிலேயே கேட்பது, ''ஃபேஸ்புக் அக்கவுன்ட் இருக்கா?''... ''வாட்ஸ் அப் நம்பர் தர முடியுமா?'' என்பதுதான்.
செல்போனில் வாட்ஸ் அப் இல்லை என்றாலோ, ஃபேஸ்புக்கில் அக்கவுண்ட் இல்லை என்றாலோ, அவர்களை ஒரு மாதிரியாகத்தான் பார்க்கிறார்கள்.

சமூக வலைதளங்களில் நாம் எந்த அளவுக்கு ஈடுபாட்டுடன் இருக்கிறோம் என்பதைப் பொறுத்துத்தான் நம்முடைய தகுதி, ஸ்டேட்டஸ் இருக்கும் என மற்றவர்கள் நினைக்கும்படி இவை நம் வாழ்க்கையில் ஓர் அங்கம் ஆகிவிட்டன.
சமூக வலைதளங்களால் பல நன்மைகள் இருந்தாலும், இதனால் ஏற்படும் தீமைகள் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றன, குறிப்பாகப் பெண்களுக்கு.
சேலத்தில் வினுப்ரியா என்ற இளம்பெண் தற்கொலை செய்துகொண்டார். அவரது முகத்தை நிர்வாணப் படத்துடன் சேர்த்து மார்ஃபிங் (Morphing) செய்து ஃபேஸ்புக்கில் வெளியிட்டுவிட்டார்கள்.
அவமானம் தாங்காமல் அந்தப் பெண் தற்கொலை செய்துகொண்டார். வினுப்ரியாவுக்கு மட்டுமல்ல, நாட்டில் பலருக்கு இதுபோன்ற பிரச்னைகள் ஏற்பட்டுள்ளன.

வேலூரில் படித்த ஒரு பெண், சென்னையில் தனியார் கம்பெனி ஒன்றில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். ஃபேஸ்புக் அவருக்குப் புதிது. அதில், அவருக்கு ஓர் இளைஞருடன் நட்பு ஏற்பட்டு, அவர்கள் இருவரும் சாட்டிங் செய்ய ஆரம்பித்தனர்.
பிறகு, நேரில் சந்தித்தப் பின்பு நெருக்கம் அதிகமானது. திருமணம் பற்றிப் பேச ஆரம்பித்தபோது அந்த இளைஞன் சரியான பதில் அளிக்கவில்லை. சந்தேகம் அடைந்து அந்த இளைஞரைப் பற்றி விசாரித்தபோது, ஃபேஸ்புக் மூலமாகப் பல பெண்களிடம் அவர் பழகுவது தெரியவந்தது.
தனியார் பள்ளி ஒன்றில் வேலை பார்த்துவந்த ஒரு பெண், தன் கணவரைப் பிரிந்து இருந்தார். ஃபேஸ்புக்கில் அவர் சோகமாகவும், தன் தனிமையை வெளிப்படுத்தும் விதமாகவும் பதிவுகள், படங்கள் ஷேர் செய்வதுமாக இருந்திருக்கிறார்.
அந்தப் பதிவுகளைப் பார்த்த ஒருவர், அந்தப் பெண்ணுடன் பேசத் தொடங்கினர். வீடியோ சாட்டிங்கில் ஒருவரை ஒருவர் வர்ணித்துக்கொள்வதும், ஆபாசப் பேச்சுகளும் அதிகமாகின.
சில மாதங்களில் அந்தப் பெண்ணின் கணவர் அவருடன் சேர்ந்து வாழ நினைப்பதாகக் கூறியுள்ளார். இவரும் அதை ஏற்று ஒன்றாக வாழத் தொடங்கினார். அதன் பிறகு, ஃபேஸ்புக் நண்பரிடம் பேசுவதை நிறுத்திவிட்டார். ஆனால், இருவரும் நட்பாகப் பேசிய காலத்தில் எடுக்கப்பட்ட வீடியோவை உன் கணவருக்கு அனுப்பிவிடுவேன் என அந்த ஆசாமி மிரட்டி இருக்கிறார். இந்த விஷயத்தை அவளால் கணவரிடம் சொல்ல முடியாமல் தவித்தார். கடைசியில் அந்தப் பெண், மனநிலை பாதிக்கப்பட்டார்.

ஹைதராபாத்தைச் சேர்ந்தவர் ஹரீஷ். அவருக்கு ஃபேஸ்புக்கில் ஒரு பெண்ணிடம் இருந்துவந்த ரெக்வஸ்ட்டை ஏற்றுக்கொண்டார். பிறகு அந்தப் பெண்ணே இவரிடம் பேசத் தொடங்கியுள்ளார். சில நாட்களில், தனக்கு யாரும் இல்லை எனவும், உங்களைத் திருமணம் செய்ய விரும்புகிறேன் என்று ஹரீஷிடம் கூறியுள்ளார்.

அந்தப் பெண் மீதான பரிதாபத்தில் ஹரிஷும் திருமணத்துக்கு ஒப்புக்கொண்டுள்ளார். உடனே அந்தப் பெண், தனக்கு மூன்று லட்சம் ரூபாய் கடன் உள்ளது என்றும், அந்தக் கடனை அடைத்துவிட்டால் திருமணம் செய்யலாம் எனவும் கூறியுள்ளார்.
ஹரிஷும் பணம் அனுப்பியுள்ளார். தொடர்ந்து பணம் கேட்டுக்கொண்டே இருந்ததால் சந்தேகம் வந்து அவரின் மொபைல் நம்பரை டிராக் செய்தபோது, அந்தப் பெண் கொடுத்திருந்தது போலி முகவரி என்பதும், இதுபோல அந்தப் பெண், பல ஆண்களை ஏமாற்றி இருப்பதும் தெரிய வந்துள்ளது.
சமூக வலைதளம் என்பது மிகப் பெரிய பொக்கிஷம். அதை நாம் எந்த விதத்தில் பயன்படுத்துகிறோம் என்பதுதான் முக்கியம். தனித்தனித் தீவுகளாகப் பிரிந்துகிடக்கும் மனிதச் சமூகம் குழுக்களாக இணைய, அடித்தளம் அமைப்பவை சமூக வலைதளங்கள்.
எத்தனையோ பிரச்னைகள் சமூக வலைதளங்கள் மூலமாகத்தான் வெளிச்சத்துக்கு வருகின்றன. அதே சமூக வலைதளங்களால் தான் பலரும் தங்கள் வாழ்க்கையை, எதிர்காலத்தை இழக்கிறார்கள்.
சமூக வலைதளங்களால் ஒரு பெண் பாதிக்கப்பட்டதும், இந்தச் சமூகம் அந்தப் பெண்ணைத்தான் குறை சொல்கிறது. 'பொம்பளப் பிள்ளைன்னா அடக்கமா இருக்கணும்? இவளுக்கு எதுக்கு ஃபேஸ்புக்? அதுல எதுக்கு இவளோட போட்டோவைப் போடணும்? ஆம்பளைப் பசங்களோட இவளுக்கு என்ன ஃப்ரெண்ட்ஷிப்?' என்று கேள்விகளால் துளைத்தெடுக்கிறார்கள்.

தெருவில் ஈவ்டீசிங் செய்கிறார்கள் என்பதற்காகப் பள்ளிக்கூடம் போகக் கூடாது என்பார்களா ? கோயிலுக்குப் போகும்போது கிண்டல் செய்கிறார்கள் என்பதற்காகக் கோயிலுக்குப் போகக் கூடாது என்பார்களா ?
எத்தனையோ பிரச்னைகள் இருக்கும்போது, சமூக வலைதளத்தை மட்டும் குறை சொல்வதில் நியாயம் இல்லை. புதிதாக எது வந்தாலும் குறைசொல்பவர்கள் சொல்லத்தான் செய்வார்கள். ஒரு காலத்தில் சுடிதாருக்கும் ஜீன்ஸுக்கும் நைட்டிக்கும் எதிர்ப்பு இருக்கத்தான் செய்தது. உடை என்ன வடிவமாக இருந்தாலும் பரவாயில்லை, அது ஆபாசமாகத்தான் இருக்கக் கூடாது என்கிற அளவுக்கு சமூகம் இன்று மாறி இருக்கிறது.
இந்தப் பிரச்னை குறித்து பத்திரிகையாளர் கவிதா முரளிதரனிடம் கேட்டதற்கு, ''ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும், தெரியாத நபர்களிடம் தேவை இல்லாமல் சாட்டிங் செய்யக் கூடாது. அங்கிருந்துதான் பிரச்னையே ஆரம்பிக்கிறது.

உங்கள் புகைப்படத்தை உங்களுக்கு நம்பிக்கையான ஒருவருக்கு நீங்கள் அனுப்பினாலும் கூட, அவரது கவனக்குறைவின் காரணமாக அவரிடம் இருந்து வேறு யாருக்கோ உங்கள் புகைப்படம் போய்விட வாய்ப்பு உள்ளது.
எனவே, அதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆபாசப் புகைப்படங்கள் கொண்ட இணைப்புகள் வந்தால் அதனுள் போக வேண்டாம். தங்கள் குடும்பத்தினரின் புகைப்படங்களைத் தேவையில்லாமல் பதிவிட வேண்டாம். தெரியாத நபர்களின் புகைப்படங்களுக்கு லைக் கொடுக்க வேண்டாம்" என்றார்.
சமூக வலைதளங்கள் மூலமாக பிரச்னை ஏற்பட்டால் எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்பது பற்றி வழக்கறிஞர் அஜிதாவிடம் கேட்டபோது, ''சமூக வலைதளங்களில் யார் ஒருவர் பாதிக்கப்பட்டாலும், முதலில் காவல் துறைக்கு தெரியப்படுத்த வேண்டும். நடந்த எல்லாவற்றையும் சொல்வதன் மூலம் அதற்கான தீர்வும் நடவடிக்கையும் உடனடியாக எடுக்கப்படும்.

தொழில்நுட்பம் புதிதாக வரும்போது, அதன் மூலமாக ஏற்படும் பிரச்னைகளைக் களைவதற்கான சட்டங்களைப் பற்றி அரசும், காவல் துறையும் அறிந்திருக்க வேண்டும். தொழில்நுட்பங்கள் சார்ந்த விழிப்பு உணர்வு காவல் துறைக்கு வழங்கப்பட வேண்டும்.
கணினி தொழில்நுட்பச் சட்டம் 2000-ன்படி, ஒருவர் மற்றொருவரை அவமானப்படுத்தினால், அநாகரிகமாகவும் கேவலமாகவும் சித்தரித்து வெளியிட்டால், ஜாமீனில் வெளிவர முடியாத அளவுக்கு அது ஒரு தண்டனைக்குரிய குற்றம்" என்றார்.
சமூக வலைதளங்களைச் சுமுகமாகப் பயன்படுத்துவது நம் கையில்தான் இருக்கிறது - சு.நந்தினி
வாட்ஸ் அப்பில் அஜி என்பவர் அனுப்பி இருக்கும் விழிப்பு உணர்வுக் குறிப்புகள்!
ஃபேஸ்புக்கில் தங்களின் தொலைபேசி எண், மின் அஞ்சல் முகவரி, பிறந்த தேதி, சொந்த ஊர், படித்த கல்லூரி போன்ற தகவல்களைப் பதிவிடாமல் இருப்பது நல்லது.
பதின்பருவப் பிள்ளைகளின் பெற்றோர்கள் தங்களின் பிள்ளை எந்த நேரமும் செல்போனை நோண்டிக்கொண்டே இருந்தால் அவர்களைக் கவனமாகக் கண்காணிக்க வேண்டும்.
அறிமுகம் இல்லாதவர்களிடம் நமது அந்தரங்க விஷயங்கள், குடும்பப் பிரச்னைகள் பற்றிப் பகிர்ந்துகொள்ளாதீர்கள். அதேபோல் பிறரிடம் அவர்களின் அந்தரங்கத்தை அறிந்துகொள்ள முயற்சி செய்யாதீர்கள்.
free recharge # என்று லிங்க் வந்தால் அதை உதாசீனப்படுத்திவிடுங்கள். இல்லையென்றால், உங்கள் மொபைலில் உள்ள புகைப்படங்கள் உட்பட அனைத்து விவரங்களையும் எடுத்துவிடுவார்கள்.

தனியார் பிரவுசிங் சென்டர்களில் உங்களது ஃபேஸ்புக், இமெயில் ஆகியவற்றைப் பயன்படுத்தினால் அல்லது உங்கள் புகைப்படங்கள், பயணச் சீட்டு, சான்றிதழ்கள் போன்றவற்றைப் பதிவிறக்கம் செய்தால், அவற்றை அந்தக் கணினியில் இருந்து நீக்கிவிட்டோமா என்பதனை நன்கு உறுதி செய்துகொண்டு வெளியே வாருங்கள்.
ஃபேஸ்புக் மூலமாக ஏற்படும் பிரச்னைகள் குறித்தும், அதுபோன்ற பிரச்னைகளில் சிக்காமல் தவிர்ப்பதற்கும் மனநல மருத்துவர் சுனைனா வழங்கும் ஆலோசனைகள்:
''மொபைல் போனில் ஒரு அப்ளிகேஷனைப் பதிவிறக்கம் செய்யும்போது, உங்கள் போனில் உள்ள விவரங்கள், புகைப்படங்கள், தொடர்பு எண்கள் என அனைத்தும் அந்தக் கம்பெனியில் பதிவுசெய்யப்படும் என்பது உங்களுக்குத் தெரியுமா ?
இதுகுறித்த விளக்கம், விவரப் பட்டியலில் தெளிவாகக் கொடுக்கப்பட்டிருக்கும். அதைப் படித்துவிட்டு அந்த அப்ளிகேஷன்களைப் பதிவிறக்கம் செய்யலாம்.
சமூக வலைதளங்களில் புகைப்படங்களைப் பதிவிடுவதால் அவற்றை எடுத்து மார்ஃபிங் செய்வதற்கு வாய்ப்புகள் உள்ளன. எனவே, சமூக வலைதளங்களில் புகைப்படங்களைப் பதிவிடும்போது அவற்றை யார் பார்க்கலாம் என ஆப்ஷனைத் தேர்வு செய்யலாம்.
சமூக வலைதளங்களில் ஏராளமான போலி கணக்குகள்
(Fake IDs) உள்ளன. எனவே, ஃப்ரெண்ட் ரெக்வஸ்ட் வந்தால், நன்கு தெரிந்தவர்களாக இருந்தால் மட்டும் ஏற்பது நல்லது.
நாம் ஓர் இடத்துக்குப் போவதற்கு முன்பாக எங்கு போகிறோம் என்று சமூக வலைதளங்களில் பதிவிடுவது அல்லது போன இடத்தில் இருந்து புகைப்படங்கள் எடுத்து வெளியிடுவது போன்றவற்றில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

சமூக வலைதளங்களின் மூலமாக ஒருவரின் விவரங்களைப் பெறவோ, அவர்களைப் பின்தொடரவோ முடிகிறது. அது சிலரைத் துன்புறுத்தவும் வழிவகுக்கிறது. அதுவே, ஒருவரின் குற்றத்தைக் கண்டுபிடிக்க காவல் துறைக்கு உதவியாகவும் உள்ளது.
வேலைவாய்ப்புகள் பற்றிய விவரங்கள் அறிந்துகொள்ளவும், ஆபத்தான மற்றும் இடர்பாடான நேரங்களில் பிறருக்கு உதவி செய்யவும் ஃபேஸ்புக் போன்ற சமூக வலைதளங்கள் பயன்படுகின்றன.''
சமூக வலைதளம் பற்றி நன்கு அறிந்தவர்களுக்கும் இது பிரச்னையாகத்தான் அமைகிறது. கல்லூரி மாணவி ஒருவர், தனது காதலனுக்கு நிர்வாண வீடியோ ஒன்றை வாட்ஸ் அப் மூலம் அனுப்பி இருக்கிறார். அது தவறுதலாக அவருடைய அப்பாவின் வாட்ஸ் அப் நம்பருக்கு ஷேர் ஆகிவிட்டது.
அதைப் பார்த்து அதிர்ந்த அவர், இந்தப் பெண்ணை அழைத்துக் கண்டித்துவிட்டு, அந்த வீடியோ பதிவை டெலிட் செய்துள்ளார். அப்போது அது அவரது நண்பர்கள் குரூப்பில் ஷேர் ஆகிவிட்டது. அதனால், நண்பர்கள் வட்டாரத்தில் அவர் அவமானங்களைச் சந்தித்தார். இதனால் அப்பா, மகள் பந்தமே பாதிப்புக்கு உள்ளானது.
நீங்கள் சமூக வலைதளத்தில் என்ன செய்தாலும் உலகமே உங்களை உற்று நோக்குகிறது.
(விகடன் பதிவு தளத்திலிருந்து)

**மெட்டா என்னும் மெய்நிகர் உலகம்** .

( கவனிக்கவும் மெய்யுலகம் அன்று மெய்நிகர் உலகம் )




உலகில் முன்னணி சமூக வலைதளமான ஃபேஸ்புக் தனது இணைய நிறுவனங்களான வாட்ஸ்அப், இன்ஸ்டாகிராம் போன்றவற்றுடன், ஒரே குடையின் கீழ் இருந்தபோதும் இந்த நிறுவனங்களில் பொதுப் பெயராக பேஸ்புக் என்பதே புழக்கத்தில் இருந்தது.

இன்டர்நெட்டின் அடுத்த புரட்சிக்கு பேஸ்புக் தயாராகிவிட்டதை குறிக்கும் வகையில் அதன் தாய் நிறுவனத்திற்கு ' மெட்டா ' என்னும் புதிய பெயரை அதன் நிறுவனர் மற்றும் தலைமைச் செயல் அதிகாரியான மார்க் ஜுக்கர்பெர்க் சமீபத்தில் அறிவித்துள்ளார்

ஃபேஸ்புக் நிறுவனம் தனது பெயரை 'மெட்டா' (Meta) என்று மாற்றி இருக்கிறது. மைக்ரோ சாஃப்ட், டென்சன்ட், பைடு டான்ஸ், அலிபாபா என சர்வதேச தொழில்நுட்ப நிறுவனங்கள் மெட்டாவர்ஸை (Metaverse) நோக்கி பயணிப்பதை தங்கள் இலக்காக அறிவித்துள்ளன.

இந்தியாவில் ரிலையன்ஸ் நிறுவனம் தனது தொழில் செயல்பாட்டுக்கு மெட்டாவர்ஸை நாடத் தொடங்கியுள்ளது. பெங்களூரில் மெட்டாவர்ஸ் தொடர்பான ஸ்டார்ட் அப் நிறுவனங்கள் அதிக எண்ணிக்கையில் உருவாகத் தொடங்கி

யுள்ளன. மெட்டாவர்ஸ்... மெட்டாவர்ஸ்... மெட்டாவர்ஸ்.

அப்படியென்றால் என்ன?

இரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு தொலைபேசி என்று ஒரு சாதனம் உருவாக்கப்படும் என்றும் அதன் மூலம் உலகின் ஒரு மூலையில் இருப்பவர் மறு மூலையில் இருப்பவரிடம் பேச முடியும் என்றும் அக்காலகட்டத்தில் வாழ்ந்த மக்கள் எதிர்பார்த்திருப்பார்களா?

அவ்வளவு ஏன், வீடியோ கால் என்றொரு வசதி வரும் என்றும் அதன் மூலம் எங்கோ ஒரு மூலையில் இருப்பவரிடம் திரையில் தோன்றி பேச முடியும் என்றும் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, பொதுச் சமூகம் எதிர்பார்த்திருக்குமா? ஆனால், தற்போது வீடியோ கால் என்பது நம் அன்றாடத்தோடு கலந்துவிட்டது.

சுருக்கமாகச் சொல்லப்போனால், ஆடியோ காலின் தொடர்ச்சி வீடியோ கால் என்றால், வீடியோ காலின் தொடர்ச்சிதான் மெட்டாவெர்ஸ். எனில், அந்தத் சூழல் என்னவாக இருக்கும்? நாம் திரைகளின் வழியாக அல்லாமல், நேரிலே இருப்பதுபோலான அனுபவத்தைத் தரக்கூடியாதாக அந்தச் சூழல் இருக்க வேண்டும்.அப்படித்தானே? ஆம்.

அந்தச் சூழல்தான் மெட்டாவர்ஸ். மெட்டா என்றால் அப்பால் என்று அர்த்தம். வர்ஸ் என்றால் பிரபஞ்சம். எனில், மெட்டாவர்ஸை இப்பிரபஞ்சத்தைத் தாண்டிய ஒரு உலகம் என்று அர்த்தப்படுத்திக்கொள்ள முடியும்.

மெட்டா உலகம் எப்படி இருக்கும்?

மெட்டா உலகைப் புரிந்துகொள்ள முதலில் நாம் கேமிங் உலகைப் புரிந்துகொள்ள வேண்டும். வீடியோ கேம்கள்தான் மெட்டாவர்ஸுக்கான அடிப்படை.

நாம் நினைப்பதை திரையினுள் நம்மால் செய்ய முடிகிறது என்ற உணர்வுதான் மேரியோ முதல் பப்ஜி வரையிலான அனைத்து வீடியோ கேம்களின் தாத்பரியம். மிகப் பிரபலமான 'ஜிடிஏ: கிராண்ட் தெஃப்ட் ஆட்டோ' (Grand Theft Auto – GTA) கேமை எடுத்துக்கொள்வோம்.

நியூயார்க் சிட்டி, சான் பிரான்சிஸ்கோ, மியாமி ஆகிய நகரங்களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட புனைவு நகரங்களில் கார்களை திருடிச் சென்று ஊர் சுற்றுவதுதான் அந்தக் கேமின் கரு.

எதிரே வரும் காரை நிறுத்தி, அதன் உரிமையாளரிடமிருந்து அந்தக் காரை வழிப்பறி செய்ய நாம் நினைக்கும்போது அதற்கேற்ற வகையில், ஜாய்ஸ்டிக்கில் உள்ள பட்டன்களை அழுத்தி நம் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்கிறோம்.

இப்போது இப்படி கற்பனை செய்து பாருங்கள். ஜிடிஏ கேமில் வரும் உலகினுள் நாம் பயணித்தால் எப்படி இருக்கும்? நவீன கார்கள், விடுதிகள் என அந்த புனைவு நகரில் பயணிக்கும் அனுபவம் நமக்கு நேரடியாகவே கிடைக்கும், அல்லவா. அந்த உலகம்தான் மெட்டாவர்ஸ்.

கேமிங்கை உதாரணம் காட்டியதால், மெட்டாவர்ஸை வீடியோ கேம்களோடு சுருக்கிப் பார்த்துவிடக் கூடாது. மெட்டாவர்ஸ் மூலம் தமிழ்நாட்டில் ஒரு பெயிண்ட் உறிந்த அறையில் அமர்ந்துகொண்டு, பாரிஸில் உள்ள பூங்காவில் நண்பர்களுடன் நடை செல்லலாம்,

வீட்டில் இருந்தபடியே, ஸ்பெயினில் உள்ள நடனக் குழுவினருடன் சேர்ந்து நடனமாடலாம், இமய மலையில் தியானம் செய்யலாம். உலகின் தலைசிறந்த பேராசிரியர்களின் வகுப்புகளில் பங்கேற்கலாம். இவ்வாறாக, நம் அன்றாடங்களில் மெட்டாவர்ஸ் அங்கம் வகிக்கும்.

மருத்துவம், பொறியியல் போன்ற துறைகளில் மெட்டாவர்ஸ் மிக முக்கியப் பங்கு வகிக்கும். கல்வி மற்றும் வர்த்தகத்தில் அது மிகப் பெரும் மாற்றத்தைக்கொண்டு வரும்.

மெட்டாவர்ஸை சாத்தியப்படுத்தும் தொழில்நுட்பங்கள்

வீஆர் (Virtual Reality - VR), ஏஆர் (Augmented Reality - AR), எம்ஆர் (Mixed Reality - MR). இவைதான் மெட்டாவர்ஸைக் சாத்தியப்படுத்தும் தொழில்நுட்பங்கள். ஏஆர் (Augmented Reality - AR) தொழில்நுட்பமானது நம் நிஜ உலகத்தில் பார்க்கும் பொருட்களின் மீது டிஜிட்டல் லேயரை உருவாக்கும்.

அதாவது, அந்தத் தொழில்நுட்பத்துடன் கூடிய கண்ணாடியை அணிந்து நிஜ உலகைப் பார்க்கும்போது அங்கு இருக்கும் மனிதர்கள், பொருள்கள் தொடர்பான தகவல் அவற்றின் அருகில் தோன்றும்.

நிஜ உலகில் உள்ள பொருட்களின் தகவல்களை மட்டுமல்ல, டிஜிட்டல் உருவங்களையும் ஏஆர் தொழில்நுட்பம் நிஜ உலகில் ஒரு மேலடுக்காகத் தோன்றச்செய்யும். பல ஹாலிவுட் படங்களில் இத்தகைய காட்சிகளைப் பார்த்திருக்கக் கூடும்.

‘போக்கேமான் கோ’ கேம் கேள்விப்பட்டிருப்பீர்கள். விளையாடக்கூட செய்திருப்பீர்கள். அது ஏஆர் தொழில்நுட்பத்தை அடிப்படையாகக்கொண்ட கேம்தான்.

ஏஆர் என்பது நிஜ உலகில் டிஜிட்டல் லேயரை உருவாக்கிறது என்றால், நம்மையே வேறு டிஜிட்டல் உலகத்துக்கு இட்டுச்செல்லும் வீஆர் (Virtual Reality - VR) எனப்படும். வீஆர் கண்ணாடியை அணிந்ததும் நாம் இருக்கும் நிஜ உலகம் நம் கண்ணிலிருந்து மறைந்துவிடும்.

அந்தக் கண்ணாடி வழியே புதிய டிஜிட்டல் உலகம் நம் முன் உருவாகும். அதாவது, நீங்கள் தமிழகத்தில் ஒரு அறையில் இருந்தபடி இமய மலையில் நடமாட முடியும்.

ஏஆர் தொழில்நுட்பத்தைப் பொருத்தவரையில் நிஜ உலகின் மீது மேலடுக்காகத் தோன்றும் டிஜிட்டல் லேயரை நம்மால் பார்க்க மட்டும்தான் முடியும். அதனுடன் ஊடாட முடியாது. அந்த ஊடாட்டத்தை சாத்தியப்படுத்தும் தொழில்நுட்பம்தான் எம்ஆர் (Mixed Reality - MR) எனப்படுகிறது. மொத்தமாக இந்த தொழில்நுட்பக் கட்டமைப்பு எக்ஸ்ஆர் (Extended Reality -XR) என்று அழைக்கப்படுகிறது.

மெட்டாவர்ஸ் கேம்கள் பயன்பாட்டுக்கு வந்து விட்டன. தற்போது அலுவலக மீட்டிங் தொடர்பான கட்டமைப்பை மெட்டாவர்ஸில் உருவாக்கியிருக்கிறார்கள்.

நாற்காலி, மேஜை, சுவரோவியங்கள் கொண்டதாக அந்த மீட்டிங் ரூம் இருக்கும். அலுவலக அதிகாரிகள் தங்கள் வீட்டில் இருந்தபடி, முகத்தில் மெட்டாவர்ஸுக்கான கண்ணாடியை மாட்டிக்கொண்டால், அவர்கள் அனைவரும் அவதார் உருவத்தில் (அவதார் என்றால் நம் உருவத்தின் கார்ட்டூன் தோற்றம்) அந்த மீட்டிங் அறைக்கு உள்ளே வந்துவிடுவார்கள்.

தற்போது நாம் ஜூம், கூகுள் மீட் போன்றவற்றில் திரை வழியே முகம் பார்த்து உரையாடுகிறோம். ஆனால், மெட்டாவர்ஸில் சக பணியாளர்களுடன் அலுவலக மீட்டிங் அறையில் நேருக்கு நேர் சந்தித்து உரையாடுவதுபோல உணர்வைப் பெற முடியும்.

பலருக்கு இந்த விசயங்கள் எல்லாம் அறிவியல் புனைவுகள் போலவும், நடைமுறையில் சாத்தியமில்லை என்றும் தோன்றக்கூடும். நம்புங்கள். இவையெல்லாம் இனி வரவிருக்கும் தொழில்நுட்பங்கள் அல்ல. ஏற்கனவே வந்துவிட்ட தொழில்நுட்பங்கள்.

மைக்ரோசாஃப்டின் ஹோலோலென்ஸ், ஆப்பிள் நிறுவத்தின் ஏஆர்கிட், மேஜிக் லீப் நிறுவனத்தின் புதிய தயாரிப்புகள் இத்தகைய தொழில்நுட்பங்களைக் கொண்டவைதான். மெட்டாவர்ஸை பரவாலான பயன்பாட்டுக்குக் கொண்டுவரும் வகையில் அதற்கான தொழில்நுட்பக் கட்டமைப்பை உருவாக்குவதுதான் இனி செய்யப்பட வேண்டியது.

இன்னும் பத்து ஆண்டுகளில் மெட்டாவர்ஸ் பரவலான பயன்பாட்டுக்கு வரக்கூடும் என்று அது தொடர்பான முதலீடுகளில் ஈடுபடுபவர்கள் கூறுகின்றனர். 2020-ம் ஆண்டில் நிலவரப்படி, உலக அளவில் மெட்டாவர்ஸின் சந்தை மதிப்பு 47.69 பில்லியன் டாலர். அது 2028-ம் ஆண்டில் 828.95 பில்லியன் டாலராக விரிவடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

கடந்த ஏப்ரல் மாதத்தில் இதே வணிக வீதி பக்கத்தில், ‘மெய்நிகர் உலகில் உங்களுக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது?’ என்றொரு கட்டுரை வெளியாகியிருந்தது. என்எஃப்டி, கிரிப்டோ கரன்ஸி போன்றவை எப்படி செயல்படுகின்றன, தற்போது அதன் போக்கு என்ன என்பதைப் பற்றிய கட்டுரை அது.

அந்தக் கட்டுரையில், தமிழகத்தில் பிறந்து சிங்கப்பூரில் வசித்துவரும் விக்னேஷ் சுந்தரேசன் பற்றி குறிப்பிடப்பட்டிருக்கும். அவருக்கு நிஜ உலகில் பெரிய அளவில் சொத்து கிடையாது. ஆனால், கிரிப்டோ உலகில் பில்லியன் டாலருக்கு மேல் சொத்துக்களைக் கொண்டிருக்கிறார். அவர் இந்திய மதிப்பில் ரூ.525 கோடி கொடுத்து பீப்பிள்ஸ் என்ற ஓவியரின் டிஜிட்டல் ஓவியங்களை வாங்கினார்.

தவிர, மில்லியன் கணக்கில் பணம் செலுத்தி மெய்நிகர் உலகில் நிலம் வாங்கியுள்ளார். அந்தப் புகைப்படத்தைக் கொண்டு அவர் என்ன செய்யப்போகிறார் என்றும், மெய்நிகர் உலகில் நிலம் வாங்கி என்ன லாபம் என்றும் பலரும் குழம்பினர்.

மெட்டாவர்ஸை உருவாக்க இத்தகைய மெய்நிகர் நிலங்கள், ஓவியங்கள், பொருட்கள்தான் அடிப்படை. அவை என்எஃப்டி என்று அழைக்கப்படுகின்றன.

அந்த வகையில் சுந்தேரசன் போன்ற மெய்நிகர் உலகில் நிலங்கள் ஓவியம் போன்று கலைப் பொருட்களைக் வாங்கியிருப்பவர்கள், இனி வரும் காலத்தில் மிகப் பெரும் அளவில் லாபம் ஈட்டுவார்கள்.

உதாரணத்துக்கு நீங்கள் மெய்நிகர் உலகத்தில் ஒரு பூங்காவை வாங்குகிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். நிஜ உலகத்தில் அதற்கு எந்த மதிப்பும் இல்லை. ஆனால் மெட்டாவர்ஸை உருவாக்கும் பணியில் ஈடுபடும் நிறுவனங்களுக்கு மெய்நிகர் உலகில் உள்ள உங்கள் பூங்கா மிக அவசியமான ஒன்று.

உங்கள் பூங்காவை வாடிக்கையாளர்கள் பயன்படுத்திக் கொள்ள மெட்டாவர்ஸ் நிறுவனங்கள் உங்களுக்கு வாடகை தரத் தயாராக இருப்பார்கள்.

சமீபத்தில் நடிகர் கமலின் லோட்டஸ் மீடியா எண்டர்டெய்ன்மென்ட் நிறுவனம், கமல் உருவத்திலான அவதார்களை உருவாக்க ஃபேன்டிகோ நிறுவனத்துடன் ஒப்பந்தம் மேற்கொண்டுள்ளது. அதன்படி, கமலின் அவதாரை ஃபேன்டிகோ வீடியோ கேமில் பயன்படுத்தும். இதன் மூலம் இந்தியத் திரைப்பட நடிகர்களில் மெட்டாவர்ஸுக்கான அவதாரைப் பெறும் முதல் நடிகர் என்ற அடையாளத்தை கமல் பெற்றுள்ளார்.

இவ்வாறாக, மெட்டாவர்ஸ் தொடர்பாக உருவாகிவரும் பொருளாதார வாய்ப்பைக் கணக்கில்கொண்டு பலரும் அது தொடர்பான முதலீட்டில் இறங்கியுள்ளனர்.

இனி உலகின் போக்கை மெட்டாவர்ஸ் மாற்றி அமைக்கும் என்பதை உணர்த்தும் வகையிலே ஃபேஸ்புக் அதன் பெயரையே 'மெட்டா' என்று மாற்றியிருக்கிறது. மார்க் ஜூகர்பெர்க் மெட்டாவர்ஸ் தொடர்பான ஆராய்ச்சிகளுக்கு பல பில்லியன் டாலர் முதலீடு செய்துவருகிறார்.

ஒன்றை நாம் புரிந்துகொள்ள வேண்டும். மெட்டாவர்ஸ் என்பது தனி ஒரு நிறுவனத்தால் உருவாக்கப்படக் கூடியது அல்ல. தனி ஒரு நிறுவனத்தால் உருவாக்கி விடவும் முடியாது. அது ஒரு கூட்டுச் செயல்பாடு. கலையுணர்வும், கற்பனைத் திறனும் கொண்ட கலைஞர்களின் பங்கு மெட்டாவர்ஸ் உருவாக்கத்தில் மிக அவசியமான ஒன்று.

எப்படியாயினும், அறிவியல் புனைவுகளில் மட்டும் சாத்தியப்பட்டுவந்த மெட்டாவர்ஸ், தற்போது நிஜமாகியுள்ளது. எப்படி இணையம் உலகின் போக்கை மாற்றி அமைத்ததோ அப்படியே மெட்டாவர்ஸும் மாற்றி அமைக்கும்.

`மெட்டா' வீடியோ!

ஃபேஸ்புக் நிறுவனர் மார்க் ஜூகர்பெர்க்,மெட்டாவர்ஸின் சாத்தியத்தையும், அதை உருவாக்குவது தொடர்பாக என்னென்ன செயல்திட்டங்களை அவரது நிறுவனம் கொண்டிருக்கிறது என்பதையும் விவரிக்கும் வகையில் 1.15 மணி நேர வீடியோ ஒன்றை வெளியிட்டிருக்கிறார்.

அந்த வீடியோ மெட்டாவர்ஸ் பற்றி கூடுதல் புரிதலை ஏற்படுத்த உதவும். வீடியோ இணைப்பு: **https://www.facebook.com/watch/?v=282623437072819**.

அதேபோல், மெட்டாவர்ஸ் எப்படி இருக்கும் என்பதை உணர விரும்பினால், ஸ்டீபன் ஸ்பீல்பெர்க் இயக்கத்தில் 2018-ம் ஆண்டு வெளியான 'ரெடி பிளேயர் ஒன்' (Ready Player One) படத்தைப் பார்க்கலாம். நன்றி
riyas.ma@hindutamil.co.in

பதிவிலிருந்து

ர.ரா

**ஏலியன்கள் 1**




"ஒருமுறை நாத்திக – ஆத்திக விவாதம் சூடாக நடைபெற்று உள்ளது. அப்போது பேராசிரியர் தொ.பரமசிவன் சிகரெட்டை தட்டிவிட்டுக்கொண்டு, ரொம்ப கேஷூவலாக, "நான் எங்கே கடவுள் இல்லன்னு சொன்னேன். இருந்தா நல்லா இருக்கும்னுதான் சொன்னேன்' என்று சொன்னாராம். அது எனக்குத் தெரிய வந்தது. அதையே எம் படத்தில் பயன்படுத்தினேன்" என்று ஒரு பேட்டியில் குறிப்பிட்டிருந்தார் கமல்ஹாசன்.

வேற்று கிரக வாசிகளான ஏலியன்களைப் பற்றி இதே கேள்வியைதான் நவீன விஞ்ஞான உலகத்திடம் கேட்கப்பட்டது "ஏலியன்கள் இருக்கிறார்களா ? இல்லையா ?" அதற்குரிய பதிலும் கடவுள் இருக்கிறாரா ? என்ற கேள்விக்கு சொன்ன பதிலும் ஒன்றுதான் .

கிறிஸ்தவர்கள் , யூதர்கள், (துல்_கிஃபல் துறவி) என்று அனைவரும் குறிப்பிடும் எசேக்கியல் அவர்களை முகமதியர்கள் நபி ஹஸ்கீல் (அலை) என்ற துல்ஃகிபல் (அலை)கிமு (593 - 571) அவர்கள்

யூஃப்ரடெஸ் , டைக்ரிஸ் நதிகள் வளமுறச் செய்த பாபிலோனிய பிரதேசமான கால்டியா தேசம் இன்றைய தென் இராக், குவைத் பகுதியில் கிமு ஆறாம் நூற்றாண்டின் உலகில் ஓர் இரவு. யூஃப்ரடெஸின் பிரதான துணை நதியான காபுர் நதிக்கரையோரம் நபியவர்கள் உலாவிக் கொண்டிருக்கிறார்கள்.
" அப்போது வானில் வடக்கிலிருந்து ஒளியை உமிழ்ந்தபடி பெரும் சூறாவளி தோன்றியது. அதில் இறக்கைகள் முளைத்த நான்கு மனிதர் போன்ற உருவங்கள் பறந்து வருவதை கண்டார்.
கூடவே நான்கு மிகப் பெரிய சக்கரங்கள் சுழன்று கொண்டே பூமியில் இறங்கி பின் வானத்திற்கு புறப்பட்டன. சக்கரங்களின் நடுவே மனிதக் கண்களைப்போல் பெரியதாக ஏதோ சிறிது நேரத்தில் அனைத்தும் வானத்தில் பறந்து மறைந்தன " இக்காட்சியை எழக்கியல் கூறியதாக பைபிளில் - பழைய ஏற்பாட்டில் -எழக்கியல் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மேற்கண்ட தகவலை ஆஸ்திரேலிய ஏலியன் ஆய்வாளர் பால் டேவிஸ், தன் சமீபத்திய **"The Eerie Silence , (2010)** புத்தகத்தில் , இரண்டாயிரத்து ஐநூறு வருடம் முன் மனிதன் ஏலியன்களைப் பார்த்ததாக தன் புஸ்தகத்தில் குறிப்பிடுகிறார்.
நபி துல்ஃகிபல் (அலை) அவர்கள் வர்ணித்த காட்சி மாதிரியே ஒரு காட்சியை நபித்தோழர் ஒருவர் வர்ணிக்கிறார்
.
உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நான் ஓர் இரவில் எனது பேரீச்சங்(கனிகளை உலரவைக்கும்) களத்தில் குர்ஆன் (அல்-பகரா ) ஓதிக் கொண்டிருந்தேன்.
அப்போது எனது குதிரை கடுமையாக மிரண்டது. நான் தொடர்ந்து ஓதிக்கொண்டே இருந்தேன். மீண்டும் குதிரை மிரண்டது. தொடர்ந்து நான் ஓதிக் கொண்டேயிருந்தேன். மீண்டும் அது மிரண்டது. (அங்கு படுத்திருந்த என் மகன்) யஹ்யாவை அந்தக் குதிரை மிதித்துவிடுமோ என்று நான் அஞ்சிய போது அதை நோக்கி எழுந்து சென்றேன்.
அங்கு மேகம் போன்றதொரு பொருளை என் தலைக்கு மேலே கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்து (என் கண்ணைவிட்டு மறைந்து)விட்டது; பிறகு நான் அதைக் காணமுடியவில்லை.

காலையில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று "அல்லாஹ்வின் தூதரே! நான் நேற்றிரவு பாதி இரவில் எனது பேரீச்சங்களத்தில் குர்ஆன் ஓதிக்கொண்டி ருக்கையில் என் குதிரை கடுமையாக மிரண்டது" என்று (நடந்ததைச்) சொன்னேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே?" என்று கேட்டார்கள்.
"நான் தொடர்ந்து ஓதினேன். மீண்டும் எனது குதிரை மிரண்டது" என்று நான் சொன்னேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே?" என்று கேட்டார்கள்.
"நான் தொடர்ந்து ஓதினேன். மீண்டும் எனது குதிரை மிரண்டது" என்று சொன்னேன்.

"இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே!" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மீண்டும்) கூறியபோது, "(என் மகன்) யஹ்யாவைக் குதிரை மிதித்துவிடுமோ என்று அஞ்சினேன். அவன் அதன் அருகில் இருந்தான். எனவே, நான் திரும்பிச் சென்றேன்.

நான் (எனது தலையை உயர்த்தி வானைப் பார்த்தபோது) அங்கு மேகம் போன்றதொரு பொருளைக் கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்து (என் கண்ணைவிட்டு மறைந்து)விட்டது; பிறகு நான் அதைக் காணவில்லை" என்று கூறினேன்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் குரலைக் கேட்டு நெருங்கி வந்த வானவர்கள்தாம் அவர்கள். நீர் தொடர்ந்து ஓதியிருந்தால் காலையில் மக்களும் அதைப் பார்த்திருப்பார்கள். மக்களைவிட்டும் அது மறைந்திருக்காது" என்று கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1460 )

மேற்கண்ட இரண்டு விஷயங்களும் வானவர்களான மலக்குகள் குறித்து தானே இருக்கிறது ? இதற்கும் ஏலியன்களுக்கும் என்ன சம்பந்தம் ? நீங்கள் கேட்பது தெரிகிறது .
வானவர்கள் இறக்கைகள் கொண்டு பறந்து வருவதாக நம் மனதில் பதிந்து வைத்ததில் ஒரு சின்ன மாற்றம் அவர்கள் பெரிய சக்கரங்கள் பொருத்திய மேகம் போன்ற பெரிய வாகனங்களில் விளக்குகள் பிரகாசிக்க வந்து போனதுதான் நமக்கு கிடைத்த கூடுதல் தகவல்.

பைபிளிலும் , குர்ஆனிலும் மட்டும்தான் இந்த மாதிரி செய்திகள் உள்ளதா மற்ற வேதங்களில் கிடையாதா ?
ராமாயண இதிகாசங்களில் பைபிளுக்கும் முற்பட்ட காலமான கலியுகம், துவாபர யுகம் கடந்து பின் சென்று திரேதா யுகத்தில் ஏலியன்களை கண்டதாக...ராவணன் ஏறி வந்த புஷ்ப விமானமும் ஏறக்குறைய சக்கரங்கள் பொருத்தி விளக்குகள் எறிய வந்ததுதான் என்ற குறிப்பும் காணக் கிடக்கிறது.
ஆக ஏலியன்களின் பதிவு ஆதிகாலத்திலேயே இருக்கிறது .

**ஏலியன்கள் 2**



கார்ள் சேகன் (Carl Sagan) போன்றவர்கள் 1977-ல் வாயேஜர் 1, 2 போன்ற விண்கங்களை விண்வெளியில் நெடுந்தூரம் செல்ல அனுப்பும் போது வேற்று கிரகவாசிகள் பிரபஞ்சத்தில் இருந்தால், அவர்களுக்கு எப்படி நம்மைப் பற்றி செய்தி தருவது என்று யோசித்தார்கள்.
ஒரு 100 கோடி வருடம் தாங்கக் கூடிய தங்க முலாம் தகட்டில் , குறியீடாக பிரபஞ்சத்தில் நம் பூமியின் இடம் இதிலிருந்து கிளம்பும் விண்கலம் மற்றும் நம் உலகத்தின் அத்தனை வித சங்கீதங்களுக்கும் ஒரு சாம்பிள் .இதில் இந்திய ராகம் ஒன்று உள்ளது .

இந்த வாயேஜர் 1, 2 சூரிய மண்டலத்தை தாண்டி 1800 கோடி கி.மீக்கும் மேலாக இன்னும் பயணிக்கிறது . பயணிக்கட்டும். அதற்குள் நாம் 1400 வருடங்களுக்கு முன் போய் விட்டு வருவோம் .
மிஹ்ராஜ் விண்ணேற்றத்தின் போது, ஓரிடத்தில் ஒட்டகங்கள் சாரி சாரியாகச் செல்லவும் ,ஒட்டகங்கள் ஒவ்வொன்றின் மீதும் அதை ஓட்டுபவர் அமர்ந்திருக்கவும் அதன் இரு பக்கங்களிலும் தொங்கிக் கொண்டிருந்த இரு பொதிகளையும் பற்றி நபி (ஸல்) அவர்கள், வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க,
"எனக்கு இது பற்றி யாதொன்றும் தெரியாது .நான் இங்கு வந்த காலத்திலிருந்து இவ்வாறுதான் சென்று கொண்டுள்ளது. தாங்கள் விரும்பின் இது பற்றி இறைவனிடமே கேளுங்கள்" என்று பதிலுரைத்தார்கள் .
அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இறைவனிடம் அது பற்றி வினவ, இறை ஆணைப்படி அவ் ஒட்டகம் ஓட்டி தம் ஒட்டகத்தை நபி(ஸல்) அவர்களின் அருகே ஓட்டிச் சென்று அதன் இரு பக்கங்களில் தொங்கிக் கொண்டிருந்த பொதியில் ஒன்றை திறக்க அதில் ஒரு கோள வடிவ கிரகம் தென்பட்டது .
அக்கோளத்தை நபி (ஸல்) அவர்கள் முன் வைக்கப்பட்டு அதன் திறவுகோலையும் அவர்களின் கையில் கொடுக்க, நபி (ஸல்) அவர்கள் அதனைத் திறந்து கொண்டு உள்ளே சென்றனர்.

அங்கு குதிரையுடன் நின்று கொண்டிருந்த வீரர் ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்து, அக்குதிரையையும் அவர்களிடம் ஒப்படைத்தார். அதன் மீது ஏறி சென்ற நபி(ஸல்) அவர்கள் அங்கு நாடுகளும் கண்டங்களும், நகரங்களும் ,காடுகளும், கழனிகளும் இருப்பதையும், அங்கு மக்கள் இறைவனைத் துதித்துக் கொண்டும் , தம் மீது ஸலாவாத்து ஓதிக் கொண்டும் இருப்பதைக் கண்டு பெரும் வியப்பெய்தினர்.
இதிலிருந்து எண்ண முடியாத கோளங்களும் அவற்றில் மனிதர்களும் உள்ளனர். அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களே நபியாகவும் ரஸூலாகவும் இருக்கிறார்கள் .

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கோலங்களில் நம் பூமியை போன்று தட்ப வெப்ப நிலையை பெற்றுள்ள கோலங்கள் எத்தனை எத்தனையோ உள்ளன என்றும் அவற்றிலெல்லாம் நிச்சயம் மனித உற்பத்தி தோன்றியிருக்க வேண்டும் என்றும் அதில் மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் என்றும் கூறுகின்றனர்.
அண்ணலெம் பெருமானார் (ஸல் ) அவர்கள் அகில உலகங்களுக்கும் அருளப்பெற்ற அருட்பெருங்கொடை அன்றி வேறென்ன ?
وَمَآ أَرْسَلْنَٰكَ إِلَّا رَحْمَةً لِّلْعَٰلَمِينَ
(நபியே!) உங்களை அகில உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை."
(அல்குர்ஆன் : 21:107)
ஆதாரம் : நபி ஸலவாத்தின் நற்பலன்கள் - அப்துற் - றஹீம்

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கிரகங்களில் நம் பூமி போன்று தட்பவெப்ப நிலையைப் பெற்றுள்ள கிரகங்கள் எத்தனையோ உள்ளன என்றும் அவற்றில் நிச்சயம் மனித வாழ்வும் இருக்கும் என்றும் அவர்களைத் தேடிதான் வாயேஜர் 1, 2 விண்கலங்கள் விண்வெளிக்கு அனுப்பப்பட்டுள்ளது.

நபி (ஸல்) அவர்கள் திறந்து பார்த்த கிரகத்தை இன்ஷா அல்லாஹ் நம் வாயேஜர் விண்கலம் ஒரு சமயம் எட்டலாம். அக்கிரகவாசிகளின் தகவல் தொடர்பு நமக்கு கிட்டலாம் . அம்மக்களுக்கும் நபியாக வந்த நம் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களை ஜியாரத் செய்வதற்கு நம் பூமிக்குக் கூட வரலாம் ! நம் கண்களுக்கு தெரியாத அவர்கள் வந்து கொண்டும் போய் கொண்டிருக்கலாம் !
وَرَفَعْنَا لَكَ ذِكْرَكَ
உங்களுடைய கீர்த்தியையும் நாம் #உயர்த்தினோம். (அல்குர்ஆன் : 94:4)

என்று அண்ணலெம் பெருமானார் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழை பூலோகத்தில் மட்டுமல்லாமல் வேற்றுக் கிரகங்களிலெல்லாம் இறைவன் #உயர்த்தி இருப்பது நம்மை இன்னும் வியப்பில் ஆழ்த்துகிறது ! (மீள்)

**ஏலியன்கள் 3**



وَلَقَدْ خَلَقْنَا فَوْقَكُمْ سَبْعَ طَرَآئِقَ وَمَا كُنَّا عَنِ الْخَلْقِ غٰفِلِيْنَ
(மனிதர்களே! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கிறோம்?) நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (அவை ஒவ்வொன்றிலும் உங்களைப் போன்ற எத்தனையோ படைப்புகள் இருக்கின்றன. இவைகளைப் படைத்து இருப்பதுடன்) இப்படைப்புக(ளுக்கு வேண்டியவைக)ளைப் பற்றி நாம் பராமுகமாகவும் இருக்கவில்லை. (அவைகளுக்கு வேண்டியவை அனைத்தையும் முழுமையாக நாம் படைத்தும் இருக்கிறோம்.) (அல்குர்ஆன் : 23:17)

நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் பூமியை உள்ளடக்கிய நமது சூரிய குடும்பத்தைப் போல பல சூரிய குடும்பங்கள் பிரபஞ்சத்தில் பரவிக்கிடக்கின்றன இந்த பிரபஞ்சத்தில் லட்சோபலட்சம் நட்சத்திரங்களும் அதை சுற்றி கணக்கிலடங்கா கிரகங்களும் இருக்கின்றன.
பிரபஞ்சத்தில் உயிரின வாழ்க்கை என்பது நம் பூமியில் மட்டும் தான் இருக்கமுடியும் என்று நினைப்பது சற்றும் பொருத்தம் இல்லாதது .
பூமியில் இருந்து வெகு தொலைவில் உள்ள லட்சோபலட்சம் கிரகங்களில் சில நூறுகிரகங்களிலாவது உயிர் வாழ்க்கை அமையப் பெற்று இருக்கும் அவற்றுள் சிலவற்றில் உள்ள உயிரினங்கள் நம்மைவிட எல்லா நிலைகளிலும் மேம்பட்டு இருக்க வாய்ப்புள்ளது .சில கிரகங்களில் இன்னும் நுண்ணுயிரிகள் என்ற அளவிலேயே வாழ்க்கை அமையப் பெற்றிருக்ககூடும்.
தற்போது மனித இனம் மற்றும் பல உயிரினங்கள் இந்த பூமியின் சூழலுக்கு ஏற்ப வாழ்ந்து கொண்டு இருக்கின்றன.இந்த பிரபஞ்சத்தில் உள்ளடக்கிய நம் சூர்ய குடும்பத்தில் உள்ள கிரகங்களில் நம் பூமியில் மட்டுமே உயிரினங்கள் உள்ளதாக இதுவரை அறியப்பட்டு வந்துள்ளது
ஆனால்,இந்த பிரபஞ்சத்தில் மற்ற பல சூரிய குடும்பங்களில் உள்ள கிரகங்களில் உயிரின வாழ்வு இருக்கக்கூடும் என்பது தற்போதைய அறிவியலாளர்களின் கருத்தாகும் மேலும் உலகம் முழுவதும் உள்ள விஞ்ஞானிகள் அனைவரும் வேற்றுகிரகங்கள் பலவற்றில் உயிரின வாழ்வு என்பது சாத்தியம்தான் என்று அறிவியில் பூர்வமாக சிந்திக்க தொடங்கி இருக்கின்றார்கள் .

நூறு வருடங்களுக்கு முன்பு விஞ்ஞானிகள் அனைவரும் வேற்றுகிரகத்தில் உயிரின வாழ்க்கை இருக்கும் என்பதை ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள் என்பதும் உண்மை.
இப்பிரபஞ்சத்தில் பூமியும் நம்மைத் தவிர வேற்று கிரகதத்தில் உயிரினங்களோ மனிதர்களோ இருக்கிறார்களா ?அவ்வாறு இருந்தால் நம்மை அவர்கள் பார்த்திருக்கிறார்களா ? நாம்தான் அவர்களைப் பார்க்க முடியுமா ?
... இப்படி எண்ணற்ற கேள்விகள் நவீன விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் கேட்கவும், தேடவும் செய்கிறோம்.
பறக்கும் தட்டுகள் (U. F. O ) வேற்று கிரகங்களில் இருந்து பூமிக்கு வந்து போனதாகவும், பல நாடுகளில் இச்செய்திகள் பலமாக பதியப்பட்டுள்ளது.

وَالسَّمَآءِ ذَاتِ الْحُبُكِ ۙ
(நட்சத்திரங்களின்) அழகிய பாதைகளுடைய வானத்தின் மீது சத்தியமாக! (அல்குர்ஆன் : 51:7)

வேற்று கிரக வாசிகள் பூமியில் எதற்காக வரவேண்டும் ? அவர்களின் நோக்கம் என்ன என்பது பற்றி நிறைய பேர்கள் புத்தகம் புத்தகமாக எழுதி இருக்கிறார்களேத் தவிர ஆனால் இதுவரை "இதோ வேற்று கிரக வாசி இவர்தான் "என்று யாருமே நிரூபிக்கவில்லை .
என்றாலும் அவர்களின் பல போட்டோக்கள் போலியானது என்று ஒதுக்கினாலும் சில போட்டோக்கள் தேர்ந்த விஞ்ஞானிகளையும், கேமரா நிபுணர்களையும் தலை சுற்ற வைக்கிறது.
குர்ஆனில் சில வசனங்கள் சூசகமாக இது பற்றி விவரிக்க மாதிரியான நிறைய வசனங்கள் இருக்கின்றன.
"பூமிக்குள் பதிகின்றவைகளும் , அதில் இருந்து வெளிப்படும் இவைகளையும், வானத்தில் இருந்து இறங்குபவைகளையும் , அதன் பக்கம் ஏறுகின்றவைகளையும் அவன் நன்கறிவான். " குர்ஆன் (34 : 02)
இது விஷயமாக நபி (ஸல்) அவர்கள்
" நீங்கள் அறியாததையும் அவன் சிருஷ்டிப்பான் " குர்ஆன் ( 16 : 08)
என்ற குர்ஆன் வசனத்திற்கு விளக்கமளிக்கையில் " இவ்வுலகைப் பார்க்கிலும் 30 மடங்கு பெரியதாக உள்ள வெண்மையான பூமியை அல்லாஹ் சிருஷ்டித்துள்ளான் .

நம் பூமியில் பச்சை நிறமும் நீல நிறமும் அதிகமாக இருப்பது போல் அக்கிரகம் வெண்மை நிரம்பி இருக்கிறது.அதில் இறைவனது சிருஷ்டிகளான மக்கள் நிரம்பி இருக்கின்றனர். அக்கிரக மக்கள் அல்லாஹுத்தலாவுக்கு ஒரு கணப்பொழுதேனும் மாறு செய்வதே இல்லை" என்று கூறினார்கள் .
அப்பொழுது நபித்தோழர்கள்
"அம்மக்கள் ஆதமுடைய மக்களைச் சேர்ந்தவர்களா-...?"
"ஆதமை அல்லாஹ் படைத்திருக்கிறான் என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள் என்றார்கள் நபிகளார் (ஸல்) அவர்கள்.
"அவர்களில் இப்லீஸ் எங்கே...? என்று கேட்டனர் .
"அல்லாஹ் இப்பீஸ் - யை சிருஷ்டித்திருக்கிறான் என்பதையும் அம்மக்கள் அறிய மாட்டார்கள். என்றார்கள்.
ஆதாரம் : அல் புஸ்தான்

பூமிக்கு மிக அருகிலேயே பூமியை விட 30 மடங்கு பெரிய புதிய பூமி இருப்பதாக அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.
கலிபோர்னியா பல்கலைக்கழக விஞ்ஞானி , ஸ்டீவன் வாட் கூறுகையில் தண்ணீர், காற்று கொண்ட மற்றொரு பூமி இருக்கிறது. அதி நவீன தொலை நோக்கியில் பார்த்ததில் வளி மண்டலத்தில் சிறிய நட்சத்திரம் போல் அது சுற்றி வருவது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அருகில் சென்றால் நம் பூமியை விட 30 மடங்கு பெரியதாக இருக்கும்.
அதில் உயிரினங்கள் வசிக்க 100 சதவீகித வாய்ப்பு இருக்கிறது என்றார்.
கலிபோர்னியா பல்கலைக்கழக வாஷிங்டன் கார்னிஜி ஆராய்ச்சி கழக விஞ்ஞானிகள் இது தொடர்பான ஆராய்ச்சியில் தொடர்ந்து ஈடுபட்டுள்ளனர்
ஆதாரம் :கலைக்கதிர் ஜூலை 2012 பக்கம் 55 (மீள்

## ஏலியன்கள் 4



ஒருநாள் ஹழ்ரத் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சென்று கொண்டிருக்கும்போது, வெயிலின் உஷ்ணத்தால் மிகவும் அவதிப்பட்டார்கள்.
சூரியன் இவ்வளவு தூரத்திலிருக்கும்போதே நாம் அதன் உஷ்ணத்தை தாங்க முடியவில்லையே! அதனை சுமந்து கொண்டிருக்கும் வானவர் எப்படி தாங்குவார் என்று மனதிற்குள் எண்ணி, "யா அல்லாஹ்..! சூரியனைச் சுமக்கும் வானவருக்கு அதன் உஷ்ணத்தால் சிரமம் ஏற்படாதவாறு அருள் புரிவாயாக! "என்று துஆ செய்தார்கள்.
அல்லாஹ் அந்த துஆவை ஏற்றுக் கொண்டு சூரியனைத் தாங்கும் வானவர் மீது கிருபை செய்தான். அந்த வானவர் அல்லாஹ்விடம் இதுபற்றி கேட்டதற்கு, " இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் உம்மீது இரக்கம் கொண்டதால், இது நடந்தது " என்று சொன்னான்.

உடனே நபி இத்ரீஸ் (அலை) அவர்கள் மீது அந்த வானவருக்கு அன்பு சுரந்தது. அவர்களைப் பார்க்க வேண்டுமென்று ஆவலும் ஏற்பட்டது. அந்த வானவரும் பலமுறை முயன்று ஒரு தடவை இருவரும் சந்தித்தார்கள். நன்றிக்கடனாக இத்ரீஸ் நபியவர்களை வானலோகத்திற்கு அழைத்து சென்று மலக்குகள் மட்டும் பார்வையிடும் **"ஸிர்ருல் மலக்கூத்து "** என்கிற பிரபஞ்சங்களின் இரகசியம் அடங்கிய கிதாபை படிக்க கொடுத்தும், சூரியனுடைய கோள்கள் எல்லாம் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்.

இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள். ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றி தான் எடுத்த குறிப்புகளை (பிரபஞ்சங்கள் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்.அதோடு சரி. பூலோக வாசிகளான நாம் அதைப் பற்றி சிந்திக்கவே இல்லை.
...ஆனால் பூலோக வாசிகளான நம்மிடம் ஸிர்ருல் மலக்கூத்து கிதாபையும் வைத்துக் கொண்டு, வான மண்டலத்தை நாம் பயன்படுத்துவதை விட ஏலியன்கள் எனப்படும் வேற்றுகிரக வாசிகள் நன்கு பயன்படுத்துகிறார்கள் என்பதற்கு ஆதாரமாக

கிரக வளையங்களைக் கொண்ட சனி நம் சூரிய குடும்பத்தில் ஒரு குறிப்பிடத்தக்க கிரகமாக விளங்குகிறது . இவ்வளையங்கள் சனியின் பூமத்திய ரேகைக்கு மேல் சுமார் 6630 கி.மீலிருந்து 120700 கி. மீ வரை நீண்டிருக்கிறது , அதன் சராசரி தடிமன் 20 மீட்டர் , மற்றும் மாசுக்கள் கொண்ட 93 சதவிகிதம் நீர்-பனி உள்ளது .
" சனி கோள்களின் வளையங்களில் **UFO (Un identified Flying objects )** அதாவது ஏலியனின்களின் வானங்களை நாங்கள் பார்த்திருக்கிறோம்" - என்று சனிக்கிரகத்திற்கு காசினி விண்கலம் அனுப்பிய நாசா ஆராய்ச்சியாளர்கள் வெளிப்படுத்துகிறார்கள்.

டாக்டர் நார்மன் பெர்க்ரூன், நாசாவில் பணிபுரிந்த இயற்பியாலாளர் மற்றும் பொறியலாளர், அதாவது விண்வெளித்துறையில் பணிபுரிந்தவர் மற்றும் " தி ரிங் மேக்கர் ஆஃப் சனி " என்ற புத்தகத்தை எழுதியவர். அனைத்து யுஎஃப்ஒ மற்றும் ஏலியன் ஆர்வலர்களுக்கும் நன்கு தெரிந்தவர்.
அவரது புத்தகத்தின்படி, சனிக்கோளின் வளையங்களுக்கு இடையே பெரிய வேற்றுக்கிரக விண்கலங்கள் நிறுத்தப்பட்டுள்ளன. அவை பூமிக்கும் மீதமுள்ள சூரிய குடும்பத்திற்கும் அச்சுறுத்தலாக இருக்கலாம்.
நாசாவின் எய்ம்ஸ் ஆராய்ச்சி மையத்தின் முன்னோடியான ஏரோநாட்டிக்ஸ் அட்வைசரி கமிட்டிக்காக (NACA)க்கான தேசிய ஆலோசனைக் குழுவில் 12 ஆண்டுகள் பணியாற்றிய பிறகு டாக்டர்.பெர்க்ரூன்,லாக்ஹீட் ஏவுகணைகள் மற்றும் விண்வெளி நிறுவனத்துடன் கிட்டதட்ட 13 ஆண்டுகள் செலவிட்டவர்.
இந்த மோதிர வடிவ வாகனங்கள் அறிவார்ந்த உயிரினங்களால் இயக்கக் கூடிய மிகப் பெரிய மின்காந்த வாகனங்களால் (EMVs) அவைகள் உருவாக்கப்பட்டுள்ளன.
அவர் தொடர்ந்து , 7000 மைல் நீளமுள்ள ஏலியன்களின் விண்வெளி கப்பல்கள் வட்டம் மற்றும் வளையங்களுக்குள் சனிக்கிரகத்தை சுற்றி சுற்றி வருகிறவதாக அது கூறுகிறது .

ஆனால் அவை பூமியில் UFOகள் பயன்படுத்துவதைப் போன்று உருமறைப்பு கியர் இருப்பதால் , அது கண்ணுக்கு தெரியாதவை என்று அது மேலும் கூறுகிறது.

சனி வளையங்களில் மறைந்துள்ள வேற்று கிரகவாசிகளின் விண்கலம் சூரியன், வியாழன் , மற்றும் யுரேனஸ் ஆகியவற்றை ஒரே மாதிரியான விண்கலம் சுற்றுவதை டாக்டர்.பெர்க்ரூன் மற்றும் பலர் பின்னர் கண்டுபிடித்தனர்.
ஜூன் 2015 இல் வியாழனை அடையும் வரை காசினி விண்கலம் சனிக் கோளின் ஏ மற்றும் எஃப் வளையங்களில் ஒரு விசித்திரம் படிந்த பொருளின் படங்களை அனுப்பியது.
அவைகள் ஏலியன்களின் விண்கலம் என்று இப்போது அறியப்படுகிறது .
பெர்க்ரூக்குடன் முன்பு பணியாற்றிய அனைத்து விண்ணியல் அறிஞர்களும் சனி கோளின் வளையங்களின் பல புகைப்படங்களில் மகத்தான அளவு மற்றும் உருளை வடிவத்திலான புதிரான விமானங்கள் சனி வளையங்கள் வழியாக பறப்பது தெளிவாக தெரிகிறது.

இந்த ஏலியன் விண்கலங்கள் வலுவான சனியின் புவியீர்ப்பு சக்தியை ஒரு உந்து சக்தியாக பயன்படுகின்றன. விண்வெளிக் குப்பைகள் மற்றும் பாறைகளை அவற்றின் பாதையிலிருந்து இடம் மாற்றம் செய்கின்றன. இந்த தொழில் நுட்பத்தை அவர்கள் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே கற்றிருக்க வேண்டும்.
அது சரி, ஏலியன்கள் சனிக்கிரகத்தையும் , அதனைச் சுற்றி இருக்கும் வளையங்களிலும் ஏலியன்கள் என்ன ஆய்வு செய்கிறார்கள் ? தெரியவில்லை.
மேற்கண்ட விஷயங்களை அமெரிக்கா அனுப்பிய காசினி விண்கலத்தால் தெரிய வந்திருக்கிறது
**https://www.facebook.com/BBCnewsTamil/videos/10154320602425163/?sfnsn=wiwspmo**وَالسَّمَآءِ ذَاتِ الْبُرُوْجِۙ
கோள்கள் நிறைந்த வானத்தின் மீதும், (அல்குர்ஆன் : 85:1)
وَلَـقَدْ جَعَلْنَا فِى السَّمَآءِ بُرُوْجًا وَّزَيَّـنّٰهَا لِلنّٰظِرِيْنَۙ
வானத்தில் கிரகங்களுக்கான பாதைகளை நிச்சயமாக நாம் அமைத்து பார்ப்போருக்கு அவற்றை அலங்காரமாகவும் ஆக்கினோம்.
وَحَفِظْنٰهَا مِنْ كُلِّ شَيْطٰنٍ رَّجِيْمٍۙ
விரட்டப்பட்ட ஒவ்வொரு ஷைத்தானை விட்டும் நாம் அவற்றைப் பாதுகாத்தோம்.
اِلَّا مَنِ اسْتَرَقَ السَّمْعَ فَاَ تْبَعَهٗ شِهَابٌ مُّبِيْنٌ
திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கும் ஷைத்தானைத்தவிர; (அப்போது) பிரகாசமான தீப்பந்தம் அந்த ஷைத்தானை (விரட்டிப்) பின் பற்றும். (அல்குர்ஆன் : 15:16-18)
ஜின்களிலுள்ளவன்தான் ஷைத்தான், மேற்கண்ட குர்ஆன் வசனங்கள் ஏலியன்களைக் குறித்துத்தான் பேசுகிறதோ ?

**ஏலியன் 5**
மர்மப் பயிர் வட்டங்கள்



தென்மேற்கு இங்கிலாந்தில், 'வைல்ட்ஷையர்' என்னுமிடத்தில் வசிப்பவர், டோனி ஹ்யூஜஸ்; இவர் ஒரு விமானி. இவர் நுண்ணிய, இலகுரக விமானம் ஒன்றை, சொந்தமாக வைத்திருந்தார்.
அங்குள்ள வயல்வெளியின் மேல், ஒரு முனையில் இருந்து, மறுமுனைக்கு, தன் விமானத்தில் பறந்து செல்வதை, வாடிக்கையாக வைத்திருந்தார். அப்படி ஒருநாள், மறுமுனைக்கு சென்றவர், மீண்டும் புறப்பட்ட இடத்திற்கு வரும் போது, வயல்வெளியில் கண்ட காட்சி, அவரை திடுக்கிட வைத்தது.

பயிர்களை, சேதமில்லாமல் சாய்த்தும், மடித்தும், நிமிர்த்தியும் மிக பிரம்மாண்டமான சித்திரம் ஒன்று வரையப்பட்டிருந்தது. '10 நிமிடங்களுக்கு முன், இந்த வயல்வெளியின் மேலாக தான் பறந்து சென்றேன்.'அப்போது, பயிர்கள் வழக்கம்போல நிமிர்ந்து காற்றில் அசைந்தாடி கொண்டிருந்தன. அதற்குள் எப்படி இவ்வாறு மிகப் பெரிய சித்திரம் வரையப்பட்டது; இதை யார் வரைந்திருப்பார்; இது எப்படி சாத்தியம்...' என்று தன், 'வயர்லெஸ்' கருவியில் அலறினார் டோனி.
திரும்பவும், அந்த வயல்வெளியை நன்றாக உற்று பார்த்தார். செழித்து வளர்ந்த பயிர்களை சிதைக்காமல், வரையப்பட்டிருந்தது. நிலத்தில் இருந்து பார்க்கும்போது, என்னவென்றே தெரியாமல் இருந்தது. ஆனால், வானத்தில் பறந்தால் மட்டுமே தெரியக்கூடிய வகையில் வரையப்பட்ட மிக பிரம்மாண்டமான சித்திரம் அது!
பயிர் வட்டங்களில் மனிதர்கள் நிற்பதை பார்க்கிறீர்களா ? இதிலிருந்து பயிர் வட்டங்களின் மிகப் பெரிய பரப்பளவை யூகிக்க முடிகிறதா ?

டோனி ஹ்யூஜஸினால் நம்பவே முடியவில்லை. பட்டப் பகலில், 10 நிமிட இடைவெளியில், இதை வரைவது அத்தனை எளிதானதா என்ன...அந்த பகுதியில், எந்த ஒரு வாகனமும் வந்ததற்கான அல்லது நிறுத்தப்பட்டதற்கான அடையாளமோ, மனித நடமாட்டம் இருந்ததற்கான காலடி தடமோ இல்லை. எங்கு பார்த்தாலும், பரந்து விரிந்த வயல்வெளி பிரதேசம்.
காற்றில் ஆடும், கோதுமை பயிர்கள் அறுவடைக்கான நேரம்.
இதுபோன்ற சித்திரங்கள், அப்பகுதியில், பல இடங்களில், பல விதங்களில் உருவாகியிருந்தன. அவை அனைத்தும், கணித மேதைகளால் வரையப்பட்ட, மிக சிக்கலான கணிதங்களுக்கு ஒப்பான வகையில், மிக நேர்த்தியாக இருந்தது.

சாதாரணமாக காகிதத்தில் சித்திரம் வரைவதற்கே, பல மணி நேரம் ஆகும். ஆனால், வயல் வெளிகளில் சித்திரங்களை உருவாக்குவது என்பது நிச்சயமாக வியப்புக்குரியது!
அதுமட்டுமல்லாமல், இதை போன்ற பயிர் வட்டங்களை மனிதர்கள் உருவாக்க வேண்டும் என்றால், எத்தனை நாட்கள் ஆகும் என்று கணக்கிட விரும்பினார். அவ்வாறு நடத்தப்பட்ட சோதனையில், ஒரு சாதாரண உருவத்தை, பகல் வெளிச்சத்தில் உருவாக்க, ஐந்து நாட்கள் பிடித்தன. அதே நேரத்தில், சித்திரம் வரைந்த போது, அங்கிருந்த பயிர்கள் நாசமடைந்தன.

இந்த பயிர் வட்டங்களுக்குள் செல்லும் விலங்குகள் மிரண்டு ஓடின. அதேபோல, இதற்குள் சென்றபோது, கையில் கட்டியிருந்த கடிகாரத்தின் முட்கள், படு வேகமாகவும், சில நேரங்களில் மிக மெதுவாகவும் சுற்றின. இவ்வாறு, மாறி மாறி சுற்றுவது ஆச்சரியத்தை தந்தது.
சிலருக்கு, உள்ளே நுழைந்ததும், தலை சுற்றல், வாந்திக்கான அறிகுறி தோன்றின; சிலருக்கு, தங்கள் உடம்பிலுள்ள நோய்கள் குணமாகிவிட்டன. இப்படி, இந்த பயிர் வட்டத்தை பற்றி, பல பல கதைகள், அந்த பகுதியில் தொடர்ந்து உலவி வருகின்றன. ஆனால், இவை அனைத்தும், எந்த அளவிற்கு உண்மை என்பது தெரியவில்லை.
பயிர் வட்டங்கள், 1970ல் தோன்றி, படிப்படியாக பல வட்டங்களாக மாறி, சித்திரங்களாக வடிவெடுத்து, சிக்கலான சித்திரங்களாக மாறி, உயிர் கணித குறியீடுகளை தாங்கிய சித்திரங்களாக வளர்ந்து, ஏதோ தகவல் சொல்கிற விதமாக மாறியது.
எனவே, உலகம் முழுவதுமுள்ள பல அறிஞர்களை, இந்த பயிர் வட்டங்கள் ஈர்க்க துவங்கின. அநேகமாக எல்லாரும் இதை நோக்கி படையெடுத்தனர். இதை பற்றிய ஆய்வுகளை, அதி தீவிரப்படுத்தினார். அப்போது, அப்பகுதியை சேர்ந்த மனிதர்களிடம் இருந்து, ஒரு புதிய, ஆனால், நம்புவதற்கு சங்கடப்படுத்துகிற தகவல் ஒன்று கிடைத்தது.
'ஒரு உதைபந்து அளவிலான வெளிச்ச பந்து, வயல்வெளி மேல் பறந்து திரிவதை கண்டோம். அந்த வெளிச்ச பந்து, சில நிமிடங்களில், பயிர் வட்டங்களை உருவாக்கியதை கண்களால் கண்டோம்' என்று சிலர் கூறினர்.
அத்துடன், அந்த காட்சியை படம் பிடித்து வைத்திருந்ததை அவர்களிடம் காண்பித்தனர்.
இந்த விவரம் ஊடகங்களுக்கும் பரவியது. அவர்களுக்கு இதில் நம்பிக்கை ஏற்படவில்லை; நேரடியாக அதை பார்த்தால் மட்டுமே, செய்தி வெளியிட முடியும் என்று தீர்மானித்தனர். எனவே, கேமரா சகிதமாக இரவு நேரங்களில் அந்த பகுதியில், ஒருவித எதிர்பார்ப்புடன் காத்திருந்தனர்.
அந்த அற்புதத்தை நேரடியாக கண்ட, செய்தியாளர்களும் திகைத்தனர். அந்த வெளிச்ச பந்துகள் வானில் தோன்றி, அங்குமிங்கும் அலைந்ததை நேரில் கண்டு அதிர்ந்து, அதை வேகமாக படமெடுத்தனர்.
இரவில் மட்டுமல்லாமல், பகலிலும் இவ்வாறு வெளிச்ச பந்துகள் தோன்றுவதை கண்டு, சப்த நாடியும் ஒடுங்கி போயினர்.

ஒருநாள், அந்த வெளிச்சப் பந்துகள் தோன்றியபோது தயாராக காத்திருந்த, ராணுவ ஹெலிகாப்டர்கள் அதை நோக்கி, பறந்து . சென்றன. அதன் அருகில் சென்றபோது, அந்த பந்துகள் மறைந்துவிட்டன.
இப்படி, ஒரு தடவையல்ல பல தடவைகள் நிகழ்ந்துள்ளன. இவையனைத்தும், வீடியோவாக ஊடகங்கள் பதிவு செய்துள்ளன. இந்நிலையில், இந்த வெளிச்ச பந்தை பற்றிய ஆய்வும் மேற்கொள்ளப்பட்டது. அப்போது, நிச்சயமாக இது விமானம் கிடையாது என்றும், நட்சத்திரமும் கிடையாது என்றும் உறுதியாக கூறினர்.
அப்படியானால்...

இந்த பயிர் வட்டத்தை முதன் முதலாக, 1678ல் இதே, இங்கிலாந்தின் தென்கிழக்கு பகுதியில் உள்ள, 'ஹார்ட்போர்டுஷையர்' என்னுமிடத்தில், பேய் ஒன்று, விவசாயி ஒருவருக்கு அமைத்து கொடுத்தாக கூறப்படுகிறது.
அதன்பின், 1920ல் மீண்டும் பயிர் வட்டங்கள் தோன்ற ஆரம்பித்தன. அப்புறம், 1970ல் இருந்து, இன்று வரை தோன்றி கொண்டே இருக்கிறது. முடிவாக, பேய்கள் தான் இவற்றை உருவாக்குகின்றன என்பதே முக்கால்வாசி பேரின் கருத்து.
ஆனால் இவை ஏலியன்கள் பூமியில் வாழும் மனிதகுலத்திற்கு நமக்கு சொல்கிற தகவல்கள் என்று பின்னர் அறியப்பட்டது . ஒவ்வொரு பயிர் வட்டத்திற்கும் ஒவ்வொரு தகவல் . ஒவ்வொன்றின் தகவலையும் தனித்தனி பதிவாக இன்ஷா அல்லாஹ் சொல்றேன்.

**ஏலியன்கள் 6**



கார்ல் சேகன் என்னும் அமெரிக்கர் வானியல் துறையில் மிகப் பிரபலம் வாய்ந்த ஒரு விஞ்ஞானி.இவர் ஆஸ்ட்ரானாமர், ஆஸ்ட்ரா ஃபிஸிஸிஸ்ட், காஸ்மாலாஜிஸ்ட், மற்றும் விஞ்ஞான எழுத்தாளர் எனப் பல பரிமாணமுள்ளவர்.
பிரபஞ்சத்தில் பல இடங்களில் உயிரினங்கள் உண்டு என்பதைத் தீர்க்கமாக நம்பினார்.மனிதர்கள் வேற்றுக் கிரக வாசிகளுடன் தொடர்பை ஏற்படுத்தும் விதமாக 1974ம் ஆண்டு நவம்பர் 16ம் திகதி விண்வெளிக்கு ஒரு செய்தியை அனுப்பினார்.

பூமியில் நாம் வசிக்கிறோம் என்ற செய்தியுடன், நம்மைப் பற்றிய விபரங்களை வரைபடமாக்கிப் பின்னர் அதை 0, 1 என்னும் பைனரி வடிவத்தில் ரேடியோ அலைகளாக விண்வெளிக்கு அனுப்பினார்.
குறிப்பாக, பூமிக்கு மிக அருகில், 25 ஒளி வருடங்கள் தூரத்தில் இருக்கும் Messier 13 என்று சொல்லப்படும் M13 நட்சத்திரக் கூட்டங்களை நோக்கி அனுப்பி வைத்தார். M13 இல் மூன்று இலட்சத்துக்கு அதிகமான நட்சத்திரங்களும், கோடிக்கணக்கான கோள்களும் இருக்கின்றன. அங்கு ஏதாவது ஒரு கோளில் உயிரினம் இருந்து இந்தச் செய்தியைக் கண்டறிந்து பூமியுடன் தொடர்பு கொள்ளலாம் என்பதே கார்ல் சேகனின் எண்ணம்.
வேற்றுக் கிரகங்களில் உயிரினம் உண்டு என்பதை எந்த விஞ்ஞானியும் இதுவரை மறுக்கவில்லை. அப்படி உயிரினம் இருக்கும் பட்சத்தில் அவை அதிபுத்திசாலிகளாக இருக்கவே சாத்தியம் அதிகம் என்பதும் இவர்கள் கணிப்பு.

இந்தக் கணிப்பை அடிப்படையாக வைத்தே கார்ல் சேகன் செய்திகளை அனுப்பி வைத்தார். போர்ட்டா ரிக்கோ நாட்டில் உள்ள ஆரசிபோவில் (Arecibo-Puerto Rico) அமைந்துள்ள பாரிய விண்வெளி ஆராய்ச்சி நிலையத்திலிருந்தே அந்தச் செய்திகள் அனுப்பப்பட்டன. அவர் அனுப்பிய செய்தி என்ன தெரியுமா...? அதன் வரைபடத்தை நீங்கள் பார்த்தால்தான், புரியும்
இந்தப் படத்தில் வலது பக்கம் இருப்பது கார்ல் சேகன் அனுப்பிய செய்தி. இடது புறம் இருப்பது ஷில்போல்டனில் உருவாக்கப்பட்ட பயிர் வட்டத்தின் படம். இரண்டு படங்களையும் பார்க்கும்போது ஒன்று போலவே தோன்றினாலும், நன்கு கவனித்தால், பல வித்தியாசங்கள் தெரியும். அந்த வித்தியாசங்கள் என்ன என்று ஆராய்ந்தபோது கிடைத்த பதில் எல்லாமே அதிர்ச்சிகரமானவை.
கார்ல் சேகன் 1974ம் ஆண்டு அனுப்பிய செய்திக்கு, 27 ஆண்டுகளுக்கு அப்புறம் ஏலியன்கள் கொடுத்த பதில்தான் அந்த ஷில்போல்டன் பயிர் வட்டம் என்கிறார்கள் அதை அக்கு வேறு ஆணி வேறாக ஆராய்ந்தவர்கள்.
கார்ல் சேகன் M13 நட்சத்திரக் கூட்டத்தை நோக்கி அப்படி என்ன செய்திகளை அனுப்பினார்? அதற்கு நமக்குப் பயிர் வட்டங்கள் மூலமாகக் கிடைத்த பதில்கள்தான் என்ன?

Arecibo வானிலை ஆராய்ச்சி நிலையத்திலிருந்து கார்ல் சேகன், 1974ம் ஆண்டு நவம்பர் 16ம் தேதி ஒரு செய்தியை அனுப்பினார்.
அந்த செய்தியில் அவர் பூமி, சூரியக் குடும்பம் மற்றும் மனிதர்கள் சம்பந்தமான பல விவரங்களை இணைத்திருந்தார்.

நாம் பயன்படுத்தும் தசம இலக்கங்கள், மனிதர்களிலுள்ள அடிப்படை இரசாயன மூலகங்கள் (கார்பன், ஆக்ஸிஜன், நைட்டரஜன், ஹைட்ரஜன், பாஸ்பரஸ்) பற்றிய குறிப்புகள், DNA பற்றிய குறிப்புகள், DNA யின் வடிவம், மனிதனின் வடிவம், மனிதனின் சராசரி உயரம், பூமியின் சனத்தொகை, சூரியக் குடும்பமும் அதில் பூமியின் அமைவு, இந்தச் செய்திகள் அனுப்ப உதவிய ஆரசிபோ டெலஸ்கோப்பின் வடிவம் மற்றும் அதன் பருமன் ஆகிய அனைத்து விபரங்களுடன், அந்தச் செய்தி அனுப்பப்பட்டிருந்தது.
அனுப்பப்பட்ட இடம் நமக்கு மிக அண்மையிலுள்ள M13 நட்சத்திரக் கூட்டங்களை நோக்கி. M13, நமக்கு மிக அண்மையில் உள்ளது என்று நான் சொன்னாலும், உண்மையில் அது இருபத்திதைந்து ஒளி வருடங்களுக்கு அப்பால் இருக்கிறது.
நாம் ஒளியின் வேகத்தில் (300000 கிமீ/செக்கண்ட் ) சென்றால், அந்த நட்சத்திரக் கூட்டத்தை அடைய 25 வருடங்கள் நமக்குத் தேவை. அவ்வ்வ்வ்வ்வளவு தொலைவு. அதாவது நாம் அனுப்பிய செய்தி அங்கு சென்றடையக் குறைந்தபட்சம் 25 வருடங்கள் தேவை.
இந்தச் செய்தி அனுப்பும் போதே, இதற்குப் பதில் கிடைக்க வேண்டுமென்றால் 25 வருடங்களுக்கு அதிகமான காலம் தேவை என்று கார்ல் சேகன் கணித்தே வைத்திருந்தார்.
அவர் கணித்தது போலவே 27 வருடங்களுக்குப் பின்னர் ஷில்போல்டனில் அந்தப் பயிர் வட்டங்கள் உருவாயின. பயிர் வட்டங்களில் இருந்த செய்தியை ஆராய்ந்தபோது, கிடைத்த தகவல்கள் அதிர்ச்சிகரமானவையாக இருந்தது.
எப்படிக் கார்ல் சேகன் தன் செய்திகளை வரைபடமாக்கி அனுப்பியிருந்தாரோ, அதே வடிவத்தில் பதிலும் இருந்தது.
ஆனால் வந்த பதிலில், அவர்களின் உயிர்,கார்பன், ஆக்ஸிஜன் போன்றவற்றுடன் மட்டுமல்லாமல் மேலதிகமாக சிலிக்கோனினாலும் (மண்ணின் மூலப்பொருளாலும்) ஆக்கப்பட்டிருப்பதாகவும் (நாமும் மண்ணிலிருந்து தானே இறைவன் நம்மையும் படைத்தான் )
மேலும் அவர்களின் வரைபடத்தில் DNA இன் அமைப்பிலும் உருவத்திலும் பெரும்பாலான மாற்றங்களுடனும்,அவர்களின் சராசரி உயரம் 3 அடி 4 அங்குலம் எனவும், ஏலியன்களின் ஜனத்தொகை நம்மை விட மிக அதிகமெனவும் (12742213502 ஏலியன்கள்), அவர்களின் கோள் அமைந்துள்ள இடம், தாங்கள் தகவல் அனுப்பப் பயன்படுத்தும் டெலஸ்கோப்பின் உருவம், டெலஸ்கோப்பின் பருமன் ஆகியவை இருந்தன.
இங்குதான் மேலும் ஒரு ஆச்சரியம் காத்திருந்தது ஏலியன்கள் வரைந்ததாக கருதப்பட்ட அந்தப் பயிர்வட்டச் சித்திரத்தின் கீழ்ப் பகுதியில்வரையப்பட்டிருந்த ஏலியன்களின் டெலஸ்கோப்பினது வடிவமும், ஒரு வருடத்துக்கு முன்னர் உருவாக்கப்பட்ட 'ஃப்ராக்டல்' வடிவப் பயிர்வட்டச் சித்திரமும் ஒரே வடிவத்தில் இருந்தன.
அப்படி ஒரு சித்திரம் ஒரு வருடத்துக்கு முன்னர் பயிர் வட்டங்களாக ஷில்போல்டனில் ஏன் உருவாக்கப்பட்டது என்பது அப்போதுதான் அனைவருக்கும் புரிந்தது.
ஒரு பயிர்ச் சித்திரத்தை ஏற்கனவே உருவாக்கி, பின்னர் அதே பயிர்ச் சித்திரத்தை உள்ளடக்கி வேறு ஒரு குறியீட்டு வகைப் பயிர்ச் சித்திரத்தை உருவாக்குவதென்பது மிகவும் சிக்கலான ஒன்றாகவே பார்க்கப்படுகின்றது.
அத்துடன் இவையெல்லாம் மனிதர்களால் உருவாக்கப்பட வேண்டுமென்றால்,அதற்குத் தேவையான உழைப்பு என்பது மிக மிக அதிகமானது. அதற்குக் காலமும் அதிகம் தேவைப்படும். ஆனால் ஒரே இரவில், நான்கு மணிநேரங்களில் உருவாக்கப்பட முடியாது. இவற்றை ஏலியன்கள்தான் உருவாக்கின என்பதற்கு இது ஒன்றே சாட்சியமாகும் என்றுதான் சொல்ல வேண்டும்.

## ஏலியன்கள் 7

Shoukath Ali Aalim Maslahi இவ்வளவு ஆதாரத்தையும் சொல்லியும் நண்பர்கள் இந்த விஞ்ஞானத்தை எப்படி நம்புறது ? என்று நேரடியாக என்னிடம் கேட்கிறார்கள் .
தஜ்ஜால் வந்து 1400 வருடத்திற்கு மேலாகிறது. யஃஜுது , மஃஜுது. கூட்டம், ஹாரூத் ,மாரூத் , தாப்த்துல் அர்லு என்ற மிருகம் இவர்களெல்லாம் இந்த பூலோகத்தில்தான் இன்னும் மறைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் இவர்கள் வேற்றுகிரக வாசிகள்
இந்த பூமிக்கு முகத்தை மாற்றியமைக்கப்பட்டு வந்தவர்கள் 29 பேர்கள் என்றும் 27 பேர்கள் என்றும் "நா ஃ பிவுல் முஸ்லிமீன் " என்ற ஹதீஸ்களின் வாயிலாக அறிய முடிகிறது.
அலி (ரலி) அவர்கள் கூறுகின்றனர் : "நான் நபி (ஸல்) அவர்களிடம் இறைவன் எத்தனை பேரின் முகங்களை மாற்றியமைத்துள்ளான் ? என்று கேட்டதற்கு ,
"13 பேர்கள் " என்றார்கள். அவர்களில் "ஜுஹ்ரா " ஒருத்தி என்றும் அவர் ஓர் அரசத்திருமகள் என்றும் . மலக்குகள் ஹாரூத் , மாரூத் முகம் மாற்றம் செய்யட்டு மனிதர்களாக பூமிக்கு வந்தனர் (திருக்குர்ஆன் : 2 : 102 ) இருவரையும் ஜுஹ்ரா தன் வசப்படுத்தினாள் என்றும் கூறினர்கள்.

ஜுஹ்ரா துருவ நட்சத்திரமாக இன்னும் விண்ணில் மின்னிக் கொண்டிருக்கிறாள் என்கிறது இன்னொரு கிதாபு நபி ஈஸா (அலை) அவர்கள் பூலோகவாசி ஆனால் வேற்றுகிரகத்தில் 2-ம் வானத்தில் உள்ளார்கள் . இதெல்லாம் சந்தேகமே படக் கூடாது . பட்டால் ஈமான் பறி போயிடும்.
இதெல்லாம் சொல்லும் போது ஈமானுக்கு பயந்து யாருமே எந்த ஆதாரமும் கேட்கவில்லை.
ஆனால் அதி நவீன அறிவியலை ஆதாரத்தோடு சொல்றேன் அவங்க ர.ரா நல்ல வரலாறு எழுதுங்களேன் என்கிறார்கள்.
அட , நம் பாவா ஆதம் (அலை) அவர்கள் கூட வேற்று கிரக வாசி நாமெல்லாம் அவங்களோட வேற்று கிரக குஞ்சுன்னு சொன்னால் நம்பணும் .
ஏலியனுக்கும் இஸ்லாத்திற்கும் தான் நெருங்கிய தொடர்புன்னு சொன்னா நம்பணும் . சொல்லவதாவது விடணும் .

**ஏலியன்கள் 8**



பயிர்வட்டங்கள் மனிதனால் உருவாக்கப்படுகின்றன அல்லது வேறு ஒரு சக்தியினால் உருவாக்கப்படுகின்றன என்பதைவிட, ஏன் உருவாக்கப்படுகின்றன என்னும் கேள்விக்குத்தான் எந்தப் பதிலும் கிடைப்பதில்லை. ஆனால் உருவாக்கப்படும் ஒவ்வொரு பயிர்வட்டத்துக்கும் ஏதோ ஒரு அர்த்தம் இருப்பதாகவே, அவற்றை ஆராய்பவர்கள் நினைக்கிறார்கள்.
இதுவரை உருவாக்கப்பட்ட பத்தாயிரத்துக்கும் அதிகமான பயிர்வட்டங்களுக்கு, அவை என்னென்ன அர்த்தங்களைக் கொடுக்கின்றனவோ, அதைப் பொறுத்துத் தனித்தனிப் பெயர்களை அதை ஆராய்பவர்கள் சூட்டியிருக்கின்றனர்.
பல சிக்கலான கணித வரைவுகளையுடைய பயிர்வட்டங்கள் இதுவரை உருவாக்கப்பட்டிருக்கின்றன. பயிர்வட்டங்களுக்கும் 'கேத்திரகணித' வரைவுகளுக்கும் (Geometry) நிறையவே சம்பந்தங்கள் இருப்பது, அவற்றின் அமைப்பின் மூலம் இலகுவாகப் புரிந்துகொள்ளக் கூடியதாக இருக்கிறது. ஒரு பேச்சுக்கு இந்தப் பயிர்வட்டங்களை ஏலியன்கள்தான் உருவாக்குகின்றன என்று வைத்துக் கொண்டால், 'ஏலியன்களுக்கும், ஜியாமட்ரிக்கும் அப்படி என்னதான் சம்பந்தம் இருக்கும்?' என்ற கேள்வி நம்மை எப்போதும் ஆச்சரியப்பட வைக்கும்.
இந்த வகையில் 2008ம் ஆண்டு ஜூன் மாதம் 1ம் தேதி, இங்கிலாந்தில் உள்ள 'பார்பர்ரி காஸில்' (Barbury Castle) என்னுமிடத்தில் ஒரு பயிர்வட்டம் தோன்றியது. பல பரிசோதனைகளின் பின்னர் அது மனிதர்களால் உருவாக்கப்படவில்லை என்ற முடிவுக்கு அதை ஆராய்ந்தவர்கள் வந்திருந்தனர். ஆனால் அந்தப் பயிர்வட்டத்தின் அமைப்பு அனைவரையும் குழப்பத்திலாழ்த்தியது.

வட்டவடிவமாகக் காட்சிதரும் அந்தச் சித்திரத்தில், ஒரு கோடு மையத்திலிருந்து ஆரம்பித்து, வட்டத்தின் விளிம்புவரை வளைந்தும் திரும்பியும் செல்வது போல அமைக்கப்பட்டிருக்கிறது. மைய வட்டத்தில் ஆரம்பிக்கும் கோட்டின் ஆரம்பத்திலேயே ஒரு சிறு புள்ளி போன்ற வட்டமும், முடிவில் மூன்று வட்டங்களும்

காணப்படுகின்றன. இது அந்தப் பயிர்வட்டத்தில் ஒரு வித்தியாசமான தோற்றதைக் கொடுத்தது.அந்தச் சித்திரத்தின் படம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

அந்தப் பயிர்வட்டம் மனிதனால் செய்யப்படவில்லை என்று உறுதிசெய்யப்பட்ட பின்னர், அந்தப் பயிர்வட்ட அமைப்புக்கு என்ன அர்த்தம் என்பதை அறிவதற்கு மிகவும் ஆவலுடன் முயன்றனர் ஆராய்ச்சியாளர்கள். ஆனால், என்ன முயன்றும் சுலபமாக அதன் அர்த்தத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.
150 அடிகள் அகலமான அந்தப் பயிர்வட்டம், பார்லி (Barley) பயிரினால் உருவாக்கப்பட்டிருந்தது. இதுவரை உருவாக்கப்பட்ட சிக்கலான பயிர்வட்டங்களில், முதன்மையான பயிர்வட்டமாக அது கருதப்படுகிறது. யாருக்கும் அதன் அர்த்தம் புரியவில்லை. அதன் அர்த்தம் புரியாததனால், 'நாங்கள்தான் உருவாக்கினோம்' என்று சொல்லி அதைச் சொந்தம் கொண்டாட யாரும் வரவுமில்லை.
சில காலங்களின் பின்னர் நார்த் கரோலினாவைச் (North Carolina) சேர்ந்த ஆஸ்ட்ரோ பிசிஸிஸ்ட்டான 'மைக் ரீட்' (Dr.Mike Reed) என்பவர் அதற்கான அர்த்தத்தைக் கண்டுபிடித்தார். அவர் கண்டுபிடித்த அர்த்தம் அனைவரையும் மலைக்க வைத்தது.

"யா அல்லாஹ் ! இது எப்படிச் சாத்தியம்?" என்று பலரையும் திகைக்க வைத்தது. "மனிதனுக்கு மட்டுமே தெரிந்திருந்தது எப்படி ஏலியன்களுக்குத் தெரிந்திருக்க முடியும்?" என்று நினைக்க வைத்தது? "இது மனிதன் உருவாக்கியதுதானோ?" என்றும் சந்தேகப்பட வைத்தது. ஆனால், 'மனிதனால் இப்படிச் சிந்தித்து சிக்கலாக இதுபோல ஒரு அமைப்பை உருவாக்கியிருக்கவே முடியாது' என்றே பின்னர் முடிவுக்கு வந்தனர். இவ்வளவு சிந்திக்க வைத்த அந்தப் பயிர்வட்டத்தின் அர்த்தம் என்ன தெரியுமா?
நாம் கணிதத்தில், வட்டங்களின் சமன்பாடுகளில் (Equations) பயன்படுத்தும் 'பை' அதாவது 'π' என்பதுதான் அது. கணிதம் படித்தவர்களுக்கு 'பை' (Pi) என்றால், 22/7 அல்லது 3.141592654... என்பது தெரியும். கணிதத்தில் 'பை' என்பதை நாம் பல இடங்களில் பயன்படுத்தி வந்திருக்கின்றோம்.

வட்டத்தின் சுற்றளவுக்கும் அதன் விட்டத்துக்கும் உள்ள மாறாத விகிதம்தான் π எனக் குறிப்பிடுகிறோம். மிகச்சிறிய வட்டத்திலிருந்து எவ்வளவு பெரிய வட்டமாக இருந்தாலும் இந்த விகிதம் மாறுவதில்லை என்பதுதான் இதன் சிறப்பு. இந்த π குறித்தான ஆய்வுகள் இன்றளவிலும் தொடர்ந்து செய்யப்பட்டு வருகின்றன. π ன் மதிப்பைப் போல அது சார்ந்த ஆய்வுகளும் முடிவில்லாமல் உள்ளன.

π ன் தோராய மதிப்பு 22/7 அல்லது 3.14 எனக் குறிப்பிடுகிறோம். இந்த மதிப்பையே சூத்திரங்களில் நேரிடையாகப் பயன்படுத்தாமல் ஏன் ஒரு கிரேக்க எழுத்தைக் குறியீடாகப் பயன்படுத்த வேண்டும் என்ற கேள்வி எழலாம். அதற்குக் காரணம் உண்டு.

π ன் மதிப்பானது 3.14159265358979323846.......... என முடிவில்லாமலும் சுழல் தன்மையற்றும் செல்கிறது.(கவனிக்கவும் சுழல் தன்மை) இதை அப்படியே கணக்கீடுகளில் பயன்படுத்துவது சாத்தியமற்றது. இந்த வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி இன்று கணினி மூலமாக 17 மில்லியன் தசம ஸ்தானங்கள் வரை துல்லியமாக π யின் மதிப்பு கண்டறியப்பட்டுள்ளதாகச் சொல்லப்படுகிறது. இருப்பினும் இன்னும் தொடர்கிறது.

وَاِنْ تَعُدُّوْا نِعْمَةَ اللّٰهِ لَا تُحْصُوْهَا اِنَّ اللّٰهَ لَغَفُوْرٌ رَّحِيْمٌ
அல்லாஹ்வின் அரு(ள்க)ளை நீங்கள் கணக்கிட்டால் அவற்றை உங்களால் எண்ணிட முடியாது. நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும், பெரும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் : 16:18)

எனவே தான் இதைச் சுருக்கித் தோராயமாக 22/7 அல்லது 3.14 எனத் தேவைக்கு ஏற்பவும் கணக்கீட்டின் துல்லியத் தன்மைக்கு ஏற்பவும் பயன்படுத்தலாம் என ஆர்க்கிமிடிஸ் என்ற கணித மேதை பரிந்துரைத்தார்.அது இன்னமும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

**காரிநாயனார்** என்ற பழந்தமிழ்ப் புலவர் தனது பாடலில் π யின் மதிப்பு பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார்.
“வட்டத்தரைக் கொண்டு விட்டத்தரை தாக்கின் சட்டெனத் தோன்றும் குழி”

அதே 'பை' யை, அந்தப் பயிர்வட்டத்தில், அதன் கணிதப் பெறுமானத்தைக் கொண்டு உருவாக்கியிருக்கிறார்கள். ஒரு வட்டத்தை, அதன் மையத்திலிருந்து பத்துச் சமபங்குகளாகப் பிரித்து, ஒவ்வொன்றுக்கும் ஒன்று என்னும் எண்ணிக்கையைக் கொடுத்து 3.141592654... என்னும் பெறுமானத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.
இதை வாசிக்கும்போது, நான் மேலே கொடுத்திருக்கும் வர்ணப் படத்தைச் சற்று நிதானமாக அவதானித்துப் பாருங்கள், நான் சொல்ல வருவது முழுமையாகப் புரியும்.

'பை'யினது பெறுமதியைப் பத்து இலக்கங்களுக்குக் கொடுத்தது மட்டுமல்லாமல், அதன் தொடர்ச்சியாக மூன்று புள்ளிகளையும் கொடுத்திருக்கிறார்கள். எல்லாவற்றையும் விட ஆச்சரியம் என்னவென்றால், மூன்றுக்குப்

பக்கத்தில் வரும் தசம புள்ளியைக் குறிப்பதற்கு, பயிர்வட்டத்தில் ஒரு சிறிய புள்ளி போன்ற வட்டத்தை, மையத்தின் ஆரம்பத்திலேயே அமைத்திருக்கிறார்கள்.

இந்தப் பயிர்வட்டத்தை மனிதன் அமைத்தானோ, ஏலியன் அமைத்ததோ என்று சிந்திப்பதை விட, அது அமைக்கப்பட்டிருக்கும் சிறப்புத்தான் பலராலும் பேசப்படுகிறது.
பயிர்வட்டங்களிலேயே ஒரு மைல்கல்லாக அமைந்த சித்திரமாக அது கணிக்கப்படுகிறது. அதை மனிதன் செய்யவே இல்லையென்ற முடிவுதான் ஆராய்ந்தவர்களின் முடிவாக உள்ளது. ஒருவேளை மனிதன் இதைச் செய்திருந்தால், அந்த மனிதன் பயிர்வட்டத்தைச் செய்து கொண்டிருக்கும் ஒருவனாக இருக்கவே தேவையில்லை. அவன் உலகில் மாபெரும் கணிதவியலாளனாக எல்லாராலும் மதிக்கப்பட்டிருப்பான்.
இப்படி ஒளிந்திருந்து பயிர்வட்டங்களை அவன் அமைக்கவே தேவையில்லை. ஆனால் கிடைத்த அனைத்துத் தகவல்களும் அந்தப் பயிர்வட்டத்தை மனிதர்கள் உருவாக்கவில்லை என்று அடித்துக் கூறுகிறது. அந்த வகையில் அதை ஏலியன்கள் உருவாக்கினார்கள் என்றே நம்ப வேண்டியிருக்கிறது. அப்படி இருக்கும்பட்சத்தில், ஏலியன்கள் 'பை' என்பதை எப்படித் தெரிந்துகொண்டார்கள்?
கணிதம் என்பது உலக ரீதியாக இல்லாமல், பிரபஞ்ச ரீதியாக ஒரே மாதிரியானதுதானா அல்லது ஏலியன்கள் 'பை' மூலமாக நமக்கு ஏதாவது செய்திகளைக் கூற விரும்புகின்றனரா?
இவையெல்லாம் நம்மைத் துளைத்தெடுக்கும் கேள்விகளாகவே இருக்கின்றன. இவற்றிற்கான பதில்களை நாம் எப்போதுதான் பெற்றுக் கொள்ளப் போகிறோம்?
π ன் மதிப்பைப் போல அது சார்ந்த ஆய்வுகளும் முடிவில்லாமல் உள்ள நிலையில் பயிர் வட்டங்களின் வரைந்துள்ள π யை விவரிக்கும் இந்த நிகழ்வு நம்மை மேலும் மேலும் அழுத்தியபடியே இருக்கின்றன.

## ஏலியன்கள் 9

2007ஆம் வருடம் ஜூலை மாதம் ஏழாம் தேதி வின்ஸ்டன் கீச் (Winston Keech ) என்பவரும் காரி கிங்கும் (Gray King) நண்பர்கள். வின்ஸ்டன் ஒரு இன்ஜினியர் ஆக இருந்தாலும், அவருக்கு ஏலியன்களை கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் நெடுநாட்களாக உண்டு.

இரவில் படம்பிடிக்கும் கேமராக்கள் சகிதமாக வைல்ட்ஷையரில் உள்ள வயல்வெளி பிரதேசங்களில் திரிந்தபடி கண்காணிப்பது அவர் வேலை 7.7. 2007 அன்று ஈஸ்ட் ஃபீல்டு என்னும் இடத்திலுள்ள மலையில் நண்பர் காரியுடன் அமர்ந்தபடி வயல்வெளிகளை கவனித்துக் கொண்டிருந்தார்கள்.
தன்னிடம் இருந்த கேமராக்களை ஓடவிட்டு கொண்டு உடன் இருந்த காரியுடன் பேசிக்கொண்டிருந்தார்.
நள்ளிரவு தாண்டி, அதிகாலை 1.35 ஐ நெருங்கியது, கும்மிருட்டில் திடீரென பிளாஸ் வெளிச்சங்கள் போல ஒளி வட்டங்கள் தோன்றின.
இதற்கென்றே தயாராக இருந்தவர்கள், ஆச்சரியத்துடனும், சந்தோஷத்துடனும், ஒருவித பயத்துடனும் அங்கு நடப்பது வீடியோ கேமராவினால் பதிவு செய்தனர்.
அத்துடன் 'நைட் விஷன் லென்ஸ்' பொருத்தப்பட்ட வேறு ஒரு காமிராவில் பார்த்தபோது, எங்கும் மனித நடமாட்டமோ, வாகனங்களோ காணப்படவில்லை. அவர்கள் அமர்ந்திருந்தது சிறிய மலைப்பிரதேசம் என்றபடியினால், அனைத்தையும் கவனிக்கக் கூடியதாக இருந்தது.
அதிகாலை 3 மணிவரை அந்த ஃப்ளாஷ் வெளிச்சங்கள் ஆங்காங்கே எரிந்து அணைவதைக் கண்டார்கள் 3.13 மணி வரை அவர்களுக்கு முன்னால் காட்சிதந்த பெரிய வயல்வெளியில் எதுவுமே இருக்கவில்லை.ஆனால் ஏழே நிமிடங்களில் பின்னர் அதாவது, 3.20 க்குப் பார்த்த போது அவர்களால் அவர்களால் , அவர்கள் கண்களை நம்பவே முடியவில்லை.

வயல்வெளியில் நீளமான வடிவம் ஒன்றைக் கண்டார்கள் அது என்னவென்று தெரியவில்லை. உடன் சென்று பார்க்கவும் பயமாக இருந்தது. 4 மணியளவில் கொஞ்சம் வெளிச்சம் வரத் தொடங்கியதும் பார்த்தபோதுதான் அது மிகப்பெரிய பயிர்வட்டம் என்பது தெரிந்தது.
நடந்தவை அனைத்தையுமே காட்சிகளாக சாட்சிகளாக வின்ஸ்டன் காமிராக்கள் பதிவாகி இருந்தன.
உருவாக்கப்பட்டிருந்த பயிர்வட்டம் 300 மீட்டர் நீளத்துடன் பிரமாண்டமானதாக இருந்தது. 150 தனித்தனி வட்டங்களால் அது உருவாக்கப்பட்டிருந்தது.
அந்தச் சம்பவத்தை பொய்யென்று யாரும் மறுக்க முடியாதபடி, வீடியோ ஆதாரங்களுடன் இருந்தது. நண்பர்கள் இருவரும் கொடுத்த பேட்டிகள் ஐரோப்பாயே உலுக்கி எடுத்தது. அனைத்துப் பத்திரிகைகளும் அது பற்றிய செய்திகள் வெளியிட்டன.
இதில் என்ன ஆச்சரியம் என்றால், 'மைக்ரோவேவ் (Microwave ) என்று சொல்லப்படும் வெப்ப கதிர்கள், இந்த பயிர் வட்டம் உருவாக்கப்பட்டபோது, பயன்படுத்தப்பட்டிருப்பது உடனடியான பரிசோதனைகள் மூலம் கவனிக்கப்பட்டது.

யாரும் இதை நாங்கள்தான் செய்தோம் என்று சொந்தம் கொண்டாடி வரவுமில்லை மனிதனால் செய்யப்படாத பயிர் வட்டத்துக்கு மிகவும் ஆணித்தரமான சாட்சியாக இந்தப் பயிர்வட்டம் காட்சி அளித்தது.

இதுவரை பயிர்வட்டங்களை பற்றி பலவிதமாகப் பேசிக் கொண்டிருந்தவர்கள் எவராலும் எதுவும் சொல்ல முடியவில்லை. ஏழே நிமிடங்களில் 300 மீட்டர் அதாவது இரண்டு புட்பால் மைதானங்கள் அளவு பெரிய பயிர்வட்டம் ஒன்று உருவாக்கப்பட்டிருக்கிறது. இது எப்படி சாத்தியமாகும் ?
சரி, இதே மனிதன்தான் உருவாக்கினான் என்றால், அவனுக்கு குறைந்தபட்சம் இரண்டு நாட்கள் இதைச் செய்வதற்குத் தேவைப்பட்டிருக்கும்.

சரி, இவை மனிதனால் செய்யப்படவில்லை என்றால், யாரால் செய்யப்படுகின்றன ? பகலில் காற்றுச் சுழல்கள் போலவும், இரவில் வெளிச்சப் பந்துகள் போலவும் காட்சி தருபவை என்ன ? இப்படியான கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்கையில்,
' இந்த பயிர் வட்டத்தை ஆராய்ந்த சிலர் ஒரு விளக்கத்தைக் கூறினார்கள் . அந்த விளக்கத்தை நீங்கள் அறிந்தால் எப்படிப்பட்ட மனநிலையில் இருப்பீர்களோ தெரியவில்லை. ஆராய்ச்சியாளர்கள் கொடுத்த விளக்கம் என்ன தெரியுமா அந்த படத்திலேயே நல்ல பாருங்கள் தெரியும் ! ஆம் ! சாட்சாத் இந்துக்களின் ஓம் என்னும் அடையாளம்தான் இது ' என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்களில் சிலர்.
இப்படிப் பார்க்கும்போது நிலைமை மேலும் சிக்கலான ஒரு இடத்துக்குப் போய் விடும். கடவுள் நம்பிக்கையும் இதனுடன் இணைந்துக் கொண்டதாகிவிடும்.
இந்தப் பயிர் வட்டத்தைப் பார்த்து ஆய்வாளர்கள் "ஓம்" என்ற பதம் போல் இருப்பதாக சொன்னாலும், என் பார்வையில் அரபி எழுத்து ஜன் + தால் + நூன் = " அதன் " - என்றால் 7_வது சொர்க்கம்.
8 வகை சொர்க்கமும் அவைகளின் படைப்பும்
" ஜன்னத் " என்பது சுவர்க்கம் , அது ஏழு வானங்களுக்கும் மேலே ஒளியினால் படைக்கப்பட்டிருக்கும் பொன்னுலகம் .
1 - வது சொர்க்கம் " தாருல் ஜவால் "
மாணிக்கத்தினால் படைக்கப்பட்டது
2 - வது சொர்க்கம் " தாருஸ் ஸலாம்"
பவளத்தினால் படைக்கப்பட்டது
3 - வது சொர்க்கம் " ஜன்னத்துல் மஃவா " வெள்ளியினால் படைக்கப்பட்டது
4 - வது சொர்க்கம் " ஜன்னத்துல் குல்து "
செம்பொன்னினால் படைக்கப்பட்டது
5- வது சொர்க்கம் " ஜன்னத்துந் நயீம் "
ஆணி முத்துவினால் படைக்கப்பட்டது
6- வது சொர்க்கம் " ஜன்னத்துல் ஃபிர்தௌஸ்" பசும் பொன்னினால் படைக்கப்பட்டது
7- வது சொர்க்கம் " ஜன்னத்துல் அதன் " பச்சை மரகதத்தினால் படைக்கப்பட்டது
8- வது சொர்க்கம் " தாருல் கறாராம் " சன்ன முத்துவினால் படைக்கப்பட்டது .

**ஏலியன்கள் 10**
( பூமியைக் காணோம் )




சூரிய மண்டலம் , உள் சூரிய மண்டலம், வெளி சூரிய மண்டலம் என இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. இந்த இரண்டாக பிரிக்கிற வேலையை சிறு சிறு பாறைகளால் உருவான பெல்ட் எனப்படும் அஸ்டராய்டுகள் செய்கின்றன .
உள் சூரிய மண்டலமாக 4 உட்புற சிறிய கிரகங்கள்

புதன்
வீனஸ்
பூமி
செவ்வாய்
வெளி சூரிய மண்டலமாக 4 வெளிப்புற அல்லது பெரிய கிரகங்கள்
வியாழன்
சனி
யுரேனஸ்
நெப்டியூன்
அதாவது பெல்ட்டுக்கு உள்ளே உள் சூரிய மண்டலம் எனவும், பெல்ட்க்கு வெளியே வெளி சூரிய மண்டலம் எனப்படும் .
இந்த சூரிய மண்டலத்தை பிரிக்கும் சிறு சிறு பாறைகளால் உருவான பெல்ட் எனப்படும் அஸ்டராய்டுகள் செவ்வாய் மற்றும் வியாழன் கோள்களின் இடையே உள்ளன.
அஸ்டராய்களான இவைகள் குட்டிக் கோள்களின் ஒடு பாதையாக அமைந்துள்ளது. அதில் ஏழரை லட்சத்துக்கும் அதிகமான குட்டிக் கோள்கள் உள்ளன. அவற்றில் 950 கிலோ மீட்டர் விட்டமுள்ள ' செரஸ்' முதல் இம்மியளவிலான தூசுகள் வரை அடங்கும்

அஸ்டராய்டுகளாக உடைவதற்கு முன்பு அது ஒரு பெரிய கோளமாக இருந்திருக்கிறது. இயற்கையாகவே மிகப் பெரிய விண்கல் மோதல்களால் அந்த கோள் சுக்குநூறாக உடைந்திருக்க வேண்டும். அல்லது ..,
அந்தக் கோளில் வாழ்ந்த மக்கள் அதிபுத்தியாக இருந்திருக்க வேண்டும். அணுகுண்டு தயாரிக்க பயன்படும் யுரேனியத்தை மொத்தமாக சேர்த்து வைத்து தவறுதலாக பயன்படுத்தி, மொத்த கோளும் அதனால் பாதிக்கப்பட்டு, உடைந்து போயிருக்க வேண்டும் !
எனவே செவ்வாய்க்கும் , வியாழனுக்கும் இடையே உடைந்த போன அந்த கோளின் துண்டுகள் அஸ்டராய்டுகளாக சூரியனை வலம் வருகிறது.
இந்த உடைந்த கோளின் தூசுகள் சூரிய மண்டலத்துக்குள் குறுக்கிடும்போது அத்தூசுகள் மற்ற கோள்களால் ஈர்க்கப்படும்.

அதே மாதிரி பூமியின் வளிமண்டலத்துக்குள் வரும் அஸ்டராய்டுகள் காற்றின் உராய்வு காரணமாகத் தீப்பற்றி எரியும். அவை வானில் எரியும் போது வாண வேடிக்கைகளைப் பார்க்கலாம். இவைகளை எரிகொள்ளிகள் எனப்படும்.
சில அஸ்டராய்டுகள் முழுமையாக எரியாமல் பூமியில் வந்து விழும். இவைகளை விண் எரிகற்கள் எனப்படும்.
சரி விஷயத்திற்கு வருவோம் . ஜூன் 22, 1995 அன்று ஹாம்ப்ஷயர் (யுகே) லாங்வுட் வாரனில் உள்ள வயல்வெளியில் வெளிச்சப் பந்துகளால் இந்த பயிர் வட்டங்கள் உருவாயின.
ஏலியன்கள் சூரிய மண்டலத்தின் உட்புற கோள்களின் அமைப்பை பயிர் வட்டங்களாக , அதாவது நடுவில் சூரியன் , சூரியனைச் சுற்றி புதன், அதனைச் சுற்றி வீனஸ், அதனைச் சுற்றி பூமி, அதற்கு பிறகு செவ்வாய், அதற்கும் பிறகு அஸ்டராய்டுகள் என்னும் உடைந்த போன கிரகத்தை பெல்ட் மாதிரி காட்டியிருக்கிறார்கள்.
இதில் ஓர் அதிர்ச்சியான செய்தி என்னவெனில்,

ஏலியன்கள் வரைந்த பயிர் வட்டங்களை நன்கு கூர்ந்து கவனியுங்கள்.பயிர் வட்டத்தின் நடுவே சூரியன் , சூரியனைச் சுற்றி புதன் கிரகமும் அதன் ஓடுபாதையும் காட்டியிருக்கிறார்கள் .
அதற்கு அடுத்தாற்போல் வீனஸ் (வெள்ளி) கிரகமும் , அதன் ஓடுபாதையும் காட்டியிருக்கிறார்கள் .
அதற்கு அடுத்தாற்போல் பூமியையும் , அதன் ஓடுபாதையும் காட்ட வேண்டும் அல்லவா... ? ஓடுபாதை மட்டும் காட்டியிருக்கிறார்கள் . பூமியைக் காணோம் .
அதற்கு அடுத்தாற்போல் செவ்வாயும் , அதன் ஓடுபாதையும் காட்டி இருக்கிறார்கள் . ஏலியன்கள் ஏன் பூமியின் ஓடுபாதை மட்டும் காட்டி விட்டு, பூமியை ஏன் விட்டு விட்டார்கள் ?
செவ்வாயையும் , அதன் ஓடுப்பாதையும் காட்டி கடைசியாக அஸ்டராய்கள் வரை தெள்ளத்தெளிவாக காட்டிய ஏலியன் ஏன் பூமியை ஒரு பந்து வடிவமாக ஏன் காட்டாமல் விட்டனர் ?
அஸ்டராய்டுகளாகவதற்கு முன்பு இருந்த கோள் இல்லை. ஆனால் அந்தக் கோளின் உடைந்த பாகங்கள் ஓடுபாதைகளாக அஸ்டராய்டுகள் உள்ளன.
இதன் மூலம் ஏலியன்களால் பூமியை இல்லாமல் ஆக்கும் ஏதேனும் ஆபத்துக்கள் வர இருக்குமோ ?
அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக !

فَتَبٰرَكَ اللهُ رَبُّ الْعٰلَمِيْنَ  اَللهُ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الْاَرْضَ قَرَارًا وَّالسَّمَآءَ بِنَآءً وَّصَوَّرَكُمْ فَاَحْسَنَ صُوَرَكُمْ وَرَزَقَكُمْ مِّنَ الطَّيِّبٰتِ ذٰ لِكُمُ اللهُ رَبُّكُمْ
அல்லாஹ்தான் உங்களுக்கு இப்பூமியைத் தங்குமிடமாகவும், வானத்தை ஒரு விதானமாகவும் உண்டாக்கியிருக்கிறான்; மேலும், அவன் தான் உங்களை உருவாக்கி, உங்கள் உருவங்களை அழகாக்கி, சிறந்த ஆகார வசதிகளையும் அளித்தான்; அவன்தான் அல்லாஹ்; உங்களுடைய இறைவன்; அகிலத்தாருக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ் மிக பாக்கியமுடையவன். (அல்குர்ஆன் : 40:64)

**ஏலியன்கள் 11**
' வாவ் ' ( ు)




வேற்றுகிரகவாசிகள் இருப்பது உண்மையோ பொய்யோ எதுவாக இருந்தாலும், விஞ்ஞானிகள் அவர்களைத் தொடர்பு கொள்வதற்குப் பல காலமாக முயற்சி செய்து வருகிறார்கள்.
ஒருவேளை பிரபஞ்சத்தின் வேறு ஏதாவது கிரகங்களில் யாராவது இருந்து, அவர்கள் நம்மைத் தொடர்புகொள்ள முயலலாம் என்பதால் தொலைநோக்கிகள் மூலமாக விண்வெளியை ஆராய்ந்து வருகிறார்கள்.
ரேடியோ டெலஸ்கோப் அல்லது வானொலி அதிர்வெண் தொலைநோக்கிகள் எனப்படும் இவை விண்வெளியில் இருந்துவரும் சமிக்ஞை ( சிக்னல்) களைத் தொடர்ச்சியாக ஆய்வு செய்யும்படி வடிவமைக்கப்பட்டுள்ளன.
அப்படி ஒருநாள் ஒரு தொலைநோக்கிக் கண்டறிந்த ஒரு சமிக்ஞை ( சிக்னல்) உலகில் இருக்கும் விஞ்ஞானிகளை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது.

“வாவ் " சிக்னல்
அந்தச் சம்பவம் மட்டுமில்லை; அந்தச் சமிக்ஞை ( சிக்னல்) -க்கு பெயரே வாவ் சிக்னல்தான்.
அமெரிக்காவின் ஓஹியோ என்ற இடத்தில் அமைந்திருக்கிறது 'பிக் இயர் ' (Big Ear)என்ற தொலைநோக்கி, ஓஹியோ மாநிலப் பல்கலைக்கழகத்தின் கட்டுப்பாட்டில் இயங்குவது.
அப்போதெல்லாம் தொலைநோக்கியின் மூலமாகப் பெறப்பட்ட தகவல்களை ஒரு பேப்பரில் பிரிண்ட் அவுட் எடுத்து, அதில் ஏதாவது புதிய சமிக்ஞை ( சிக்னல்) கள் பதிவாகியிருக்கிறதா என்பதை ஆராய்வார்கள். 1977-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஒருநாள் வழக்கம்போல ' பிக் இயர் ' தொலைநோக்கி செயல்பட்டுக் கொண்டிருந்தது. வானியல் ஆராய்ச்சியாளரான ஜெர்ரி ஆர்.ஏமான் தொலைநோக்கியில் இருந்து பிரின்ட் அவுட் எடுக்கப்பட்டிருந்த தகவல்களை ஆராய்ந்து கொண்டிருந்தார், முற்றிலும் எண்களால் நிரப்பப்பட்ட அந்தத் தகவல்களில் இருக்கும் புதிரை விடுவிப்பது என்பது சாதாரணமான காரியமில்லை.
பேப்பரைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, ஓர் இடத்தில் சற்று வித்தியாசமாக அவர் கண்களுக்குத் தென்படுகிறது அந்த எழுத்துக்கள் 6EQUJ5 அதை அப்படியே ஆங்கிலத்திற்கு மாற்றி பேப்பரின் ஓரத்தில் எழுதுகிறார், அவர் எழுதியிருந்த சிக்னலின் வார்த்தை ' Wow ! '. ஜெர்ரிக்கு ஆச்சர்யம் தாங்க முடியவில்லை நிஜமாகவே அவருக்கு ஒரு தகவல் கிடைத்திருக்கிறது.
என்றைக்கு இது பதிவு செய்யப்பட்டிருக்கக்கூடும் என்று பார்க்கிறார். அது ஆகஸ்ட் 15-ம் தேதி, நள்ளிரவு. மொத்தம் 72 நொடிகள் அந்த சிக்னல் தொடர்ச்சியாகக் கிடைத்திருக்கிறது , இவர் சில நாள்கள் கழித்துதான் அந்தத் தகவலைப் பார்த்திருக்கிறார்.

தகவல் வெளியானவுடன் உலகம் பரபரப்பானது. அப்போ வேற்றுகிரகவாசிகள் இருப்பது உண்மைதானா, நிஜமாகவே அவர்கள் நம்மைத் தொடர்புகொண்டார்களா, எதைப்பார்த்து அவர்கள் வியந்தார்கள் என்பது வரைக்கும் பல விதமான கேள்விகள் எழத்தொடங்கின.
எதுவாக இருந்தாலும் இந்த சமிக்ஞை மற்றவற்றைவிட சற்று வித்தியாசமானது என்பது உறுதிப்படுத்தப்படுகிறது.
“வாவ் சிக்னல்” கண்டுபிடிக்கப்பட்டபோதே கருவியில் தவறு நிகழ்ந்திருக்கலாம் என்றும், இயற்கையாகவோ அல்லது மனிதர்களால் வெளியிட்டப்பட்ட அதிர்வுகள் தவறாகவோ பதிவு செய்யப்பட்டிருக்கலாம் என்று சிலர் சந்தேகப்பட்டார்கள்,
ரேடியோ சிக்னல்கள் தானாக உருவாவதில்லை.அவை உருவாக்கப்படுபவை .மனிதனாலோ அல்லது வேறு உயிரினங்களினாலோ உருவாக்கப்படுபவைதான் இந்த ரேடியோ சிக்னல்கள்.
ரேடியோ சிக்னல்களை உருவாக்குவதற்கும் உருவாக்கி அவற்றை பெற்றுக் கொள்வதற்கும் கருவிகள் தேவை. இப்படியான கருவிகளில் ஒன்றுதான் ரேடியோ டெலஸ்கோப் என்று சொல்லப்படுவது.

வானிலை ஆராயப் பயன்படுத்தும் டெலஸ் கோப்புகள் இவையேதான். இவற்றுள் மிகப்பெரிய அளவுள்ள டெலஸ் கோப்புகளை **(very large Array - VLA )** என்பார்கள் .
மேற்கண்ட ' வாவ் ' சிக்னல் 220 ஒளிவருடங்களுக்கு அப்பால் இருக்கும் ' சஜிட்டாரியஸ்' நட்சத்திரக் கூட்டங்களில் சஜிட்டாரி X1, சஜிட்டாரி X2 ஆகிய இரண்டு நட்சத்திரங்களுக்கு இடையில் இருந்து இந்த அந்த சிக்னல் வந்தது.
இந்த சிக்னல் வந்து ஏறக்குறைய 19 வருடங்கள் கழித்து....

1996ம் ஆண்டு ஜூலை மாதம் 7ம் திகதி, மாலை 6 மணியளவில் லூஸி பிரிங்கெல் **(Lucy Pringle)** என்னும் பெண்மணி, தன்னுடைய மகனைப் பார்ப்பதற்கு டாக்ஸி ஒன்றில், ஸ்டோன் ஹெஞ்சுக்கு அருகாமையில் அமைந்திருக்கும் A303 நெடுஞ்சாலையில் வந்து கொண்டிருந்தார்.
இருபக்கமும் பச்சையாய்ப் பரவியிருக்கும் வயல்வெளிகள். ஸ்டோன் ஹெஞ்சை டாக்ஸி அண்மித்ததும், சாலையில் மறுபுறமாக இருந்த வயல்வெளியில் காற்றின் சுழற்சியால் ஏற்பட்ட புழுதிபோன்று, ஏதோ ஒன்று உருவாவதை கவனித்தார். ஏனோ அவருக்கு அது வினோதமான காட்சியாகத் தெரிந்தது.
டாக்ஸி ஓட்டுனரிடம் டாக்ஸியைச் சாலையில் நிறுத்தும்படி கூறிவிட்டு, அங்கு நடப்பதை கவனித்தார். வயலில் இருந்து ஒரு மீட்டர் உயரத்துக்கு மிகப்பெரிய வட்டவடிவத்தில், புகை போன்று காற்றுச் சுழன்றபடி அந்த வயல்வெளிப் பிரதேசத்தில் அங்கும் இங்கும் அலைவதைக் கவனித்தார். கவனித்தது அவர் மட்டுமல்ல, அவருடனிருந்த டாக்ஸி ஓட்டுனரும்தான்.

ஜூலை மாதங்களில் ஐரோப்பாவெங்கும் இருட்டாவதற்கு மாலை 9 மணிக்கு மேலாகும். இங்கிலாந்திலும் நல்ல வெளிச்சமான பகல் நேரம் அது. திடீரென அந்த வட்டச் சுழற்சி நின்று மறைந்து போனது. அங்கே லூஸி கண்ட காட்சி யாருமே நம்பமுடியாதது.
115 மீட்டர் அகலமான மிகப்பெரிய பயிர்வட்டம் அங்கே காட்சியளித்தது. 151 வட்டங்களைக் கொண்டு அந்தப் பயிர்வட்டம் உருவாக்கப்பட்டிருந்தது !
அந்த பயிர் வட்டம் அரபி எழுத்தான " வாவ் ( و ) " என்னும் வடிவில் ஃப்ராக்டல் (Fractal) சித்திரமாக அது இருந்தது. ஃப்ராக்டல் என்பது மிகவும் சிக்கல் வாய்ந்த கணித வரைவு ஆகும்.
பட்டப்பகலில் பலர் சாட்சியாக இருக்கும்போது உருவானது இந்த ( و) அரபி எழுத்தான ' வாவ் ' பயிர்வட்டம்.
லூஸியின் சாட்சியத்தின்படி மொத்தமாக 20 நிமிடங்களில் அந்தப் பயிர்வட்டம் உருவாக்கப்பட்டிருக்கிறது !
ஏலியன்கள் டெலஸ்கோப் வழியாக " 6EQUJ5 " என்ற சிக்னல் அனுப்ப, அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு " WOW ".
ஏறக்குறைய 19 வருடங்கள் கழித்து, அந்த சிக்னல் ' வாவ் ' வையே அரபி எழுத்தில் பயிர் வட்டமாக வரைந்து காண்பித்துள்ளார்கள்.

பயிர் வட்டம் 115 மீட்டர் அகலத்தில், 151 வட்டங்கள் கொண்டு வரையப்பட்டிருக்கிறது !
அரபி எழுத்து و வின் ரகசியம் உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள். ஏலியன்கள் உங்களைத் தேடி வருவார்கள்.

**Rahmath Rajakumaran**
டெலஸ்கோப் ( و ) சிக்னல் படத்தைப் பாருங்கள் ' 6 ' என்ற எண் மூன்று முறை பயன்படுத்தப்பட்டிருக்கிறது . ( و ) என்ற எழுத்தின் அப்ஜத் கணக்கின்படி அதன் மதிப்பு 6 . இது உங்களின் ஆய்வு சிந்தனைக்காக !

**ஏலியன்கள் 12**

2007ஆம் வருடம் ஜூலை மாதம் ஏழாம் தேதி வின்ஸ்டன் கீச் **(Winston Keech )** என்பவரும் காரி கிங்கும் **(Gray King)** நண்பர்கள். வின்ஸ்டன் ஒரு இன்ஜினியர் ஆக இருந்தாலும், அவருக்கு ஏலியன்களை கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் நெடுநாட்களாக உண்டு.
இரவில் படம்பிடிக்கும் கேமராக்கள் சகிதமாக வைல்ட்ஷையரில் உள்ள வயல்வெளி பிரதேசங்களில் திரிந்தபடி கண்காணிப்பது அவர் வேலை 7.7. 2007 அன்று ஈஸ்ட் ஃபீல்டு என்னும் இடத்திலுள்ள மலையில் நண்பர் காரியுடன் அமர்ந்தபடி வயல்வெளிகளை கவனித்துக் கொண்டிருந்தார்கள்.
தன்னிடம் இருந்த கேமராக்களை ஓடவிட்டு கொண்டு உடன் இருந்த காரியுடன் பேசிக்கொண்டிருந்தார்.
நள்ளிரவு தாண்டி, அதிகாலை 1.35 ஐ நெருங்கியது, கும்மிருட்டில் திடீரென பிளாஸ் வெளிச்சங்கள் போல ஒளி வட்டங்கள் தோன்றின.

இதற்கென்றே தயாராக இருந்தவர்கள், ஆச்சரியத்துடனும், சந்தோஷத்துடனும், ஒருவித பயத்துடனும் அங்கு நடப்பது வீடியோ கேமராவினால் பதிவு செய்தனர்.
அத்துடன் 'நைட் விஷன் லென்ஸ்' பொருத்தப்பட்ட வேறு ஒரு காமிராவில் பார்த்தபோது, எங்கும் மனித நடமாட்டமோ, வாகனங்களோ காணப்படவில்லை. அவர்கள் அமர்ந்திருந்தது சிறிய மலைப்பிரதேசம் என்றபடியினால், அனைத்தையும் கவனிக்கக் கூடியதாக இருந்தது.
அதிகாலை 3 மணிவரை அந்த ஃப்ளாஷ் வெளிச்சங்கள் ஆங்காங்கே எரிந்து அணைவதைக் கண்டார்கள் 3.13 மணி வரை அவர்களுக்கு முன்னால் காட்சிதந்த பெரிய வயல்வெளியில் எதுவுமே இருக்கவில்லை.ஆனால் ஏழே நிமிடங்களில் பின்னர் அதாவது, 3.20 க்குப் பார்த்த போது அவர்களால் அவர்களால் , அவர்கள் கண்களை நம்பவே முடியவில்லை.

வயல்வெளியில் நீளமான வடிவம் ஒன்றைக் கண்டார்கள் அது என்னவென்று தெரியவில்லை. உடன் சென்று பார்க்கவும் பயமாக இருந்தது. 4 மணியளவில் கொஞ்சம் வெளிச்சம் வரத் தொடங்கியதும் பார்த்தபோதுதான் அது மிகப்பெரிய பயிர்வட்டம் என்பது தெரிந்தது.
கோதுமை பயிர் வயல்களில் பயிர் வட்டங்கள் இவ்வாறுதான் உருவாக்கப்படுகிறது.
அனஸ்(ரலி) அறிவித்தார்.
" நபி(ஸல்) அவர்களின் தோழர்களில் இருவர் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (விடைபெற்று) இருள் நிறைந்த ஓர் இரவில் (தம் இல்லங்களுக்கு) நடந்து சென்றனர்.
அவ்விருவருடனும் இரண்டு விளக்குகளைப் போன்றவை அவர்களுக்கு முன்னால் ஒளிவீசிக் சென்றன. அவர்கள் (வழியில்) பிரிந்து சென்றபோது, அவர்கள் தம் வீட்டாரிடம் சென்று சேரும் வரை ஒவ்வொருவருடனும் ஓர் ஒளி (மற்றொன்றைவிட்டுப் பிரிந்து அவர்களுடன்) சென்றது "
ஸஹீஹ் புகாரி : 3639.

**ஏலியன்கள் 13**

ஜூன் 6, 2008 அன்று வெஸ்ட் கென்னட், வில்ட்ஷயர் (யுகே) இல் வழக்கமான வட்டங்கள் களத்தில் தோன்றின. ஆகஸ்ட் 1, 2008 அன்று அந்த இடத்தில் சரியாகக் காணப்பட்டதால், அவர்கள் 40% சூரிய கிரகணத்தை சித்தரித்தனர்.

சூரியன், சந்திரன் மற்றும் பூமி ஆகிய மூன்றும் ஒரே நேர்கோட்டில் வரும்போது சந்திரனின் நிழல் சூரியனை மறைப்பதால் சூரிய கிரகண நிகழ்வு உண்டாகிறது. இதில் சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் சந்திரன் இருக்கும். சூரியன், சந்திரன், பூமி மூன்றும் ஒரே நேர்கோட்டில், முழு நிலா நாளில் வரும்போது சந்திர கிரகணம் உண்டாகிறது . இதில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் இடையே பூமி இருக்கும். பூமியின் நிழல் சந்திரனில் விழும் நிகழ்வுக்கு சந்திரகிரகணம் என்று கூறப்படுகிறது.

சூரிய கிரகணம் அல்லது சந்திர கிரகணம் என்பவை அல்லாஹ் ஏற்படுத்திய பிரபஞ்ச விதிகளுக்கு அமைவாக வானில் ஏற்படும் நிகழ்வுகளாகும். இது புவியில் ஏற்படும் வேறு எந்த நிகழ்வையும் அடிப்படையாகக் கொண்டு இடம்பெறுபவையல்ல என்பதை இஸ்லாமும் , இன்றைய விஞ்ஞானமும் உண்மைப்படுத்துகிறது.
'நபி (ஸல்) அவர்களின் காலத்தில் (அவர்களின் மகன்) இப்ராஹீம் (ரலி) அவர்கள் மரணித்தபோது சூரியக்கிரகணம் ஏற்பட்டது. அதனால் மக்கள் எல்லோரும் '(நபி (ஸல்) அவர்களின் மகனார்) இப்ராஹீமுடைய மரணத்திற்காகத்தான் இந்த சூரியக்கிரகணம் ஏற்பட்டது' என்று பேசிக் கொண்டார்கள்.
(அப்போது) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். 'சூரிய, சந்திர கிரகணங்கள் யாருடைய வாழ்விற்காகவோ (பிறப்பிற்காகவோ) இறப்பிற்காகவோ ஏற்படுவதில்லை. நீங்கள் கிரகணங்களைக் கண்டால் அல்லாஹ்வைத் தொழுது அவனைப் பிரார்த்தியுங்கள் என்றார்கள்' அறிவிப்பவர்: அபூமுகீரா இப்னு ஷுஃபா (ரலி), நூல்: புகாரி.

அறிவியல் உண்மை இவ்வாறு இருக்க, சந்திர கிரகணம் என்பது சந்திரன் என்னும் கோளை ராகு என்னும் பாம்பு விழுங்குவதால் உருவாகிறது என்றும், கிரகணம் நீங்குதல் என்பது விழுங்கிய நிலவினை அப் பாம்பானது வெளியே உமிழும் நிகழ்ச்சி என்றும் கூறுவது அறிவியலுக்குப் புறம்பான ஒரு கற்பனையே என்பதை அனைவரும் அறிந்து கொள்ளலாம்.
பழங்காலந்தொட்டே மக்கள் மத்தியில் கிரகணம் குறித்த பல மூட நம்பிக்கைகள் நிலவி வருகின்றன, இதில் முஸ்லிம் சமூகமும் விதிவிலக்கான ஒன்றல்ல என்பது இன்றும் கூட கிரகணம் தொடர்பில் நிலவி வரும் மூட நம்பிக்கைகள் கட்டியம் கூறுகின்றன.

உலக வரலாற்றில் இப்படி ஒரு நிகழ்ச்சி இடம்பெற்றுள்ளதை அறியமுடிக்கிறது, அமெரிக்காவைக் கண்டுபிடித்த கொலம்பஸ் என்பவர் சூரிய, சந்திர கிரகணங்கள் எப்போது ஏற்படும் என்பதை முன்பே கணித்து வைத்திருந்தார்.
அவர் அமெரிக்காவில் தங்கியிருந்தபோது, தமக்கு உணவுப் பொருட்களைத் தரமறுத்த செவ்விந்தியர்களிடம் 'நீங்கள் எங்களுக்குப் போதுமான அளவில் உணவளிக்காததால் குறிப்பிட்ட தினத்தில் சூரியன் இருட்டில் மறைந்து விடும்' என்று அச்சுறுத்தினார்.
அவர் குறிப்பிட்ட தினத்தன்று சூரியக்கிரகணம் ஏற்படவே, அதைக் கண்டு பயந்து நடுங்கிய செவ்விந்தியர்கள் கொலம்பஸ்ஸிற்கு ஏராளமான உணவுப்பொருட்களையும், மற்ற பொருட்களையும் கொடுத்ததாக சரித்திர குறிப்புகள் கூறுகின்றன.
“நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம் அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் தமது மேலாடை இழுபட (வேகமாக) பள்ளிவாயளிக்குள் நுழைந்தார்கள்.
கிரகணம் விலகும் வரை எங்களுக்கு இரண்டு ரகஅத்துக்கள் தொழுவித்தார்கள். பின்னர் எவரது மரணத்திற்க்காகவும் சூரிய,சந்திர கிரகணங்கள் ஏற்படுவதில்லை.எனவே அவ்விரு கிரகணங்களையும் காணும் போது தொழுங்கள். உங்களுக்கு ஏற்பட்டது விலகும் வரை துஆச் செய்யுங்கள் என்று கூறினார்கள். ஆதாரம் (புகாரி)

**ஏலியன்கள் 14**

ஆகஸ்ட் 8, 2008 ( 08.08.08 ) மில்க் ஹில் - ஆல்டன் பார்ன்ஸ், வில்ட்ஷயரில் வட்டங்கள் தோன்றின. வட்டத்தில் ஆகஸ்ட் 16, 2008 - முழு நிலவு பற்றிய அறிகுறி உள்ளது:
இன்னும் (உலர்ந்த வளைந்த) பழைய பேரீத்த மட்டையைப் போலாகும் வரையில் சந்திரனுக்கு நாம் பல மனாஜில்களை ஏற்படுத்தியிருக்கின்றோம். (அல்குர்ஆன்: 36:39)

மாதங்களை, கால கணக்கை அறிவது பற்றி குர்ஆன் என்ன கூறுகிறது என்று பார்ப்போம்.
(நபியே! தேய்ந்து, வளரும்) பிறைகள் பற்றி உம்மிடம் கேட்கிறார்கள்; நீர் கூறும்: “அவை மக்களுக்குக் காலம் காட்டுபவையாகவும், ஹஜ்ஜையும் அறிவிப்பவையாகவும் உள்ளன. (அல்குர்ஆன் : 2:189)

முதலில் பிறை பார்த்தல் என்பது என்ன? என்று புரிய வேண்டும்.
சந்திரனின் பிறை வடிவங்களையும் மற்றும் அது சஞ்சரிக்கும் இருப்பிடங்களையும் சேர்த்து தான் பார்க்க வேண்டும். குர்ஆன் சந்திரன் பற்றி இவைகளைத்தான் கூறுகிறது.
அவ்வாறு பிறையை ஆகாயத்தில் பார்க்கும்போது பூமியை பொருத்து ஒரு நிலையான புள்ளி வேண்டும் அது சூரியன் தான். சூரியனுடன் சந்திரனையும் சேர்த்து பகலிலும், இரவிலும் பார்க்க முடியாது.
சூரியன் உதிக்கும் நேரமும், மறையும் நேரமும் தான் சரியான நேரம். சூரியனுக்கும், சந்திரனுக்கும் இடையே மேற்கில் இருந்து கிழக்கு வரை உள்ள 180 டிகிரி கோணத்தை 12, 2டிகிரி அடிப்படையில் இருப்பிடத்தை மாற்றுவதை தினமும் பார்க்கலாம்.
(வளர்பிறையில் 0 டிகிரியில் சூரியனில் இருந்து 180டிகிரிக்கு விலகும். தேய்பிறையில் 180 டிகிரியில் இருந்து 0 டிகிரிக்கு சூரியனை நெருங்கும்.

அன்றைய அரபிகளுக்கு நட்சத்திரங்கள் பற்றிய அறிவு நம்மை விட அதிகம். காரணம் அவர்கள் பிரயாண திசை அறியவும், பருவ மாற்றங்கள் அறியவும், விடி வெள்ளி மூலம் நேரம் அறியவும், ராசிபலன் பஞ்சாங்கம் (குறி) பார்க்கவும் என்று பல வகையிலும் நட்சத்திரத்தை பயன்படுத்தினர்.
அதனால் நாம் இன்று டிகிரிகள் கொண்டு சந்திரன் தினமும் நகர்வதை அன்றைய அரபிகள் நட்சத்திரங்கள் நடுவே சந்திரன் நகர்வதை வைத்து எந்த நட்சத்திரத்திற்கு அருகில் சந்திரன் உள்ளதோ அந்த நட்சத்திரத்தை மனாஜிலாக (சந்திரன் சஞ்சரிக்கும் இடங்களாக) எடுத்து கொண்டனர்.
அன்றைய அரபிகள் மனாஜிலுடன்தான் அஹிலாக்களை பார்த்தனர். ( அஹிலால் என்றால் சந்திரனின் வடிவங்கள், மனாஜில் என்றால் சந்திரன் சஞ்சரிக்கும் இடம் )
சந்திரமாதம் ஆரம்பித்தவுடன் முதல் பிறையில் இருந்து முழு நிலவு வரை சூரியன் மறையும்போது சந்திர வடிவங்களை (அஹிலால்) சூரியன் இருப்பிடத்துடன் ஒப்பிட்டு சந்திரன் இருப்பிடங்களை (மனாஜில்) பார்க்க வேண்டும் என்றும்

சூரியன் மறையும் நேரமும், சந்திரன் உதிக்கும் நேரமும் ஏறக்குறைய ஒன்றாக உள்ளதோ அன்றுதான் முழு நிலவு சூரியனும், சந்திரனும் ஏறக்குறைய 180டிகிரியில் இருக்கும்.
முழு நிலவுக்கு அடுத்த நாள் முதல் மாத கடைசி பிறை வடிவம் (உர்ஜூனுல் கதீம்) வரை சூரிய உதயத்தின் போது சந்திரனின் இருப்பிடங்களை (மனாஜில்) சூரியனின் இருப்பிடத்துடன் ஒப்பிட்டு பார்க்க வேண்டும்.
சூரிய உதயம் நேரம், மறைவு நேரம் அல்லாத மற்ற நேரங்களில் பிறையை மன்ஜிலுடன் பார்க்க முடியாது. எனவே மற்ற நேரங்களில் பார்க்க கூடாது. இந்த பயிற்சி 3 மாதம் தினமும் செய்தால் போதும், உங்களால் சந்திரனின் பிறை வடிவத்தையும், மனாஜிலையும் பார்த்து உங்களாலும் அன்றைய பிறை காட்டும் தேதியை சொல்லி விட முடியும். முயற்சி செய்து பாருங்கள்.

இந்த சந்திரனின் வடிவங்கள் மற்றும் சஞ்சரிக்கும் இடங்களைப் பற்றிய ஞானம் நம்மை விட ஏலியனுக்கு நன்கு தெரிந்திருக்கிறது என்பதை இந்த பயிர் வட்டங்கள் நமக்கு தெரிவிக்கின்றன.

## ஏலியன்கள் 15

ஏலியன்கள் பூமிக்கு வந்திருக்கின்றனவா? என்பதை நாம் ஆராய்ந்து கொண்டிருக்கும்போது, சில அறிஞர்கள் சொல்லும் இன்னுமொரு கோட்பாடு அதைவிட அதிர்ச்சியளிக்கிறது. அவர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? "ஏலியன்கள் பூமிக்கு வந்து போனது மட்டுமல்ல, அவை பூமியில் தற்போது வாழ்ந்தும் கொண்டிருக்கின்றன" என்கிறார்கள்.
இதற்கு அவர்கள் எடுத்து வைக்கும் ஆழமான,ஆணித்தரமான ஆதாரங்களும், அவற்றை ஒட்டிய விவாதங்களும்தான். அதிகம் ஏன், இந்தப் பயிர்வட்டம் சம்பந்தமாகவே அசைக்க முடியாத ஆணித்தரமான ஒரு ஆதாரம் கிடைத்துள்ளது. அதை மறுத்துப் பேச எந்த அரசும் முன்வரவில்லை. வரவும் முடியாது என்றுதான் சொல்கிறார்கள் காரணம், அந்த ஆதாரம் அவ்வளவு திடமான ஆதாரமாக இருந்தது. அது என்ன ஆதாரம் என்றுதானே கேட்கிறீர்கள்? சொல்கிறேன்.

இதுவரை பயிர்வட்டங்கள் இங்கிலாந்தில்தான் அதிகளவு உருவாக்கப்பட்டிருக்கிறது என்று பார்த்தோம். அங்கு தோன்றுவதாலேயே சிலர் அதை நம்பவும் மறுக்க ஆரம்பித்தனர். காரணம், அங்கிருக்கும் யாரோதான் இவற்றுக்குக் காரணம் என்று சொல்ல ஆரம்பித்தார்கள்.
என்னதான் மனிதன் செய்யமுடியாது என்று ஆதாரங்களை முன்வைத்தாலும், அவநம்பிக்கை நீடித்துக் கொண்டேதான் வந்தது. ஆனால், ஆச்சரியமாக, ஜெர்மனியில் ஒரு பயிர்வட்டம் உருவாகியது. இந்தப் பயிர்வட்டம் ஜெர்மனியில் தோன்றியது மட்டும் ஆச்சரியமில்லை. அதன் தாக்கம் தந்த ஆச்சரியம், பயிர்வட்ட மர்மங்களுக்கே உச்சமாக அமைந்தது. இது பற்றி விளக்கமாகவே நான் உங்களுக்கு சொல்ல வேண்டும்.
ஜெர்மனியில் கிராஸ்டோர்ஃப் (Grasdorf) என்னுமிடத்தில், வேர்னர் ஹாரென்பேர்க் (Werner Harenberg) என்னும் விவசாயிக்குச் சொந்தமான விளைநிலத்தில் கோதுமைப் பயிர் விளைவிக்கப்பட்டிருந்தது. 23ம் திகதி ஜூன் மாதம் 1991இல் மிகப்பெரிய பயிர்வட்டமாக அது உருவாக்கப்பட்டிருந்தது.

6000 சதுரமீட்டர் பரப்பளவில் அந்தப் பயிர்வட்டம் உருவாகியிருந்தது. மனிதனால் செய்யப்படாமல் இருக்கும் பயிர்வட்டங்களின் அனைத்துத் தன்மைகளும் அந்தப் பயிர்வட்டத்துக்கும் இருந்தது. மிக நேர்த்தியாக அமைக்கப்பட்டிருந்த அந்தப் பயிர்வட்டத்தின் சித்திரம், சூரியக் குடும்பத்தைக் குறிப்பதாக அமைந்திருந்தது. '
இந்தப் பயிர்வட்டத்தை ஆராய்ந்தபோது, அதில் கதிர்வீச்சு போன்ற ஒன்று இருக்கலாம் என்ற உணர்வு தோன்றியதால், உலோகங்கள் கண்டுபிடிக்கும் கருவி கொண்டு (Metal detector) அதை ஆராய்ந்தார்கள்.
அந்தப் பயிர்வட்டச் சித்திரத்தின் மூன்று இடங்களில் கருவி அலறியது. குறிப்பாக அந்தப் பயிர்வட்டத்தில் எங்கே அரைவட்டங்கள் காணப்பட்டனவோ, அந்த மூன்று அரைவட்டங்களின் மத்தியில் உலோகம் இருப்பதாகக் காட்டியது கருவி.

அந்த இடத்தைத் தோண்டிப் பார்த்தபோது, அரை மீட்டர் நிலத்தின் கீழே மூன்று உலோகத் தகடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. ஒரு அடிக்கும் அதிகமான விட்டமுடைய வட்டவடிவ உலோகத் தகடுகளாக அவை காணப்பட்டன.
அதில் ஒன்று தங்கத்தினாலும், இன்னுமொன்று வெள்ளியினாலும், மூன்றாவது பித்தளை போன்ற ஒரு கலப்பு உலோகத்தினாலும் செய்யப்பட்டிருந்தது. இதில் ஆச்சரியம் என்னவென்றால், அந்தத் தகடுகளிலும் உருவாக்கப்பட்டிருந்த பயிர்வட்டம் அச்சுப் போல அமைக்கப்பட்டிருந்ததுதான்.
பித்தளை போன்ற கலப்புலோகத்தால் செய்யப்பட்டிருந்த தகடு மூன்று கிலோக்கள் எடையும், வெள்ளியால் செய்யப்பட்டிருந்த தகடு ஐந்து கிலோக்களும், தங்கத்தினால் செய்யப்பட்டிருந்த தகடு ஏழரைக் கிலோக்களும் இருந்தன.

ஜெர்மனியில் உள்ள உலோக ஆராய்ச்சி மையத்தின் உதவியுடன், எலெக்ட்ரான் மைக்ராஸ்கோப்பினால் ஆராய்ந்தபோது, தங்கமும், வெள்ளியும் தரத்தில் மிகவும் கூடியதாகவும், தூய்மையானதாகவும் காணப்பட்டன. அவ்வளவு தூய்மையான தங்கமோ, வெள்ளியோ பூமியில் இதுவரை யாரும் பயன்படுத்தியது இல்லை.

பலர் இவற்றை அந்த விவசாயிடமிருந்து வாங்குவதற்கு முயன்றதனால், அதிக விலைக்கு அவற்றை அவர் விற்கக் கூடியதாக அமைந்தது. இந்த உலோகத் தகடுகளை ஆராய்ந்தவர்கள் குறைந்தபட்சம் இவை 300 ஆண்டுகளிலிருந்து 1500 ஆண்டுகளுக்கு முன்னரே நிலத்தில் புதைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று சொல்கிறார்கள்.

இந்த உலோகத் தகடுகளிலிருந்து வெளிப்படும் கதிர்வீச்சு மூலம் ஏலியன்கள் தகவல் தொழில் நுட்பத்திற்கு பயன்படுத்தி இருக்கலாம் என்கின்றனர்.

**ஏலியன்கள் 16**

ஜூலை 15, 2008 அன்று **Avebury Manor, Wiltshire** இல் தோன்றிய ஒரு புல வரைபடம் கீழே உள்ளது. மிகப்பெரிய வட்டத்தின் இடதுபுறத்தில் எதுவும் இல்லை என்பதை நினைவில் கொள்க.
கிரகங்களின் நிலைகள் மிகவும் ஒத்தவை. பயிர் வட்டங்களின் நிகழ்வின் பல ஆராய்ச்சியாளர்கள் இந்த எண்ணிக்கை மாயன் நாட்காட்டியின் முடிவில் கிரகங்களின் நிலைகளை குறிக்கிறது என்று நம்புகிறார்கள் - டிசம்பர் 21, 2012.

சூரியக் குடும்பத்தின் வெளிப்புறக் கோளான புளூட்டோ மற்றும் அதன் சுற்றுப்பாதையின் நிலை மட்டுமே தற்போதுள்ள கோள்களின் இயக்க உருவகப்படுத்துதல் திட்டங்களை விட வித்தியாசமாக காட்டப்படுகிறது.
களத்தில் இந்தப் படம் உருவான சில நாட்களுக்குப் பிறகு ஒரு சுவாரஸ்யமான சம்பவம் நடந்தது. விவசாயி அறுவடை செய்ய அல்லது வரைபடத்தை அழிக்க முடிவு செய்தார்.
அதற்குள் ஜூலை 22, 2008 அன்று, சூரியனுக்குப் பதிலாக பெரிய விட்டம் கொண்ட (வீனஸ் சுற்றுப்பாதை வரை) ஒரு புதிய வட்டம் வரையப்பட்டது, ஒரு புதிய சூரியன், இது இணைப்பால் செய்யப்பட்ட வடிவத்தில் உள்ள முறைகேடுகளை சரி செய்தது. .

அதே புலத்தில், சூரிய குடும்பத்தின் வரைபடத்தின் படத்திற்கு அடுத்ததாக, மற்றொரு பெரிய வரைபடம் தோன்றியது, மற்றும் புலத்தின் மூலைக்கு அருகில், ஒரு புதிய பொருள், சூரிய குடும்பத்தை நெருங்கும் பந்து வடிவத்தில் வரையப்பட்டது .
இத்தகைய விடாமுயற்சி, இந்தச் செய்தியின் அர்த்தத்தை நமக்குத் தெரிவிப்பது மிகவும் முக்கியமானதாக மிகவும் சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால், டிசம்பர் 21, 2012 அன்று, கிரகங்களின் அணிவகுப்பு இருக்கும்.
.
மெக்சிகோவை பூர்வீகமாக கொண்டதாக கூறப்படும் மாயன் இனத்தினர், முதல் மனித நாகரீக இனத்தினர் என்று கூறப்படுகிறது. வானியல் சாஸ்திரம், ஜோதிடத்தில் மிகச்சிறந்து விளங்கிய அவர்கள் கிறிஸ்து பிறப்பதற்கு முன்பாகவே, காலண்டரை தயாரித்து பயன்படுத்தி உள்ளனர்.
இந்த காலண்டர் 5,126 ஆண்டுகளை கொண்டதாக இருந்தது.
அக்காலண்டரின் கடைசி தேதி 2012 டிசம்பர் 21
இதன்படி பார்த்தால், இந்த காலண்டர் கி.மு. 3114ல் தயாரிக்கப்பட்டுள்ளது. காலண்டர் அமலுக்கு வந்த பின்னர், 2012 டிசம்பர் 21ம் தேதியுடன் முடிவடைகிறது.
இதனை வைத்துதான் கடந்த சில ஆண்டுகளாகவே இந்த நாளில் உலகம் அழியப்போவதாக, ஆளாளுக்கு ஒரு கதையை கூறி மக்களை பீதிக்கு உள்ளாக்கி வருகின்றனர்.
அமெரிக்க விண்வெளி ஆய்வு மையமான நாசா இதுகுறித்து தீவிரமாக ஆராய்ந்தது. இதேபோல், மாயன் காலண்டர் நிபுணர்கள் மற்றும் அமெரிக்க நிபுணர்களும் ஆராய்ந்தனர். அவர்களின் ஆய்வு முடிவில் உலகம் அழிய 100 சதவீதம் வாய்ப்பில்லை என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.
மாயன் காலண்டர் என்பது 1,44,000 நாட்களை கொண்டது. அதன்பின்னர், அந்த காலண்டர் மறுபடியும் சுழற்சிக்கு உள்ளாகும் நாள் 2012 டிசம்பர் 21 .
மாயன் இனத்தினரின் கூற்றுப்படி, மனித இனம் புதிய சகாப்தத்தில் அடியெடுத்து வைக்கப்போகிறது. அதாவது புதிய நாட்காட்டி சுற்றில் மனித இனம் அடியெடுத்து வைக்கப்போகிறது.
"இது கொண்டாடப்பட வேண்டிய விஷயமே அன்றி, பயப்பட வேண்டிய நாள் அல்ல. இந்த கருத்தரங்கின் முடிவில் வெளியிடப்பட்ட அறிக்கையில், பூமியின் இறுதி நாளை மாயன் காலண்டர் குறிப்பிடவில்லை " என்றும் அவர்கள் கூறியுள்ளனர்.

சனி, வியாழன், செவ்வாய் மற்றும் பூமி வரிசையாக இருக்கும். இதற்கு முன்பு கிரகங்களின் இதேபோன்ற அணிவகுப்புகள் இருந்தன. டிசம்பர் 21, 2012 அன்று நடந்த கிரகங்களின் அணிவகுப்புக்கு முந்தையவற்றிலிருந்து என்ன வித்தியாசம் ?

உண்மை என்னவென்றால், இந்த நாளில், சூரிய குடும்பத்தின் கிரகங்கள் மட்டுமல்ல, மற்ற நட்சத்திர அமைப்புகளின் கிரகங்களும் வரிசையாக வந்து, விண்மீனின் மையத்திலிருந்து ஒரு கோட்டை உருவாக்கும். மேலும் இது முற்றிலும் மாறுபட்ட விஷயம். கடிகாரத்தின் கைகள் 12 மணி நிலையில் நிற்கும் போது இந்த செயல்முறையை ஒரு கடிகாரத்தின் கைகளுடன் ஒப்பிடலாம்.
எக்ஸோடெரிசிஸ்டுகளின் கூற்றுப்படி, பிரபஞ்சத்தை ஒரு அமைப்பிலிருந்து மற்றொரு அமைப்பிற்கு மாற்றுவதைக் குறிக்கும்.

இதைத்தான் ஏலியன்கள் பயிர் வட்டங்களாக வரைந்து மட்டுமல்ல, வானத்தின் நாட்காட்டி முடிவடைந்து புது நாட்காட்டியின் ஆதிக்கத்திற்குள் இந்த உலகம் வந்துள்ளதை மிகவும் தெளிவாக குறிப்பிட்டதுதான் வற்றாத ஆச்சரியம் .

**ஏலியன்கள் 17**

இந்த ஃப்ராக்டல் பயிர் வட்டம் உருவானபோது, வழமை போல உருவாக்கப்பட்ட ஒரு பயிர் வட்டம் என்றே நினைத்தார்கள்.
ஆனால், 2001ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 13ம் திகதி இரவு மனித முகத்துடனும், அதைத் தொடர்ந்து ஒரு வாரத்தில் இன்னுமொரு சிக்கலான வடிவத்துடனும் இரண்டு பயிர் வட்டங்கள், அதே இடத்தில் உருவாக்கப்பட்டன. வழமையான பயிர் வட்டங்கள் போல இவை காணப்படவில்லை. இரண்டுமே செவ்வக வடிவில் அமைக்கப்பட்டிருந்தன. ஒரு மனிதனின் முகம் கணனியில், போட்டோவாக வரையப்படும் போது, எப்படிக் கறுப்பு, வெள்ளை ஒளி மாற்றங்கள் (Shading) இருக்குமோ அப்படி அந்த மனித முகம் அமைக்கப்பட்டிருந்தது. அது மட்டுமல்லாமல், முப்பரிமான அமைப்புடன் (3D) அந்த முகம் உருவாக்கப்பட்டிருந்தது. முப்பரிமாணத் தோற்றம் உருவாவதற்காக, பயிர்கள் சிறியதும், பெரியதுமாகவும், அடர்த்தி கூடியதும், அடர்த்தி குறைந்ததுமாகவும் வட்டவடிவப் புள்ளிகள் போல (Pixel) மிக நேர்த்தியுடன் அழுத்தப்பட்டு உருவாக்கப்பட்டிருந்தன.

ஒரே இரவுக்குள் அது உருவாக்கப்பட்டது என்று யார் சொன்னாலும் நம்ப முடியாத சித்திரம் அது என்று சிந்தித்த வேளையில்,
' இதே போன்ற முகத்தை எங்கேயோ பார்த்திருக்கிறோமே ' என்ற நினைப்பு பலருக்குத் தோன்றத் தொடங்கியது. செவ்வாய் கிரகத்துக்கு 1976 இல் சென்ற வைகிங் (Viking) விண்கலம் பல படங்களை எடுத்துப் பூமிக்கு அனுப்பியது. அந்தப் படங்களில் மனித முகம் ஒன்று செவ்வாயின் நிலப் பகுதியில் பதிந்திருப்பது போன்ற ஒரு படமும் காணப்பட்டது.
அந்த நேரங்களில் மிகவும் பரபரப்பாகப் பேசப்பட்டது அது. அந்த முக அமைப்பை இந்த நேரத்தில் பலர் ஞாபகத்தில் கொண்டு வரத் தொடங்கினர். உண்மையில் அதற்கும், இதற்கும் சம்மந்தம் உண்டோ, இல்லையோ என்று தெரியாவிட்டாலும், பலருக்கு ஷில்போல்டன் படத்துக்கும் ஏலியனுக்கும் சம்பந்தம் உண்டு என்ற நினைப்பு வர ஆரம்பித்தது.
இந்த நினைப்பை உறுதிப்படுத்தியது இரண்டாவதாக உருவாகிய பயிர் வட்டம்.
ஷில்போல்டன் மனித முக பயிர் வட்ட படமெடுத்து கணினியில் கொடுத்து படிப்படியாக ஆராய்ந்த போதுதான், பல மர்மங்களுக்கான விடைகள் வெளிவரத் தொடங்கியது. அந்த மர்மங்கள் ஆராய்ச்சியாளர்கள் அனைவரையும் ஒரு உலுக்கு உலுக்கியது. அந்த மர்மம் என்னவென்று விளக்கமாக நமக்குப் புரிய வேண்டுமென்றால்,
'கார்ல் சேகன்' (Carl Sagan) என்பவர் நவம்பர் 16, 1974 இல் ரேடியோ தொலைநோக்கியைப் பயன்படுத்தி அரேசிபோ, புவேர்ட்டோ ரிக்கோவில் விண்வெளி ஆய்வு நிலையத்திலிருந்து, ரேடியோ சிக்னலை பூமியிலிருந்து சுமார் 23,000 ஒளி ஆண்டுகள் தொலைவில் அமைந்துள்ள M13 என்ற நட்சத்திரக் கூட்டத்திற்கு அனுப்பி வைத்தார் என்பதை முந்தைய பதிவுகளில் சொல்லியிருக்கிறேன்.

ஷில்போல்டன் மனித முக பயிர் வட்ட "பைனரி குறியீட்டின் " மற்றும் "முகம்" என்பதற்கான தோராயமான பரிமாணங்கள் முறையே 200 X 85 அடி மற்றும் 160 X 180 அடி. இரண்டு வடிவங்களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாக அடுக்கப்பட்ட கோதுமை வயல்களில் உருவாகி இருந்தது
"பைனரி குறியீட்டின்" வான்வழி புகைப்படங்களைப் பார்த்தபோது, விவரிக்கப்படாத நிகழ்வுகளின் (தென்சீ, ஹாம்ப்ஷயர், இங்கிலாந்து) ஆய்வுக்கான சுதந்திர மையத்தின் இயக்குநரான பால் விகே, அந்த படம் அனுப்பப்பட்ட டிஜிட்டல் செய்திக்கு மிகவும் ஒத்ததாக இருந்ததாக கூறினார்.
அந்த சிக்னல் செய்தியில் மனித டிஎன்ஏ மூலக்கூறின் இரட்டை ஹெலிக்ஸ் மனித உருவத்திற்கு மேலே இரண்டு வளைந்த கோடுகளாக சித்தரிக்கிறது. சில்போல்டனில் களத்தில் தோன்றிய படத்தின் இடது பக்கம், அதன் வலது பக்கத்திலிருந்து வேறுபடுகிறது, பொதுவாக, படம் ரேடியோ செய்தியின் குறியீட்டிலிருந்து சற்றே வித்தியாசமானது.

அரேசிபோ ரேடியோ தொலைநோக்கியைப் பயன்படுத்தி 1974 இல் அனுப்பப்பட்ட கருப்பு மற்றும் வெள்ளை வானொலி செய்தியின் ஒரு பகுதி இடதுபுறத்தில் காட்டப்பட்டுள்ளது.

டிஎன்ஏ மூலக்கூறின் இரட்டை ஹெலிக்ஸ் மேலே வளைந்த கோடுகளின் வடிவத்தில் காட்டப்பட்டுள்ளது. கீழே, பூமியின் மக்கள் தொகை மற்றும் ஒரு நபரின் சராசரி உயரம் பற்றிய பைனரி தகவல்களுக்கு இடையில், மக்களை சித்தரிக்கும் ஒரு மனித உருவம் காட்டப்பட்டுள்ளது.
சூரியன் மற்றும் 9 கிரகங்கள் சதுர வடிவில் ஒரு நபரின் உருவத்தின் கீழ் காட்டப்பட்டுள்ளன. மூன்றாவது கிரகம் குறியீட்டு மனித உருவத்திற்கு நகர்த்தப்பட்டது. கீழே, M என்ற எழுத்தின் வடிவத்தில் உள்ள கோட்டிற்கு மேலே, அரேசிபோ ரேடியோ தொலைநோக்கியைக் குறிக்கும் ஒரு சின்னம் காட்டப்பட்டுள்ளது,
மேலும் கீழே உள்ள பைனரி குறியீட்டு அதன் விட்டம் (300 மீ) குறிக்கிறது. ஒப்பிடுகையில், வலதுபுறத்தில் உள்ள படம் சில்போல்டனின் படம்.
இயக்குனர் பால் விகே உடனான நேர்காணலின் போது ,
"அவற்றின் டிஎன்ஏ மூலக்கூறின் சுழல் சீரற்றதாகவும் சில கூடுதல் கூறுகளைக் கொண்டதாகவும் இருக்கலாம். இன்னும் துல்லியமாக, இரண்டு வளைந்த கோடுகளுக்கு நடுவில் அமைந்துள்ள மையப் பகுதியைப் புரிந்துகொண்ட பின்னரே என்னால் சொல்ல முடியும் என்றார் .

அரேசிபோ ரேடியோ தொலைநோக்கியில் இருந்து உருவாக்கப்பட்ட ரேடியோ பரிமாற்றத்தில், இந்த டிஎன்ஏ மூலக்கூறில் உள்ள நியூக்ளியோடைடுகளின் எண்ணிக்கையை பைனரி வடிவத்தில் ஒத்திருந்தது.
களத்தில் உள்ள படத்தில், இந்த துண்டுக்கு சில வேறுபாடுகள் இருப்பதைக் காண்கிறோம் - நடுவில் ஒரு ஒற்றை புள்ளி உள்ளது, அதாவது ஒரு இலக்கம் மாற்றப்பட்டுள்ளது. வெளிப்படையாக, இடது மற்றும் வலதுபுறத்தில் உள்ள வளைவுகள் ஏன் ஒருவருக்கொருவர் வேறுபடுகின்றன என்பதை இது விளக்கலாம்.
அவற்றின் டிஎன்ஏ மூலக்கூறு வெவ்வேறு எண்ணிக்கையிலான நியூக்ளியோடைடு இழைகளைக் கொண்டிருந்தால், இது அத்தகைய ஏற்றத்தாழ்வை அது விளக்குகிறது.
பைனரி குறியீட்டிற்கு வரும்போது, அதில் உள்ள தகவல்கள் பூஜ்ஜியங்கள் மற்றும் ஒன்றுகள் அல்லது நிரப்பப்பட்ட மற்றும் வெற்று சதுரங்கள் வடிவத்தில் குறிப்பிடப்படுகின்றன, இது படத்தில் உள்ள டிஎன்ஏ இழைகளுக்கு இடையே உள்ள செங்குத்து துண்டு போல.

நீங்கள் கிரகங்களின் படங்களைப் பார்த்தால், நமது கிரகம் சூரியனில் இருந்து ஒரு வரிசையில் மூன்றாவது இடத்தில் இருப்பதை எங்கள் செய்தி தெளிவாகக் காட்டுகிறது, ஏனெனில் அது ஒரு தலை, இரண்டு கைகள், இரண்டு கால்கள் மற்றும் ஒரு உடற்பகுதியுடன் ஒரு மனித உருவத்திற்கு நகர்த்தப்பட்டுள்ளது.
கோதுமை வயலில் தோன்றிய உருவத்தைப் பார்த்தால், முதல் இரண்டு கிரகங்களுக்குப் பிறகு, எங்கள் செய்தியில் செய்யப்பட்டதைப் போலவே மூன்று கிரகங்களின் குழுவும் நகர்த்தப்பட்டதைக் காணலாம்.
வரிசையில் மூன்றாவது கிரகம் உயர்ந்துள்ளது. நான்காவது கிரகம் உயர்ந்துள்ளது. மேலும் ஐந்தாவது கிரகம் உயர்ந்தது மட்டுமல்லாமல், ஒரு புள்ளியிலிருந்து நான்கு சிறிய புள்ளிகளாக மாற்றப்பட்டு, குறுக்கு போன்ற ஒன்றை உருவாக்குகிறது.

இந்த வேறுபாடு உண்மையில் மிகவும் சுவாரஸ்யமானது. இது அவர்களின் சூரிய குடும்பத்தில், மூன்று கிரகங்கள் வசிக்கின்றன மற்றும் அவை ஐந்தாவது கிரகத்தில் இருந்து வருகின்றன என்று அர்த்தம். மூன்று கிரகங்கள் சுட்டிக்காட்டப்பட்டிருப்பதை படத்தில் இருந்து காணலாம், மேலும் ஐந்தாவது கிரகம் மற்ற அனைத்தையும் விட முன்னிலைப்படுத்தப்பட்டுள்ளது. ஐந்தாவது கிரகத்திற்கு மூன்று நிலவுகள் இருப்பதாகவும் அர்த்தம்.
இதன் விளைவாக வரைபடத்தில், மிகப் பெரிய தலை, மிகப் பெரிய, நீண்டுகொண்டிருக்கும் கண்கள் மற்றும் குறுகிய, மெல்லிய உடல் போன்ற உருவம் போன்ற ஒன்றைக் காணலாம். நபரின் உருவத்தின் வலதுபுறம் அவரது உயரம் உள்ளது. Arecibo இலிருந்து அனுப்பப்பட்ட செய்தியில் ஏழுக்கு ஒத்த மூன்று இலக்கங்கள் உள்ளன.
இயற்கையாகவே, நீங்கள் விண்மீனின் மறுமுனைக்கு ஒரு செய்தியை அனுப்புகிறீர்கள் என்றால், அடி, அங்குலங்கள் அல்லது மீட்டர்களை அளவீட்டு அலகுகளாகப் பயன்படுத்துவதில் எந்த அர்த்தமும் இல்லை, எனவே இந்த வெளிப்பாட்டை நான் ஏதோ 7 அலகுகளாகக் கருதுகிறேன்.

மைதானத்தில் வரையப்பட்டதைப் பார்த்தால், இந்த இடத்தில் ஒரே ஒரு அலகு மட்டுமே இருப்பதைக் காணலாம். இதிலிருந்து நாம் எந்த அளவீட்டு அலகுகளைப் பயன்படுத்தினாலும், இங்கு சுட்டிக்காட்டப்பட்ட உயரம் மனிதனை விட மிகக் குறைவு என்று முடிவு செய்யலாம்.
அணு எண்களைப் பற்றிய மற்றொரு முரண்பாடு உள்ளது. நான் முதன்முதலில் வான்வழி புகைப்படத்தை (பால் விகே) பார்த்தபோது, அது புகைப்படத்தில் ஒரு குறைபாடு என்று நினைத்தேன். இன்று நான் அங்கு சென்றதற்கு அதுவும் ஒரு முக்கிய காரணம்.

இது ஒரு பிழை அல்ல என்பதை நான் உணர்ந்தேன், ஏனெனில் மாற்றம் வேண்டுமென்றே செய்யப்பட்டது மற்றும் அது வரிசையில் குறியாக்கம் செய்யப்பட்டுள்ளது.
நேரடியாக மேலே 1 முதல் 10 வரையிலான எண்களைக் குறிக்கும் ஒரு வரிசை உள்ளது. அவற்றுக்குக் கீழே உடனடியாக அடிப்படை உறுப்புகளின் அணு எண்கள் உள்ளன, அவை பூமியில் உயிர்களை ஆதரிக்கும் கட்டுமானத் தொகுதிகள் (படத்தில் P.O.N.C.H எழுத்துக்களால் குறிக்கப்படுகின்றன). இவை பாஸ்பரஸ், ஆக்ஸிஜன், நைட்ரஜன், கார்பன் மற்றும் ஹைட்ரஜன். நீங்கள் இப்போது டிக்ரிப்ட் செய்யலாம்.

பாஸ்பரஸுடன் தொடர்புடையது ஒரு நீண்ட கோட்டால் குறிக்கப்படுகிறது, அதாவது 1111, அதாவது 15. அடுத்த பட உறுப்பு, செங்குத்தாகப் படிக்கும்போது, 0001 ஐக் கொடுக்கிறது. இது 8 க்கு ஒத்திருக்கிறது, இது ஆக்ஸிஜனைக் குறிக்கிறது. அடுத்த உறுப்பு (1110) 7 ஐ ஒத்துள்ளது, அதாவது நைட்ரஜன். அடுத்த (011) 6 ஐ ஒத்துள்ளது, அதாவது கார்பன். இறுதியாக, கடைசி உறுப்பு 1 ஆகும், இது 1 ஐ ஒத்துள்ளது மற்றும் ஹைட்ரஜன் என்று பொருள்.
Arecibo இலிருந்து அனுப்பப்பட்ட செய்தி 5 நெடுவரிசைகளைக் காட்டுகிறது: ஹைட்ரஜன், கார்பன், நைட்ரஜன், ஆக்ஸிஜன் மற்றும் பாஸ்பரஸ். படத்தில், விளிம்பில் 6 நெடுவரிசைகள் உள்ளன. படத்தை விரிவாகப் பார்த்தால் மட்டுமே இது தெரியும். எனவே, இந்த குறியாக்கத்தில் கூடுதல் உறுப்பு உள்ளது.
இந்த உறுப்பு ஆக்ஸிஜன் மற்றும் பாஸ்பரஸுக்கு இடையில் செருகப்பட்டது, அதாவது, வரிசை 1, 6, 7, 8, 15 க்கு பதிலாக, உறுப்பு கொண்ட மற்றொரு வரிசை உள்ளது, இது 0111 என நியமிக்கப்பட்டுள்ளது, இது 14 க்கு ஒத்திருக்கிறது. இதனால், வரிசை பெறப்படுகிறது. : 1, 6, 7, 8, 14, 15.
கால அட்டவணையில், 14 வது அணு எண்ணைக் கொண்ட உறுப்பு சிலிக்கான் ( சிலிக்கான் என்பது மண்ணின் மூலம்) என்று அழைக்கப்படுகிறது. இது மிகவும் சுவாரஸ்யமான கண்டுபிடிப்பு.
ஏனெனில் பல ஆராய்ச்சியாளர்கள் நிலப்பரப்பு வடிவங்களைப் போலல்லாமல், கார்பனை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கை வடிவங்கள் இருந்தால், முழு கால அட்டவணையில், உயிருக்கு ஆதரவாக இருக்கும் ஒரே உறுப்பு சிலிக்கான் மட்டுமே. ... கோட்பாட்டளவில் சிலிக்கான் முதன்மையான தனிமமாக இருக்கும் ஒரு கிரகம் உள்ளது.

இது உண்மையில் பைனரி-குறியீடு செய்யப்பட்ட செய்தியாக இருந்தால், சிலிக்கான் வடிவத்தில் கூடுதல் உறுப்பு இருப்பது முக்கியமான தகவல்."
ஏலியன்களும் மண்ணின் மூலச்சத்து சிலிக்கானால் படைக்கப்பட்டவர்களா ?

قَالَ مَا مَنَعَكَ اَلَّا تَسْجُدَ اِذْ اَمَرْتُكَ‌ قَالَ اَنَا خَيْرٌ مِّنْهُ‌ خَلَقْتَنِىْ مِنْ نَّارٍ وَّخَلَقْتَهٗ مِنْ طِيْنٍ
(ஆகவே இறைவன் இப்லீஸை நோக்கி) "நான் உனக்குக் கட்டளையிட்ட சமயத்தில், நீ (சிரம்) பணியாதிருக்கும்படி உன்னைத் தடை செய்தது எது?" என்று கேட்க,
(அதற்கு இப்லீஸ்) "நான் அவரைவிட மேலானவன். (ஏனென்றால்,) நீ என்னை நெருப்பால் படைத்தாய். அவரை களிமண்ணால் படைத்திருக்கின்றாய். (களிமண்ணை விட நெருப்பு உயர்ந்தது)" என்று (இறுமாப்புடன்) கூறினான். (குர்ஆன் : 7:12)

## ஏலியன்கள் 18

2001ம் ஆண்டு ஷில்போல்டனில் உருவான முக அமைப்புடைய பயிர் வட்டம் தோன்றியதற்கு சரியாக ஒரு வருடத்தின் பின்னர், 2002ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ம் திகதி, இங்கிலாந்து க்ராப்வூட் (Grabwood) நகரத்தில் இந்தப் பயிர் வட்டம் உருவாக்கப்பட்டிருந்தது.

இதுவரை ஏலியன்களின் முகங்கள் எப்படி இருக்கலாம் என்ற நம்பிக்கையில் நாம் இருந்தோமோ, அதே முகச் சாயலுடன் கூடிய பயிர் வட்டச் சித்திரமாக அது உருவாக்கப்பட்டு இருந்தது. அத்துடன் வட்டவடிவமான ஒருவித வினோத வடிவமும் அந்த உருவத்துடன் இணைந்து காணப்பட்டது.
வட்டத்திற்குள் பல வட்டங்களாக அது அமைந்திருந்தது. அந்த வட்டங்கள் எதைக் குறிக்கிறது என்று ஆராய்ந்தபோது, அது நாம் தற்சமயம் பாவிக்கும் சிடி (Compact Disc) போல இருக்கலாமோ எனச் சிந்திக்கத் தோன்றியது.

சிடியில் எப்படி தகவல்கள் பதியப்பட்டிருக்கலாமோ, அது போல அந்த வட்டத்திலும் தகவலாக செய்திகள் இருக்கலாம் என்ற சந்தேகத்துடன், அதை ஆராய்ந்தபோது உண்மையிலேயே அதில் அப்படியே செய்திகள் அமைக்கப்பட்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.

அந்த வட்டவடிவமாக இருந்த பயிர் வட்டத்தில் இருந்த செய்தி என்ன தெரியுமா? அது இதுதான்..!
"Beware the bearers of FALSE gifts & their BROKEN PROMISES.Much PAIN but still time.BELIEVE.There is GOOD out there.We oPpose DECEPTION.COnduit CLOSING\"
"ஏலியன்களில் இரண்டு வகையினர் இருப்பதாகவும், அதில் ஒரு வகையினர் நல்லவர்கள் என்பதாகவும், கெட்டவர்களின் வார்த்தைகளை நம்பி நாம் ஏமாறக் கூடாது" என்ற எச்சரிக்கையாக அந்தச் செய்தி இருந்தது.
இதைப் பர்த்ததும் நிச்சயமாக உங்களுக்கு சிரிப்பதா ? நம்புவதா? என்பதே பெரிய கேள்வியாக இருக்கும்.
பலருக்கும் அப்படித்தான் இருக்கின்றது. ஆனால் அது உருவாக்கப்பட்ட விதத்தில் நம்ப வேண்டிய சூழ்நிலைகளே அதிகம் இருக்கின்றன. இந்தச் செய்தியில் உள்ளது போல, நாம் யாரிடம் கவனமாக இருக்க வேண்டும்?
இந்தச் சித்திரத்தில் இருக்கும் உருவ அமைப்புள்ளவர்களிடமா அல்லது அதில் சொல்லப்பட்ட நல்லவர்கள்தான் இந்தச் சித்திரத்தில் இருப்பவர்களா? எந்த விபரமும் அங்கு இல்லை.

இருந்தவை எல்லாமே ஆச்சரியமும், மர்மமும் மட்டுமே! ஒரு பேச்சுக்கு இதை மனிதர்களே உருவாக்கினார்கள் என்று நாம் எடுத்தோமானால், உருவாக்கிய அந்த மனிதர்களின் மோசமான நகைச்சுவையுணர்வை என்ன என்று சொல்வது?

ஆனால் பலர் இதை மனிதர்கள் உருவாக்கினார்கள் என்பதை நம்ப மறுக்கிறார்கள். காரணம், அதில் உள்ள சாத்தியக்கூறுகள் மனிதனால் உருவாக்கக் கூடியதாக இருக்கவில்லை என்பதுதான். இதில் இன்னுமொரு ஆச்சரியம் என்னவென்றால், இந்த சித்திரமும் ஒரு தொலைக்காட்சிக் கோபுரம் அமைந்த இடத்துக்கு அருகில்தான் உருவாக்கப்பட்டிருந்தது.

**ஏலியன்கள் 19**




பறக்கும் தட்டு பூமிக்கு வந்தது உண்மை... உறுதிசெய்த பென்டகன்! அப்போ ஏலியன்கள் இருப்பதும் உண்மைதானா?
இவற்றை UFO எனக் குறிப்பிடாமல் **'unidentified aerial phenomena'** என்றே குறிப்பிட்டிருக்கிறது பென்டகன். அதாவது, "இன்னும் இந்த வீடியோக்களில் இருப்பது என்னவென்பது தெளிவாக தெரியவில்லை" என்று பென்டகன் தரப்பில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

**N = R* • fp • ne • fl • fi • fc • L** ... என்ன இது என்று குழப்பமாக இருக்கிறதா? நாம் வாழும் இந்தப் பால்வெளியில் (Milky way Galaxy) நம்மைப் போலவே வேறு ஒரு நாகரிகம் (Aliens) தோன்றியிருக்குமா எனக் கண்டறிவதற்கான கணிதச் சமன்பாடு இது. Drake Equation என அழைக்கப்படும் இது முழுக்க முழுக்க ஒரு சம்பவிக்கக்கூடிய தன்மை கொண்ட ஒன்றாக, அதாவது ஒரு நிகழ்தகவாக மட்டுமே பார்க்கப்படுகிறது.
இதில் இருக்கும் ஒவ்வோர் எழுத்தும் பால் வெளியில் தோன்றும் நட்சத்திரங்கள், அவற்றைச் சுற்றிவரும் கோள்கள், அந்தக் கோள்களில் உயிர் வாழ்வதற்கான தன்மைகள் எவ்வளவு இருக்கலாம் என்பதைக் குறிக்கின்றன.

துல்லியமாக இத்தனை நட்சத்திரங்கள் இருக்கின்றன, இத்தனை கோள்கள் இருக்கின்றன என நம்மால் கணக்கிட முடிந்தால், நம் பால்வெளியில் வேறு ஒரு நாகரிகம் இருக்கிறதா இல்லையா என நம்மால் கூறி விட முடியும். ஆனால், இவற்றில் ஒன்றிற்குக்கூட நமக்கு விடை தெரியாது.
ஆனால், ஒவ்வொன்றிற்கும் குறைந்தபட்ச மற்றும் அதிகபட்ச தொகையைப் போட்டு இத்தனை நாகரிகங்கள் தோன்றியிருக்கலாம் எனத் தோராயமாகக் கூற முடியும். அதன்படி பால்வெளியில் மட்டும் 1000-ல் இருந்து 100,000,000 நாகரிகங்கள் (அதாவது வேற்று கிரக வாசிகள்) வரை தோன்றியிருக்கலாம் என்கிறது இந்தச் சமன்பாடு.

சரி, 'இப்போ எதுக்கு ஏலியன் பற்றிய பேச்சு' என்கிறீர்களா... வழக்கம்போல் அமெரிக்கர்கள் இந்த முறையும் பழைய கோப்புகளைத் தோண்டி எடுத்து ஏலியன்கள் பற்றிய பேச்சுக்களைத் தொடங்கி வைத்திருக்கிறார்கள். 2007 மற்றும் 2017-ல் பறக்கும் தட்டு இருப்பது போன்ற வீடியோக்கள் இணையத்தில் கசிந்து வைரல் ஆகின. தற்போது அந்த வீடியோக்களில் இருக்கும் பறக்கும் தட்டு போன்ற பொருள்கள் உண்மைதான் என அமெரிக்காவின் பென்டகன் ஆய்வகம் தெரிவித்துள்ளது. இந்தத் தகவல் இணையத்தில் பரபரப்பைக் கிளப்ப, ஏலியன்கள் தொடர்பான தேடல்களையும் விவாதங்களையும் மீண்டும் தொடங்கியிருக்கின்றனர் நெட்டிசன்ஸ்.
ஆனால், இவற்றை UFO எனக் குறிப்பிடாமல் **'unidentified aerial phenomena'** என்றே குறிப்பிட்டிருக்கிறது பென்டகன். அதாவது, "இன்னும் இந்த வீடியோக்களில் இருப்பது என்னவென்பது தெளிவாக தெரியவில்லை" என்று

பென்டகன் தரப்பில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. உண்மையோ, பொய்யோ ஏலியன்கள் பற்றி ஆராய்வது ஒரு சுவாரஸ்யமான விஷயம்தானே?

ஏலியன்களைவிட சுவாரஸ்யமானவை அவர்கள் பயன்படுத்தும் வாகனங்கள். அவைதான் ஏலியன்களின் வாகனமா என நமக்குத் தெரியாது. நாம் அவற்றிற்குக் கொடுத்திருக்கும் பெயர் UFO (Unidentified Flying Object), தமிழில் பறக்கும் தட்டு.
பல நூற்றாண்டுகளாகவே பறக்கும் தட்டைக் கண்டதாகப் பல நிகழ்வுகள் பதிவாகியிருக்கின்றன (அவற்றில் பெரும்பான்மை நிகழ்வுகள் அமெரிக்காவில் பதிவாகியது... ஏன் ஏலியன்களுக்கு அமெரிக்காவை மட்டும் பிடித்திருக்கிறது என்பது ஆச்சர்யம்தான்).
தற்போதைய விவாதங்களும் ஒரு பறக்கும் தட்டை வைத்தே உருவாகியிருக்கிறது. எனவே, ஏலியன்களையும் பறக்கும் தட்டுகளையும் பிரிக்க முடியாது. ஆனால், நம் வான் வரை வந்து விட்டு ஏன் அப்படியே சென்று விடுகிறார்கள் ஏலியன்கள்?
இந்தக் கேள்விக்கு பெர்மி என்ற இயற்பியலாளர் முன்வைத்த கோட்பாடுகளில் ஒன்றான 'Zoo Hypothesis'-ன் வழியாகப் பதில் கூற முடியும்.
நாம் மிருகக்காட்சி சாலையில், மிருகங்களைக் கூண்டில் அடைத்து வைத்து அதை வேடிக்கை பார்ப்பதுபோல ஏலியன்கள் நம்மைப் பார்வையிட்டுச் செல்கிறார்கள்.

நாம் வேற்றுகிரகவாசிகளைக் கண்டறிய முடியாததற்கும் இதன் வழியே பதில் சொல்லலாம்.
சிங்கத்தை ஒரு கூண்டில் அடைத்து வைத்து ரிங் மாஸ்டரை வைத்து பயிற்சி அளிப்பதன் மூலம், ரிங் மாஸ்டரின் பேச்சைத் தாண்டி சிங்கம் எதுவும் செய்யாத வகையில் அதைப் பழக்கப்படுத்த முடியும். அதேபோலவே வேற்றுக்கிரகவாசிகள் ஒரு குறிப்பிட்ட அளவைத் தாண்டி இப்பிரபஞ்சத்தை நாம் அடைய முடியாத வகையில் நம்மைப் பழக்கப்படுத்தி இருக்கிறார்கள் எனக் கூறலாம்.
என்ன இது பைத்தியக்காரத்தனமாக இருக்கிறது எனத் தோன்றலாம். ஆனால், ஏலியன்கள் பற்றிக் கூறப்படும் பலநூறு ஆதாரமற்ற கோட்பாடுகளில் இதுவும் ஒன்று. இதை நம்பவும் சங்கங்கள் சங்கங்களாக ஆட்கள் உண்டு.
ஏலியன்கள் பற்றிய கோட்பாடுகளில் பெர்மியின் கோட்பாடு முக்கியமானது. இருக்கிறது, இல்லை என அனைத்துக் கோணங்களிலும் பதில் கொண்டது பெர்மியுடையது. அவை பெர்மியின் முரண்பாடுகள் **(Fermi Paradox)** என்று அழைக்கப்படுகிறது. பெர்மி முரண்பாடுகளைப் பற்றிப் படிக்க கீழே இருக்கும் கட்டுரையைப் பார்க்கலாம்.

ஏலியன்கள் இருக்கிறார்களா, இருந்தால் என்ன செய்கிறார்கள்? #FermiParadox
Follow @ Google News: கூகுள் செய்திகள் பக்கத்தில் விகடன் இணையதளத்தை இங்கே கிளிக் செய்யவும்
வேற்றுகிரக உயிரினங்களைக் கண்டறிந்தாலும் நம்மால் அவர்களின் இருப்பிடத்திற்குச் செல்ல முடியுமா?
நாம் தற்போது பிரபஞ்சத்தில் நடக்கும் நிகழ்வுகளில், தூரங்களை அளக்க ஒளியாண்டு (Light Year) என்ற அளவீட்டைத்தான் பயன்படுத்திக்கொண்டிருக்கிறோம்.

ஒளியானது நொடிக்கு 3,00,000 கிலோமீட்டர்கள் வேகத்தில் பயணிக்கும் தன்மையுடையது. இதே வேகத்தில் ஒளியானது ஓர் ஆண்டுக்காலம் பயணிக்கும் தூரம்தான் ஓர் ஒளியாண்டு எனக் கணக்கிடப்படுகிறது.
பூமி போலவே உயிரினங்கள் வாழத் தகுதியான கோள்களாக 17 கோள்கள் கண்டறியப்பட்டுள்ளன. அவற்றில் நமக்கு மிகவும் அருகில் இருப்பது Proxima Centauri B என்ற கோள்தான். அந்தக் கோள் பூமியில் இருந்து 4.22 ஒளியாண்டுகள் தொலைவில் அமைந்துள்ளது.

1977 நாசாவில் இருந்து Voyager 1 மற்றும் Voyager 2 என இரு விண்கலங்கள் பூமியிலிருந்து செலுத்தப்பட்டன. அவற்றில் Voyager 1 விண்கலம் 2012, ஆகஸ்டில் சூரிய குடும்பத்தை விட்டு வெளியேறி முதன்முறையாக Interstellar Space எனப்படும் நாம் பார்க்காத வெளிப் பிரபஞ்சத்தில் அடியெடுத்து வைக்கிறது.
அதன் பின்னர், ஜூபிடர், நெப்டியூன் மற்றும் ப்ளூட்டோ ஆகிய கிரகங்களை ஆய்வு செய்து விட்டு 2018-ம் ஆண்டு நவம்பர் மாதம் Voyager 2-ம் Interstellar Space-ல் நுழைகிறது. தற்போது பூமியில் இருந்து 18.8 பில்லியன் கிலோமீட்டருக்கு அப்பால் இருந்து தகவல்களை அளித்துக்கொண்டிருக்கிறது அந்த விண்கலம்.
இப்போது எதற்கு இந்தத் தகவல் என்றால், நம் சூரிய குடும்பத்தைக் கடக்கவே 35 ஆண்டுகளுக்கு மேல் ஆகின்றன. இதில் வேறு நட்சத்திரக் கூட்டங்களுக்குச் செல்லும் வகையில் தொழில்நுட்ப வளர்ச்சியடைய இன்னும் எத்தனை ஆண்டுகளாகும் எனத் தெரியாது. இப்போது நம்மிடம் இருக்கும் தொலைநோக்கி மற்றும் தொழில்நுட்பங்களை வைத்து ஏலியன்கள் இருப்பதைக் கண்டறிந்தாலும், அவற்றை நம்மால் கண்களில் பார்க்கக்கூட முடியாது. தகவல்களாகக் கேட்க மட்டுமே முடியும்.

ஏலியன்களின் வரவு நமக்கு நன்மையா தீமையா?
தொழில்நுட்பத்தில் நாம் எந்த இடத்தில் இருக்கிறோம் என ஓரளவு தெளிவாகிறது. தற்போது அமெரிக்கர்கள் சொல்வதுபோலவே ஏலியன்கள் பறக்கும் தட்டு மூலம் நம்மைப் பார்வையிட வருகிறார்கள் வைத்துக் கொள்வோம்.

நாம் தொழில்நுட்பத்தால் நெருங்க முடியாத அவர்கள், நம்மை அணுக முடியுமென்றால், தொழில்நுட்பத்திலும், புத்திசாலித்தனத்திலும் நம்மை விடப் பல மடங்கு மேலானவர்களாகவே அவர்கள் இருக்கக்கூடும். அப்படி அனைத்திலும் நம்மை விட மேலானவர்கள் நம்முடன் நட்பு பாராட்ட நினைப்பார்களா அல்லது நம்மை அடிமைப்படுத்த நினைப்பார்களா என்பதை உங்கள் சிந்தனைக்கே விட்டுவிடுகிறேன்.
"சொல்ல முடியாது அவர்கள் நம்மை நட்பாக நடத்தினாலும் நடத்தலாம், ஏனெனில் அவர்கள் மனிதர்கள் இல்லையே!"
" ஏலியன்கள் இல்லன்னு எப்போ சொன்னேன்... இருந்தா நல்லா இருக்கும்னுதான் சொன்னேன் "
ர.ரா
( இத்துடன் ' ஏலியன்கள் ' தொடர் பதிவுகள் நிறைவடைகிறது )

**மிர்தாதின் புத்தகம் 1**
மிர்தாதின் புத்தகம் - மிகெய்ல் நைமி



எந்தப் படைப்பாளியாவது தமது படைப்பு படிக்க முடியாதது என்று பயமுறுத்துவாரா என்ன ? அப்படிப் பயமுறுத்தி எச்சரிக்கை செய்திருக்கிறார் இதைப் படைத்திருக்கும் மிகெய்ல் நைமி !

இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் ஆன்மிக எழுத்தாளர்களில் ஒருவர். இவர் எழுதிய 'மிர்தாதின் புத்தகம்' (The Book of Mirdad) என்ற உருவக நாவல் 1948-ம் ஆண்டு லெபனானில் ஆங்கிலத்தில் வெளியானது.
அதற்குப் பிறகு, 1952-ம் ஆண்டு இந்தப் புத்தகம் அரேபிய மொழியில் வெளியானது. 2014-ம் ஆண்டு, கவிஞர் புவியரசின் மொழிபெயர்ப்பில் இந்தப் புத்தகம் தமிழில் வெளியானது.
"உலகில் கோடிக்கணக்கான புத்தகங்கள் இருக்கின்றன. ஆனால், இன்றுள்ள எல்லாப் புத்தகங்களை விடவும் மேலோங்கி உயர்ந்து நிற்பது 'மிர்தாதின் புத்தகம்'. பல்லாயிரம் முறை படிக்க வேண்டிய தகுதி படைத்த புத்தகம்" என்கிறார் மஹா ஞானியான ஓஷோ இந்தப் புத்தகத்தைப் பற்றிக் கருத்துத் தெரிவித்திருக்கிறார்.
சூபி மறைஞானத்தையும், ரஷ்ய எழுத்தாளர் லியோ டால்ஸ்டாயின் தத்துவத்தையும் அடிப்படையாக வைத்து 'மிர்தாதின் புத்தக'த்தை உருவக நாவலாக எழுதியிருக்கிறார் மிகெய்ல் நைமி.
பெருவெள்ளப் பெருக்கின் இறுதியில், உலகமெல்லாம் மூழ்கிவிட்ட நிலையில், நோவாவின் கப்பல் கரையொதுங்கியதாக நம்பப்படும் அராரத் மலை உச்சியில் அமைந்திருக்கும் மடாலயத்தில் நடக்கும் ஒரு கதையாக இந்த நாவல் உள்ளது.

மிர்தாத் என்ற குருவுக்கும் அவருடைய சீடர்களுக்கும் நடக்கும் உரையாடலாக இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார் நைமி.
மனிதனின் இரட்டைத்தன்மையைக் களைந்து கடவுளைக் கண்டடைவது, அன்பு, வேதனையற்ற வாழ்வுக்கான வழி, எஜமான்-வேலைக்காரன் உறவு, படைப்பாற்றல் தரும் அமைதி, பணம், காலத்துக்கும் இறப்புக்குமான சுழற்சி, மனந்திரும்புதல், வயோதிகம் போன்ற விஷயங்களை இந்தப் புத்தகம் விவாதிக்கிறது.
நோவாவின் கப்பல் கரையொதுங்கிய இடத்தைக் காண வேண்டும் என்ற நோக்கத்தில், இளைஞன் ஒருவன் செங்குத்தான மலைமீது ஏற முடிவுசெய்கிறான். அவன் புறப்படும்போது ஏழு ரொட்டித் துண்டுகளையும் ஓர் ஊன்றுகோலையும் எடுத்துகொண்டு புறப்படுகிறான்.
ஆனால், அவன் மலையேறும்போது பல இன்னல்களைச் சந்திக்கிறான். தான் கொண்டுவந்த உணவு, ஊன்றுகோல், அணிந்திருந்த ஆடை என அனைத்தையும் இழக்கிறான்.
இறுதியாக, அந்த மலையின்மேல் உச்சியில் இருக்கும் பலிபீடத்தின் முனையில் கப்பல் வடிவில் அமைந்திருந்த பாழடைந்த மடாலயத்தை அடைகிறான்.

அந்த மடாலயத்தின் வாசலில் மயங்கிவிழும் அந்த இளைஞனை சமாதம் என்ற வயதான துறவி காப்பாற்றுகிறார். அவர் அவனுக்காக நூற்றைம்பது ஆண்டுகள் காத்திருந்ததாகக் கூறுகிறார்.
அவர் அவனிடம் ஒரு புத்தகத்தை ஒப்படைப்பதற்காகத்தான் இவ்வளவு காலம் காத்திருந்ததாகக் கூறுகிறார்.
அவர் அவனிடம் ஒப்படைத்தது 'மிர்தாதின் புத்தகம்'. அந்தப் புத்தகத்தை அவனிடம் கொடுத்தவுடன் அவர் கல்லாகிப் போகிறார்.

**யார் இந்த மிர்தாத் ?**

நோவாவின் மகன் சேம் என்பவனால் உருவாக்கப்பட்டது அந்த மடாலயம். அந்த மடாலயத்தில் ஒன்பது பேர் மட்டுமே வாழ்ந்துவர வேண்டும் என்பது நோவாவின் கட்டளை.
அந்த மடாலயத்தின் மூத்த துறவியாக இருந்தவர் சமாதம். ஒன்பது பேரில் யாராவது ஒருவர் இறந்துவிட்டால் தகுந்த ஒருவரை இறைவன் அனுப்புவார் என்பது மடாலயத்தின் நம்பிக்கை.
அப்படி ஒருவர், இறக்கும்போது அந்த மடாலயத்துக்கு வந்துசேர்கிறார் மிர்தாத்.
ஆனால், அவரின் தோற்றத்தைப் பார்த்து அவரைத் துறவியாக ஏற்றுகொள்ள மறுக்கும் சமாதம், ஒரு வேலைக்காரனாகவே அவரை மடாலயத்துக்குள் அனுமதிக்கிறார்.
ஏழு ஆண்டுகள் உருண்டோடி விடுகின்றன. ஆனால், இறைவன் அனுப்பிய நபர் வரவேயில்லை. அதனால் வேறு வழியில்லாமல் மிர்தாதை ஒன்பதாவது துறவியாக ஏற்றுகொள்கிறார் சமாதம்.
ஏழு ஆண்டுகள் எதுவும் பேசாமல் மடாலயத்தின் வேலைக்காரனாகப் பணியாற்றி வரும் மிர்தாத், தன் மவுனம் கலைத்துப் பேச ஆரம்பிக்கிறார்.

அவரது பேச்சையும் அதற்குப் பிறகான மடாலய நிகழ்வுகளையும் இளம்துறவி நரோண்டா பதிவுசெய்கிறார்.
அந்தப் பதிவுதான் 'மிர்தாதின் புத்தகம்'.
முதல் மூன்று அத்தியாயங்கள் நாவலைப் போன்று தொடங்கினாலும், அதற்குப்பிறகான முப்பத்தியேழு அத்தியாயங்கள் குருவுக்கும் சீடர்களுக்கும் நடக்கும் உரையாடலாக விரிகின்றன.
ஆன்மிகத் தேடலைக் கொண்டவர்கள் அனைவருக்கும் இந்தப் புத்தகம் என்றென்றும் வழித்துணையாக இருக்கும்.

நோவாவின் கப்பலால் உலகம் மீண்டும் எப்படி உய்வுற்றதோ, அதேபோல 'மிர்தாதின் புத்தகம்' தனக்குள் தொலைந்துபோன மனிதனை மீண்டும் உய்விக்கும் பாதைகளைக் கொண்டது.

**Rahmath Rajakumaran**

மிகெய்ல் நைமி
கவிஞரும் தத்துவ அறிஞருமான இவர், லெபனானில் 1889-ம் ஆண்டு பிறந்தார். தன் குழந்தைப் பருவத்தை பாலஸ்தீனத்திலும் உக்ரைனிலும் கழித்தார். வாஷிங்டன் –சியாட்டிலில் பல்கலைக்கழகத்தில் பட்டப் படிப்பைப் படித்தார். படிப்பை முடித்து நியூயார்க் நகரத்தில் குடியேறிய இவருக்கு எழுத்தாளர் கலீல் ஜிப்ரானுடன் நட்பு உருவானது.
அரேபிய இலக்கியத்தையும் எழுத்தாளர்களையும் ஊக்குவிப்பதற்காக 'நியூயார்க் பென் லீக்' என்ற அமைப்பை இவர்கள் இருவரும் எட்டு எழுத்தாளர்களுடன் இணைந்து உருவாக்கினார்கள்.
இந்த அமைப்பின் தலைவராக கலீல் ஜிப்ரானும் துணைத் தலைவராக நைமியும் பணியாற்றினார்கள். கலீல் ஜிப்ரானின் புகழ்பெற்ற வாழ்க்கை வரலாற்றை இவர் எழுதியிருக்கிறார். இவரது கவிதைளின் தொகுப்பு 'ஐலிட் விஸ்பரிங்க்ஸ்' (Eyelid Whisperings) 1945-ம் ஆண்டு வெளியானது.
இவரது கவிதை உலகம் ஆன்மிகத் தத்துவங்களால் நிறைந்தது. 'தியானப் பார்வை கொண்ட கவிஞர்' என்று இவர் அறியப்படுகிறார். இவர் 1988-ம் ஆண்டு, லெபனான் தலைநகரம் பெய்ரூத்தில் மறைந்தார்.

**Rahmath Rajakumaran**

இதயத்தால் படிக்க வேண்டிய புத்தகம் இது... இப்படித்தான் ஓஷோ கூறுகிறார்.... இப்புத்தகத்தை படைத்த "மிகைல் நெய்மி"யை இந்த நூற்றாண்டின் மாபெரும் எழுத்தாளர் மட்டுமல்ல... எல்லா நூற்றாண்டுகளிலும் இவரே மாபெரும் எழுத்தாளர் என்றும் கூறுகிறார்....
" If this rascal would not have written this book, I would have written this "
(" இந்த அயோக்கியப் பயல் ரஸ்கல் , இதை எழுதியிருக்காவிட்டால் , இதை நான் எழுதியிருப்பேன் ! " என்கிறார் ஓஷோ ! )
மிகெய்ல் நைமியை " ராஸ்கல் " என்று செல்லமாய்ப் பிரியமாய் நேசத்துடன் குறிப்பிடுவது ஓஷோவுக்கே உரிய தனிப் போக்கு !
" ஞானி குர்ஜி யெஃப் "பைக் கூட " Rascal Saint" என்றே குறிப்பிடுகிறார் ஓஷோ .
ஸ்தம்பிக்கத்தான் வேண்டி இருக்கிறது.. ' நான் ' நானாகும் மிகச் சிறந்த தருணத்தை இப்புத்தகம் மிக நுண்ணிய பொழுதுகளில் தருவது...... கிடைக்கப் பெற்ற எதுவும் கிடைத்த பின் எதுவாகும் என்றொரு மாபெரும் கேள்வியோடு நான் அற்ற எதிர் நிலைக்குள் யார் அற்ற என் நிலையைத் தேடத் துவங்குவதற்கு நீட்டித்துக் கொள்கிற

## மிர்தாதின் புத்தகம் 2






இந்தப் புத்தகத்தின் சிறப்பு என்னவெனில் அதை படிப்பவரின் பக்குவத்திற்கு ஏற்ப பொருள் மாறுபடும். அதனால் 'இதைத் தான் சொல்ல வருகிறார் ' என்று யாராலும் அறுதியிட்டுக் கூறுவது கடினம்.
பலிபீடச் சிகரத்தில் உள்ள பாழடைந்த மண்டபத்தில் ஒரு துறவி உலாவுவதாக மலைவாழ் மக்கள் சொல்வதைக் கேட்ட ஒருவன் செங்குத்தான மலைப் பகுதியில் அவரை காண ஏறுகிறான்.
கிராம மக்கள் எவ்வளவோ எச்சரித்தும் அவன் கேட்பதாக இல்லை. உயிருக்கே ஆபத்தான வழியில், கையில் ஒரு ஊன்றுகோலுடனும் , 7 ரொட்டித்துண்டுகளுடனும் தன் பயணத்தை தொடங்குகிறான்.
நீண்ட தூர பயணத்திற்குப் பிறகு,சிங்கத்தோலை மட்டுமே உடுத்திருக்கும் ஓர் ஆட்டு இடையனிடம் தனது ஏழு ரொட்டித் துண்டுகளையும் இழக்கிறான் .அதற்கு அந்த ஆட்டிடையன் அவனிடம் தரும் விளக்கம் ஓர் அற்புதம்.
" வழியில்லாத வழியில் போகும் வழிப்போக்கனுக்கு
வழி உணவும் கூடாது "
பசியினூடே தொடர்ந்து மேலே செல்கிறான். ஓர் இடத்தில் தனது ஆடைகளை ஒரு கிழவியிடம் இழந்து ,நிர்வாணமாக குளிரில் நடுங்கிக்கொண்டே நிற்கிறான்.அந்தக் கிழவி, அதற்கான காரணத்தையும் சொல்கிறாள்.
"குறைந்த சொத்துடமை கொண்டவன்
குறைந்த அளவே, சொத்துடமை கொள்ளப்படுவான்."
அதிகம் சொத்துடமை கொண்டவன்
அதிகம், சொத்தின் உடைமையாவான்
அதிக உடைமை - குறைந்த மதிப்பு
குறைந்த உடைமை - அதிக மதிப்பு
வா , குழந்தாய் போகலாம்"
பிறகு கடைசியாக தன்னிடம் இருக்கும் ஊன்று கோலையும் இழக்கிறான். அதற்கு அவன் பெறும் பதில்
" ஊன்றுகோல் இல்லாதவர்கள் மகிழ்ச்சி கொண்டவர்கள். அவர்கள் தடுமாறுவதில்லை.
வீடற்றவர்கள் மகிழ்ச்சி கொண்டவர்கள்.
அவர்கள் வீட்டில்தான் இருக்கிறார்கள்.
எங்களைப் போலத் தடுமாறுகிறவர்களுக்கே
ஊன்றுகோல் தேவைப்படுகிறது.
எங்களைப் போல வீட்டோடு பிணைப்புண்டவர்க்கே
வீடு தேவைப்படுகிறது"
ஊன்று கோலை எடுத்து கொண்டாலும் பரவாயில்லை. இன்னும் தான் எவ்வளவு உயரம் செல்ல வேண்டும் என்பதையாவது கூறுமாறு கெஞ்சுகிறான்.
" உண்மையான உயரம்
எப்போதும் தாழ்வானது.
உண்மையான வேகம்
எப்போதும் மெதுவானது.
மிகவும் உணர்ச்சியுள்ளது

மரத்துப் போனது.
பெரிய பேச்சாளன், ஊமை.
ஏற்ற வற்றம் ,ஒரே அலையில்தான்
வழியில்லாதவனே சரியான வழிகாட்டி,
மிகப் பெரியதென்பது,
மிகச் சிறியதுதான்.
எல்லாம் கொடுப்பவனே,
எல்லாம் பெற்றவன்"
என்று சொல்லி இறுதியில் ,
' வாழ்வதற்காக செத்துப்போ
சாவதற்காக வாழ்ந்திரு '
இவ்வாறு கூறிவிட்டு மறைந்து போகிறார்கள். இறுதியில் அனைத்தையும் இழந்தவனாய் மேலே செல்ல எத்தனிக்கும் போது, அவன் தன் கால்கள் தடுமாறி இருளில் எங்கோ தூக்கி எறியப்படுகிறான்.
மீண்டும் அவன் கண் விழிக்கும் போது அங்கு அந்தத் துறவி அவனை வரவேற்கிறார். அவன் லட்சியத்தை அடைந்து விட்டதாக கூறுகிறார். 150 ஆண்டுகளாக அவனுக்காக காத்திருப்பதாக கூறுகிறார். மிர்தாத்தின் புத்தகத்தை அவனிடம் தந்து விட்டு, அவர் கல்லா மாறிவிடுகிறார். அந்தத் துறவியின் பெயர் தான் சமாதம்.
ஆத்ம பயணத்தைப் பற்றிய இப்படி ஓர் அற்புதமான உருவகக் கதையோடு ஆரம்பிக்கிறது புத்தகம். ஒருவேளை இந்தக் கதையை உங்களுக்கு புரியாவிட்டால், புத்தகத்தை வாங்காதீர்கள். உள்ளே முழுக்க முழுக்க இதைவிடச் சிக்கலான விஷயங்கள் ஒன்றோடொன்று பிணைந்து பிரிக்கமுடியாதபடி சென்றுகொண்டே இருக்கும்.
எல்லாமே உருவகம்தான் எதிலும் நேரடியான விஷயங்கள் இருக்காது ஆனால் புரிந்துகொண்டால் அதி அற்புதமான பயணம் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை.
புத்தகம் முழுக்க சிக்கலான வாழ்வியல் விஷயங்களை, மிர்தாத் அழகாக இரண்டே வரிகளில் சொல்லிக் கொண்டே போகிறார்.
............................ ஃ ......................... ஃ.............................. ஃ......................... ........ ஃ ..........
ஆன்மிக நியதி : தன்னை இழத்தல்
விதைக்குத் தெரியும் தான் இறக்கப்போகிறோம் என்று.
ஆனால் அது எதுவாக மாறப்போகிறோம் என்று அறியாது.
பெரிய மரமாக பூத்துக்குலுங்கப் போகிறோம் என்றும்
இனிய குயில்களின் இசை ஒலிக்கும் என்றும்
பசும் இலைகளும், தென்றலும் இழையும் என்றும்
தன்னிழல் பல்லுயிர்க்கும் இடமளிக்கும் என்றும்
அதற்குத்தெரியாது
நான் எனும் சுயம் நான் இழக்கும்போது
அந்த அகம் பாவம் விலகும்போது
எந்த இடம் போகிறோம் என்றும் தெரியாது
பிறக்கும் முன் எங்கிருந்து வந்தோமோ
இறந்தபின் எவ்விடம் செல்வோமோ
அந்த இடம்தான்.
இருக்கும்போதே அவ்விடம் தெரிந்துகொள்ள
ஆழ் நிலை தியானம் உதவும்
இந்நிலைக்கு தியான மனம் அழைத்து செல்லும் .
இதை விளக்கிச்சொல்ல வார்த்தைகள் கிடையாது

**மிர்தாதின் புத்தகம் 3**




மிர்தாத் எதையுமே மிக எளிதாக இரண்டே வரிகளில் சொல்லிக் கொண்டே போகிறார்.
" ஓ... துறவிகளே ! மிர்தாத் உங்கள் பிளவுண்ட நானை ஒன்று சேர்ப்பான்."
" மனிதகுலம் ஒட்டுமொத்தமாக ஒரே மனிதன் தான் "
" கடவுளுக்கு எதையும் நினைவுப்படுத்த வேண்டியதில்லை ; தலைசிறந்த வலையை ஒரு சிலந்தி பின்னச்செய்ய, அவருக்கு நினைவூட்ட வேண்டுமா என்ன...?"
" ஏக்கம் கொள்கிறவர்கள் மகிழ்ச்சி நிறைந்தவர்கள் "
" ஒரு வீடு மின்னலை தன் பக்கம் ஈர்க்காமல் இடி அதன்மேல் விழுவதில்லை. இடி விழுவதற்கும், தனது அழிவிற்கும், அந்த வீடும் அதிகமான காரணமாகிவிடுகிறது"
" காலம் மறப்பதில்லை. சரியான தருணத்தில் , சரியான முகவரியில் அது அழைப்பை விநியோகிக்கவே செய்கிறது."
" எல்லாவற்றிலும் உமது விருப்பம் இருப்பதையும், அவற்றின் விருப்பங்கள் உமக்குள் இருப்பதையும் நீங்கள் உணர்ந்து இருக்கும் வரை, வல்லமை கொண்ட விருப்பத்தின் ரகசியங்களை உங்களால் அறிய முடியாது "

**Nothing can serve save it be served by serving , And nothing can be served except it serve the saving**
" பணிவிடைகளால் பணிவிடை செய்தே ஆகவேண்டுமென்றால், எதுவுமே பணிவிடையைக் காப்பாற்றாது பணிவிடை செய்கிறவனுக்குப் பணிவிடை செய்தாலொழிய எதற்குமே பணிவிடை செய்து விட முடியாது "
ஆங்கிலத்தில் படித்தால் தலை சுற்றி, பிறகு தேடிப்பிடித்து தமிழில் படித்தேன். இருந்தாலும் கொஞ்சமாக தலை சுற்றத்தான் செய்கிறது.
பணியாள், தலைவனைப் பற்றி ...
உங்கள் வேலைக்காரன் எத்தனை பேர் என்று உங்களுக்கு தெரியுமா ? ஒரு பருந்தோ, கழுகோ , ஒரு செடார் மரமோ , தேக்கு மரமோ, ஒரு மலையோ அல்லது விண்மீனோ ; ஒரு தேவனோ அல்லது அரசனோ,உங்களுக்கு பணிவிடை செய்யாமல் இருந்ததுண்டா ?
இந்த உலகம் முழுவதுமே உங்களுக்கு பணிவிடை செய்து கொண்டு இருக்கவில்லையா ?
ஒரு வண்டோ, ஈயோ, ஒரு ஆந்தையோ குருவியோ, ஒரு நெருஞ்சி முள்ளோ, அல்லது ஒரு சுள்ளிக் குச்சியோ, ஒரு கூழாங்கல்லோ , அல்லது சிப்பியோ ஒரு பனித்துளியோ , அல்லது சிறு குளமோ, ஒரு பிச்சைக்காரனோ , அல்லது ஒரு திருடனோ உங்கள் பணிவிடையை பெறாமல் போவதுண்டோ ?
உலகம் தனது பணியை செய்வதன் மூலம் உங்கள் பணிகளையும் செய்து விடுகின்றது. உங்கள் பணியையும் நீங்கள் செய்வதன் மூலம், உலகின் பணியையும் நீங்கள் செய்வதன் மூலம் , உலகின் பணியையும் நீங்கள் செய்து விடுகிறீர்கள் .

எப்போதும், வயிற்றின் எஜமான் தலைதான். அதேசமயம், வயிறும் தலையின் எஜமானாகத் திகழ்கிறது . பணிவிடையால் பணிவிடை செய்தே ஆகவேண்டுமென்றால், எதுவுமே பணிவிடையை காப்பாற்றாது.

பணிவிடை செய்கிறவனுக்கு பணிவிடை செய்தாலொழிய, எதற்குமே பணிவிடை செய்துவிட முடியாது. வேலைக்காரன் எஜமானனின் எஜமான். தலைவனாகிய எஜமானோ , வேலைக்காரனின் வேலைக்காரன். வேலைக்காரன் தலைகுனிய வேண்டியதில்லை. தலைவன் தலைநிமிர வேண்டியதும் இல்லை .
தலைவனின் ஆபத்தான ஆணவம், அடித்து நொறுக்கப்பட்ட வேண்டும். வேலைக்காரனின் அவமானகரமான அவமானம் ஒழிக்கப்பட வேண்டும்.

**மிர்தாதின் புத்தகம் 4**

"எந்த வாளாலும் காயப்படுத்த முடியாத காற்றைப்போல் திகழுங்கள் "
_ மிர்தாதின் இந்த வரியைப் புத்தகத்தை விமர்சிப்பவர்கள் மேற்கோள் காட்டாமல் இருந்ததில்லை. இந்த வரியும் எனக்கு மிகவும் பிடித்த வரி .

தாயிஃப் நகரத்தில் தாஹா நபி ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பட்ட வேதனைதான் இந்த வரி என் கண்முன் காட்டியது.
நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஒரு முறை நான் நபி(ஸல்) அவர்களிடம், " தாங்கள் காயமடைந்து உஹுதுப் போரின் கால கட்டத்தை விடக் கொடுமையான கால கட்டம் எதையேனும் தாங்கள் சந்தித்துண்டா? " என்று கேட்டேன்.
அதற்கு நபி(ஸல்) அவர்கள், '' நான் உன் சமுதாயத்தாரால் நிறையத் துன்பங்களைச் சந்தித்து விட்டேன். அவர்களால் நான் சந்தித்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானது 'அகபா (தாயிஃப்) உடைய நாளில் சந்தித்த துன்பமேயாகும்.
ஏனெனில், அன்று நான் என்னை ஏற்றுக் கொள்ளும்படி, தாயிஃப் நகரத் தலைவரான கினானா இப்னு அப்தி யாலீல் இப்னி அப்தி குலால் என்பவருக்கு எடுத்துரைத்தேன். அவர் நான் விரும்பியபடி எனக்கு பதிலளிக்கவில்லை. எனவே, நான் கவலையுடன் எதிர்ப்பட்ட திசையில் நடந்தேன்.

'கர்னுஸ் ஸஆலிப்' என்னுமிடத்தை நான் அடையும் வரை நான் சுய உணர்வுக்கு வரவில்லை. அங்கு வந்து சேர்ந்தவுடன் என் தலையை உயர்த்தினேன். அப்போது அங்கே வானத்தில் ஒரு மேகம் என் மீது நிழலிட்டுக் கொண்டிருந்தது. நான் கூர்ந்து கவனித்தபோது அதில் ஜிப்ரீல்(அலை) அவர்கள் இருந்தார்கள்.
அவர்கள் என்னை அழைத்து, 'உங்கள் சமுதாயத்தாரிடம் நீங்கள் சொன்னதையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் கேட்டான். அவர்களை நீங்கள் விரும்பியபடி தண்டிப்பதற்கு ஆணையிடுவதற்காக மலைகளுக்கான வானவரை அல்லாஹ் உங்களிடம் அனுப்பியுள்ளான்' என்று கூறினார்கள்.
உடனே, மலைகளை நிர்வகிக்கும் வானவர் என்னை அழைத்து, எனக்கு மீது சலாம் சொல்லி, பிறகு, ''முஹம்மதே! நீங்கள் விரும்பியபடி கட்டளையிடலாம். இந்த நகரத்தின் இரண்டு மருங்கிலுமுள்ள இந்த இரண்டு மலைகளையும், அவர்களின் மீது நான் புரட்டிப் போட்டு விட வேண்டுமென்று நீங்கள் விரும்பினாலும் சரி, உங்கள் கட்டளைப்படி செயல்பட நான் தயாராக உள்ளேன்" என்று கூறினார்.

உடனே, " வேண்டாம் ஆயினும், இந்த நகரத்து மக்களின் சந்ததிகளில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் அவனை மட்டுமே வணங்குபவர்களை அல்லாஹ் உருவாக்குவான் என்று நம்புகிறேன் எனவே, அவர்களை தண்டிக்க வேண்டாம் " என்று சொன்னேன்.
ஸஹீஹ் புகாரி: 3231
நபிகளாரை தாயிஃப் மக்கள் விரட்டி, காயப்படுத்தியப் போதும் அம்மக்களுக்கு எந்த ஆபத்தும்,துன்பமும் வந்து விடக் கூடாது என்று காருண்ய நபி கவலைப்பட்டதோடு , எதிர்காலத்தில் அவர்களின் சந்ததிகள் ஈமான் கொள்ளட்டும் . கொள்வார்கள் என்று நம்பிக்கை வைத்த நம்பெருமானாரை என்னென்பது .

இயற்கையின் சக்திகளான காற்றையோ , நீரையோ , பூமியோ அவைகளைக் காயப்படுத்திய போதும் , அவைகள் காயப்படுத்திய மக்களுக்கு நன்மையையே கொடுக்கும். ஆமாம் நபிகளார் அவர்களை மன்னித்து , அவர்களுக்கு துஆ செய்த மாதிரி .
"எந்த வாளாலும் காயப்படுத்த முடியாத காற்றைப்போல் திகழுங்கள் "

**மிர்தாதின் புத்தகம் 5**

( திரையும் , முத்திரையும் )




உங்கள் கண்கள் எண்ணற்ற திரைகளால் மூடப்பட்டுள்ளன. ஒவ்வொரு முறை நீங்கள் பார்க்கும் போதும், உங்கள் திரையைத்தான் பார்க்கிறீர்கள்.
உங்கள் உதடுகள் எண்ணற்ற முத்திரைகளால் மூடி மறைக்கப்பட்டுக் கிடைக்கையில், நீங்கள் உதிர்க்கும் ஒவ்வொரு சொல்லும் சொல்லல்ல ; அதுவும் ஒரு முத்திரைதான்.
பொருள்கள் என்ன வடிவத்தில் , என்ன பண்பில் இருந்தாலும், அவைகள் திரைகளே.
உங்கள் கண்ணே திரையாக இருக்கும்போது, சிறிதளவேனும் அதைப் புரிந்துகொள்ள உங்களால் எப்படி முடியும் ?
அப்புறம் சொற்கள்.
எழுத்துக்களாலும் , அசை சீர்களாலும் முத்திரை இடப்பட்டவைதாமே சொற்கள் ?
உங்கள் உதடே ஒரு மூடப்பட்ட முத்திரையாக இருக்கும்போது, முத்திரையை மட்டுமே வெளிப்படுத்துவதன்றி, உங்கள் சொற்களுக்குச் சிறிதளவேனும் பொருள் உண்டா ?
கண், திரை போட்டுக்கொள்ளும். அத்திரையை ஊடுருவ அதனால் முடியாது .
உதடு, மூடி முத்திரை போட்டுக் கொள்ளும், அந்த முத்திரையை தகர்க்க அதனால் முடியாது .
திரையைக் கிழித்துப் பார்க்க, உங்களுக்கு வேறு கண் வேண்டும். புருவத்தாலும், இமைகளாலும் , இமைப் பீலிகளாலும் மறைக்கப்படாத கண் வேண்டும் !
உதடுகள் மீதுள்ள முத்திரைகளைத் தகர்க்க, உங்களுக்கு வேறு உதடுகள் வேண்டும். மூக்கின் கீழ் சதையாக இல்லாத உதடுகள் வேண்டும் !

முதலில், கண், தன்னையே சரியாகப் பார்த்துக் கொள்ளும் போது, அது எல்லா பொருட்களையும் சரியாக பார்க்கும் வல்லமை பெறும் .
உதடுகளாலும் நாக்காலும் பேசாமல், அவற்றின் மூலமாக பேசக் கூடுமானால், எல்லா சொற்களையும் கடந்து பேச முடியும்; அவற்றுக்கு அப்பாலும் பேச முடியும் !

சரியாகப் பார்த்து, சரியாகப் பேசினால், நீங்கள் உங்களைத் தவிர வேறு எதையும் பார்க்க மாட்டீர்கள்; உங்களைத் தவிர வேறு எதையும் வெளிப்படுத்திக் கொள்ள மாட்டீர்கள்.
எல்லா பொருட்களிலும் , எல்லா பொருட்களுக்கும் அப்பாலும், எல்லாச் சொற்களிலும் ,எல்லாச் சொற்களுக்கும் அப்பாலும், இருப்பது நீங்களே. பார்க்கிறவராகவும், பேசிகிறவராகவும்.
அதனால் உங்கள் உலகம் திகைப்பூட்டும் ஒரு புதிர். காரணம் நீங்களே ஒரு திகைப்பூட்டும் புதிர் !
விஷயங்களை அவற்றின் இயல்புப்படி விட்டுவிடுங்கள். மாற்றுவதற்குச் சிரமப்பட வேண்டாம். நீங்கள் அவற்றை எப்படிப் பார்க்கிறீர்களோ, அவை அப்படியே இருப்பதால்தான், அவை எப்படி காணப்படுகின்றனவோ, அப்படியே அவை காணப்படுகின்றன .
அவை பார்ப்பதும் இல்லை ; பேசுவதும் இல்லை பார்வையையும் , பேச்சையும், அவற்றுக்கு நீங்களே வழங்குகிறீர்கள் .
திரைகளை விலக்கும்படி பொருள்களிடம் கேட்டு கொள்ளாதீர்கள். உங்கள் திரையை நீங்கள் விலக்குங்கள். பொருள்களின் திரைகள் தாமாக விலகிவிடும்.
முத்திரைகளை உடைத்து விடும்படிப் பொருள்களிடம் கேட்டுக் கொள்ளாதீர்கள். உங்களையே, முத்திரைகள் தகர்த்து வெளிப்படுத்துங்கள். எல்லாவற்றின் முத்திரைகளும் தாமாகவே தகர்ந்து விடும்.

திரையை நீக்கி சுய வெளிப்பாட்டிருக்கும், சுய முத்திரை தகர்ப்பிற்கும் ஒரு மந்திர திறவுகோல் இருக்கிறது .அது ஒரு சொல்.

அந்தச் சொல் எப்போதும் உங்கள் உதடுகள் நடுவே இருக்க வேண்டும்.சொற்களிலேயே மிகச்சிறியதும், மிகப் பெரியதுமான சொல் அது ! இந்த மிர்தாத், அதை "படைப்புச் சொல் " என்று அழைக்கிறான்.
அந்தச் சொல்லை இந்த ர.ரா அடுத்தப் பதிவில் இன்ஷா அல்லாஹ் சொல்றான்.
ர.ரா

**மிர்தாதின் புத்தகம் 6**
( படைப்புச் சொல் )




" நான் " என்று சொல்லும்போது மனதார சொல்லுங்கள்.
"இறைவா..! " நான் " என்பதன் துன்பங்களிலிருந்து எனக்கு அடைக்கலம் கொடு! " நான் '' என்பதன் பரவசத்தை உணர எனக்கு வழிகாட்டு " என்று நெஞ்சில் நினைத்து அந்தச் சொல்லை உச்சரியுங்கள். _ " நான் "
அந்தச் சொல், சிறியதாக இருந்தாலும் குறையில்லை. அது, மற்ற சொற்களின் ஆத்மாவுக்குள் அடைத்துப் பூட்டப்பட்டுக் கிடக்கிறது.

பூட்டைத் திறவுங்கள்..! அப்போதே உங்கள் வாய் மணக்கும்; நாவினிக்கும். வெளிவரும் ஒவ்வொரு சொல்லும், வாழ்வின் மகிழ்ச்சியில் முங்கிருக்கும்.

" நான் " _ என்பதே படைப்பாற்றல் மிக்க சொல். அதன் மந்திர சக்தியைப் பற்றிக் கொள்ளுங்கள்.
உங்களது , " நான் " உங்கள் இருப்பின் உள்ளுணர்வுதான். அது மௌனமானது ; உடல் சார்பற்றது. அதுவே குரலாகவும் , அதுவே உடல் சார்ந்தும் வெளிப்படுகின்றது .
உமக்குள் உள்ள ஒலிக்காததை அதை ஒலிக்கச் செய்கிறது. அரூபமானதை உருவாக்குகிறது ; காண முடியாததைக் காணச் செய்கிறது ; கேட்க முடியாதைக் கேட்க செய்கிறது.
கண்ணும்,காதும் கட்டுப்பட்டிருந்தாலும், அது நீங்கள்தான். இந்த கண்ணால் பார்த்தாலும்,காதால் கேட்டாலும், நீங்கள் ஒன்றையும் பார்க்கவுமில்லை ; எதையும் கேட்கவும் இல்லை !
சாதாரண நிலையில் " நான் " என்று நினைக்கும் போது, உங்கள் தலைக்குள் கடலளவு சிந்தனைகள். உங்கள் எண்ணங்கள் கொடுக்காகக் கொத்தினால், குத்தினால், பிராண்டினால் உங்களுக்குள் இருக்கும் ' நானி'டம் அவையெல்லாம் இருப்பதாக அர்த்தம் !

மிர்தாத் கொடுக்கும் செய்வான் ; கொடுத்ததை எடுக்கவும் செய்வான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.
" நான் " என்பதை உணரும்போது, உங்கள் இதயக் கிணற்றில் ஒரு குழாய் பதித்தது போல ஆகிவிடும். அந்த கிணறு உங்களது நானின் படைப்பு . அதுவே உணர்பவனும் , உணரப்படும் பொருளுமாகிவிடும்
உங்கள் இதயங்களில் முட்புதர்கள் இருந்தால், உங்களது "நான் '' அந்த புதர் நடுவே முளைத்ததாக இருக்கும்.
மிர்தாத் வேர்விடவும் செய்வான் ; வேர் பிடுங்கி வெளியேறவும் செய்வான் , என்பதை தெரிந்து கொள்ளுங்கள்
சாதாரணமாக நீங்கள் " நான் " என்று சொல்லும்போது, வலிமைமிக்க சொற்கூட்டத்திற்கு உயிர் கொடுத்து விடுகிறீர்கள்.

ஒவ்வொரு சொல்லும் ஒரு பொருளின் குறியீடு. ஒவ்வொரு சொல்லும் பிரபஞ்ச உறுப்பின் ஒரு பகுதி.

இந்தப் பிரபஞ்சமே உங்களது நானின் படைப்புத்தான். இந்த "நான்" ஒரே சமயத்தில், படைத்தவனாகவும், படைக்கப்படும் பொருளாகவும் இருக்கிறது .

உங்கள் பிரபஞ்சத்தில் துஷ்ட தேவதைகள் ஏதேனும் இருக்குமானால், அவற்றை அங்கு வந்து கொண்டு சேர்த்தது உங்கள் " நான் " தான் !
மிர்தாத் , படைப்பவனாகவும் , படைப்பைத் தடுப்பவானாகவும் இருக்கிறான் என்பதை தெரிந்து கொள்ளுங்கள்.
படைப்பாளி எப்படியோ, அப்படித்தான் அவனது படைப்பும்.
எவனாவது தன்னை அதிகப்படியாகப் படைத்துக் கொள்ள முடியுமா ?
எவனாவது தன்னை குறைவாகப் படைத்துக் கொள்வானா ?
இறைவன் மட்டும் - நிறையும் குறையும் இல்லாமல் படைப்பாளியைப் படைக்க செய்கிறான்.
'' நான் என்பது ஒரு நீரூற்று. அந்த மூலத்திலிருந்துதான், எல்லாமும் பொங்கி வருகின்றன .மறுபடியும் அவை அதற்குள் சென்றுதான் ஒடுங்குகின்றன . நீரூற்று எப்படியோ, அப்படித்தான் வெள்ளப் பெருக்கமும் , பாய்ச்சலும்,
" நான் " - ஒரு மந்திரக்கோல். அது மந்திரவாதிக்குள் இருக்கும் பூஜ்யத்தையே பெற்றெடுக்கும். மந்திரவாதி எப்படிப்பட்டவனோ, அப்படியே அவனது மந்திரக்கோலின் படைப்புகளும் .
உங்களது உள்ளுணர்வு ஏற்றபடியே உங்களது " நான் " அமைந்திருக்கும் . உங்கள் " நான் " எப்படிப்பட்டதோ, உங்கள் உலகமும் அப்படிப்பட்டதே.
உங்கள் " நான் " தெளிவாகவும், உறுதியான பொருள் கொண்டதாகவும் இருந்தால், உங்கள் உலகமும், தெளிவாகவும், உறுதியான அர்த்தம் கொண்டதாகவும் இருக்கும்.
" நான் " - உங்கள் வாழ்வின் மையம் .அது வெளிப்படுத்தும் பொருட்களின் ஒட்டுமொத்தமே உங்கள் உலகம் .அவை மீண்டும் அதில்தான் ஒன்று குவிந்து ஒடுங்கும்.
அது திடமாக இருந்தால், உங்கள் உலகமும் திடமாக இருக்கும். உங்களை இடம் வலமாக ஊசலாட வைக்கும். எந்த மேலான சக்தியும், கீழான சக்தியும் இராது.
அது இடம் மாறினால் நீங்கள், சினம் கொண்ட சுழல் காற்றில் அகப்பட்ட ஆதரவற்ற இலையாக அல்லல்படுவீர்கள்.
" நான் " என்று சொல்லும்போது மனதார சொல்லுங்கள்.
அதுதான் படைப்புச் சொல்.

## மிர்தாதின் புத்தகம் 7

( மும்மையும் , அதன் சமநிலையும் )

நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் தனிப்பட்ட '' நானில் " மையம் கொண்டிருந்தாலும், நீங்கள் எல்லோரும் ஒரே " நானில் " தான் மையம் கொண்டவர்கள் - இறைவனின் ஒற்றை "நான்" கூட அப்படித்தான்.

கடவுளின் "நான்" முடிவற்றது ; அது ஒன்று மட்டுமே சொல். அதற்குள்தான் இறைவன் இருக்கிறான். அது மிக மேலான உள்ளுணர்வு - அதாவது இறைவனே, தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான்.

அது இல்லாமல் அவன் ஒரு பரிபூரண மௌனம்தான். அதனைக் கொண்டே படைப்பவன் தன்னைப் படைத்துக் கொண்டான்.

அரூபமான அதுதான் பல உருவங்களாக வடிவெடுக்கின்றது. வடிவிலுள்ள எல்லா உயிர்களும் , அதன் வழியாகவே மீண்டும் அரூப நிலையை அடைகின்றன.

இறைவன், தன்னை உணர, தன்னைப் பற்றி நினைக்க , தனக்குத் தானே பேசிக் கொள்ள, " நான் " என்பது தவிர, வேறு எதையும் உச்சரிக்கவில்லை . அதனால்தான் "நான்" என்பது ஒன்றே அவனது சொல். அதனால் , அதுவே மகத்தான சொல் !

இறைவன் " நான் " என்று சொல்லும்போது, சொல்லப்படாதது எதுவுமே மிச்சம் மீதி இல்லை.

காணும் உலகங்களும் , காணப்படாத உலகங்களும் பிறந்தவையும், பிறக்க காத்திருப்பவையும் , உருளும் காலமும், உருளக் காத்திருக்கும் காலமும், _ எல்லாம், எல்லாம் , ஒரு மணல் துகள் கூட மிச்சமில்லாமல் பேசப்பட்டு, அந்தச் சொல்லுக்குள் திணித்து வைக்கப்பட்டுள்ளன.

அதனைக் கொண்டே எல்லாம் உருவாக்கப்பட்டன. அதன் மூலமாகவே எல்லாம் தாக்குப்பிடித்து வாழ்ந்து வருகின்றன.

(நபியே!) உங்களது இறைவன் மலக்குகளை நோக்கி #நான் பூமியில் (என்னுடைய) பிரதிநிதியை (ஆதமை) நிச்சயமாக ஏற்படுத்தப் போகிறேன்" எனக் கூறிய சமயத்தில் ...

(அதற்கு) அவர்கள் "(பூமியில்) விஷமம் செய்து இரத்தம் சிந்தக்கூடிய (சந்ததிகளைப் பெறும்) அவரை அதில் (உன்னுடைய பிரதிநிதியாக) ஆக்குகிறாயா ? நாங்களோ உன்னுடைய பரிசுத்தத் தன்மையைக் கூறி உன்னுடைய புகழைக் கொண்டு உன்னை புகழ்ந்து கொண்டிருக்கிறோம்" என்று கூறினார்கள்.

அதற்கவன் "நீங்கள் அறியாதவற்றை எல்லாம் நிச்சயமாக #நான் நன்கறிவேன்" எனக் கூறிவிட்டான். (குர்ஆன் : 2:30)

இறைவனின் ஒற்றை " நான் " அது தாரக சட்டம் . என்றென்றும் சமநிலையில் இருக்கும் தாரகச் சட்டம். அதன் ஒரு தட்டில் ஆதி உள்ளுணர்வும், மறு தட்டில் அந்தச் சொல்.

ஆதி உள்ளுணர்வும் , அந்தச் சொல்லும் , புரிதலின் உயிர்ப்புதான், இவைகள் மூன்றும்தான் மும்மை. இந்த மூன்றும் ஒன்றே.

மூன்றும் சமமாய், மிக விரிவாய், என்றென்றும் இருப்பனவாய், சமநிலை கொண்டனவாய் , தன்னை உணர்ந்தவனாய், சுயநிறைவு கொண்டவனாய், அதிகரிக்காமலும், குறையாமலும் இருப்பவை. என்றும் அமைதியாய், என்றும் மாறாமல் இருப்பவை. இதுதான் சரியான சமநிலை .

மனிதன், கடவுளின் பிள்ளையில்லாமல் வேறென்ன ? அவன் கடவுளைவிட வேறாகத்தான் இருக்க முடியுமா ? ஒரு வித்துள்ளே தேக்குமரம் ஒடுங்கிருக்கவில்லையா ? மனிதனுக்குள் கடவுள் பொதிந்து வைக்கப்பட்டிருக்கவில்லையா ?

அதனால், மனிதனும் புனித மும்மையே; உள்ளுணர்வே ; அந்தச் சொல்லே ; புரிதலே .

கடவுளைப் போலவே மனிதனும் ஒரு படைப்பாளி. " நான் " என்பதே அவனது படைப்பு.

அப்படியிருக்க அவன் ஏன், கடவுளைப் போலச் சம நிலையில் இல்லை ?

சொல்றேன்.

ர.ரா

**மிர்தாதின் புத்தகம் 9**
**( கடவுளின் சொல் )**
காலம் கடந்த " காலம்" தான் கடவுளின் சொல். வெளி எல்லை கடந்த " வெளி" தான் கடவுளின் சொல். நீங்கள் கடவுளுடன் இல்லாத காலமொன்று உண்டா என்ன ? நீங்கள் கடவுளுடன் இல்லாத இடமொன்று உண்டா என்ன ? அப்படியிருக்க, நீங்கள் ஏன் ஆதியந்தமற்ற காலத்தை மணி நிமிடங்களும், பருவ காலங்களாலும் விலங்கு பூட்டி வைத்திருக்கிறீர்கள் ? அங்குலங்களாலும், மைல்களாலும் வெட்ட வெளியை ஏன் பட்டியில் அடைத்து காக்கிறீர்கள் ?
பிறப்பற்ற ' வாழ்வு 'தான் கடவுளின் சொல் .அதனால் , அது இறப்பும் அற்றது . அதனால், உங்கள் வாழ்வு எதற்காக பிறப்பும் இறப்பும் கொண்டதாக இருக்க முடியும் ? நீங்கள் கடவுளின் வாழ்க்கை வாழவில்லையா என்ன ? மரணமில்லாப் பெருவாழ்வு மரணத்திற்கு மூலகாரணம் ஆகிவிடுமா என்ன ?
கடவுளின் சொல்லில், எல்லாம் அடங்கி இருக்கின்றன. அங்கே தடை மதில்கள் இல்லை. வேலிகள் இல்லை. அப்படியிருக்க , தடை மதில்களையும், வேலிகளையும் எதற்காக வாடகைக்கு வாங்கி கொண்டிருக்கிறீர்கள் ?
' உலை 'என்பது கடவுளின் சொல். படைப்பதற்காக அது உருக்குகிறது. பிறகு ஒன்றாய் கலக்குகிறது. தகுதி படைத்தென்று எதையும் அது ஏற்றுக் கொள்ளவுமில்லை ; தகுதியற்றதென்று எதையும் அது தள்ளுபடி செய்வதுமில்லை

புரிதலின் ஆத்மாவை அது பெற்றிருப்பதால், தானும் தனது படைப்பும் ஒன்றுதான் என்பதை அது பூரணமாக புரிந்து கொண்டிருக்கிறது.
பகுதியை ஒதுக்கி விடுவது என்பது முழுமையை ஒதுக்கிவிடுவது என்பதையும் , முழுமையை ஒதுக்கிவிடுவது என்பது தன்னையே புறக்கணிப்பது ஆகும் என்பதையும் அது நன்றாக புரிந்தே வைத்திருக்கிறது .
அதனால், பொருளும் , பொருளாற் பொருந்தும் பயனும், பொருட் காரணமும் எல்லாம் என்றும் ஒன்றே .

**மிர்தாதின் புத்தகம் 8 ( கட்டுப் பொதி )**

கடவுளைப் போலவே மனிதனும் ஒரு படைப்பாளி. " நான் " என்பதே அவனது படைப்பு. அப்படியிருக்க அவன் ஏன், கடவுளைப் போலச் சம நிலையில் இல்லை ?

பொதிந்து கட்டப்பட்டுள்ள கட்டுக்குள் இருக்கும் கடவுளே மனிதன் .

காலமே, அந்த கட்டுப்பொதி.

' வெளி' யே அந்த கட்டுப் பொதி.

தசையை அந்த கட்டுப் பொதி.

அதற்குள்தான் எல்லா புலன்களும், எல்லா புலனறிவுகளும் பொதிந்திருக்கின்றன.

வெறும் துணிக்கட்டு மட்டுமே குழந்தையாகாது என்பது தாய்க்குத் தெரியும்.

ஆனால் அது குழந்தைக்கு தெரியாது.

மனிதன் உள்ளுணர்வு மிக்கவன் தான் என்றாலும், அந்தப் பொதி, நாளுக்கு நாள் ,யுகத்துக்கு யுகம் மாறிக்கொண்டே இருக்கிறது. அதனால், அவனது உள்ளுணர்வும் என்றும் நெகிழ்ந்தபடியே இருக்கிறது.

என்றாலும், அவனது உள்ளுணர்வின் வெளிப்பாடான அந்தச் சொல் தெளிவாகும் இல்லை ; அதற்கு திட்டவட்டமான பொருளும் இல்லை. அதனால் அவனது புரிதல், மூடுபனிக்குள் இருப்பது போல் உள்ளது.

அதனால் அவனது வாழ்வு சமநிலை தவறி ஊசலாடுகிறது. மூன்று மடங்கு குழப்பம் ஒன்றாக அவனுக்குள்.

அதனால், மனிதன் உதவி கேட்டு கெஞ்சுகிறான். அவனது வேதனைக் குரல்கள் எல்லா இடங்களிலும் எதிரொலிக்கின்றன. அவனது வேதனை முனகல்கள் சுமந்து கனத்துப் போனது காற்று. அவனது கண்ணீர் பெருக்கால், உப்பாகி போனது கடல். அவனது புதைகுழிகளால் உழுது காயப்படுத்தப்பட்டது பூமி .அவனது பிரார்த்தனைகள் கேட்டு கேட்டு செவிடாகி போனது வானுலகம்.ghhnvnvhnvhb v g

இவற்றுக்கெல்லாம் காரணம் அவனுடைய "நான்" என்பதற்கே ஒரு பொருள் விளங்காமல் போனதுதான். கட்டுக்குள் பொதிந்து கிடக்கிறோம் என்பது ஒரு குழந்தைக்கு தெரியாதது போலத்தான் அது .

மனிதன்" நான் " என்று சொல்லும் போது, தன்னை இரண்டாக வெட்டிப் பிளந்துவிடுகிறான். தனது பொதிக்கட்டை ஒரு துண்டாகவும், கடவுளின் மரணமில்லா சுயத்தை மற்றொரு துண்டாகவும் .. பிளக்க முடியாததை உண்மையில் மனிதனால் பிளக்க முடியுமா என்ன ? கடவுள் அதை தடை செய்திருக்கிறார். பிளக்க முடியாததை எந்த சக்தியாலும் பிளக்க முடியாது. மனிதனின் பக்குவம் இன்மையே அப்படி செய்யக் கற்பனை செய்கிறது

மனிதன் ஒரு குழந்தை. என்றும் அழியாத செல்வத்தை தனது விரோதியாக பாவித்து கொண்டு சண்டையிட கச்சை கட்டிக்கொண்டு, அதனுடன் போர் செய்து கொண்டிருக்கிறான் அவன்.

அவர்கள் "(பூமியில்) விஷமம் செய்து இரத்தம் சிந்தக்கூடிய (சந்ததிகளைப் பெறும்) அவரை அதில் (உன்னுடைய பிரதிநிதியாக) ஆக்குகிறாயா ? (குர்ஆன் 2: 30) என்று மலக்குமார்கள் கேட்டது இதைத்தான்

சமநிலையற்ற அந்த போரில் மனிதன் தன்னைத்தானே நார் நாராக கிழித்து கொள்கிறான். ரத்த ஆறு பெருக்குகிறான்.

கடவுள் , தந்தையும் தாயுமானவன். இதையெல்லாம் அவன் நேசத்தோடு பார்த்துக் கொண்டிருக்கிறான்.

மனிதன் தன்னைக் கிழித்துக் கொள்கிறானே தவிர, தன் திரையை கிழித்துக் கொள்ளவில்லை .ரத்தம் சிந்துகிறானே தவிர, இறைவனை மறைத்திருக்கும் நஞ்சை வழித்து எறியவில்லை.

மனிதனின் விதி அப்படி இருக்கிறது. போரிடுவான் . ரத்தம் சிந்துவான், மயங்கி வீழ்வான் ,முடிவில் விழித்தெழுந்து, பிளவுபட்ட தனது " நானை " எடுத்துத் தனது சதையால் மூடி தைத்துக் கொள்வான். தனது இரத்தத்தால் அதை முத்திரை விடுவான்.

அதனால், " துறவிகளே..! உங்களை எச்சரிக்கிறேன். அறிவார்ந்த எச்சரிக்கை இது. ' நான் ' என்பதை கவனத்தோடு பயன்படுத்துங்கள்.

**மிர்தாதின் புத்தகம் 10**

( நீங்கள் என்றால் நீங்கள் மட்டுமல்ல )




உங்களது எலும்பும் தசையும் , உங்களது எலும்பும் தசையும் மட்டுமல்ல; எண்ணற்ற கைகள் உங்கள் உடலுக்குள் புகுந்து உள்ளன. மண்ணிலும் வானத்திலும் முங்கி எழுந்த கைகள் அவை. அவற்றால் உருவான உங்கள் எலும்பும் தசையும் திரும்பவும் மண்ணுக்கும் வானத்துக்கும் மேலே போய்ச் சேருகின்றன.
உங்கள் கண்களில் தோன்றும் ஒளி உங்களது ஒளி மட்டுமல்ல. கதிரொளியே உங்களுடன் பகிர்ந்து கொள்ளும் அனைவரும் ஒளியும் அதுதான்.

எனக்கு நீங்கள் பார்ப்பது என்னுடைய ஒளியைத்தான் .உங்கள் கண்களில் நான் பார்ப்பதும் என் ஒளியைத்தான். நான் இருளாக இருந்தால் ,என்னை காணும் உங்கள் கண்களும் இருளடைந்துவிடும்.
உங்கள் நெஞ்சிலிருந்து எழும் மூச்சு, உங்கள் மூச்சு மட்டுமல்ல. எல்லோருடைய மூச்சும் அதுதான். உங்களுக்குள் உலவும் மூச்சு ஆதாம் விட்ட மூச்சும் கூடத்தான் அல்லவா ?
உங்கள் இதயத்தின் துடிப்பில், ஆதாமின் இதயத்துடிப்பும் ஒலிக்கவில்லையா ?
உங்கள் எண்ணங்கள் எல்லாம் உங்கள் எண்ணங்கள் மட்டுமல்ல. கடலளவு பொது சிந்தனைகள், அவற்றை தமது என்று உரிமை பாராட்டும் . அதனால், சிந்திக்கும் எல்லா உயிர்களும் , அந்த கடலை உங்களுடன் பகிர்ந்து கொள்கின்றன.

உங்கள் கனவுகள், உங்களுடையவை மட்டுமல்ல. உங்கள் கனவுகளில் பிரபஞ்சமே கனவு காண்கின்றது.
உங்கள் வீடு, உங்கள் வீடு மட்டுமன்று . அது உங்கள் விருந்தினர், புழுப் பூச்சி, எலி , பூனை போன்றவையெல்லாம் பகிர்ந்து கொள்ளும் பொது வீடு.
அதனால் வேலிகள் கட்டாதீர்கள். எச்சரிக்கை ! உங்கள் வேலி ஓர் ஏமாற்று. உண்மையைப் புறந்தள்ளும் சூழ்ச்சி. வேலிக்குள் நீங்கள் உங்களைப் பார்க்கப் பின் திரும்பி நின்றால், உங்கள் எதிரில் நிற்பது மரணம் ! அது சூழ்ச்சியின் மற்றொரு பெயர்.

துறவிகளே ! மனிதன் கடவுளிலிருந்து பிரிக்க முடியாதவன். அந்தச் சொல்லால் உருவாக்கப்பட்ட சகல உயிர்களிலிருந்தும், தோழர்களிலிருந்தும் பிரிக்கப்பட முடியாதவன்.
அந்தச் சொல், " கடல் " நீங்கள் மேகம் . தன்னிடமுள்ளதை வழங்காத மேகம் ஒரு மேகம்தானா ? தன்னுடைய வடிவையும், அடையாளத்தையும் இழந்துவிடாதபடி என்றும் அலையும் மேகம் முட்டாள்தனமானது. ஏமாற்றமும் தற்பெருமையும் அன்றி அது வேறெதைப் பெற்றுவிட முடியும் ?
அது தன்னைத் தானே கரைத்துக்கொண்டு காணாமல் போவதுதான் அதன் வாழ்க்கையாக இருக்க முடியும். அது மேக வடிவை இழந்து செத்துப் போய்க் கடலில் கரைந்து, கடலையே தனது அடையாளமாகக் காணாத வரை, அது மேகமே அன்று.

கடவுளைச் சுமக்கும் மேகமே மனிதன் ! தான் கரைந்து காணாமற் போகாமல், அவன் தன்னைக் கண்டு கொள்ள முடியாது. ஆ ! அப்படி காணாமற் போவதில்தான் என்ன பரவசம் !
அந்தச் சொல்லில் கரைந்து காணாமற் போகாதவரை நீங்கள்தாம் அந்தச் சொல் . அந்த " நான் " என்பதை உங்களால் உணர்ந்து கொள்ள முடியாது. ஆ ! அப்படி இழந்து போவதுதான் எத்தனை பரவசம் !

## மிர்தாதின் புத்தகம் 11

( அன்பு )

ஒரே ஒரு மனிதனை நீங்கள் பகையாக நினைக்கும் வரை உங்களுக்கு நண்பர்களே இல்லை. பகைக்கு இடம் கொடுக்கும் இதயத்தில் நட்புக்கு ஏது இடம் ?
உங்கள் இதயத்தில் வெறுப்பிருக்கும் வரை, உங்களால் அன்பின் ஆனந்தத்தை உணர முடியாது. எல்லாமே வாழ்வின் சாரம்தான், ஆனால் ஒரு சின்ன புழு மட்டுமே குடைகிறது - என்றால் அந்த சின்ன புழு உங்கள் வாழ்க்கையை கசப்பாகிவிடும்.
எதை நேசித்தாலும், யாரை நேசித்தாலும் அது , உண்மையில் உங்களையே நீங்கள் நேசிப்பது ஆகும்.
வெறுப்பும் அப்படித்தான். நீங்கள் எதை, அல்லது யாரை வெறுத்தாலும், அது உண்மையில் உங்களையே நீங்கள் வெறுத்து கொள்வதுதான்.
நேசமும் , வெறுப்பும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போல. நீங்கள் உங்களது மனசாட்சிக்கு நேர்மையாக நடந்து கொண்டால், வெறுத்தவர்களையும் உங்களால் நேசிக்க முடியும்.
நீங்கள் அன்பு செலுத்துவதற்கு முன்னால் வெறுத்தவர்களையும், உங்களை நேசித்தவர்களையும் உங்களால் நேசிக்க முடியும்.
அன்பு ஒரு தர்மமன்று. அன்பு தவிர்க்க முடியாத ஒன்று. உணவையும், நீரையும் விட ; ஒளியையும் ,காற்றையும் விடவும்தான்.
அன்பு செலுத்துவதற்காக யாரும் கர்வப்பட வேண்டாம். அன்பையே மூச்சுக் காற்றாக உள்வாங்கி வெளியிடுங்கள் ; இயல்பாக மூச்சு வாங்கி விடுவது போல, அந்த நினைவுகள் இல்லாமல்.

அன்பே யாரும் உயர்த்திப் பிடிக்கத் தேவையில்லை. புகழ்மொழி அதற்கு தேவையில்லை.
அன்பு , இதயத்தைத்தான் உயர்த்தும். அதற்கான தகுதி அதற்கு உண்டு .
அன்புக்குப் பரிசுகள் தேவையில்லை. அன்பே அன்பின் பரிசு, வெறுப்பிற்கு வெறுப்பே தண்டனை ஆவதுபோல.
அன்பில் கணக்குப் பார்க்கக் கூடாது. அன்பு மற்றவர் கணக்கை விட்டுவிட்டுத் தன் கணக்கைத் தானே பார்த்துக் கொள்ளும்.
அன்பு , கடன் வாங்கவோ , கடன் கொடுக்கவோ செய்யாது. அன்பு , வாங்குவதுமில்லை , விற்பதுமில்லை.
ஆனால், அன்பு கொடுக்கும்போது, முழுசாய் தன்னை கொடுத்து விடும் ; எடுக்கும்போது, முழுசாய் எடுத்துக்கொள்ளும் .
எடுப்பதுதான் அதற்கு கொடுப்பதாக இருக்கிறது. கொடுப்பதே அதற்கு எடுப்பதாக அமைகிறது .அதனால் இன்று போல் ,அது நாளையும் என்றென்றும் விளங்கும் .
அன்பு என்பது சொற்களில் வாழ்வதில்லை. அன்பை சொற்களால் விளக்க இயலாது.
நாம் செய்யும் செயல்களால்தான் விளக்கம் பெறுகிறது
"அன்பு ".

**மிர்தாதின் புத்தகம் 12**
( அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் )
ஆறு தன் நீரையெல்லாம் கடலில் கொட்டி தீர்த்துவிடப் பாய்வதுபோல, நீங்கள் உங்கள் அன்பை பொழிய வேண்டும். இதனால், என்றென்றும் அன்பாய், நிரப்பப்பட்டுக் கொண்டே இருப்பீர்கள்.
கடல் தந்த நீரை பாய்ச்சாமல் தனக்கே வைத்துக் கொள்ளும் பெரியகுளம். தேங்கிய ஒரு குட்டைதான் .
அன்பில், ' அதிகம்' ' குறைவு ' என்பதெல்லாம் கிடையாது. அதை அளந்து, தர மதிப்பீடு செய்ய ஆரம்பித்த உடனேயே, அது சட்டென நழுவி, கசந்த நினைவுகளைப் பின்னே விட்டுவிட்டு, ஓடிவிடுகிறது.
அன்பில், ' இப்போது ' 'அப்புறம் ' என்பதெல்லாம் கிடையாது 'இங்கே ' ' அங்கே ' என்பதும் கிடையாது. எல்லாப் பருவங்களும் அன்பின் பருவங்களே எல்லா இடங்களும் அன்பு வாழத்தகுந்த இடங்களே .
அன்பிற்கும் அடைக்குந்தாழ் உண்டா என்ன ? வேலிகளும் இல்லை ; அன்பு தடை படுத்தப்படுமானால் , அது அன்பே இல்லை .
அன்பு கண்ணற்றது என்று அடிக்கடி சொல்கிறீர்கள், நேசிப்பவன் குறை காணாது என்ற பொருளில் . அவ்வகை குருட்டுத் தனமே, பார்வையின் சிகரம் !
எதிலும் குறையே காணாதபடி எப்போதும் அப்படிக் குருடாக இருக்க உங்களால் முடியுமா ?
முடியாது. அன்பு தெளிவான கூர்மையான ஊடுருவும் பார்வை கொண்டது . அதனால்தான் , அது எந்த குறையையும் காண்பதில்லை .
அன்பு உங்கள் பார்வையை கழுவிவிடும்போது , உங்களது அன்பிற்குத் தகுதியற்ற எதையும் நீங்கள் பார்க்க மாட்டீர்கள். அன்பற்ற, குற்றமுள்ள கண்ணே, குறைகளைப் பரபரப்பாய் தேடிக்கொண்டிருக்கும் .
அன்பு ஒன்றிணைக்கும் . வெறுப்பு, பிரிக்கும் நீங்கள் பலிபீட சிகரம் என்று அழைக்கும் இந்த மாபெரும் பாறைப்பூமி, அன்பின் கரங்களால் பற்றிக் கொள்ளப் படாத இடம் நோக்கி, மேலே பறக்கப் போகிறது !
அழிந்து விடுவது போல் தோன்றும் உங்கள் உடல் கூட , பிரிந்து பிளந்துப்போவதை விரும்புவதில்லை. உங்கள் உடலில் ஒவ்வொரு ' செல் ' லிலும் சமமான பற்றுடன் ஒன்றுடன் ஒன்று இறுகப் பற்றிக்கொண்டுள்ளன.
அதனால், பூமியே நேசியுங்கள். உங்கள் மீது உங்களுக்கு அன்பிருக்குமானால், பூமியையும் அதன் சகல உயிர்களையும் நேசியுங்கள்; சுவர்க்கங்களையும் அதில் வாழ்பவர்களையும் நேசியுங்கள்.
நீங்கள் நேசிக்கப்பட்டு கொண்டே இருப்பீர்கள்.

**மிர்தாதின் புத்தகம் 13**
( உங்களது பிரார்த்தனை )



வேதனை கொண்டு கடவுளிடம் நீங்கள் முறையிட்டால் , அது உங்களையே நீங்கள் வேண்டிக் கொள்வதாக அமைகிறது.
ஈர்க்கும் ஆற்றலும், விலக்கும் ஆற்றலும் உங்களுக்குள்ளேயே இருக்கின்றன.
ஈர்க்கப்பட வேண்டியவையும் , விலக்கப்பட வேண்டியவையும் உங்களுக்குள்ளேயே இருக்கின்றன.
ஒன்றைப் பெறுவது என்பது , அதனால் ஆசீர்வதிக்கப்படுவதே ஆகும்.
பசி இருந்தால், உணவும் இருக்கும். உணவு இருந்தால், பசியும் இருக்கும். பசியின் வேதனை இருந்தால்தான் வயிறு நிறைவதனுடைய ஆசீர்வதிப்பின் மகிழ்ச்சியில் இருக்கும்.
ஆம் ! தேவையிலேயே தேவைக்கான வினியோகமும் இருக்கிறது.
பூட்டின் அத்தாட்சிதானே திறவுகோல் ? அதேபோல, பூட்டும் சாவியும் அத்தாட்சிதானே ? பூட்டும் சாவியும் கதவின் அத்தாட்சிகள் தாமே ?

சாவியை தொலைத்து விட்டோ, கைதவறி எங்கேயாவது மறுதியாய் வைத்துவிட்டோ ,அடிக்கடி சென்று கொல்லனை அவசரப்படுத்தாதீர்கள். அவன், ஏற்கனவே தன் பணியை முன்பே செய்து முடித்தவன். அதுவும் மிகச்சரியாகவும் செய்தவன். மறுபடியும் அதே வேலையை செய்யும்படி அவனை கேட்கக்கூடாது.
உங்கள் வேலையை நீங்கள் செய்யுங்கள், அவனை விட்டு விடுங்கள். அவனுக்கு வேறு வேலை இருக்கிறது.
உங்கள் நினைவில் குவிந்துள்ள குப்பை, கூளங்களையும், நாற்றத்தையும் அகற்றுங்கள், திறவுகோல் நிச்சயம் கிடைத்துவிடும்.

சொல்லுக்கு அடங்காத இறைவன் உன்னை வெளிப்படுத்தும்போது, அவன், உன்னில் தன்னையே வெளிப்படுத்திக் கொள்கிறான். அதனால், நீயும் சொல்லுக்கு அடங்காதவன் ஆகிவிடுகிறாய் !
அவன், தன்னில் ஒரு சிறு பகுதியை உனக்குள் வழங்குவதில்லை. அவன் பிளவுபடுத்த முடியாதவன். உங்கள் அனைவருக்குள்ளும், பிளவுப்படுத்தப்படாத, சொல்லுக்கு அடங்காத தனது பூரணத்தை அவன் தானமாக வழங்குகிறான்.
அவர்கள் தமது பல்வலி, வயிற்று வலிகளையும், வியாபார இழப்புகளையும், சண்டை சச்சரவு, பழிவாங்கல்களையும், உறங்கமற்ற இரவுகளையும் , புதைப்பதற்கான ஒரு புதை குழியாகவே கடவுளை கருதுகிறார்கள் !
மற்றவர்கள், கடவுளைத் தமது செல்வங்களின் கருவூலமாகக் கருதுகிறார்கள். அவர்கள் எந்த வேலையிலும் ஆசைப்பட்டு எடுக்கும் அணிகலன்கள் எல்லாம் பொன் முலாம் பூசப்பட்ட போலி அணிகளே.
மற்றும் ,சிலர் கடவுளை தனக்கு ஒரு கணக்குப் பிள்ளையாக கருதுகிறார்கள் .
அவர்களின் சொத்தும், அவர்களுக்கு வரவேண்டிய தொகை பற்றிய கணக்கும் அவரிடம் இல்லை.
அதற்கு பதிலாக, அவர்கள் பட்ட கடனை எல்லாம் அவர் வசூலித்துவிட்டு , அவர்கள் கணக்கில் நல்ல கணிசமான தொகை மிஞ்சிஇருப்பதையே அவர் காட்டுவார்.

கடவுளுக்கு ஏகப்பட்ட வேலைகள் இருப்பதாக பலர் கருதுகிறார்கள். அத்தனை வேலைகள் இருந்தாலும், அவரே அதைத்தனியே செய்து கொள்வார். அவருக்கு தார்க்குச்சி போட்டு விரட்ட வேண்டியதில்லை. நினைவுபடுத்த வேண்டியதும் இல்லை என்பதைச் சிலர் மட்டுமே அறிவார்கள்.

கதிரவனின் உதயம், மறைவு நேரங்களை நீங்கள் கடவுளுக்கு நினைவூட்டுகிறீர்களா என்ன ?
அதே அந்த வயதில் ஒரு தானியம் பூமியில் உயிர் பிடிக்கக் கடவுளுக்கு நினைவூட்ட வேண்டுமா என்ன ?
தூரத்து நட்சத்திரம் இடம்பெயரும் கணக்கை கடவுளுக்கு நினைவூட்ட வேண்டுமா என்ன ?
ஒரு சிட்டுக்குருவி தன் கூடுகட்டும் திறமை பெற அவருக்கு நினைவு படுத்த வேண்டுமா என்ன ?
இந்த எல்லையற்ற பிரபஞ்சத்தில் எண்ணற்ற பொருள்களை நிரப்ப அவருக்கு நினைவூட்ட வேண்டுமா என்ன ?
உங்களது அற்பத் தேவைகளுக்காக உங்கள் பலவீனமான சுயத்தை அவர் மீது ஏன் சுமத்துகிறார்கள் ?
அவரது பார்வை, சிட்டுக்குருவிகள், தானியங்கள், தூரத்து நட்சத்திரங்களை விடவா மோசமானது ?
மண்டியிட்டு இரு கரங்களையும் நீட்டி மற்றவர்கள் மனதுக்குள் என்ன இருக்குமோ என்று தவிப்பதை விட்டு, கிடைத்த பரிசுகளைப் பெற்றுக் கொண்டு, ஆரவாரமின்றி அவர்களைப் போல் நீங்கள் ஏன் உங்கள் காரியங்களைச் செய்து கொண்டே இருக்கக் கூடாது ?
அவர் உனக்குள் இல்லையா ? உனதான எல்லாவற்றையும் அவர் அறிந்தவரில்லையா ? உங்கள் அண்ணத்திற்கும், நாக்கிற்கும் இருக்கும் நெருக்கத்தை விட , அவரது செவி , உன் வாய்க்கு மிக அருகில் இருக்கவில்லையா ?
அவருடைய இறைத்தன்மையே அவருக்கு போதுமானது. ஆனால் அதன் விதையோ , அதன் சாவியோ , என்னவோ உங்களிடத்தில்தான் உள்ளது.
ர.ரா

**மிர்தாதின் புத்தகம் 14**
(கால வெளி)


பூமியின் மீது நடக்கும் நீங்கள், காலடி வைப்புகளாலும், தூர அளவுகளாலும் எவ்வாறு அளப்பீர்கள் ?
நீங்கள் மெல்ல நடந்தாலும், வேகமாக ஓடினாலும், பிரபஞ்சவெளியில் பூமி சுழலும்போது , உங்களையும், பூமிப் பிரதேசங்களையும் சுமந்துகொண்டு அது செல்லவில்லையா ?
உங்கள் நடை வேகம் பூமியின் வேகம்தானே ?
பூமியின் மீது உள்ள அனைத்துப் பொருட்களின் வேகமும் பூமியின் வேகம்தானே ?
நிதானம் வேகத்தின் தாய். வேகத்தை சுமந்து செல்வது நிதானம். கால இடங்களின் ஒவ்வொரு புள்ளியிலும், வேகமும், நிதானமும் பிரிக்க முடியாதபடி அமைந்துள்ளன.
வளர்ச்சியை வளர்ச்சி என்றும், அழிவை அழிவென்றும் , அவை ஒன்றுக்கொன்று எதிரானவை என்றும் , எப்படி நீங்கள் சொல்கிறீர்கள் ?
அழிவிலிருந்து அல்லாமல் வேறொன்றிலிருந்து ஏதாவது முளைத்தது உண்டா ? வளர்வது தவிர , வேறு ஏதாவது அழிவதுண்டா ?
நீங்கள் தொடர்ந்து அழிந்து கொண்டுதானே வளர்ந்து வருகிறீர்கள். தொடர்ந்து சிதைவதன் மூலம், நீங்கள் வளர்ந்துகொண்டே வரவில்லையா ?
இறந்து போனவர்கள், உயிர் வாழ்பவருக்கான அடிமண்தானே ?
உயிர் வாழ்பவர்கள், இறந்து போனவரின் தானியக்களஞ்சியம் தானே ?
வளர்ச்சி அழிவின் குழந்தை என்றால், அழிவு , வளர்ச்சியின் குழந்தை. வாழ்வு மரணத்தின் தாய் என்றால், மரணமும் வாழ்வின் தாய்தான். கால இடங்களின் ஒவ்வொரு புள்ளியிலும் அவை ஒன்றே.
சாவுக்கும் அழிவுக்கும் கவலைப்படுகிற உங்கள் முட்டாள்தனத்தை போன்றதுதான், வாழவும், வளரவும் நீங்கள் ஆனந்தப்படுவது.

புலன் உணர்வுகளால் அறியப்படும் எல்லா பொருட்களும் காலச்சக்கரத்தின் ஆரக் கால்களில் உள்ளன. ஆனால் காலவெளி தவிர, வேறெதையும் அவற்றால் அறிய முடிவதில்லை. அதனால் பொருட்கள் தொடர்ந்து தோன்றுவதும், மறைவதுமாக உள்ளன.
காலத்திலும், வெளியிலும், ஒரு புள்ளியில் ஒரு சமயம் மறைந்து போவது, மற்றொரு சமயம் மற்றொரு புள்ளியில் தோன்றிவிடுகிறது.

ஒன்றுக்கு பகலாக இருப்பது மற்றொன்றுக்கு இரவாக இருக்கிறது. இதெல்லாம் பார்ப்பவர் எங்கே, எப்போது பார்க்கிறார் என்பதை பொறுத்து அமைகிறது.
வாழ்வு , சாவு ஆகியவற்றின் பாதை ஒன்றுதான். காலச் சக்கரத்தின் வெளிவட்ட விழும்பில் வட்டத்தின் சுழற்சியில் , அது ஒரு முடிவிடத்தை அடைவதே இல்லை. அது எங்கும் தங்கி நிற்பதும் இல்லை. உலகிலுள்ள எல்லா இயக்கங்களும் சுழல் வட்ட இயக்கங்களே.
அப்படியானால் காலத்தின் மாயச் சுழற்சியிலிருந்து தப்புவதற்கு , மனிதனுக்கு வழியே இல்லையா ?
மனிதனால் அது முடியும் ஏனென்றால் , அவன், கடவுளின் புனித சுதந்திரத்தின் வாரிசு .
காலச் சக்கரம் சுழல்கிறது. ஆனால், அதன் அச்சுத் தண்டு என்றும் ஓய்வில் இருக்கிறது !
காலச் சக்கரத்தின் அச்சு தண்டுதான் கடவுள். கால இடங்களில் எல்லா பொருட்களும் அவனைச் சுற்றி சுழன்று கொண்டிருந்தாலும் , அவன், கால வெளி கடந்து அசையாமல் இருக்கிறான்.

எல்லாப் பொருள்களும் அவனுடைய ' சொல் 'லிலிருந்து புறப்பட்டவையாக இருந்தாலும் , அவன் 'சொல் ' அவனைப் போலவே கால வெளி கடந்து நிற்பது.
அச்சுத் தண்டில்தான் எல்லாம் அமைதியாக இருக்கின்றது. வெளி விளிம்பில் எல்லாமே சுழற்சிதான் குழப்பம்தான் .
நீங்கள் எங்கே இருக்கப் போகிறீர்கள் ?
நான் சொல்வது இதுதான் : விளிம்பிலிருந்து அச்சை நோக்கி நழுவுங்கள். சுழற்சியின் தலை சுற்றலிலிருந்து விடுபடுங்கள்.
காலம், உங்களைச் சுற்றிச் சுழலட்டும். அப்போது நீங்கள் காலத்தோடு சேர்ந்து சுழல மாட்டீர்கள்.

**மிர்தாதின் புத்தகம் 15**
( காலத்தோடு சங்கமித்தல் )



சீடர் பொன்னூன் : காலத்தில் வெளி விளிம்பிலிலிருந்து அச்சுத் தண்டை நோக்கி நாம் நழுவிச் சென்று விடும்போது, நமது சுயஅடையாளத்தை இழக்க வேண்டி நேருகிறதே ! எந்த மனிதனாவது தனது இருப்பை மறுப்பானா ?
**மிர்தாத்** : சுயத்தை மறுப்பதுதான் சுயத்தை நிலை நிறுத்துவது. மாறுதலுக்காக மரணமடைகிறவன், மாற்ற மில்லாப் பிறவியாகப் பிறப்பான். பெரும்பாலான மனிதர்கள் சாவதற்காகவே வாழ்கிறார்கள். வாழ்வதற்காகச் சாகிறவர்களே, மகிழ்ச்சியானவர்கள் .
**சீடர் பொன்னூன்** : இருந்தாலும் சுய அடையாளம் என்பது பொழுது மனிதனுக்கு பிரியமானது அல்லவா ? அவன் கடவுளுக்குள் ஆழ்ந்த பிறகு, எவ்வாறு தன் சுய அடையாளத்தை உணர்ந்துகொள்ள முடியும் ?
**மிர்தாத்** : கடலில் சங்கமித்து காணாமற் போய்விடுகிற ஒரு நீரோடை , கடலேயாகித் தன்னைக் கடலாகவே அடையாளம் காண்பது போலத்தான் அது. கடவுளில் தன் அடையாளத்தை இழந்து விடுகிற மனிதன், தன் நிழலை இழுந்துவிடுவான். பிறகு, நிழலில்லாத தன் வாழ்வின் சாரத்தை , அவன் கண்டு கொள்வான்.
**சீடர் மிக்காஸ்டர்** : காலத்தின் படைப்பான மனிதன், எவ்வாறு காலத்தின் பிடியில் இருந்து விடுபட முடியும் ?
**மிர்தாத்** : மரணம் உங்களை மரணத்திலிருந்து விடுவிப்பது போல, வாழ்வு உங்களை வாழ்விலிருந்து விடுவிப்பது போல, காலம், உங்களைக் காலத்தின் பிடியிலிருந்து விடுவித்து விடும்.
மனிதனுக்குள் இருக்கிற அனைத்தும், கொஞ்சம் கூடக் குறைவில்லாமல் ஏங்கிக் கொண்டே இருப்பதால், மாறுதலில் மனிதன் களைத்துப் போய் விடுகிறான். அவனது ஏக்கம், மாற்றத்தை விடப் பெரியது. அவன் அதற்குள் வீழ்ந்துவிடுகிறான்.
ஏக்கம் கொள்கிறவர்கள் மகிழ்ச்சி நிறைந்தவர்கள். அவர்கள் சுதந்திரத்தின் முற்றத்திற்கு வந்து சேர்ந்து விட்டதாக அர்த்தம். அப்படிப்பட்டவர்களையே நான் தேடுகிறேன். அப்படிப்பட்டவர்களுக்கே நான் உபதேசிக்கிறேன். உங்கள் ஏக்கங்களை எல்லாம் கேட்டாதால்தானே , நான் உங்களை தேர்ந்தெடுத்தேன் ?

காலத்தோடு சேர்ந்து சுற்றிக்கொண்டு அதற்குள்ளேயே தமது சுதந்திரத்தையும், சமாதானத்தையும் தேடி கொண்டிருப்பவரைக் கண்டு நான் பரிதாபப்படுகிறேன்.
மரணத்திற்காக அழுவதைவிட , பிறப்பிற்காக விரைவில் அவர்களில் சிலர் சிரிப்பார்கள் . காலியாவதற்காக அழுவதை விட , நிரப்பப்படுவதற்காக அவர்கள் விரைவில் சிரிப்பார்கள்.
புறாவைப் போர்க் கழுகுகளின் கைகளில் ஒப்படைப்பதை விட, அவர்கள் கூண்டில் அடைப்பார்கள் . எந்த அளவுக்கு தமக்கு எல்லாம் தெரியும் என்று நினைக்கிறார்களோ அந்த அளவுக்கு அவர்களுக்கு உண்மை தெரியாது .

முன்னேறுகிற அளவுக்குப் பின்வாங்கவும் செய்வார்கள். உயரும் அளவுக்கு, கீழே விழவும் செய்வார்கள் .
என் சொற்கள் அவர்களுக்கு, விளங்காதனவாகவும் , எரிச்சலூட்டும் முணுமுணுப்பாகவும் இருக்கும் .
பைத்தியக்கார விடுதியில் பிரார்த்தனை செய்வது போலத்தான் அது. பார்வையற்றவர்களுக்கு முன்னால் , விளக்கேற்றி வைப்பது போலதான் அது .
அவர்கள் சுதந்திரத்திற்காக ஏக்கம் கொள்ளாதவரை, என் சொற்களுக்கு, அவர்களின் செவிகள் திறப்பதில்லை.

**மிர்தாதின் புத்தகம் 16**
( இறந்த பிறகு எங்கே போவோம் ? )

சீடர் மிக்காஸ்டர்: குருவே நாம் இறந்த பிறகு எங்கே போவோம்?
மிர்தாத்: இப்போது நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் மிக்காஸ்டர் ?
மிக்காஸ்டர் : இந்த குகை வீட்டில்.
மிர்தாத் : உங்களை உட்கொள்ளும் அளவுக்கு இந்த குகை பெரியதானா ? உமது வீடு, இந்தப் பூமி மட்டும்தான் என்று நினைக்கிறீர்களா ?
கால இடங்களால் உமது உடல்கள் வரையறைக்குட்பட்டிருந்தாலும் , அவை காலத்திலும், வெளியிலுமுள்ள எல்லாப் பொருட்களாலும் ஈர்க்கப்படுகின்றன.
உமது எத்தனையோ அம்சங்கள் கதிரவனிலிருந்து வருபவை; கதிரவனால் வாழ்பவை . அதேபோலத்தான் ; வானப் பெருவெளியின் உலகங்களும் , தடமில்லாப் பாதைகளும் .
எல்லாப் பொருள்களும் மனிதனுடன் இணைக்கப்பட்டுள்ளன. அதேபோல், மனிதனும் அனைத்துடனும் இணைக்கப்பட்டிருக்கிறான். பிரபஞ்சம் முழுவதுமே ஒற்றை உடல்தான். ஒவ்வொரு துகள்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டவை. அதனால், நீங்களும் எல்லாவற்றுடனும் தொடர்பு கொண்டவர்.
வாழும்போது, தொடர்ந்து செத்துக் கொண்டே இருக்கிறீர்கள் ; அதேபோல் சாகும்போது , தொடர்ந்து வாழ்ந்து கொண்டே இருக்கிறீர்கள்.
இந்த உடலில் இல்லாமற் போனாலும், வேறொரு உடல் வடிவில் இருந்து கொண்டே இருப்பீர்கள். அப்படி ஓர் உடல் கடவுளில் சங்கமமாகும் வரை வாழ்வு தொடரும். அதாவது உமது மாற்றங்கள் எல்லாம் ஒரு முடிவுக்கு வரும் வரை.
சீடர் மிக்காஸ்டர் : ஒரு மாற்றத்திலிருந்து இன்னொரு மாற்றத்திற்கான பயணத்தின்போது, நாம் இந்தப் பூமிக்கு திரும்புவோமா ?
மிர்தாத் : காலத்தின் சட்டம் " திரும்பத்திரும்ப " என்பதுதான் ஒரு காலத்தில் நடந்தது மற்ற காலங்களில் மீண்டும் மீண்டும் நிகழ்ந்தே தீரும் மனிதன் விஷயத்தில் இடைவெளிகள் கூடலாம் அல்லது குறையலாம். அவனது திரும்பத்திரும்ப திரும்ப வருதலுக்கான மன உறுதியும், ஆசையும் பொறுத்தது. அதன் தீவிரத்தை பொருத்து அது அமையும்.
வாழ்வு என்று அறியப்படுவதன் வட்டச் சுழற்சியிலிருந்து மரணம் என்று அறியப்படுவதான வட்டச் சுழற்சிக்குள் நீங்கள் பிரவேசிக்கும்போது, பூமியின் மீது வைத்திருக்கும் தீராத தாகத்தையும், தணியாத பசியையும் எடுத்துச் செல்கிறீர்கள்.
பூமியின் மேல் வைத்த ஆசைகள் காரணமாக, பூமி மீண்டும் உண்மை தன் மார்பை நோக்கி இழுக்கிறது.
பூமி உமக்குப் பாலூட்டி வளர்க்கும் காலமே உங்களைப் பால் மறக்க விலக்கும். தொடரும் ஜனன மரணங்களில் இவையே தொடரும்.
ஒரு காலத்தில் உங்கள் சொந்த விருப்பப்படி, மன உறுதிப்படி, உங்களை நீங்களே மறந்துபோகும் வரை அது தொடரும்.
XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX
பில்ப்ரைகன் என்ற விஞ்ஞானி மறுபிறப்பு பற்றி ஆய்வு நூலில்..
நம் பிரபஞ்சம் முழுவதும் தனிமங்களின் அணுக்களால் ஆனது
மனித உயிர் என்பதே ஒரு மாலிக்யுல் நீண்ட கூட்டணுத் தொகுதிதான் அணுக்களுக்கு அழிவே இல்லை பிரபஞ்சம் ஆரம்பத்தில் எப்படி இருந்ததோ அப்படியேத்தான் இந்த நொடி வரை இருக்கிறது

மார்ட்டின் ரீஸ் (Martin Rees) சொன்னபடி ஒரு அணுவின் வாழ்நாள் குறைந்த பட்சம் பத்துக்குப் பின் 34 சைபர் போட்டு கொள்ளுங்கள் அத்தனை வருடங்கள் வாழ்நாள் கொண்டது
இந்த அணுக்கள் சதா பயணம் போய் கொண்டே இருக்கிறது
எவ்வாறு நீங்கள் ஒரு குறிப்பிட்ட ஊருக்குப் பயணம் போகிறீர்கள் ரிக் ஷா ,ரயில்,, டாக்ஸி , . . . . இப்படி எத்தனை வாகனங்களில் பயணம் செய்து நீங்கள் வர வேண்டிய எல்லை வந்ததும் அந்த வாகனங்களை விட்டு விடுகிறீர்கள் அத்துடன் அந்த வாகனங்கள் உங்கள் எல்லை இல்லை .
அதைப் போல உங்கள் தேகத்திலுள்ள ஜீவ அணுக்கள் எங்கெல்லாமோ பயணம் செய்து உங்களை அடைந்திருக்கிறது
நபிஸல் அவர்களின் பொன் மொழியை கொஞ்சம் ஆழ்ந்து கவனியுங்கள்
" என்னை ஒருவர் பின் ஒருவராக ஆதம் நபியுடைய கூட்டத்தார் அனைவரிலும் மேலான கூட்டத்தாரில் மாற்றப்பட்டு வந்தேன் எதுவரையெனில் இப்போதுள்ள கூட்டத்தாரில் நான் பிறக்க வைக்கப்பட்டேன் - அபூஹுரைரா ரலி நூல் : புகாரி, மிஷ்காத்
ர.ரா

**(இன்று (10.01.2022 ) இறையடி சேர்ந்த என் நண்பர் ஹாரிஸ் ஜமாலி பையாஜி அவர்களின் ஆன்மா இறைவனோடு சங்கமிக்க வேண்டி இப்பதிவு )**

**ஹாரிஸ் ஜமாலி பையாஜி**

" ஹாரிஸ் ஜமாலி "இந்தப் பெயர் முகநூல் நண்பர்களுக்கு மிகவும் பிடித்தப் பெயர் . குர்ஆன் வசன விளக்கமாகட்டும், பொதுக் கருத்தாகட்டும் , ஏன் அரசியலைச் சாடி எழுதுவதாகட்டும் ரொம்பவும்

**அருமையாக**

எழுதி நண்பர்களை யோசிக்க வைத்து விடுவார்.

நிறைய விஷயங்களை மிக சாதாரணமாகத்தான் எழுதுவார். ஆனால் அது நிறைய பின்னூட்டங்களையும், Share களையும் அள்ளி குவிக்கும்.

ரொம்பவும் சிரத்தையுடன் மாற்றுக் கொள்கைக்காரர்களுக்கு விடும் பதிவுகள் சின்னக் குத்தூசியாய் ஆங்காங்கே குத்தி எழுதுவார். அவர் சொல்லும் கருத்துக்களுக்கு மாற்று சிந்தனைக்காரர்கள் கூட மாற்றி யோசிக்க வைப்பார்.

இவர் நிறைய புத்தகங்கள் படிப்பவர் என்று இவரது பதிவுகள் மூலம் தெரிந்திருக்கும் . ஆலிம் என்றால் குர்ஆன் , ஹதீஸ் என்றுதானே எழுதுவார்கள் என்ற கட்டமைப்பை இலேகுவாக மாற்றி எத்தனையோ பொது அறிவையும் தொட்டு எழுதிக் காட்டுவார் .

2019 என நினைக்கிறேன். நாகூர் போய் விட்டு வரும் போது உங்களை சந்திக்க ஆயங்குடி வருவேன் என்று எப்போ சொன்னதை ஞாபகத்தில் வைத்து, நாகூர் ஜியாரத் புகைப்படத்தை நான் வெளியிட்டதும் , அந்த உடனே போன் செய்து , "அண்ணே ஆயங்குடி எப்போது வருவீங்க ? " என்றார்.

ஆனால் நேரடியாக சந்திக்க முடியாமல் போனது .ரொம்பவும் வருத்தமாக இருந்தது.

என் பதிவுகள் குறித்து அடிக்கடி மனம் நிறைந்து பாராட்டும் நல்ல பண்பாளர் ." குர்ஆன் விஞ்ஞானம் எழுதும் நீங்கள் ஏதாவது விஞ்ஞானப் புனைக்கதை எனக்காக எழுதுங்களேன் " என்றார்.

அப்போது சென்னை - மெரினா கடற்கரையில் பேரன் - பேத்திகளோடு நான் விளையாடிக் கொண்டிருந்த சமயம் , அந்த உடனே 20 நிமிடத்திற்குள் விஞ்ஞானப் புனைக்கதை எழுதி FB -ல் அவருக்காக பதிந்தேன்.

ஹாரிஸ் ஜமாலிக்காக எழுதிய விஞ்ஞான புனைக்கதை

**https://m.facebook.com/story.php?story_fbid=2213078175618192&id=100007480923921**

நல்ல நண்பர் , நல்ல பண்பாளர் , மார்க்கத்தை எளிதாக நண்பர்களிடம் எடுத்துச் சென்ற நல்ல மார்க்க அறிஞர். இவரை அல்லாஹ்தலா பொருந்தி கொண்டு , மேலான சுவனபதியை வழங்குவானாக ! ஆமீன்

ர.ரா

**மிர்தாதின் புத்தகம் 17**
( காலம் எதையும் மறப்பதில்லை )




' வெளி' யின் பட்டயத்தில் பொறிக்கப்பட்டுள்ள பிரபஞ்ச ஞாபகம்தான் காலம் என்பது . கால _ வெளியில் குழந்தைகளாகிய உங்களுக்கு காலம் விளங்காமல் இருப்பது எவ்வளவு வியப்பாக இருக்கிறது !
புலன்களுக்கு கட்டுப்பட்டவர்கள் நீங்கள் என்றாலும், பிறப்புக்கும், இறப்புக்கும் இடையில் உள்ள காலத்தின் சிலவற்றைதான் உங்களால் நினைவு கொள்ள முடிகிறது.
ஆனால் பிறப்புக்கு முன்னாலும் இறப்புக்குப் பின்னாலும் உள்ள தெளிவற்ற காலத்தை உங்களால் எந்த அளவுக்கு நினைவு கொள்ள முடியும் ? அதுவும் உங்கள் காலம்தானே ஏன் உங்களால் நினைவு கொள்ள முடியவில்லை ?
ஆனால் , காலம் எல்லாவற்றையும் நினைவில் வைத்திருக்கும் என்று நான் சொல்கிறேன். துல்லியமாக உங்கள் நினைவில் இருப்பதை மட்டுமல்ல, உங்கள் கவனத்தில் இல்லாததையும் அது நினைவில் வைத்திருக்கும்.
காலத்திடம் மறதி இல்லை. ஒரு சின்ன அசைவு, ஒரு மூச்சு, ஒரு சிறு எண்ணத்தைக் கூட அது ஒன்றும் விட்டுவிடாமல் நினைவு வைத்திருக்கும் .

காலத்தில் உள்ள சகல நினைவுகளும் ' வெளி' யில் உள்ள பொருட்களின் சவக்குழிக்குள் ஆழமாகப் புதைக்கப்பட்டிருக்கும்.
நீங்கள் மிதிக்கும் பூமி , உங்கள் மூச்சுக் காற்று , உங்கள் வீடு, உங்கள் வாழ்நாளின் பதிவுகளைத் மிகத் துல்லியமாக வெளிப்படுத்தக் கூடும்.
உங்கள் வாழ்நாளின் பிறப்பு , இறப்பு, நிகழ்வுகள் மற்றும் உங்கள் எதிர்காலங்களைப் பதிவு செய்து வைத்திருந்தாலும், அதை படிக்கும் ஆற்றலும், பொருளறியும் நுட்பமும் உங்களுக்கு இல்லவே இல்லை.
பிறப்பிலும், இறப்பிலும் பூமியின் மேலும் அதற்கு அப்பாலும், நீங்கள் எப்போதும் தனியாக இல்லை. உங்களின் பிறப்பு இறப்புகளில் பங்குகொள்ளும் உயிர்களும், பொருள்களின் உறவுகளும் எப்போதும் இருந்து கொண்டேதான் இருக்கிறது.
அவற்றின் பிறப்பு இறப்பிலும் உங்கள் உறவு நிலவுவது போலவே, அவற்றோடு நீங்கள் பங்கு கொள்வது போலவே, அவையும் உங்களோடு பங்குகொண்டுள்ளன. நீங்கள் அவற்றை நாடுவது போலவே, அவையும் உங்களை நாடுகின்றன.
மனிதனுக்கு எல்லாவற்றின் மேலும் விருப்பம் உண்டு. எல்லாமும் மனிதனை விரும்புகின்றன. இந்தப் பரிமாற்றம் தடையில்லாமல் நடந்து கொண்டே இருக்கிறது. மனிதனின் மோசமான மறதிதான் கவலையின் கணக்கில் உள்ளது
ஆனால், காலத்தின் ஞாபகசக்தி அப்படிப்பட்ட தன்று. மனிதன் தன் சக மனிதரோடு கொண்டுள்ள தொடர்பையும், பிரபஞ்சத்தின் மற்ற உயிர்களோடு கொண்டுள்ள தொடர்பையும், காலம் நினைவில் வைத்திருந்து, ஒவ்வொரு கண்ணிமைப் பொழுதிலும், அது கணக்கு தீர்த்துக் கொள்ளவே அவனை வற்புறுத்துகின்றது.

ஒவ்வொரு வாழ்வின் தொடர்ச்சியிலும், மரணங்களின் தொடர்ச்சியிலும் இது நிகழ்ந்து கொண்டே வருகிறது.
ஒரு வீடு, மின்னலைத் தன் பக்கம் ஈர்க்காமல், இடி அதன்மேல் விழுவதில்லை. இடி விழுவதற்கும், தனது அழிவிற்கும், அந்த வீடும் அதிகமான காரணமாகிவிடுகிறது.
ஒரு மாடு, குத்தப்படுகிறவன் அதைத்தன் பக்கம் குத்துவதற்கு ஈர்க்காதவரை, அது அவனை கொம்பால் குத்தாது. ரத்தம் சிந்தியதில், மாட்டைவிட, மனிதனின் குற்றமே அதிகம்.
கொலையுண்டவன் , கொலைகாரனின் கத்தியை ரத்தத்தால் நனைக்கிறான். மரண குத்துக்கு இருவருமே காரணமானவர்.

கொள்ளை கொடுத்தவன், கொள்ளையனின் செயலை வழி நடத்துகிறான். கொள்ளையில் இருவருக்குமே பங்கு உண்டு.

மனிதன் தனது குழப்பங்களைத் தானேதான் வரவழைத்துக் கொள்கிறான். அவற்றுக்கு அவன், எங்கே, எப்போது அழைப்பு விடுத்தான் என்பது அவன் மறந்துபோய் , .அவற்றை எதிர்க்கிறான். பாவம் மறதியான மனிதன்.
ஆனால் , காலம் எதையுமே மறப்பதில்லை. சரியான தருணத்தில், சரியான முகவரியில், அது தன் அழைப்பை விநியோகிக்கவே செய்கிறது .
அழைத்தவரை, காலம் விருந்தளிப்போர் வீட்டிற்கு வழிகாட்டவும் செய்கிறது. இதை மனிதன் அறிவானா ?
ர.ரா

**மிர்தாதின் புத்தகம் 18**
( வயோதிகம் )


முதுமை மனிதர்கள் தமது இதயமற்ற கவனக்குறைவால் அதைத் தேடிக் கொள்கிறார்கள்.
பிறந்த குழந்தைமேல் மிகுந்த கவனம் செலுத்துகிறார்கள். ஆனால் வயது முதிர்ந்தவரிடம் பாராமுகமாகவும் , வெறுப்பாகவும் நடந்துகொள்கிறார்கள். கருணை காட்டுவதில்லை.

பச்சைக்குழந்தை மனிதனாக வளர்வதைப் பொறுமையின்றிப் பார்த்திருப்பது போல , எப்போது சவக்குழி அவனை விழுங்கும் என்று , முதியோர் விஷயத்தில் பொறுமையின்றிக் காத்திருக்கிறார்கள்.
சின்ன குழந்தைகளும், மிக முதியவரும் திக்கற்றவர்கள். சிறியவர்களின் ஆதரவற்ற தன்மை, திணிக்கப்படும் அன்பினாலும் , தியாகத் தனமான உதவியாலும் ஏற்படுவது.

முதுமையில் ஆதரவற்ற தன்மை, அதிகாரம் செலுத்த முடிந்தும் கூட, முணுமுணுத்தபடி கிடைக்கும் சிலரின் உதவியால், ஏற்படுகிறது. சிறியவர்களை விட அதிகமான இரக்கத்திற்கு உரியவர்கள் முதியவர்கள்.
ஒரு காலத்தில் ,மெல்லிய கிசுகிசுப்பைக் கூடக் கேட்கும் ஆற்றல் பெற்றிருந்த நுட்பமான காதில் நுழைவதற்கு, இப்போது வார்த்தை மிக உரக்கச் சத்தம்போட வேண்டியிருக்கிறது.
ஒரு காலத்தில், துல்லியமாகப் பார்க்க முடிந்த கண்கள், இப்போது, கரும்புள்ளிகளும், நிழல்களும் நடனமாடும் நாட்டியசாலை ஆகிவிட்டது.

ஒரு காலத்தில் திடமாய், அழுத்தமாய்ப் பதிந்த, சிறகு முளைத்த கால்களும், வாழ்வையே வடிவமைத்த கைகளும், இன்று பொம்மைக் கை கால் ஆகிவிட்டன.
முழங்கால் பிசகிவிட்டது. தலை, பொம்மலாட்ட உருவத்தின் தலை போல் ஆகிவிட்டது.
ஒரு காலத்தில் அலுக்காமல், கழன்ற ஆட்டுக்கல், இப்போது தேய்ந்து குழி விழுந்துவிட்டது.
எழும்போது வியர்க்கிறது. விழுந்து விடுவோமோ என்ற பயத்தில் அமர்ந்தால், மறுபடியும் எழுவோமா என்ற பயம் பற்றிக் கொள்கிறது.

ஒரு முறை சாப்பிட்ட பிறகு, மறுபடியும் எப்போது சாப்பிடுவது, பருகுவது என்பதே பிரச்சனையாகி விடுகிறது.
உண்ணாமல் பருகாமல் இருந்தாலோ மரணம் முளைவிட ஆரம்பித்துவிடுகிறது .
என் தோழர்களை, முதியவர்களைப் பாருங்கள். அவர் பேச்சுக்குச் செவி கொடுங்கள். கை கொடுத்து உதவுங்கள்.
அவர்களது பலவீனத்தை அன்பால் அகற்றுங்கள். அவர் இளமை, மாறாமல் இருப்பதாக உணரும்படி உதவுங்கள்
எண்பது ஆண்டுகள் என்பது , காலப் பெருவெளியில், ஒரு கண் சிமிட்டும் நேரத்தை விடக் குறைவே. ஆனால், எண்பதாண்டு மனித வாழ்வு என்பது கண் சிமிட்டும் நேரத்தை விட அதிகம்தான் .
அவனது வாழ்வை அறுவடை செய்த அனைவருக்கும் அவனே உணவாகிறான். எல்லோராலும் அறுவடை செய்யப்படாத தனிமனித வாழ்வுதான் உண்டா ?

இந்தப் பூமியின் மேல் இதுவரை வாழ்ந்த எல்லா ஆண் பெண்களின் வாழ்வையும், நீங்கள் இந்த விநாடியில் அறுவடை செய்து கொண்டிருக்கவில்லையா ?

அவர்கள் பேச்சின் அறுவடை, அல்லாமல் உங்கள் பேச்சு வேறு என்ன ?
அவர்களின் சிந்தனைகள் அல்லாமல், உங்கள் சிந்தனைகள் வேறென்ன ?
உங்கள் உடைகளும், உறைவிடங்களும் ,உணவும், உங்கள் படைப்புகளும், விதிகளும், மரபுகளும், பழக்கவழக்கங்களும், அவர்கள் முன்பு வாழ்ந்து அனுபவித்து விட்டுப் போனவைதானே ?
ஒரு சமயத்தில் நீங்கள் ஒன்றை மட்டும் அறுவடை செய்யவில்லை. எல்லாச் சமயங்களிலும், எல்லாவற்றையும் நீங்கள் அறுவடை செய்கிறீர்கள் .
நீங்களே விதைப்பவர்கள், அறுவடையாளர்கள், வெட்டுபவர்கள், நீங்களே விளைநிலமும் , அறுவடைக் களமும் அறுவடை குறைவாக இருந்தால், விதைத்த விதையைப் பாருங்கள்.
அதாவது, மற்றவர் விதைக்க நீங்கள் கொடுத்த வித்துக்களைப் பாருங்கள் ! அறுவடை செய்கிறவரையும், அவரது அரிவாளையும் , விளை நிலத்தையும், களத்துமேட்டையும் கவனியுங்கள்.
எந்த முதியவரை நீங்கள் அறுவடை செய்து, பயனைக் களஞ்சியத்தில் சேர்த்தீர்களோ , அவர் உங்களது முக்கிய கவனத்திற்கு உள்ளாக வேண்டும்.
இன்னும் வளத்துடனும், அறுவடைக்குத் தயாராகவும் இருக்கிற முதியவரை, அவரால் இதுவரை பயனடைந்த முதியவரை, வெறுப்பும், கசப்பும் கொண்டு நடத்தினால், இனிமேல் கிடைக்கப்போகும் அறுவடை, உங்களது வாயில் கசக்கும் !
பயிரால் பயன் பெற்றுவிட்டு, விதைத்தவரையும், நிலத்தையும் சபிப்பது நல்லதல்ல .
என் தோழர்களை, எல்லா இன,நாட்டு மக்களிடமும் அன்பாக இருங்கள்.
கடவுளை நோக்கிய உங்களது பயணத்திற்கு அவர்களே உணவு. முதியவர்களிடம் மட்டும் அதிக அன்பு காட்டுங்கள். இரக்கமற்று நடந்து கொண்டால் , உங்கள் உணவும் ஊசிப் போகும். உங்கள் பயணத்தின் முடிவிடத்தை நீங்கள் அடையவே மாட்டீர்கள்.
ர.ரா

**மிர்தாதின் புத்தகம் 19**
(உள்ளுணர்வு )



உங்கள் பிறப்பையும், இறப்பையும் அதன் காலத்தையும் ,இடத்தையும், நேரத்தையும் நீங்களே தீர்மானிக்கிறீகள்.
தமது விருப்பம்போல் அலையும் உங்கள் நினைவுகள், துகள்களும் பிளவுகளும் கொண்டு குழப்பமாக இருப்பதற்கும் நீங்களே காரணம்
கால - வெளியில் விபத்துக்களே இல்லை. எல்லாம் சரியாகத்தான் திட்டமிட்டபடி வல்லமை கொண்ட விருப்பத்தால் இயக்கப்படுகின்றன. அது தவறு செய்வதும் இல்லை; எதையும் புறக்கணிப்பதும் இல்லை.
நீரூற்று, மழைத்துளிகளைச் சேமிக்கின்றது. நீரூற்றுகள் ஓடைகளை நோக்கி பெருகுகின்றன. நீரோடைகள் சிற்றாறுகளை நோக்கி, சிற்றாறுகள் பேராறுகளை நோக்கி, கடைசியில் கடலில் சங்கமம். கடல்கள் மாக்கடல்களில்.
அதனால், எல்லா உயிர்களும், உயிரற்றவையும், சிற்றாறுகள் போல் , வல்லமை கொண்ட விருப்பத்தில் பாய்ந்து கலக்கின்றன.

எல்லா பொருள்களுக்கும் விருப்பம் உண்டு என்று நான் உங்களுக்குச் சொல்கிறேன். உயிரற்றதாகவும், செவிடாகவும், ஊமையாகவும் தோன்றும் கல்லுக்கும் விருப்பம் உண்டு. இல்லையென்றால், அது எதையும் பாதிக்காது. எதுவும் அதையும் பாதிக்காது. அதன் விருப்பத்தின் பிரக்ஞை (உள்ளுணர்வு), மனிதனுக்கு உள்ளதைப் போலன்றி அளவில் மாறுபட்டிருந்தாலும், சாரம்சத்தில் மாற்றமே இல்லை
உங்களது வாழ்வில் ஏதாவது ஒரு நாளில், எந்த அளவு உள்ளுணர்வோடு இருக்கிறீர்கள் என்பதை உண்மையாக யாகச் சொல்ல முடியுமா ? மிகமிகச் சிறிய அளவில் தான் அது இருக்கும்.
உங்கள் புலனுணர்வுகளையும், எண்ணங்களையும் பதிவு செய்யும் முறையை நீங்கள் பெற்றிருந்தாலும், ஒரு நாள் உணர்வை, உங்கள் உள்ளுணர்வு உணர்வதில்லை. அப்படி இருக்க, ஒரு கல் எவ்வாறு தனது வாழ்நாள் விருப்பத்தை உணர்ந்திருக்கும் ?

வாழ்வதையும், இயங்குவதையும் உள்ளுணர்வின்றி நீங்கள் வாழும்போது, விருப்பம் பற்றிய உள்ளுணர்வும் உங்களுக்கு இல்லாமல் போய்விடுகிறது.
( உள்ளுணர்வு பற்றி .... உள்ளுணர்வு என்பது ஒரு நபரின் முன்நிபந்தனை அல்லது உள் குரல், அவனுக்கு என்ன செய்ய வேண்டும் என்று சொல்ல முடியும், அல்லது நேர்மாறாக - அதைச் செய்யக்கூடாது. சாக்ரடீஸ், ஜி. ஃபோர்டு, மொஸார்ட், எடிசன் மற்றும் பிற பெரிய மனிதர்கள் உள் குரலில் உரையாற்றினர்கள் )
ஆனால் உங்கள் உள்ளுணர்வற்ற தன்மையை , வல்லமை கொண்ட விருப்பம் உணர்ந்தே இருக்கிறது.
பிரபஞ்சத்தின் எல்லா படைப்புகளின் உள்ளுணர்வற்ற தன்னையையும் அது உணர்ந்தே இருக்கிறது.
வல்லமை கொண்ட விருப்பம், தனது வழக்கப்படி ஒவ்வொரு காலத்தின் நொடியிலும், வெளியின் புள்ளியிலும், தன்னை மறு விநியோகம் செய்து கொள்ளும்.
எல்லா மனிதர்கருக்கும், அவர்கள் விரும்பியவற்றை யெல்லாம், அது திருப்பிக் கொடுக்கும். அவர்கள் உணர்வின்றி விரும்பினாலும் சரி, உள்ளுணர்வுடன் விரும்பினாலும் சரி, அவற்றை கொஞ்சம் கூடக் குறையாமலும், அதிகரிக்காமலும் அது கொடுத்துவிடும்.

**மிர்தாதின் புத்தகம் 20**
( சர்வ வல்லமை முன் எல்லாம் சரியே )

பொருள்கள், மனிதருடனான உங்கள் உறவுகளை, அவற்றின் மீதான உங்கள் விருப்பங்களும் , உங்கள் மீதான அவற்றின் விருப்பங்களுமே , தீர்மானிக்கின்றன. அவற்றிற்கு உங்கள்மீது தோன்றும் விருப்பத்தையும், அவற்றின் மீது நீங்கள் கொள்ளும் விருப்பமே தீர்மானிக்கிறது !
( இதையே ஜலாலுத்தீன் ரூமி அவர்கள் : "தாகமுள்ளவன் தண்ணீரைத் தேடுகிறான். தண்ணீரும் தாகமுள்ளவனை தேடுகிறது )
முன்பு நான் உங்களுக்குச் சொன்னதையே இப்போதும் சொல்கிறேன் . உங்கள் மூச்சு, பேச்சு, உங்கள் விருப்பம், எண்ணம் , சொல், செயல் ஆகியவற்றை பற்றி கவனத்தோடு இருங்கள்.
உங்கள் மூச்சிலும் பேச்சிலும், விருப்பத்திலும், எண்ணத்திலும், சொல்லிலும் செயலிலும் உங்கள் விருப்பமே ஒளிந்திருக்கின்றது. உங்களுக்குள் மறைந்திருப்பது , வல்லமை கொண்ட விருப்பத்திற்கு வெளிப்பட்டுவிடுகிறது.
எந்த மனிதனின் விருப்பமும் அவனுக்கு மகிழ்ச்சி தருவதில்லை. மாறாக வேதனையே தருகிறது. வேதனையைக் காட்டிலும் அதிக வேதனை தருவது. மகிழ்ச்சியால் உண்டாகும் வேதனைதான் !
மனித விருப்பத்தின் எதுவும் , நல்லதல்ல; தீயதே. அதனால், உங்களுக்குத் தீமை நேராதவாறு பார்த்துக்கொள்ளுங்கள்.

எல்லா மனிதரின், எல்லா பொருட்களின் விருப்பமும் அன்புதான். அன்பின் மூலமாகவே உங்கள் திரைகள் விலகும் ; புரிதல் உங்களது இதயத்தில் உதயமாகும். இவ்வாறு, உங்கள் விருப்பம், சர்வ வல்லமை கொண்ட விருப்பத்தின் அற்புத இரகசியங்களின் ஞானத்தைப் பெறும்.
எல்லாவற்றின் உள்ளுணர்வுடன் நீங்கள் வளரும்வரை, அவற்றின் விருப்பங்கள் உமக்குள் இருப்பதையும், உமது விருப்பங்கள் அவற்றில் இருப்பதையும் உங்களால் உணர்ந்து கொள்ள முடியாது.
எல்லாவற்றிலும் உமது விருப்பம் இருப்பதையும், அவற்றின் விருப்பங்கள் உமக்குள் இருப்பதையும், நீங்கள் உணர்ந்திருக்கும் வரை , வல்லமை கொண்ட விருப்பத்தின் இரகசியங்களை உங்களால் அறிய முடியாது.
சர்வ வல்ல விருப்பத்தின் இரகசியங்களை நீங்கள் அறியும்வரை, அதற்கு எதிராக உமது விருப்பத்தைத் திருப்பவும் முடியாது. அப்படிச் செய்தால் இழப்பு உங்களுக்குத்தான்.

ஒவ்வொரு மோதலின் போதும், நீங்கள்தாம் காயம்பட்டுப் பித்தம் பிடித்து வெளியேற வேண்டிவரும் . மீண்டும் வஞ்சம் தீர்க்கும் மோதினால், புதிய காயங்களே ஏற்படும். நச்சுக்கோப்பை நிறைந்து வழியும்.
தோல்வியை தவிர்த்து வெற்றிகொள்ள, சர்வவல்ல விருப்பத்தை ஒப்புக் கொள்ளும்படி நான் வேண்டுகிறேன்.
அதன் மர்மப் பையிலிருந்து எது விழுந்தாலும் அதை , முணுமுணுப்பின்றி ஏற்றுக் கொள்ளுங்கள் ; அதுவும் நன்றியுடன் ஏற்றுக் கொள்ளுங்கள் ; நம்பிக்கையுடன் ஏற்றுக் கொள்ளுங்கள்; உங்களுக்கு சேர வேண்டிய நியாயமான பங்கு என்று அதை ஏற்றுக் கொள்ளுங்கள்; அவற்றின் மதிப்பையும் , அர்த்தத்தையும் புரிந்து கொள்ளும் விருப்பத்துடன் ஏற்றுக் கொள்ளுங்கள்.

உமது விருப்பத்தின் மறைந்திருக்கும் வழிகளை நீங்கள் புரிந்து கொள்ளும்போது, உங்களுக்கு சர்வ வல்லமை கொண்ட விருப்பம் எது என்பது புரிந்துவிடும்.
உங்களுக்கு எது தெரியாது என்பதை ஒப்புக் கொள்ளுங்கள். அது உங்களுக்கு, அறிதலுக்கு உதவி செய்யும். அதன் மீது சினம் கொண்டால் அது நீங்காப் புதிராக நிலைத்துவிடும் .
உமது விருப்பம், சர்வ வல்லமை கொண்ட விருப்பத்தின் தாதியாக இருக்கட்டும் ; புரிதல் , சர்வ வல்லமை கொண்ட விருப்பத்தை, உமது விருப்பத்தை பணியாளாகச் செய்யும்வரை !

**மிர்தாதின் புத்தகம் 21**
( மனிதன் பிரபஞ்சத்தின் குழந்தை )

நேசிப்பதாலும், நேசிக்கப்படுவதாலும். சோம்பல், கனவுகளும், சிந்தனைகளும் கூடுகட்டிக் குஞ்சு பொரிக்காத அளவுக்கு வாழ்வு அன்பால் இருக்கின்றல்லவா ?
மெய்யாகவே, மனிதன் பிரபஞ்சத்தின் குழந்தை. எல்லாப் பொருட்களும் அவன் மீது அதிக அன்புகாட்ட விரும்புகின்றன.
ஆனால், அத்தகைய வரம்பு மீறிய அன்பினால் கெட்டுப்போகாதவர்கள் சிலரை. அன்புக் காட்டும் கையைக் கடிக்காதவர்கள் மிகமிகச் சிலரே.
கெட்டுப் போகாதவர்களுக்கு, பாம்புக்கடியும் அன்பு முத்தமாகும். ஆனால் கெட்டுப்போனவர்களுக்கோ அன்பு முத்தமும் பாம்புக்கடியாகும்.
காற்றில் பாயும் உமது மூச்சு, நிச்சயமாய் யாராவது ஒருவர் நெஞ்சுக்குள் சென்று நிலைபெறும். யாருடைய நெஞ்சில் என்று கேட்காதீர்கள். அந்த மூச்சு தூயதாக இருக்கிறதா என்று மட்டும் பாருங்கள்.
உமது சொல். ஏதாவது ஒரு காதைக் கண்டு பிடித்து கொள்ளும். யாருடைய காதை என்று கேட்காதீர்கள். அந்தச் சொல், சுதந்திரத்தின் உண்மையான தூதுவனாக இருக்கிறதா என்று மட்டும் பாருங்கள்.
உமது மௌனச் சிந்தனை, நிச்சயமாக எவருடைய நாவையும் சென்றடையும், பேசுவதற்காக . எவருடைய நாவை என்று கேட்காதீர் . அன்பான புரிதலால் அது ஒளியேற்றப்பட்டு இருக்கிறதா என்று மட்டும் பாருங்கள்.
எந்த முயற்சியும் வீணாகிவிடும் என்று நினைக்காதீர்கள். சில விதைகள் பூமிக்குள் பல்லாண்டு புதைந்து கிடக்கும் அடுத்து வரும் சாதகமான பருவத்தில் சட்டென முளைத்துவிடும் .
எல்லா மனிதருக்குள்ளும், எல்லாப் பொருட்களுக்குள்ளும் உண்மையின் வித்து இருக்கிறது. உமது வேலை, விதைப்பதன்று. சரியான பருவத்தில் அது முளைவிடப் பக்குவம் செய்ய வேண்டுவதே உமது பணி.

**மிர்தாதின் புத்தகம் 22**
( முகமூடி மனிதன் )



கண்பார்வை அற்றவருக்கு மேலான அதிகாரம் கொடுத்தால், அவர்கள் பார்வையுள்ள அனைவர் கண்களையும் பிடிங்கி விடுவார்கள். அவர்களுக்கு பார்வை வரவேண்டும் என்று பாடுபடுபவர் கண்களைக் கூட பிடிங்கி விடுவார்கள் !
நீச்சல் தெரியாதவன் தண்ணீரில் மூழ்கி தத்தளிக்கும் போது, அவனைக் காப்பாற்ற நினைப்பவரையும், தண்ணீருக்குள் இழுத்து மூழ்கடித்து , அவரையும் கொன்று விடுவான் !
அடிமைக்கு ஒருநாள் அதிகாரம் கொடுத்துப் பாருங்கள். அவன் உலகத்தையே அடிமையாகிவிடுவான். அவனது கை, கால் விலங்குகள் தகர்த்து , அவனுக்கு விடுதலை அளித்தவனுக்குத்தான் முதலில் கை விலங்கு, கால் விலங்கு பூட்டுவான் !
எந்த வகையில் வந்ததாக இருந்தாலும் உலகின் அதிகாரம் என்பது கோலிதான். அது கச்சை வாரை இறுக்கிக் கட்டி, உடைவாளை உயர்த் தூக்கி , ஆரவாரமாக ஊர்வலம் போகும். தனது பொய்யான இதயத்தை யாரும் பார்த்துவிடக்கூடாது என்பதற்காக !
அதனுடைய ஆடும் அரியணை, துப்பாக்கிகள், வேல்கள் மீது நிறுவப்பட்டது. அதன் இதயம் நிறையத் தற்பெருமை. அது , தாயத்துக்களாலும், மாந்திரீக சின்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. வியப்புடன் பார்ப்பவர் முன், அதன் கேடுகெட்ட வறுமையே மறைப்பதற்காகவே இந்த அலங்காரங்கள்.
அநியாய அதிகாரம் செலுத்துகிறவன் அப்படித்தான் அந்தகனாகவும் , சபிக்கப்பட்டவனாகும் இருப்பான். அவன், தன் அதிகாரத்தை ஆதரிப்பவரையும், எதிர்ப்பவரையும் அழித்து ,கடைசியில் தன்னையே அழித்துக் கொள்வான்.

அவனுடைய அதிகார மோகம், நிரந்தரமாக அவனுக்குள் கொந்தளித்துக் கொண்டிருப்பதுதான். அதற்கு காரணம் அதிகாரம் கொண்டவர்கள், அதைத் தக்க வைத்துக் கொள்வதற்காக எப்போதும் போராடிக் கொண்டே இருப்பார்கள்.
மற்றவர்களோ, அதிகாரத்தை எப்படிப் பறிப்பது என்று போராடிக்கொண்டே இருப்பார்கள். கடவுள், ஒரு கட்டாகக் கட்டி வைக்கப்பட்டு விடுவதால், மனிதன் போர்க்களத்தில் நிர்க்கதியாய், அன்பற்று விடப்பட்டு, நசுக்கிச் சாவான்.
போரின் முகமூடியைக் கழற்றி, அதன் அருவருப்பான பேய் முகத்தை வெளிப்படுத்த எந்த வீரனாலும் முடியாது. போர், அந்த அளவுக்கு இரத்த வெறி கொண்டது.
துறவிகளே , நான் சொல்வதை நம்புங்கள். அதற்கு எதிராகக் கண் சிமிட்ட கூட எந்த அதிகாரத்தாலும் முடியாது. புனித புரிதல் என்னும் விலைமதிப்பற்ற ஓர் அதிகாரம் தவிர .
எந்த தியாகமும் புரிதலுக்குப் பெரிதன்று. ஒருமுறை அதை அடைந்துவிட்டால், காலம் உள்ளவரை அதை இறுகப்பற்றி இருக்கலாம்.
உலகத்தின் படைகள் எல்லாம் அடிபணிய தக்க, அதிகாரச் சொற்களை அது உனக்கு வழங்கும். உலகம் நினைத்துக் கூடப் பார்க்க முடியாததும், அனைத்துலக அதிகாரங்களைவிட அதிகம் ஆசீர்வதிக்கப்பட்டதுமான ஓர் அம்சம் அது. உமது செயல்கள் அனைத்தையும் ஆசீர்வதிக்கும் அது.

**மிர்தாதின் புத்தகம் 23**
( இதயம் கொண்டு, இதயத்துடன் போரிடுங்கள் )



**அரசன்** : போர் என்பது இயற்கையின் விதி என்றே எனக்குப் படுகிறது. எம் குலபெண்களுக்குக் கூட எதிரி நாட்டை வீழ்த்த வேண்டுமென வெறியால், யுத்தக் கோலம் பூண்டிருக்கிறார்கள்.
கடல் மீன்கள் கூட ஓயாமல் போராடிக் கொண்டே இருக்கின்றன. சிறிய மீனை, பெரிய மீன் சாப்பிட்டு கொண்டு இருக்கவில்லையா ? அதனால், நான் யாருக்கும் இரையாகி விட விரும்பவில்லை
**மிர்தாத்** : உமக்குப் போர் போல தோன்றுவது, இயற்கை, தன்னை வளர்த்துக்கொள்ள செய்துள்ள வழிமுறை. சின்னது பெரியதற்கு இரையாவது போலவே, பெரியதும் சிறியதற்கு இரையாகும் என்பது உமக்குத் தெரியாதா ? இயற்கையில் வலியவர் யார் ? எளியவர் யார் ?
இயற்கையே வலியது ; மற்ற எல்லாம் இயற்கையின் விதிக்கு அடிபணியும் எளியவை. அவை மௌனமாக, மரண நீரோட்டத்தில் மிதந்து செல்கின்றவை .

போர் செய்யத்தான் போகிறீர்களா ? அப்படியானால் உமது இதயம் கொண்டு, இதயத்துடன் போரிடுங்கள். உமது இதயத்தின் ஆயுதங்களான நம்பிக்கை, அச்சம் ,வீணாசை ஆகியவற்றை பறித்து வீசுங்கள். இந்த உலகை இறுகிய எழுதுகோலாக மாற்றுபவை இவை.
இந்த ஆயுதங்கள் பறிக்கப்பட்டபின் பிரபஞ்சைத்தை விட விசாலமானதாக அது இருக்கும். அந்தச் சுதந்திரம் அந்தச் சுதந்திரத்தில், நீங்கள் விருப்பம்போல் உலாவரலாம். எதனாலும் உங்களை தடுக்க முடியாது.
இது மட்டுமே தகுதி படைத்தப் போர். இந்த இதயப் போரில் ஈடுபட்டால், வேறு போர்களுக்கு நேரமே இருக்காது. எந்தவகை மிருகத்தனமான உணர்வுகளும், மோசடி தந்திரங்களும் உமது மனதை தடுமாறச் செய்யாது .
உமது வலிமையும் வற்றிப் போகாது .உங்களையே நீங்கள் அந்தப் போரில் இழந்துவிடப் போவதால், அது ஒரு புனிதப் போர். இதில் வெல்வது என்பது என்றும் அழியாப் புகழ் பெறுவதுதான். மற்ற உலகப் போரில் பெறும் வெற்றி, அது படுதோல்வியாகும்.
மனிதர்களிடையே போர்களில் பயங்கரம் அதுதான். அதில் வென்றவரும்,தோற்றவரும் தோல்வியை பெறுகிறார்கள்.

உலகச் சமாதானம் வேண்டுமா ? எழுதப்பட்ட உடன்படிக்கை பத்திரங்களில் அதைத் தேடாதீர்கள். செதுக்கப்பட்ட கல்வெட்டுகளிலும் அதை தேடாதீர்கள்.
'சமாதானம் ' என்று எளிதாக எழுதுகிற எழுது கோல், ' போர் ' என்பதை இன்னும் எளிதாக எழுதிவிடும்.' நாம் சமாதானமாக வாழ்வோம்' என்று செதுக்கும் சிற்றுளி, ' நாம் போராடுவோம்' என்றும் எளிதாக செதுக்கிவிடும்.

இவற்றை எழுதும் எழுதுகோலும், தாளும் , சிற்றுளியும் பாறையும் எளிதில் துருப்பிடிக்கும் ; சிதையும் ; அழியும்.
புனிதமான புரிதலால் முற்றுகை இடப்படும் இதயம் அப்படிப்பட்டதன்று.
ஒரு முறை, புரிதல், திரை நீக்கப் பெற்றுவிட்டால், அப்புறம் வெற்றிதான். சமாதானம்தான் என்றென்றும் புரிதல் கொண்ட இதயம் என்றென்றும் சாந்தியுடன் இருக்கும். போர் வெறி கொண்ட உலகில் நடுவிலும் கூட .
அறியாமை கொண்ட இதயம் பிளவுப்பட்டிருக்கும். இந்த இருமை இதயமே உலகைப் பிளவுபடச் செய்கிறது.
போரையும் பூசலையும் வளர்ப்பதும் இவ்வகை இதயமே.
புரிந்துகொண்ட இதயம், ஒற்றை இதயம். ஒற்றை இதயம் ஓர்வுலகை உருவாக்குகிறது. ஒன்றுபட்ட உலகில் சமாதானம் நிலவும். போர் மூளுவதற்கு , இதயம் பிளவுப்பட்டிருக்க வேண்டும்.
அதனால்தான் ஓரிதயம் பெற, உமது இதயத்தின் மீது போர்தொடுக்க, ஆலோசனை கூறுகிறேன். இதனால் பெறும் வெற்றி, என்றும் அழியாத சமாதானமே .
அரசே, ஒவ்வொரு பாறையும் உமது அரியணையாகவும், ஒவ்வொரு குகையும் உமது கோட்டையாகவும் உங்களால் கருதமுடியுமானால் , கதிரவனே உமது அரியணையாகிவிடும் ;
விண்மீன் தொகுப்பெல்லாம் உமது கோட்டைகள் ஆகிவிடும்.

ஒரு வெண் சாமந்திப் பூ உமது மார்பில் தொங்கும் பதக்கமாகுமானால், ஒரு புழு, உமக்கு ஆசிரியன் ஆகிவிடுமானால், வானத்து நட்சத்திரங்கள் மகிழ்ச்சியோடு வந்து பதக்கங்களாய் உமது மார்பில் பதியும் !
இந்த உலகமே உங்கள் பேச்சு மேடை ஆகிவிடும் அப்போது நீங்கள் உமது இதயத்தை ஆள்வீர்கள். அப்புறம் உமது உடலை யார் ஆண்டால் என்ன ? பிரபஞ்சம் எல்லாம் உமதாகிவிடுகிறபோது, இந்த பூமியின் எந்தப் பகுதியை யார் ஆண்டால் என்ன ?

**மிர்தாதின் புத்தகம் 24**
( முதல் பாவம் )



பாவத்தைப் பற்றி உங்களுக்குச் சொல்லி இருக்கிறார்கள் மனிதன் எவ்வாறு பாவியானான் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.
மனிதன் கடவுளின் வடிவம்தான் என்றால், பாவத்திற்கு மூல காரணம் கடவுள் தானே இருக்க முடியும் என்று நீங்கள் கொஞ்சம் கூட மரியாதை இல்லாமல் சொல்லி விடுவீர்கள்.
இறைவனிடம் பாவம் இல்லை. மெழுகுவர்த்திக்குத் தன் ஒளியைக் கொடுக்கும் கதிரவன் பாவி என்றால், இறைவனும் பாவிதான் .

மனிதனும் பாவி அல்லன். கதிரவனிலிருந்து விலகி நின்று ஒளிரும் மெழுகுவர்த்தி , எரிந்தபின் தன்னிடமே சென்று ஒதுங்கி விடுவது பாவம் என்றால் மனிதனும் பாவியே.
இறைவனின் சட்டத்திற்கு அடிபணியாததால், மனிதன் பாவியாகிவிடவில்லை . சட்டம் பற்றிய தனது அறியாமையை மூடி மறைத்ததே அவன் செய்த பாவம் .
கடவுளின் மார்பிலிருந்து புத்தம் புதியதாய் பிறந்த மனிதன் - எவ்வாறு செயலற்று, அசைவின்றி படைப்பாற்றல் இன்றி கிடந்தான் என்பதை நீங்கள் படித்ததில்லையா ?

சகல தெய்வாம்சங்களுடன் அவன் பிறந்திருந்தும், ஒன்றுமறியாத பச்சைக் குழந்தையாய், உழைப்பின்றி, தனது எல்லையற்ற ஆற்றல்களையும், திறமைகளையும் உணராதவனாய்க் கிடந்தான்.
ஒரு தனி விதை. கண்ணாடிச் சீசாவுக்குள் மூடிவைக்கப்பட்ட ஓர் ஆல் விதை போலத்தான், ஆதிமனிதன், ஏதேன் தோட்டத்தில் இருந்தான். அது அந்தச் சீசாவுக்குள் ஒரு விதையாகத்தான் இருக்குமே தவிர , இணக்கமான மண்ணில் முளைவிட்டுப் பிளந்து ஒளியேற்றி முளைக்காது.
ஒரு செடியாகி முளைத்து வளர, மனிதனுக்கு இணக்கமான மண் பூமி கிடைக்கவில்லை.

உறவு கொண்டவர்கள் முகத்தில் அவன் முகம் பிரதிபலிக்கவே இல்லை. எந்த மனிதனின் செவிகளிலும் அவன் குரல் கேட்கவே இல்லை. அவனது மனிதக் குரல் எந்த மனிதரின் தொண்டையிலும் எதிரொலிக்கவே இல்லை.
.
அவனது இதயம் தன்னந்தனியாகவே துடித்துக் கொண்டிருந்தது.
உலகின் இயக்கத்தில் இருந்து வெட்டி எறியப்பட்டு, அவன் தனியே தன்னந்தனியே உலகில் உலவிக் கொண்டிருந்தான். அவன் தனக்கே அந்நியனாகி போனான். அவனுக்கு சொந்தப் பணியும் இருக்கவில்லை. பின்பற்றிச் செல்ல வழியும் இருக்கவில்லை.
ஏதேன் தோட்டம் அவனுக்கு ஒரு சௌகரியமான குழந்தைத் தொட்டிலில் ஆகிப்போனது. அமைதியான , ஆனந்தமான இடமாகி விட்டது. செயற்கையாக குஞ்சு பொரிக்கும் இயந்திரம் ஆகிவிட்டது.
நல்லதும் கெட்டதுமான ஞான மரமும், வாழ்க்கையை மரமும் அவனது கைக்கெட்டும் தூரத்திலேயே இருந்தன என்றாலும், அவற்றின் கனி பறிக்க அவனது கை நீளவில்லை.

அவனது சுவையுணர்வும் , விருப்பங்களும் ,ஆசைகளும், அவனது முழு வாழ்வும், எண்ணங்களும் அவளுக்குள்ளேயே சுற்றிப் பொதியப்பட்டு, மூடப்பட்டுக் கிடந்தன.
மெல்லத்திறந்து வெளிவரக் காத்திருந்தபடி அவன், தானே தனக்கு உதவும் நண்பனாக இருந்தான். தனது பொதியவிழ்க்கும் கை அவனது கையாகவே இருந்தது.
வளமும், ஆற்றலும், புனிதமும் மூடிக் கிடந்த அவனை வெளிப்படுத்தக்கூடிய உதவும் கரம் எங்கே இருந்து வரும் ? இது தான் முக்கிய பிரச்சினை .

ஏவாள், புதிய மண்ணும் புதிய மூச்சும் அல்லள். ஆதாமின் உடலின் மூச்சும்தான் அவள். அவனது எலும்பின் எலும்பாகவும், சதையின் சதையாகவும் தோன்றியவள்தான் அவள் .
அங்கே தோன்றிய ஒரு புதிய உயிர் அல்லள் அவள். ஆதாமின் இரட்டைப் பிறவி அவள் -ஆண் ஆதாமும் பெண் ஆதாமும்.
தன்னந்தனியான அவனுக்கு , தன்னை எதிரொளிக்கும் ஒருமுகம் தேவைப்பட்டது. அவனது பெயர் எதிரொலிக்கும் வேறு மனிதர் இல்லாததால், அவனது தனிக்குரல் மட்டுமே ஏதேன் பள்ளத்தாக்குகளில் எதிரொலித்துக் கொண்டிருந்தது.
அவனது ஏகாந்த இதயத்துடிப்பு அவனது நெஞ்சுக்குள்ளேயே ஒடுங்கிப் போய்விட ,அதன் எதிரொலியைக் கேட்க , ஒரு தோழமை இதயத்திற்காக ,அவனது இதயம் தவித்தது.
தன்னுணர்வு அற்றிருந்த ஒருமை, இருமை கொண்டு, உராய்விலும் ,எதிர்அம்சத்திலும் தனது ஒருமையை உணருகிறது.
ஆதிமனிதன் இருமை நிலை அடைந்ததும் செய்த முதற் காரியம் என்ன ? நன்மை - தீமை மரத்தின் அறிவுக்கனியை உண்டதுதான் ! அதன் மூலம், இந்த உலகை, தன்னைப் போலவே இருமை கொண்டதாய் அவன் ஆக்கிக் கொண்டான்.
( மனிதனின் ஒருமை பண்பு பாதித்து விடக்கூடாது என்பதற்குத்தானோ என்னவோ ஆணின் விலா எலும்பிலிருந்து அவனின் துணையை அவனிலிருந்தே அவனுக்காகப் படைத்தான் போலும் )
அதன் பிறகு, எந்த பொருளும் முன்பு காணப்படுவது போல களங்கமற்றதாய், இயல்பானதாய் இருக்கவில்லை. ஒன்று, அவை நல்லவனாய் ஆயின அல்லது தீயவையாய் ஆயின; பயனுள்ளதாய் அல்லது தீங்கு செய்பவனாய் இனியவனாய் அல்லது கசந்தவாய் ஆயின .
எல்லாமே எதிரெதிர் முகாம்களாய்ப் பிரித்து காணப்பட்டன. இது முதல் பாவத்தின் ஆரம்பமாகும் அதற்குமுன் எல்லாமே ஒன்றாய் இருந்தன. ஒரே பண்பு கொண்டவையாய் இருந்தன. இப்படி பிரிந்து பிரிந்து நேர் எதிராய் ஆயின. இந்த இருமை மனிதனுக்கு ஆச்சரியமாகவும், பயமாகவும் இருந்தன.

**மிர்தாதின் புத்தகம் 25**
( மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன் )




அசைவற்ற இந்த இரவுப்பொழுதில், இரவின் பாடலை நீங்கள் செவிமடுக்க வேண்டும் என்று மிர்தாதிய நான் விரும்புகிறேன். இரவின் சேர்ந்திசைப் பாடலுக்குச் செவி கொடுங்கள்.
மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன்.
இறந்த காலத்தின் இருண்ட பிளவுகளிலிருந்தும், எதிர்காலத்தின் ஒளிமயமான கோட்டைகளிலிருந்தும், சொர்க்கத்தின் சிகரங்களிலிருந்தும், பூமியின் வயிறுகளிலிருந்தும் , இரவின் குரல்கள் பீறிட்டுப் பொங்கி பிரவகித்து பிரபஞ்சவெளியின் தொலைதூர மூலை முடுக்குகள் நோக்கிப் பாய்கின்றன.
மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன்.

ஆற்றல்மிக்க அலைகளோடு சேர்ந்து, சுழன்று, உமது காதுகளை அடைந்து வட்டமிடுகின்றன. உமது செவிகளின் பாரத்தை இறக்கி வைத்து விடுங்கள். அப்போதுதான் அவற்றை நீங்கள் நன்றாக கேட்க முடியும்.
பரபரப்பான பகற்பொழுது இரவின் பாடலைத் துடைத்தெறிந்து விடுகிறது, அலட்சியமாக.
மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன்.
ஆனால் அவசரமில்லாத இரவுப்பொழுது, அற்புதத் திறமையுடன் அதைப்பாதுகாத்து வைத்துவிடுகிறது. நிலவும், விண்மீன்களும் பகற்பொழுது ஒளியிழந்து விடுவதில்லையா ? சத்தம் சந்தடிக் குழப்பங்களில் பகல் உள்ளே மூழ்கிவிடும் போது , இரவு வந்து, அளவான பரவசத்துடன், வெளிய பாடுகிறது.
மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன்.

தாவரங்களின் கனவுகள் கூட, இரவின் சேர்ந்திசைப் பாடலில் பொங்கி வெளிப்படுகின்றன. இரவின் இதயத்துடிப்பிற்குச் செவி கொடுங்கள். அந்த துடிப்பிற்குள்தான் வெற்றியாளரின் இதயம் இருக்கிறது.
மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன்.
இரவுக்கும், சுடரும் விண்மீன்களுக்கும் ,தூசி தும்புக்கும், சிந்த என்னிடம் கண்ணீர் இருக்குமானால், சிலுசிலுக்கும் இந்த சிற்றருவிக்கும் , பாடும் வெட்டுக்கிளிக்கும், காற்றில் ஆன்ம நறுமணம் பரப்பும் ஊதாப்பூவுக்கும்,
ஓடும் ஒவ்வொரு காற்றுக்கும், ஒவ்வொரு மலைக்கும், பள்ளத்தாக்கும், ஒவ்வொரு மரத்திற்கும், புல்லின் இதழுக்கும் அந்த இரவின் அமைதியும், அழகும் பெற்றுள்ள அனைத்திற்குமாக நான் எனது கண்ணீரைக் காணிக்கையாக்குவேன்.
அந்த கண்ணீர், மனிதரின் நன்றிகெட்ட தனத்திற்கும் , முரட்டு மூடதனத்திற்கும் மன்னிப்பு வேண்டும் படையலாக இருக்கும்.
மெய்யாகவே, இந்த இரவு ஓர் ஒப்பற்ற பாடகன்.

**(இத்துடன் மிர்தாதின் புத்தகப் பதிவுகள் நிறைவு பெறுகிறது )**

மிர்தாதின் புத்தகம் பற்றி ...
உலகில் கோடிக்கணக்கான புத்தகங்கள் உள்ளன, ஆனால், இன்று உள்ள எல்லா புத்தகங்களை விடவும் மேலோங்கி உயர்ந்து நிற்பது " மிர்தாதின் புத்தகம் !"
இதயத்தால் படிக்க வேண்டிய புத்தகமிது... மிகுந்த தனிச்சிறப்புக் கொண்டது
நீண்ட நெடிய காலத்திற்குப் பிறகு மாபெரும் வகையில் உருவாக்கப்பட்டுள்ள மிகச் சிறந்த நூல் இது !
பல்லாயிரம் முறை படிக்க வேண்டிய தகுதி படைத்த புத்தகம் !
மிகெய்ல் நைமி, இந்த நூற்றாண்டின் மாபெரும் எழுத்தாளர் மட்டுமல்லர் , எல்லா நூற்றாண்டுகளிலும் இவரை மாபெரும் எழுத்தாளர் !
நான் ஆயிரக்கணக்கான நூல்கள் படித்து இருக்கிறேன். எதுவுமே இதற்கு ஈடாகாது !
ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய விலைமதிக்க முடியாத புத்தகம் இது !
- ஓஷோ

**கிருமிகளின் உலகம் 1**
(பிளேக் கிருமி )


அமரேந்திர சந்திர பாண்டே, 1933 நவம்பர் 26ஆம் தேதி மதியம், உருவத்தில் சிறிய மனிதர் ஒருவர், ஓர் இளம் ஜமீன்தாரான இவரை கொல்கத்தா (அன்று கல்கத்தா) ரயில் நிலையத்தில் ஒருவர் சட்டென உரசிச் சென்றார்.
20 வயதான அமரேந்திர சந்திர பாண்டேவின் வலது கையில் ஊசி குத்தியது போல ஒருவித வலி ஏற்பட்டது. காதி ஆடை அணிந்திருந்த அந்த மனிதர் ஹவுரா ரயில் நிலையத்தில் கூட்டத்தோடு கூட்டமாக கரைந்து போனார்.
"யாரோ என்னைக் குத்தி இருக்கிறார்கள்" என ஆச்சர்யப்பட்டுக் கொண்டு, தற்போது ஜார்கண்ட் மாநிலத்தில் ஒரு பகுதியாக இருக்கும் பாகூர் மாவட்டத்தில் உள்ள தனது குடும்ப வீட்டுக்கான பயணத்தைத் தொடர தீர்மானித்தார் அமரேந்திரா.

அமரேந்திரா உடனிருந்த சொந்தபந்தங்கள் ரத்தப் பரிசோதனை மேற்கொள்ளுமாறும், அங்கேயே தங்குமாறும் கூறினர். ஆனால் அமரேந்திராவை விட 10 வயது மூத்தவரான பினொயேந்திரா, யாரும் அழைக்காமல் ரயில் நிலையத்துக்கு வந்த போது சம்பவத்தை பெரிதாக எடுத்துக் கொள்ளாமல், தாமதமின்றி பயணத்தைத் தொடர வலியுறுத்தினார்.
மூன்று நாட்கள் கழித்து, காய்ச்சலோடு கொல்கத்தா திரும்பினார் அமரேந்திரா. அவரை பரிசோதித்த மருத்துவர், அவரை குத்தியதாக கருதப்படும் இடத்தில் ஹைபோடெர்மிக் ஊசி குத்தப்பட்டது போன்ற தடயத்தைக் கண்டார்.
அடுத்த சில நாட்களில் அவரது காய்ச்சல் அதிகரித்தது, அவரது அக்குள் பகுதியில் வீக்கம் ஏற்பட்டது, அதோடு நுரையீரல் நோய்க்கான ஆரம்பகால சமிக்ஞைகள் வெளிப்பட்டன. டிசம்பர் 3ஆம் தேதி அமரேந்திரா கோமாவுக்குச் சென்றுவிட்டார். அடுத்த நாள் காலை அவர் உயிர் பிரிந்தது.

அமரேந்திரா நிமோனியாவால் இறந்ததாக மருத்துவர்கள் சான்றளித்தனர். ஆனால் அவர் மரணத்துக்குப் பின் வந்த ஆய்வறிக்கை, அவர் ரத்தத்தில் "யெர்சினியா பெஸ்டிஸ்" (Yersinia pestis) என்கிற அபாயகரமான பாக்டீரியா இருந்ததாக கூறியது. இந்த பாக்டீரியா தான் பிளேக் நோய்க்கு காரணம் என்பது குறிப்பிடத்தக்கது.
இந்த பாக்டீரியா எலிகள் மற்றும் ஃப்ளீஸ் என்றழைக்கப்படும் சிறிய பூச்சிகளின் மூலம் பரவும். பிளேக் நோயால் இந்தியாவில் 1896 முதல் 1918 வரை சுமார் 1.20 கோடி பேர் உயிரிழந்தனர்.
இக்கொலையை விசாரித்த கொல்கத்தா காவல்துறை ஒரு சிக்கலான சதித் திட்டத்தை வெளிக்கொண்டு வந்தது. இதில் அன்றைய பம்பாயின் ஒரு மருத்துவமனையிலிருந்து இந்த பாக்டீரியாவைக் வெளிக் கொண்டு வந்தது தெரிந்தது.

இந்த கொலைக்கு குடும்ப பங்காளிச் சண்டைதான் பின்னணி காரணமாக இருந்ததும் தெரியவந்தது.
நிலக்கரி சுரங்கங்கள் மற்றும் கல் குவாரிகள் நிறைந்த பாகூர் மாவட்டத்தில் உள்ள, அவர்களது தந்தைக்குச் சொந்தமான பெரிய வீடு மற்றும் சொத்து தொடர்பாக பாண்டே சகோதரர்கள் (அமரேந்திரா மற்றும் பினொயேந்திரா) இரண்டு ஆண்டுகளாக மோதிக் கொண்டுவந்தனர்.
1932ஆம் ஆண்டே அமரேந்திராவைக் கொலை செய்ய திட்டம் தீட்டப்பட்டதாக நீதிமன்ற ஆவணங்கள் கூறுகின்றன.

மருத்துவர் " தாராநாத் பட்டாசார்யா " என்கிற பினொயேந்திராவின் நண்பர், ஒரு மருத்துவ ஆய்வகத்திலிருந்து பிளேக் கிருமியை எடுக்க, எடுத்த முயற்சிகள் தோல்வியில் முடிந்தது என அந்த ஆவணங்கள் கூறுகின்றன.
1932ஆம் ஆண்டு கோடை காலத்திலேயே பினொயேந்திரா தன் சகோதர் அமரேந்திரா கொலை செய்ய முயற்சித்ததாக மற்ற சில தரப்புகள் கூறுகின்றன என்றாலும், அது சர்ச்சைக்கு உட்பட்டது.
இருவரும் ஒரு மலைப் பிரதேசத்தில் ஒரு ஆசுவாச நடைக்குச் சென்ற போது, பினொயேந்திரா தயாரித்திருந்த கண்ணாடியை, அவரது சகோதரரை அணியச் செய்து, மூக்கு பகுதியில் காயம் ஏற்படுத்தியதாக, பிரிட்டிஷ் சுகாதார அதிகாரி டி பி லேம்பர்ட்டின் அறிக்கை கூறுகிறது.

அதற்குப் பின் அமரேந்திராவுக்கு உடனடியாக உடல் நலக் குறைவு ஏற்பட்டது. அமரேந்திராவுக்கு அணிவிக்கப்பட்ட கண்ணாடியில் அக்கிருமி இருந்ததாகச் சந்தேகம் எழுந்தது. அமரேந்திராவுக்கு டெடானஸ் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது , அவருக்கு டெடானஸ் சீரம் கொடுக்கப்பட்டது.
அமரேந்திராவின் மருத்துவ சிகிச்சையை மாற்ற பினொயேந்திரா மூன்று மருத்துவர்களை அழைத்து வந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால் அம்மருத்துவர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டதாக லாம்பர்ட்டின் அறிக்கை கூறுகிறது.
1932 மே மாதம், தாராநாத் மும்பையில் இருந்த ஹாஃப்கின் நிறுவனத்தின் இயக்குநரைத் தொடர்பு கொண்டார். இந்தியாவிலேயே பிளேக் கிருமிகளை வைத்திருந்த ஒரே ஆய்வகம் அதுதான். வங்காளத்தின் சர்ஜன் ஜெனரலின் அனுமதியின்றி, பிளேக் கிருமிகளை வழங்க முடியாது என மறுத்துவிட்டார் அந்த ஆய்வகத்தின் இயக்குநர்.
அதே மாதம், தாராநாத் கொல்கத்தாவில் இருந்த வேறொரு மருத்துவரைத் தொடர்பு கொண்டு, தான் பிளேக் நோய்க்கு மருந்து கண்டுபிடித்துவிட்டதாகவும், அதை பிளேக் பாக்டீரியாவை வைத்து பரிசோதிக்க விரும்புவதாகவும் கூறினார்.

தன் ஆய்வகத்தில் தாராநாத் பணியாற்ற அனுமதித்த அம்மருத்துவர், ஹாஃப்கின் நிறுவனத்திலிருந்து கொண்டு வரப்பட்ட பிளேக் பாக்டீரியாவைக் கையாள அனுமதிக்கவில்லை என நீதிமன்ற ஆவணங்கள் கூறுகின்றன.
தாராநாத் விட்டபாடில்லை, 1933ஆம் ஆண்டு மீண்டும் அம்மருத்துவரைத் தொடர்பு கொண்டு ஹாஃப்கின் நிறுவன இயக்குநருக்கு கடிதம் எழுதுமாறு வற்புறுத்தினார். அதில், தாராநாத் பிளேக் மருந்தை பரிசோதிக்க ஹாஃப்கின் நிறுவனத்தின் கட்டமைப்புகளை பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்குமாறு குறிப்பிட்டிருந்தார்.
அந்த ஆண்டு கோடை காலத்தில் பினொயேந்திரா மும்பைக்குச் சென்றார். அங்கு தாராநாத்தோடு இணைந்து, பிளேக் பாக்டீரியாவைக் கடத்த, ஹாஃப்கின் நிறுவனத்தைச் சேர்ந்த விலங்குகளுக்கான அறுவை சிகிச்சை மருத்துவர்கள் இருவருக்கு லஞ்சம் கொடுத்தார்.

பினொயேந்திரா சந்தைக்குச் சென்று சில எலிகளை வாங்கி வந்தார். தங்களை உண்மையான விஞ்ஞானிகளைப் போல காட்டிக் கொள்ள அதைப் பயன்படுத்திக் கொண்டார். பிறகு பிளேக் பாக்டீரியா சேமித்து வைக்கப்பட்டிருந்த ஆர்தர் ரோட் தொற்று நோய் மருத்துவமனைக்குச் சென்றனர்.
அங்கு, தன் மருத்துவர் நண்பர் கண்டுபிடித்ததாகக் கூறப்பட்ட மருந்தை ஆய்வகத்தில் வைத்துப் பரிசோதிக்க அனுமதிக்குமாறு அதிகாரிகளிடம் வலியுறுத்தியதாக நீதிமன்ற ஆவணங்கள் கூறுகின்றன.
ஆனால் ஆய்வகத்தில் அவர் எந்த ஆய்வுகளையும் மேற்கொண்டதற்கான ஆதாரங்கள் இல்லை. ஆய்வகத்தைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதி கொடுக்கப்பட்டு ஐந்து நாட்களுக்குப் பிறகு, ஜூலை 12ஆம் தேதி தன் பணிகளை எல்லாம் முடித்துக் கொண்டு, கொல்கத்தா திரும்பினார் பினொயேந்திரா.
1934ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் காவல்துறை, கொலை நடந்து சுமார் மூன்று மாதங்களுக்குப் பிறகு பினொயேந்திரா கைது செய்தனர்.

பினொயேந்திராவின் பயண விவரங்கள், மும்பையில் அவர் தங்கியிருந்த விடுதி ரசீதுகள், அவர் கைப்பட எழுதிய விடுதிப் பதிவு, ஆய்வகத்துக்கு அவர் எழுதிய விவரங்கள், அவர் சந்தையில் எலிகளை வாங்கிய கடையின் ரசீது என பல விவரங்களை இக்கொலையை விசாரித்த அதிகாரிகள் கண்டுபிடித்தனர்.
சுமார் ஒன்பது மாத காலம் நடந்த இந்த கொலைக்குற்ற விசாரணை, பலவகைகளில் பலரின் கவனத்தை ஈர்ப்பதாக இருந்தது. அமரேந்திரா " ரேட் ஃப்ளீ " என்றழைக்கப்படும் பூச்சி கடித்து பாதிக்கப்பட்டார் என வாதாடியது பினொயேந்திராவின் தரப்பு.

பினொயேந்திரா மற்றும் தாராநாத் மும்பை மருத்துவமனையிலிருந்து பிளேக் கிருமியை திருடியதாக ஆதாரங்கள் நிரூபிப்பதாகவும், அதை கொல்கத்தாவுக்கு கொண்டு வந்து 1933 நவம்பர் 26ஆம் தேதி (அமரேந்திரா உடலில் பிளேக் செலுத்தப்பட்ட நாள்) வரை உயிர்ப்போடு வைத்திருந்திருக்கலாம் என்றும் கூறியது நீதிமன்றம்.
நீதிமன்ற விசாரணையில் பினொயேந்திரா மற்றும் தாராநாத், கூலிப் படை கொண்டு அமரேந்திராவைக் கொல்ல சதித்திட்டம் தீட்டியதாகக் கூறி அவர்களுக்கு மரண தண்டனை விதித்தது.
மேல்முறையீடு செய்யப்பட்ட இந்த வழக்கில் 1936 ஜனவரியில், கொல்கத்தா உயர் நீதிமன்றம், அவர்களின் மரண தண்டனையை ஆயுள் தண்டனையாகக் குறைத்தது.

இந்த வழக்கு தொடர்பாக கைது செய்யப்பட்ட மற்ற இரு மருத்துவர்கள், போதிய ஆதாரங்கள் இல்லை என்று கூறி விடுவிக்கப்பட்டனர். "குற்ற வரலாற்றில் இது ஒரு தனித்துவமான வழக்கு" என மேல்முறையீட்டில் இவ்வழக்கை விசாரித்த ஒரு நீதிபதி குறிப்பிட்டார்.
88 ஆண்டுகளுக்கு முன் இன்றைய கொல்கத்தா, கல்கத்தாவாக இருந்த போது ஹவுரா ரயில் நிலையத்தில் அமரேந்திராவைக் கொலை செய்ய பயன்படுத்தப்பட்ட ஹைபோடெர்மிக் ஊசி இன்று வரை கண்டுபிடிக்கப்படவே இல்லை.

**கிருமிகளின் உலகம் 2**
(காலரா நோய் )




எஸ்.என்.டே என்கிற சம்பு நாத் டே கல்கத்தாவில் இருந்து 40 கிமீ தொலைவில் ஹூக்ளி மாவட்டத்தில் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் 1915ம் ஆண்டு பிறந்தார். கல்கத்தா மருத்துவக் கல்லூரியில் 1939ம் ஆண்டு M.B. எனப்படும் அக்காலத்திய மருத்துவப் பட்டப் படிப்பை முடித்தார்.
காலரா நச்சுக்காரணியை அவர் கண்டுபிடித்த விதம் அதுவரை நோய்க்கூறு மருத்துவ இயலில் யாரும் செய்து பார்க்காத புதுமையான பரிசோதனையாகும்.
சிறுகுடலுக்குள் V. cholerae நுண்ணியிர் நுழைந்து உருவாக்கும் தொற்று தான் காலராவுக்குக் காரணம் என்பது முன்பே தெரிந்திருந்த விஷயம். ஆனால் நோயின் அறிகுறிகளான வாந்தி, பேதி ஆகியவை ஏற்படும் விதம் புதிராக இருந்தது.

எஸ்.என்.டே தனது பரிசோதனையில் முயல்களின் குடலுக்குள் காலரா நுண்ணுயிர் திசுக்களை (cultures) செலுத்தினார். அந்த முயல்கள் காலரா அறிகுறிகள் ஏதுமின்றி நான்கு நாட்களில் இறந்தன. அவற்றின் உடலை பிரேத பரிசோதனை செய்த போது உடலில் தங்கியிருந்த பிசுபிசுப்பான திரவத்தில் இருந்து காலரா நுண்ணியிர்களை மீண்டும் பிரித்தெடுக்கலாம் என்று தெரிந்தது.
இதற்குப் பிறகு தொடர்ச்சியாக பல பரிசோதனைகளை டே நிகழ்த்தினார். நோய்க்கூறு காரணிகளை புரிந்து கொள்வதற்காக அவர் உருவாக்கிய முறை **rabbit loop model** என்று அறியப் படுகிறது.
தனது ஆய்வுகளின் இறுதியில், காலராவை உருவாக்கும் நச்சுக் காரணி, பாக்டீரியாக்கள் சுரக்கும் நஞ்சு (exotoxin) வகையைச் சார்ந்தது என்று அவர் நிரூபித்தார். அதற்கு முன்பு வரை அது பாக்டீரியா செல்களுக்கு உள்ளிருக்கும் நஞ்சு (endotoxin) வகையைச் சார்ந்தது என்றே அறிவியலாளர்கள் கருதி வந்தனர்.
எஸ்.என்.டேயின் ஆய்வு முடிவுகள் அந்தத் துறையில் மிகப் பெரும் அறிதல் பாய்ச்சலை நிகழ்த்தியவை. ஆனால் எல்லா புதிய சிந்தனைகளையும் போல, ஆரம்பத்தில் அவை எந்த சலசலப்பையும் ஏற்படுத்தவில்லை. 1970களின் தொடக்கத்தில் தான் அவற்றின் முழு வீச்சும் சாத்தியங்களும் மருத்துவ ஆய்வுலகத்தால் புரிந்து கொள்ளப் பட்டன.

உமர் (ரலி) அவர்கள் மக்களின் நிலையை ஆராய்வதற்காக சிரியா நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். சர்ஃக் எனும் இடத்தை அடைந்தபோது மாகாணப் படைத் தளபதிகளான அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களும் அவர்களின் நண்பர்களும் உமர் (ரலி) அவர்களைச் சந்தித்து சிரிய நாட்டில் கொள்ளை நோய் பரவியுள்ளது என்று தெரிவித்தார்கள்.
அதற்கு உமர் (ரலி) அவர்கள், “ஆரம்பகால முஹாஜிர்களை என்னிடம் அழைத்துவாருங்கள்” என்று சொல்ல, அவர்கள் அழைத்து வரப்பட்டார்கள். “சிரியா நாட்டில் கொள்ளை நோய் பரவியுள்ள காரணத்தால் அங்கு போகலாமா? அல்லது மதீனாவுக்கே திரும்பிச் சென்றுவிடலாமா?” என்று ஆலோசனை கேட்டார்கள். இது தொடர்பாக
முஹாஜிர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது
அவர்களில் சிலர், “நாம் ஒரு நோக்கத்திற்காகப் புறப்பட்டுவிட்டோம். அதிலிருந்து பின்வாங்குவதை நாங்கள் உசிதமாகக் கருதவில்லை” என்று சொன்னார்கள். வேறு சிலர், “உங்களுடன் மற்ற மக்களும் நபித்தோழர்களும் உள்ளனர். அவர்களையெல்லாம் இந்தக் கொள்ளை நோயில் தள்ளிவிடுவதை நாங்கள் சரியென்று கருதவில்லை” என்று சொன்னார்கள்.

அப்போது உமர் (ரலி) அவர்கள், “நீங்கள் போகலாம்” என்று சொல்லிவிட்டுப் பிறகு, “மதீனாவாசிகளான அன்சாரிகளை அழைத்து வாருங்கள்” என்று சொல்ல, அவ்வாறு அழைத்து வரப்பட்டது. அவர்களிடம் உமர் (ரலி) அவர்கள் ஆலோசித்தார்கள்.அவர்களும் முஹாஜிர்கள் வழியிலேயே சென்று அவர்களைப் போன்ற கருத்து வேறுபாடு கொண்டார்கள்.

அப்போதும் உமர் (ரலி) அவர்கள், “நீங்கள் போகலாம்” என்று சொல்லிவிட்டுப் பிறகு, “மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்துவந்த குறைஷிப் பெரியவர்களில் யார் இங்கு உள்ளனரோ அவர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்” என்று சொல்ல, அவ்வாறே அழைத்து வரப்பட்டது.
அவர்களில் எந்த இருவருக்கிடையேயும் கருத்து வேறுபாடு எழவில்லை. அவர்கள் அனைவரும், “மக்களுடன் நீங்கள் திரும்பிவிட வேண்டும்; அவர்களை இந்தக் கொள்ளை நோயில் தள்ளிவிடக் கூடாது எனக் கருதுகிறோம்” என்றனர்.
ஆகவே உமர் (ரலி) அவர்கள் மக்களிடையே, “நான் காலையில் என் வாகனத்தில் மதீனா புறப்படவிருக்கின்றேன். நீங்களும் வாகனத்தில் புறப்படுங்கள்” என்று அறிவிப்புச் செய்தார்கள்.
அப்போது அபூஉபைதா (ரலி) அவர்கள், “அல்லாஹ்வின் விதியிலிருந்து வெருண்டோடுவதற்காகவா ஊர் திரும்புகின்றீர்?” என்று கேட்க,
உமர் (ரலி) அவர்கள், “அபூஉபைதா! இதை உங்களைத் தவிர வேறேவரேனும் சொல்லியிருந்தால் நான் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டேன். ஆம், நாம் அல்லாஹ்வின் ஒரு விதியிலிருந்து இன்னொரு விதியின் பக்கமே வெருண்டோடுகிறோம்.

உங்களிடம் ஓர் ஒட்டகம் இருந்து, அது ஒரு பக்கம் செழிப்பானதாகவும், மறுபக்கம் வறண்டதாகவும் உள்ள இரு கரைகள் கொண்ட ஒரு பள்ளத்தாக்கில் இறங்கிவிட்டால், செழிப்பான கரையில் நீங்கள் அதை மேய்த்தாலும், அல்லாஹ்வின் விதிப்படிதான் அதை நீங்கள் மேய்க்கிறீர்கள். வறண்ட கரையில் நீங்கள் அதை மேய்த்தாலும் அல்லாஹ்வின் விதிப்படிதான் அதை நீங்கள் மேய்க்கிறீர்கள் அல்லவா?” என்று கேட்டார்கள்.
அப்போது தமது தேவையொன்றுக்காக வெளியே சென்றிருந்த அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அங்கு வந்தார்கள். அவர்கள், இது தொடர்பாக என்னிடம் ஒரு விளக்கம் உள்ளது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “ஓர் ஊரில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால், அந்த ஊருக்கு நீங்களாகப் போகாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும்போது, அங்கு கொள்ளைநோய் பரவினால், அதிலிருந்து வெருண்டோடுவதற்காக அவ்வூரைவிட்டு வெளியேறாதீர்கள்” என்று சொல்ல நான் கேட்டேன் என்று சொன்னார்கள்.
உடனே உமர் (ரலி) அவர்கள், (தமது முடிவு நபி (ஸல்) அவர்களின் வழி காட்டுதலுக்கேற்பவே அமைந்திடச் செய்ததற்காக அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். (புகாரி, முஸ்லிம்)

**கிருமிகளின் உலகம் 3**
( விபிரியோ காலரே )




வாந்திபேதி அல்லது காலரா என்பது, விபிரியோ காலரே (Vibrio cholerae) எனப்படும் பக்டீரியாவினால் உண்டாகும் சிறுகுடலில் பாதிப்பை ஏற்படுத்தும் தொற்றக்கூடிய குடலழற்சி (gastroenteritis) நோய் ஆகும்.
இப் பக்டீரியாவைக் கொண்ட உணவு அல்லது நீரை அருந்துவதன் மூலம் இந்நோய் மனிதருக்குத் தொற்றுகிறது. இந்நோயை உண்டாக்கும் பக்டீரியாக்களைத் தேக்கி வைத்திருப்பது மனித உடலே என்று முன்னர் பெரும்பாலும் நம்பப்பட்டது. ஆனால் நீர்சார் சூழலும் விபிரியோ காலரே என்னும் பக்டீரியாவைத் தேக்கி வைத்திருக்கக்கூடும் என்பதற்கான சான்றுகள் இப்போது அறியப்பட்டுள்ளன.

விபிரியோ காலரே வாந்திபேதி நச்சு, சிறுகுடலில் உள்ள சிறுகுடல் இழைமத்தில் தாக்கத்தினால் இந்நோயின் முக்கிய இயல்பான பெரும் வயிற்றோட்டம் ஏற்படுகிறது. மிகக் கடுமையான வகை வாந்திபேதி மிகவிரைவாக இறப்பை ஏற்படுத்தக்கூடிய நோய்களுள் ஒன்று.
இது பொதுவாக அரிசி கழுவிய நீர் போன்ற தோற்றத்தில் காணப்படுவதுடன் மீன் வாடையையும் கொண்டிருக்கும். வைத்தியம் செய்யப்படாத நிலையில் நோயாளி நாளொன்றுக்கு 10 முதல் 20 லிட்டர்கள் கழிவை வெளியேற்றுவார்.

மருத்துவம் செய்யப்படாத கடுமையான வாந்திபேதி காரணமாக அரைவாசியளவானோர் மரணத்துக்கு உள்ளாகின்றனர்.அதீத வயிற்றுப் போக்கு காரணமாக உயிரிழப்பு ஏற்படக் கூடிய நீரிழப்பு ஏற்படுவதுடன் அயன் சமநிலையும் பாதிக்கப்படும்.

வாஸித்தைச் சேர்ந்த தாவர்தான் என்னும் கிராமத்தில் அம்மை நோய் உண்டாயிற்று - வாந்திபேதி (காலரா நோய் ) என்பதாகவும் சிலர் கூறுவர் அங்குள்ளவர்களில் செல்வந்தர்களாகவும், பிரபலமானவர்களும் இருந்தார்கள். மரணத்திற்கு பயந்து அவ்வூரை விட்டுச் சென்றனர் என்பதாக. (இப்னு கஸீர், தப்ஸீர் ஹமீதியா போன்ற கிதாபுகளில் மேற்கண்ட குறிப்பு காணப்படுகிறது )
ஆனால்..மற்றும் ஒரு குறிப்பில்,

ஹஜ்ரத் தாவூத் (அலை) அவர்கள் காலத்திற்கு முன்னர் பாலஸ்தீனத்தைச் சேர்ந்த இவர் பனீ இஸ்ரவேலர்கள் மீது படையெடுத்து வந்தனர் . அவ்எதிரிகளை திருப்பித் தாக்குமாறு இஸ்ரவேல் மக்களின் மன்னரால் கட்டளையிடப்பட்டது .
இதில் ஆயிரக்கணக்கானோர் யுத்த மரணத்திற்குப் பயந்து அவ்வூரை விட்டு குடிபெயர்ந்தனர். இதனால் இஸ்ரவேலரின் மன்னர் இவ்வாறு சதி செய்த அவர்களைப் பற்றி இறைவனிடம் முறையிட்டார் (என்று காஜின், தன்தாவீ கிதாபுகளில் காணக் கிடக்கிறது )

எது எப்படியோ நோயுக்காகவோ , யுத்தத்திற்காகவோ பயந்து ஊரை காலி செய்தனர் .அவ்வளவே. பணக்காரர்களும் , பிரபலமானவர்களும் ஊரை விட்டு போனதும் அங்கு தங்கியிருந்தவர்களை அந்நோய் தாக்கியது என்றும் அல்லது எதிரிகள் தாக்கினார்கள் என்றும் சொல்லப்படுகிறது.
நோயோ அல்லது எதிரிகளோ அந்த ஊரை விட்டு விலகியதும் மரணத்திற்குப் பயந்து தப்பியவர்கள் மீண்டும் அவ்வூருககுத் திருப்பினர் , இதைக் கண்ணுற்ற பாதிக்கப்பட்டு தங்கி இருந்தவர்கள் இனியொரு முறை இந்நிகழ்வு நமதூருககு மீண்டும் வருமாயின் நாமும் அவர்களைப் போல் ஊரை விட்டு வெளியேறி விட வேண்டுமென்று முடிவு செய்தனர்.
அடுத்த வருடத்தில் அதே நிகழ்வு (நோய் அல்லது எதிரியின் தாக்குதல்) நிகழ்ந்த போது, மொத்த மக்களும் வெருண்டோடி ஓர் அகன்ற பள்ளத்தாக்குப் பகுதியின் இருபுறங்கிலும் குடியேறினர் .
இறைக் கட்டளைப்படி அவர்களுக்கு மேல்புறம் ஒரு மலக்கும் . கீழ்புறம் ஒரு மலக்கும் நின்று விநோதமான கடுமையான ஓர் ஓசையை எழுப்பினர் .அவர்களில் ஒருவர் கூட பாக்கி இல்லாமல் அனைவரும் இறந்தனர் . இம்மக்கள் 8000 பேர்கள் என்றும் 6000 பேர்கள் என்றும் இரு குறிப்பு காணப்படுகிறது .அந்தப் பள்ளத்தாக்கில் பல குழிகளில் அவர்களை ஒன்றாக போட்டு , அவ்விடத்தைச் சுற்றி சுவர்களும் எழுப்பட்டன .அவர்கள் அழிந்து மண்ணோடு மண்ணாக மக்கிப் போயினர்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு ( 25 வருடம் அல்லது அதை விட அதிகமான வருடம் ) ஹஜ்ரத் ஹஸ்கீல் (அலை) இந் நபியை "எசேக்கியல் " என்று விவிலியம் பழைய ஏற்பாடு கூறுகிறது . இஸ்ரவேலர்களுக்கு அனுப்பப்பட்ட நபி .இவருக்கு இன்னொரு பெயர் "துல்கிஃப்ல் (அலை) " கி.மு (593 - 571)
நபியவர்கள் இறைவனிடம் மன்றாடி அவர்களை மீண்டும் தம் கண் முன்னே உயிர்ப்பிக்கும்படி வேண்டினார். இறைவனும் நபியின் கண் முன்னே ஒவ்வொரு நபரின் எலும்புகளும் அவரவர் எலும்புகளுடனும் நரம்புகள் தசைகள் தோல்கள் ஒவ்வொன்றும் இணைந்ததை நபியவர்கள் நேரடியாகவே பார்த்தார்கள்.
" (நபியே) மரணத்திற்குப் பயந்து தங்கள் வீடுகளை விட்டு ஆயிரக்கணக்கில் வெளியேறியவர்களை நீங்கள் கவனித்தீர்களா ? அல்லாஹ் அவர்களை இறக்கும் படிச் செய்து பின்னர் அவர்களை உயிர்ப்பித்தான்.
(குர்ஆன் ( 2 : 243 )
உயிர் பெற்றவர்கள் "நாயனே! உன்னையே நாங்கள் வணங்குகிறோம் : துதிக்கிறோம் . உன்னைத் தவிர வேறு நாயன் இல்லை " என்று மொழிந்தவர்களாக உயிர் பெற்றனர்.
மக்கள் உயிருடனிருப்பதும், மரணிப்பதும் அவனின் கட்டளையே இன்றி நோயோ, யுத்தங்களோ அல்ல .ஒருவர் மரணத்திறகுப் பயந்து எங்கு சென்றாலும் மரணம் அவரை அது விடாது.
உலகத்தில் வாழ வேண்டிய காலம் எஞ்சி இருக்கும் போது அவர்களுக்கு எந்த அபாயமும் சம்பவிக்காது என்பதை உணர்த்தி, "ஜிஹாது" என்னும் மார்க்க யுத்தம் புரிவதற்காக மக்களை தூண்டுவதும் , மார்க்க யுத்தத்தில் உயிர்த் தியாயகம் செய்து " ஷஹாதத் " என்னும் பேறு பெறும்படியும் தூண்டுவதற்காகவே இந்தச் சம்பவத்தை இறைவன் இங்கு சுட்டி காட்டுகிறான் என்பதாக அநேக குர்ஆன் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர் .
மேற்கண்ட பனீ இஸ்ரவேலர்கள் எத்தனை வயதில் மரணித்தார்களோ அதே அதே வயதில் உயிர் பெற்று எழுந்து பின் அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட வயது வரை வாழ்ந்தார்கள் . பின்பு மரணித்தார்கள் .

**கிருமிகளின் உலகம் 4**
(தொடாதீர்... என்னைத் தொடாதீர் )

அம்மை ஒருவர் மூலம் மற்றவர்களுக்கு எளிதில் பரவக் கூடியது. அதோடு எரிச்சல் மிகுந்தது. சிவந்துபோய் வலியை உண்டாக்கும். உடல் சூடு, குருமித் தொற்றல் ஒருவரிடமிருந்து மற்றவருக்கு எளிதில் பரவும்.
தும்மல், இருமல் மூலமாக காற்றின் மூலம் இந்தக் கிருமிகள் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு எளிதாகப் பரவும். அம்மைக் கொப்புளங்கள் வெடிப்பதாலும் நோய்த்தொற்று பரவும்.
கொப்புளங்களை சொறிவதால், அதிலுள்ள தண்ணீர் மற்ற இடத்தில் பட்டு, அங்கும் கொப்புளங்கள் வரக்கூடும், அதனால் பாதிப்படைந்த இடங்களில் சொறியவே கூடாது.
தளர்வான மெல்லிய காட்டன் உடைகளை மட்டும் தான் அம்மை நோயிற்கு ஆளானவர்கள் பயன்படுத்த வேண்டும். குளிந்த நீரில் காட்டன் துணியை நனைத்து, எரிச்சலாகும் இடத்தில் ஒத்தடம் கொடுப்பதும், குளிர்ந்த நீரில் குளிப்பதும் மிகவும் உகந்தது. முக்கியமாக அவர்கள் கைகளால் சொறிவதை கட்டாயம் தவிர்க்க வேண்டும்.

தினமும் வெறும் குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டும். பாதிக்கப்பட்டவர்கள் பயன்படுத்தும் போர்வை, விரிப்பு ஆகியவற்றை மைல்ட் டிடெர்ஜெண்ட் கொண்டு நன்றாக துவைக்க வேண்டும்.
மூஸா நபியின் சமூகம் பிர்அவ்னின் பிடியில் இருந்து பாதுகாக்கப்பட்டது. கடல் பிளந்து வழிவிட்டது. நபி மூஸா (அலை) அவரது தோழர்களும் கடலைக் கடந்தனர். பிர்அவ்னும் அவனது கூட்டமும் அழிக்கப்பட்டது.
மூஸா நபியின் கூட்டத்தினர் வரும் வழியில் சிலை வழிபாட்டில் ஈடுபட்டுக் கொண்டிருந்த ஒரு கூட்டத்தைக் கண்டனர். “பார்த்து வணங்க அவர்களுக்குப் பல கடவுள்கள் இருப்பது போல் எங்களுக்கு ஒரு கடவுளை ஏற்பாடு செய்யுங்கள்” என்று கேட்டனர்.
அவர்களின் உள்ளத்தில் சிலை வழிபாட்டின் மீது ஈர்ப்பு இருந்தது. அதேவேளை அவர்கள் மாட்டையும் நேசித்தனர்.

மூஸா நபி சமூகத்தில் ஸாமிரி என்ற ஒருவன் இருந்தான். இந்த ஸாமிரி என்பவன் நபி மூஸா (அலை) அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்த ஜிப்ரீல்(அலை) அவர்களின் காலடிபட்ட மண்ணை எடுத்து வைத்திருந்தான்.
நபி மூஸா (அலை) அவர்கள் தலைமைப் பொறுப்பை தன் சகோதரர் நபி ஹாரூன் (அலை) களிடம் கொடுத்துவிட்டு, அல்லாஹ்வின் அழைப்பின் பெயரில் தூர் ஸீனா மலைக்கு வேதம் தவ்ராத்தைப் பெற சென்று விட்டார்கள்.
அப்போது இந்த ஸாமிரி, மக்களின் நகைகளையும் அணிகலன்களையும் வாங்கினான். அவற்றை உருக்கினான். ஒரு காளை மாட்டை சிலை வடித்தான். அதன் மீது ஜிப்ரீல் (அலை) அவர்களின் காலடி தடம்பட்ட மண்ணைப் போட்டான். ஒரு அதிசயம் நடந்தது.

அந்தக் காளை மாட்டுச் சிலை மாடு போன்று கத்தியது. அதற்கு சதையும் உண்டானது. இந்த அதிசயத்தைக் கண்ட மக்கள் ஏமாந்தனர். அல்லாஹ் சோதிப்பதற்காக கெட்டவன் மூலமாகக் கூட அதிசயத்தை வெளிப்படுத்தலாம். மக்கள் அந்த காளை மாட்டுச் சிலையை வணங்க ஆரம்பித்தனர்.
ஹாரூன் நபி “இது என்ன சிலை? அல்லாஹ் சோதிக்கின்றான். வழிதவறி விடாதீர்கள்” என்று எடுத்துச் சொன்னார். ஆனால் கேட்கும் நிலையில் அவர்கள் இருக்கவில்லை. மாட்டின் மீதுள்ள மோகம் அதிகரித்தது. நபி ஹாரூன் (அலை) அவர்களைக் கொலை செய்யவும் முற்பட்டனர்.

நபி மூஸா (அலை) அவர்களுக்கு அல்லாஹ் நடந்ததைச் சொன்னான். ஆத்திரப்பட்ட அவர் தன் சமூகத்திடம் வந்தார். நபி ஹாரூன் (அலை) அவர்கள் மீது கோபப்பட்டு விசாரித்தார். அவர் நடந்ததை விவரித்தார்.
நபி மூஸா (அலை) அவர்கள் ஸாமிரியை அழைத்து விசாரித்தார். அவனைக் கண்டித்தார்.

قَالَ فَاذْهَبْ فَاِنَّ لَـكَ فِى الْحَيٰوةِ اَنْ تَقُوْلَ لَا مِسَاسَ وَاِنَّ لَـكَ مَوْعِدًا لَّنْ تُخْلَفَهٗ وَانْظُرْ اِلٰٓى اِلٰهِكَ الَّذِىْ ظَلْتَ عَلَيْهِ عَاكِفًا لَّـنُحَرِّقَنَّهٗ ثُمَّ لَـنَنْسِفَنَّهٗ فِى الْيَمِّ نَسْفًا

“நீ இங்கிருந்து போய் விடு; நிச்சயமாக இந்த வாழ்க்கையில் (எவரைக் கண்டாலும், என்னைத்) “தீண்டாதீர்கள்” என்று சொல்(லித் திரி)வது தான் உனக்குள்ளது, (மறுமையில்) நிச்சயமாக உனக்கு வாக்களிக்கப்பட்ட வேதனையும் உண்டு; அதை விட்டும் நீ தப்பமாட்டாய்; மேலும்: நீ தரிபட்டு ஆராதனை செய்து கொண்டிருந்தாயே அந்த “நாயனைப்” பார்; நிச்சயமாக அதனைச் சுட்டெரித்துப் பின்னர் (சாம்பலாக்கி) அதைக் கடலில் பரத்திவிடுவோம்” என்றார். (அல்குர்ஆன் : 20:97)
அந்நோயின் தீவிரத்தை இறைவன் தன் வேதத்தில் குறிப்பிட்டிருப்பதிலிருந்து எவ்வளவு கொடுமையானது என்பதை உங்களால் உணர முடிகிறதல்லவா ?

ஹஜ்ரத் மூஸா அலை அவர்களிடமிருந்து அவன் வந்தது முதல் அவன் எதைத் தொட்டாலும் பிறர் அவனைத் தொட்டாலும் தொட்டவர் தொடப்பட்டவர் ஆக இருவருமே கடும் ஜுரத்தால் அவதிப்பட்டனர். மேலும் அவன் உடம்பில் கொப்பளங்கள் உண்டாகி துர்நாற்றம் வீசியது.
இதனால் அவன் ஒருவரையும் சந்திக்காமலும் , தொடாமலும் பிறரைத் தொட விடாமலும் ஒதுங்கி இருக்க நேர்ந்தது. தூரத்தில் வரும்போதே அவன் சப்தமிட்டு தொட வேண்டாம் என்று கூறி கொண்டிருந்தானாம்.
இறுதியாக அவன் மனித நடமாட்டம் உள்ள இடத்தை விட்டுவிட்டு, காட்டில் கொடிய மிருகங்கள் வாழும் இடஞ் சென்று தனியாக வாழந்து அங்கே மரணித்தான் என்று காஜின் கிதாபில் சொல்லப்பட்டுள்ளது.
ஆனால் ஸாமிரிக்கு வந்த இந்த நோய் அம்மை வகையைச் சார்ந்ததா என்பது தெரியவில்லை.

## கிருமிகளின் உலகம் 5

சின்னம்மை, தட்டம்மை, பெரியம்மை என்பது அம்மை நோய்களின் சில வகைகளாகும். கிராம மக்கள் இந்நோயை “அம்மை நோய் "என்று குறிப்பிடுவார்கள்.
இந்நோய் தொற்றும் தன்மைக் கொண்டது. ஏற்கனவே இந்நோயினால் பாதிக்கப்பட்டவர்களுடன் பழகுவதால் இந்நோய் மற்றவர்களுக்கு பரவும். மேலும் கோடைக்காலத்தில் உடல் அதிக வெப்பமடைவதாலும் இந்நோய் ஏற்படும்.

முதலில் இது சாதாரண காய்ச்சல் போல தான் துவங்கம். ஆனால் ஓர் இரு நாளில் காய்ச்சல் கடுமையாகும், கை, கால் வலி, தலைவலி போன்றவை ஏற்படும். அதோடு உடலில் ஆங்காங்கு அரிப்பு ஏற்பட்டு சிறு சிறு கொப்பளங்கள் வர துவங்கும். தீவிரமாகும் போது கொப்பளங்கள் வந்த இடத்தில் தோலில் வடு ஏற்படுத்தி விடும்.
நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையான அபூலஹப் என்பவன் பெருமானாருக்கு எதிர்ப்பு காட்டியதோடு அவர்களை ஒழித்துக்கட்டவும் திட்டம் தீட்டியவன்.
மக்கத்து குரைஷிகளால் பத்ரு என்ற இடத்தில் மிகப் பெரிய படையுடன் மதீனா முஸ்லிம்களின் சிறு படையை எதிர்த்தனர்.

அந்த யுத்தத்திற்கு அபூலஹப் செல்ல முடியாத காரணத்தினால் , தனக்கு பதிலாக "புதைல்" என்ற ஒருவனை சகல சாதனங்களோடு யுத்தத்திற்கு அனுப்பி வைத்தான்.
யுத்தத்தில் முக்கியமான குறைஷிப் பிரமுகர்கள் கொல்லப்பட்டுப் போனதையும், எழுபது நபர்கள் கைது செய்யப்பட்டதையும், மக்களின் மூலம் செவியுற்ற அபூலஹப் அதிர்ச்சி அடைந்து, மீளாத் துயரத்திற்கு ஆளான் இதனால் அபூலஹப்பிற்கு முதலில் வாந்திபேதி என்ற கொடிய நோய்கள் உருவாகி பின் உடலெங்கும் கொப்பளங்கள் போன்று ஒருவகை தொத்து வியாதி கிளம்பிற்று.
இதனால் யாரும் சிகிச்சை அளிக்க முன்வராமல் அகன்றனர். அந்த வியாதியால் கடுமையாக வருந்தினான்.
அவன் நோயின் கொடுமையால் சத்தமிடும்போது, அது நாய் அழுவது போல் மற்றவருக்கு கேட்கும் .
அவனது அழகான முகம் பயங்கரத் தோற்றத்தை அளித்தது ஆதலால் தூரத்திலிருந்து கூட அவனை பார்க்க மற்றவர்கள் பயப்படுவார்கள்.
பத்ரு யுத்தம் முடிந்த ஏழாவது நாள் இறந்தான். அரபு நாட்டு மக்கள் வியாதி பிடித்து மரித்தவனின் பிணத்தை கண்டால் எங்கே தங்களையும் அது ஒட்டிக் கொள்ளுமோ என பயந்து ஒதுங்கிக் கொள்வார்கள்.
இதனால் அவனது பிணமும் திண்டுவாரற்று மூன்று நாட்கள் வரையும் அப்படியே கிடந்து அழுகி, நாற்றம் எடுத்தது பின்பு ஒருவாறு கூலி ஆட்களை கொண்டு புதைக்கப்பட்டது. ஹக்கானீ கிதாபில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

## கிருமிகளின் உலகம் 6

( இது என்ன வியாதி ? )

நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு கொஞ்ச காலத்திற்கு முன் அப்ரஹா என்ற ஏமன் நாட்டை ஆண்டு வந்தான். இயற்கையில் துர்குணம் கொண்டவன்.கஃபாவானது அரபியர்களிடம் விஷேச மதிப்பும் கண்ணியமும் பெற்றிருந்தால், அதன் மீது பொறாமை கொண்டான் . தன் தலைநகர் ஸன்ஆவில் ஒரு பெரிய கோயிலைக் கட்டினான்.

மக்கா சென்று ஹஜ்ஜு செய்யக் கூடாதென்றும், தன்னுடைய கோவிலுக்கே யாத்திரை வர வேண்டும் என்றும் பிரகடனம் செய்தான்.
யாரும் அவனை மதிக்கவில்லை. இதனால் அவன் கஃபாவின் மீது கோபம் கொண்டு பெரிய படைகளுடனும், அதில் யானைகள் அதிகமாக படை சூழவும் கஃபாவை நோக்கி இடிக்க வந்தான்.
அச்சமயம் ஜித்தா கடற்கரையிலிருந்து கருநிறமான அபாபீல் பறவைகள் கூட்டம் கூட்டமாக பறந்து வந்தன. ஒவ்வொரு பறவையின் இரு கால்களிலும் அலகிலும் பொடிக் கற்கள் இருந்தன
பறவைகள் ஆகாயத்தில் பறந்து கொண்டே படைகள் மீது குறி தவறாமல் வீசி எறிந்தன. இக்கல் யார் யார்மீது விழுந்ததோ, அவரெல்லாம் பெரியம்மை என்னும் பயங்கர தொற்றுநோயால் பீடிக்கப்பட்டனர்.
அரபு நாட்டிலே அந்த ஆண்டில்தான் பெரிய அம்மை வந்ததென்றும், அதற்கு முன் அந்நாட்டில் அப்படி ஒரு வியாதி இல்லை என்றும் வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்.
அப்ரஹாவுக்கு ஒருவிதமான வியாதி உண்டாயிற்று. விரல்கள் கைகளை விட்டு உதிர்ந்து விட்டன. உடலில் சில அங்கங்களும் உதிர்ந்து கீழே விழுந்தன. பறவைக் குஞ்சு போல் அவன் ஸன்ஆவுக்குத் திரும்பினான்.
கஸ்அம் குலத்தார் வாழ்ந்த பகுதியில் அவனது மார்பிலிருந்து இருதயம் பிளந்து வெளியே வந்த நிலையில் அவன் இறந்தான்.
அப்ரஹாவுக்கு வந்த வியாதி எந்த வகையைச் சார்ந்த வியாதியென்றே தெரியவில்லை. எந்த வியாதியும் உடலில் ஏற்பட்டு உயிரை மாய்க்கும். ஆனால் அப்ரஹாவுக்கு வந்த வியாதி உடல் உறுப்புகள் , அங்கங்கள் அழுகிய நிலையில் உடலிலிருந்து உதிர்ந்தது , இந்த வியாதியை இதுவரை மருத்துவ உலகம் அறியாத வியாதி.

**கிருமிகளின் உலகம் 7**
( கிருமிகள் உயிர் ஊக்கிகள் )



இயற்கையின் படைப்பில் கிருமிகள்தான் ஆதி உயிரினம். ஆறறிவு மனிதன், ஐந்தறிவு விலங்குகள், நான்கு அறிவு முதல் மூன்றறிவு வரை கொண்ட உயிரினங்கள், இரண்டறிவு புழுக்கள்... இவற்றுக்கெல்லாம் முன்பே இவ்வுலகத்தில் தோன்றியவை கிருமிகள்தான்.
நவீன அறிவியலின்படி கிருமிகள் இரண்டு வகை ஒன்று நன்மை செய்யும் கிருமிகள், இன்னொன்று தீமை செய்யும் கிருமிகள்.
இந்தக் கிருமிகள்தான் இயற்கைச் சுழற்சியின் ரகசியம் .ஒரு பொருளை இன்னொன்றாக மாற்றம் அடையச் செய்வதில் கிருமிகளின் பங்கு மிக முக்கியமானது.

وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ مِنْ صَلْصَالٍ مِّنْ حَمَاٍ مَّسْنُوْنٍ
பிசுபிசுவென்று ஒட்டும் காய்ந்த களிமண் ஓட்டிலிருந்து மனிதனை நாம் படைத்தோம்' (அல்குர்ஆன் 15 : 26).
இவ்வசனத்தில் மூன்று சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஹமஇன், மஸ்னூன், ஸல்ஸால்.
ஹமஇன்_ என்றால் நாற்றமடிக்கும் சேற்று மண் எனப்பொருள். குழைத்த மண்ணிலிருந்து எழும் அழுகிய வாடை எனவும் பொருள் கொள்ளலாம். மண்ணிற்கு பிசுபிசுப்புத் தன்மையை ஏற்படுத்த அதை நாற்றமடிக்கும் பதத்திற்கு மாற்ற இறைவன் குழைத்த மண்ணுக்குள் கிருமிகளைப் பயன்படுத்தி இருக்கலாமா ? என்று கூட யோசிக்கிறார்கள்.

மஸ்னூன் என்றால் அழுகிவிட்டதன் காரணமாக தோன்றும் பிசுபிசுவென்று ஜவ்வைப் போல ஒட்டும் தன்மை என்று பொருள். அல்லது குழைக்கப்பட்டு ஏதேனுமொரு வடிவத்தில் பிடிக்கப்பட்ட மண்ணென்றும் பொருள்.
ஸல்ஸால் என்றால் காய்ந்து போன ஓடாகிப்போன மண் எனப்பொருள்.
சேற்று மண்ணைப் பிடித்து ஓர் உருவமாக்கி அதைக் காயவைத்த பிறகு, அதில் இறைவன் தன்னுடைய ரூஹை ஊதி மனிதனுக்கு உயிர் கொடுத்துள்ளான்.

அவ்வுரு எங்ஙனம் இருந்தது? ரூஹ் கொடுக்கப்படும் முன் எவ்வடிவில் இருந்தது? எவ்வாறு சேற்று மண்ணுக்கு உருவம் கொடுக்கப்பட்டது? எனும் விவரங்களையயல்லாம் நம்மால் அனு மானிக்க இயலாது.
முதலில் மனிதன் படைக்கப்பட்டான் பிறகு செவ்வையாக்கப்பட்டான் என இறைவன் கூறுகிறான்.
அப்படித்தரங்கள் எவ்வாறு அமைந்தன என்றும் நம்மால் கற்பனை செய்ய இயலாது

நீரிலும், நிலத்திலும், காற்றிலும் கிருமிகள் வாழ்கின்றன என்று ஒற்றை வரியில் சொல்லி முடித்துவிட முடியாது. இயற்கையின் மாற்றங்களுக்கு அடிப்படையானது வேதியல் , உயிரியல் சுழற்சியைத் இவைகள் தொடர்ந்து செய்துகொண்டிருக்கின்றன.

இன்னும் கொஞ்சம் புரிகிற மாதிரி சொல்கிறேன்.
கிருமிகள் மரம் செய்கின்ற வேலையை செய்கின்றன. நாம் சுவாசம் மூலம் வெளியேற்றுகின்றன கார்பன்-டை-ஆக்சைடு என்னும் கழிவு காற்றை மரங்கள் எடுத்துக்கொண்டு, நமக்கு தேவையான ஆக்சிஜனை வெளிவிடுகின்றன அல்லவா ..
அதேபோல் உலகில் இயற்கையாக உருவாகும் கழிவுப் பொருட்களை மறுசுழற்சி செய்து, நச்சுகளை அகற்றுகிற வேலையைச் செய்வது கிருமிகள்தான்.
விளை நிலங்களில் தொடர்ந்து பயிர் செய்யும்போது, மண் சோர்வடைந்து விடுகிறது. அப்போது விவசாயிகள் பயிர் வகை செடிகளை ஒரு முறை பயிர் செய்து மண்ணின் வளத்தை புதுப்பித்துக் கொள்வார்கள்.
இங்கு கிருமிகள் என்ன செய்கின்றன தெரியுமா ? பயறு வகைத் தாவரங்களின் வேர்கள் குடியேறி நைட்ரஜனை உரமாக மாற்றி மண்வளத்தை பெருக்குகின்றன.
மண்ணில் உள்ள வேர்கள் அல்லது வேர்சூழ் மண்டலத்தில் இந்த வேர்நுண்ணுயிரிகள் குடியேறுகின்றன. இவை பயிர்களுக்கு நன்மை அளிக்கக் கூடியவை.
இந்த வேர் நுண்ணுயிரி தற்போது வாணிகத் துறையாக்கப்பட்டுள்ளது. பயிர் நோய்களை கட்டுப்படுத்துதல் (உயிர் பாதுகாப்பான்கள்), மேம்பட்ட ஊட்டச்சத்து இருப்பு (உயிர் உரங்கள்), அல்லது பயிர் ஹார்மோன் உற்பத்தி (உயிர் ஊக்கிகள்) ஆகியவற்றுள் ஏதாவது ஒரு காரணத்திற்காக இது வாணிபமாக ஆக்கப்பட்டுள்ளது.
வேர் நுண்ணுயிரிகள் அதிகளவில் வேர்களை உற்பத்தி செய்து, நீர் மற்றும் ஊட்டச்சத்துக்களை உறிஞ்சும் சக்தியை அதிகப்படுத்துகிறது. இந்த பயிர் வளர்ச்சி ஊக்குவிக்கும் வேர்சூழ் நுண்ணுயிரியை உயிர் ஊக்கிகள் என்று அழைக்கப்படுகிறது.

وَمِنْ اٰيٰتِهٖۤ اَنَّكَ تَرَى الْاَرْضَ خَاشِعَةً فَاِذَاۤ اَنْزَلْنَا عَلَيْهَا الْمَآءَ اهْتَزَّتْ وَرَبَتْ اِنَّ الَّذِىْۤ اَحْيَاهَا لَمُحْىِ الْمَوْتٰى اِنَّهٗ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
(நபியே! பயிர்கள் கருகி) பூமி வெட்ட வெளியாக இருப்பதை நீங்கள் காண்பதும் மெய்யாகவே அவனுடைய அத்தாட்சிகளில் ஒன்றாகும். அதன்மீது நாம் மழையை பொழியச் செய்தால், அதில் முளை கிளம்பிப் பசுமையாகி வளர்கிறது. இவ்வாறு இறந்துபோன பூமியை எவன் உயிர்ப்பிக்கிறானோ அவன் மரணித்தவர்களையும் மெய்யாகவே உயிர்ப்பிப்பான். நிச்சயமாக அவன் (அனைத்தின் மீதும்) ஆற்றலுடையவன். (குர்ஆன் : 41:39)
கிருமிகள் உயிர் ஊக்கிகள்

## கிருமிகளின் உலகம் 8
( கொடூரங்களில் வாழும் கிருமிகள் )

கிருமிகள் இல்லாத இடமே இல்லை எனும் அளவிற்கு பிரபஞ்சமெங்கும் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கின்றன.
மிகப்பெரியதாக பரந்து விரிந்திருக்கும் கடலின் அடியில் உள்ள வெந்நீர் ஊற்றுகளிலும் , கிருமிகள் வாழ்கின்றன ! சொன்னால் நம்ப முடிகிறதா ? ஆனாலும் வாழ்கிறது .
வெந்நீர் ஊற்றுகளிலும் கிருமிகள் வாழ்வதை யோசிக்கும் போது,நரகவாசிகள் "நரகத்தில் எவன் என்றென்றுமே தங்கியிருந்து, கொதிக்கும் நீர் புகட்டப்பட்டு அதனால் குடல்களெல்லாம் துண்டு துண்டாகிவிடும்" (அல்குர்ஆன் : 47:15)

கடலின் அடியிலும், நிலக்கரிச் சுரங்கங்களிலும் ஆழமாக தோண்டப்பட்ட கரிக்குழிகளிலும், அடுக்குப்பாறைகளிலும் கூட கிருமிகள் வாழ்ந்தபடியே இருக்கின்றன !
கடலின் மேலுள்ள மிகப்பெரிய அழுத்தங்களையும் தாங்கிக் கொண்டு கிருமிகள் வாழ்வதை சிந்திக்கும் போது, "நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் நரகத்தின் மிகவும் கீழான அடித் தளத்தில்தான் இருப்பார்கள்; அவர்களுக்கு உதவியாளராக எவரையும் நீர் காண மாட்டீர். (குர்ஆன் : 4:145)
ஆக்சிஜன் இல்லாமல் உயிர் வாழும் பாக்டீரியாக்களான கிருமிகளும் உள்ளன. அவற்றை பயன்படுத்தி குளம், ஏரி போன்ற இடங்களில் நீர்ப்பரப்பின் அடித்தரையை கெட்டிப் படுத்த முடியும். இதன் மூலம் நீர் கசிவை தடுப்பதற்காக இவை பயன்படுத்தப்படுகிறது.
ஆக கிருமிகள் ஜீவன்கள் சுவாசித்து உயிர் வாழ தேவையான ஆக்ஸிஜன் இல்லாத இடங்களிலும் இவை சாகாமல் உயிர் வாழ்கின்றன என்பதைப் பற்றி யோசிக்கும்போது ,"நிச்சயமாக எவன் தன் இறைவனிடத்தில் குற்றவாளியாக வருகிறானோ, அவனுக்கு நரகம் நிச்சயமாக இருக்கிறது; அதில் அவன் மரணிக்கவும் மாட்டான், வாழவும் மாட்டான். (அல்குர்ஆன் : 20:74)
மனிதர்கள் நெருப்புக்கு பயத்தோடும் பற்றி எரியும் எரிமலையின் லாவா குழம்பின் (இதன் வெப்பநிலை 700 °C முதல் 1200°C வரை ) வெப்ப நிலையிலும் கூட கிருமிகள் வாழ்கின்றன. அதெப்படி பற்றி எரியும் நெருப்பில் விரிப்பு விரித்து, போர்வை போர்த்தி அந்த கிருமிகளால் எப்படி வாழ முடிகிறது ?

" அவர்களுக்கு நரகத்தில் (நெருப்பு) விரிப்புகளும், (போர்த்திக் கொள்வதற்கு) அவர்களுக்கு மேலே நெருப்புப் போர்வைகளும் உண்டு - இன்னும் இவ்வாறே அநியாயம் செய்பவர்களுக்கு நாம் கூலி கொடுப்போம். (அல்குர்ஆன் : 7:41)
அமிர்தம் பெற விரும்பிய தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தனர். அதில் மத்தாக பயன்பட்ட வாசுகி என்னும் பாம்பு விஷத்தை உமிழ்ந்தது.
விஷம் அதனால் ஏற்பட்ட உஷ்ணத்தை தேவர்களால் தாங்க முடியவில்லை. அவர்களுக்காக விஷத்தை திரட்டி விழுங்க முயன்றார் சிவன். அதைக் கண்டு திடுக்கிட்ட பார்வதி, கணவரின் கழுத்தைப் பிடித்ததால், விஷம் அப்படியே நின்றது.
இதனால் சிவனுக்கு நஞ்சுண்டேஸ்வரர் எனப் பெயர் வந்ததாக இந்து புராணங்களில் சொல்லப்பட்ட இந்த நிகழ்வையொத்த கிருமிகளும் விஷத்தை உண்டு வாழும் தன்மை கொண்டது .
பயங்கர அகால விஷத்தன்மை மிகுந்த சல்பைடு ரசாயனத்தை பயன்பாடுள்ள கந்தக ஆக்சைடாக மாற்றுவது கிருமிகள்தான். இந்த கிருமிகள் கந்தகத்தை உணவாக உண்ணும் தன்மை கொண்டவை.

**கிருமிகளின் உலகம் 9**

( பூமியைப் பாதுகாப்பதில் கிருமியின் பங்கு )

சில வகை கிருமிகள் மின்னாற்றலை உற்பத்தி செய்து, அதனை சேமித்து வைக்கும் தன்மை படைத்தவை. இவ்வகைக் கிருமிகளை ஆய்வு செய்து, உயிரி மின்கலம் ( பயோ பேட்டரி ) தயாரிக்கும் ஆய்வில் விஞ்ஞானிகள் ஈடுபட்டுள்ளனர்.
இதனைக்கொண்டு நீர்மூழ்கி கப்பல்கள் மீயொலிகளைக் கண்டுபிடிக்கும் கருவி, கலங்கரை விளக்குகள், மின் சைகை விளக்குகள் போன்றவற்றில் இவ்வகை பயோ பேட்டரிகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.
இவ்வளவு ஏன் ? நாம் தூக்கி போடும் பிளாஸ்டிக் குப்பைகளை பல ஆயிரம் ஆண்டுகளுக்கு இந்த மண்ணால் சிதைக்கவே முடியாது என்று கூறுகிறோமே.... இந்த பிளாஸ்டிக்கை சில கிருமிகள் உண்டு பழகியிருக்கின்றன என்பதை விஞ்ஞானிகள் கண்டு ஆச்சரியப்பட்டுள்ளனர். இவ்வகை கிருமிகளை வைத்து பிளாஸ்டிக் கழிவுகளை உருமாற்றும் ஆய்வுகள் நடந்து வருகின்றன.
இந்த உலகம் பிரபஞ்ச வெடிப்பில் இருந்து உருவான போது, பூமியின் வளிமண்டலம் முழுவதும் கார்பன் டை ஆக்சைடு என்னும் கரியமில வாயுவாகவே இருந்தது. இந்த வாயு மண்டலத்தை சிதைத்து , ஆக்சிஜனாகவும், கார்பனாகவும் மாற்றியது வளிமண்டல கிருமிகள்தான்.
சூரியனின் கதிர்வீச்சிலிருந்து நம்மை பாதுகாக்கும் ஓசோன் மண்டலமும் கிருமிகளின் துணையோடுதான் உருவானது.

சந்திரனில் இதுபோன்ற ஓசோன் படலம் அல்லது வளிமண்டலம், என்று எதுவும் சந்திரனில் கிடையாது. எனவே, அங்கே சூரியக்கதிர்கள் நேரடியாகத் தாக்கும். .
நம்மைச்சுற்றி இருக்கும் வளிமண்டலம்தான் விண்ணிலிருந்து ஏற்படும் ஏராளமான ஆபத்துகளிலிருந்து நம்மைப் பாதுகாக்கிறது.
ஓசோன் படலம் பற்றி குர்ஆனில் அல்லாஹ் " நாம் வானத்தை (வளிமண்டலத்தை) பாதுகாக்கப்பட்ட முகடாக ஏற்படுத்தியிருக்கிறோம்" (குர்ஆன் 22:32)

இவ்வளவு வேலைகளை செய்யும் கிருமிகள், எண்ணிக்கையில் இவ்வுலகில் வாழும் எல்லா உயிரினங்களையும் விட அதிகம். கிருமிகளின் எண்ணிக்கை குறித்து நம் விஞ்ஞானிகள் ஒரு அனுமானக் கணக்கை வெளியிட்டிருக்கிறார்கள். பூமியிலிருக்கும் கிருமிகளின் எண்ணிக்கை 5 x 1030 .பத்தின் மடங்கு முப்பது என்பதை, ஐந்தோடு பெருக்கிக் கொள்ளுங்கள் .அதாவது
5 x 100000 00000 00000 00000 00000 00000 இவ்வளவு எண்ணிக்கையில் நம் பூமியில் கிருமிகள் வாழ்கின்றனவாம். இத்தனை கிருமிகளில் மொத்தம் 85 லட்சம் வகைகள் உள்ளன. இதில் நோய் பரப்பும், தீமைகள் செய்யும் கிருமிகள் என்று நாம் பயந்து ஓடும் கிருமிகள் 85 லட்சத்தில் ஐந்து சதவிகிதம்தான்.
அல்லாஹ் கிருமிகளைக் கொண்டும் நம்மை பாதுகாக்கிறான்.

**கிருமிகளின் உலகம் 10**
( இயற்கை வளத்தில் கிருமிகள்)




கிருமிகள் எப்படி இயற்கை சுழற்சியில் பங்கு பெறுகின்றன ? கிருமிகளின் வகைகளில் வாயுக்களை உணவாக கொள்பவை. வேதியல் பொருட்களை உணவாக கொள்பவை. உலோகங்களை உணவாகக் கொள்பவை இன்னும் இது போன்று உலகில் உள்ள எல்லாப் பொருட்களையும் உணவாகக் கொள்ளக் கூடிய கிருமிகள் என பிரிக்கலாம். பூஞ்சை, பாக்டீரியா, ஆல்கா, வைரஸ் என்று பல்வகை கிருமிகள் விதவிதமான உணவுகளை உட்கொண்டு வருகின்றன.

மெக்சிக்கோ ஆறுகளில் கலந்துள்ள தங்கத்தை பிரித்தெடுக்க உலோகம் திண்ணும் கிருமி வகையான குளோரல்லா வல்காரிஸ் என்ற ஆல்கா கிருமி பயன்படுத்தப்படுகிறது.
உணவு என்று சொன்னவுடனே நாம் சாப்பிடுகிற உணவு வகைதான் நமக்கு நினைவுக்கு வரும். இட்லி, தோசை, பூரி , பிரியாணி என்று ...ஆனால் ஒவ்வொரு உயிரினத்திற்கும் உணவு என்பது வெவ்வேறானது உதாரணமாக.., மனிதர்கள் உண்டுவிட்டு கழித்தெறியும் எலும்புகளும், கால்நடைகளின் சாணங்களும், கரிக்கட்டைகளும் ஜின்களின் உணவாகும்.
சாப்பிடுவதற்கு இவற்றில் ஒன்றுமில்லையே என்று நமக்குத் தோன்றினாலும், ஜின்களுக்கு அதில் அல்லாஹ் நிறைவான உணவை வைத்துள்ளான்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். என்னிடம் “நஸீபீன்’ என்னுமிடத்தைச் சேர்ந்த ஜின்களின் குழு ஒன்று வந்தது. அவை நல்ல ஜின்களாயிருந்தன. அவை என்னிடம் உணவு தரும்படி கேட்டன.
நான், “அவை எந்த எலும்பையும், எந்த கெட்டிச் சாணத்தையும் கடந்து சென்றாலும் அதில் உணவைப் பெற்றுக் கொள்ள வேண்டும்” என்று அல்லாஹ்விடம் அவற்றுக்காகப் பிரார்த்தித்தேன்.”என்று பதிலளித்தார்கள்.
அபூஹுரைரா (ரலி), புகாரி (3860)

கிருமிகள் சாப்பிடும் உணவுகள் பெரும்பாலும் நாம் கழிவு என்று புறக்கணிப்பவை . இப்படி கழிவுகளை சாப்பிட்டு, உலகை சுத்தம் செய்கின்ற வேலையை கிருமிகள் நன்கு செய்கின்றன.
அதுபோல, வேதிப்பொருட்கள் கூட்டாக அமைந்துள்ள கலவையில் ஒரு வேதிப்பொருளை மட்டும் கிருமிகள் உணவாக உட்கொள்ளும்போது, அவ்வேதிப்பொருளின் மூலக்கூறு சேர்மானங்கள் உடைந்து உருமாறுகின்றன. இதனால் வேதியியல் கூறுகள் மாற்றமடைகின்றன உதாரணமாக.,
கரியமிலவாயு என அழைக்கப்படும் கார்பன் டை ஆக்சைடில், கார்பனும், ஆக்ஸிஜனும் கலந்திருக்கின்றன. வளிமண்டலத்தில் இருக்கும் ஒருவகை கிருமி இந்த பிணைப்பை உடைத்து விடுகிறது. இதன் விளைவால் ஆக்ஸிஜனும், கார்பனும் தனித்தனியாக பிரிந்து விடுகின்றன. இதனால் நாம் சுவாசிக்க ஆக்ஸிஜன் கிடைக்கிறது. இறைவன் செய்த இந்த ஏற்பாட்டை என்னென்பது,
"காற்றை நற்செய்தியாக அவன் அனுப்பி வைப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் ஒன்றே." (குர்ஆன் : 30:46)
இந்த வகை கிருமிகளை பயன்படுத்தி, செவ்வாய், வியாழன் போன்ற கிரகங்களில் ஆக்ஸிஜனை உருவாக்க முடியுமா.. என்று விஞ்ஞானிகள் ஆய்வு செய்து கொண்டிருக்கின்றனர்.

கிருமிகளின் இயல்பு, ஒன்றை இன்னொன்றாக மாற்றுவதில் பங்குபெறுவது, ஆக பூமியில் நிகழும் ஒவ்வொரு மாற்றங்களுக்கான அடிப்படை காரணியே கிருமிகள்தான். இதை புரிந்துகொண்டு கிருமிகள் தொடர்பான ஒவ்வொரு நன்மையும் ஒருமுறை யோசித்துப் பார்த்தால், கிருமிகள் வேலை என்ன என்பது நமக்கு புரியவரும். உலகம் முழுவதும் வாழும் கிருமிகள் இறைவானால் படைக்கப்பட்டிருப்பது என்பது , நமக்கு ஏதேனும் ஒரு வகையில் நன்மை செய்துகொண்டே இருக்கத்தான் என்பதையும் நீங்கள் விளங்கிக் கொள்ள வேண்டும்.

**கிருமிகளின் உலகம் 11**
( ஆண்டிபயாடிக் அபாயம் )




وَفِىْۤ اَنْفُسِكُمْ‌ؕ اَفَلَا تُبْصِرُوْنَ

உங்களுக்கு உள்ளாகவும் (பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அவைகளை) நீங்கள் ஆழ்ந்து கவனித்துப் பார்க்க வேண்டாமா ? (குர்ஆன் : 51:21)
நம்முடைய உடலில் கிருமிகள் என்ன செய்து கொண்டிருக்கின்றன ? உலகில் மாற்றங்களை உருவாக்கும் கிருமிகள் அதேவிதமான வேலைகளை நம் உடலிலும் செய்துகொண்டுதான் இருக்கின்றன. நம் உடலின் ஒவ்வொரு மாற்றத்திற்கும் அடிப்படையாக அமைவது கிருமிகளின் வேலைகள்தான்.
நாம் உண்ணும் உணவு செரிப்பதில் இருந்து, அவை ஊட்டச்சத்துக்களாக மாற்றப்படும் வரை கிருமிகளின் பணி மிக முக்கியமானது. மனித உடலில் சராசரியாக சுமார் 90 ட்ரில்லியன் கிருமிகள் வாழ்ந்து வருவதாக மருத்துவ விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.
இந்தக் கிருமிகள், நம் உடலில் உணவு செரித்தல், கழிவுகளை அகற்றுதல், ஒரு தன்மையில் இருந்து இன்னொரு தன்மைக்கு உணவையும் , கழிவுகளையும் மாற்றுதல் போன்ற வேலைகளைச் செய்கின்றன.
உலகம் உருவாவதற்கும், அது இயங்குவதற்கும் எப்படி கிருமிகள் காரணமோ, அதே போல உடல் உருவாவதற்கும், அதன் சத்துகள் உருவாவதற்கும், உடல் இயங்குவதற்கும் கிருமிகள்தான் காரணம்.
கிருமிகளில் சில தீமை செய்கின்றன என்ற எண்ணத்தில் நாம் அவற்றை கொல்வதற்காக பல சதித் திட்டங்களைத் தீட்டுகிறோம். உடலுக்கு வெளியே நாம் செய்யும் வேலைகளில் உலகின் மாற்றத்தை தீர்மானிக்கும் கிருமிகள் தற்காலிகமாக அழிந்துவிடுகின்றன. பின்பு, அவை மீண்டும் பிறக்கின்றன. ஆனால் , உடலுக்குள் இருக்கும் கிருமிகளை நாம் என்ன செய்கிறோம் ?
தீமை செய்யும் வைரஸ், பாக்டீரியாக்கள் போன்றவற்றை அழிப்பதற்காக , நாம் ஆண்டிபயாடிக் மருந்துகளைச் சாப்பிடுகிறோம். ஆன்டிபயாட்டிக் என்றால் என்ன ?
'பயோ' என்றால் உயிர் .ஆண்டி என்றால் ' எதிரான ' என்று பொருள். இதை தமிழில் சொல்வதானால், " நுண்ணுயிர் கொல்லிகள்" என்று அழைக்கலாம்.

நுண்ணுயிர் கொல்லி மருந்துகளை நாம் சாப்பிடும்போது, என்ன நடக்கிறது ? நாம் உணவுக் குழாய் வழியாக வழியே உள்ளே செல்லும் நுண்ணுயிர் கொல்லி, அங்கு வாழும் எல்லாவிதமான கிருமிகளையும் கொல்லுகிறது. கிருமிகளில் பெரும்பாலானவை நன்மை செய்பவை என்று விஞ்ஞானிகள் ஒருபுறம் கூறினாலும், நன்மை செய்யும் கிருமிகளை வளர்ப்பதற்கு என்று எந்த விஷயத்தையும் நாம் இன்னும் கண்டு பிடிக்கவில்லை. அதற்கு மாறாக ,உடலில் வாழும் எல்லா விதமான கிருமிகளையும் கொல்லும் மருந்துகளை உள்ளே அனுப்புகிறோம் .

நாம் சாப்பிடும் நுண்ணுயிர் கொல்லிகள், நல்ல பாக்டீரியாக்களை ஒருபுறம் ஒதுங்கச் சொல்லிவிட்டு, கெட்ட பாக்டீரியாக்களை மட்டும் தனியே அழைத்து அழிக்குமா என்ன ?
எல்லாவிதமான நுண்ணுயிர்களையும் அவை உடல் மாற்றத்திற்கு எந்த வகையில் உதவும் என்றெல்லாம் கேள்விகள் கேட்டுக்கொண்டிராமல், கொல்வதுதான் நுண்ணுயிர்க் கொல்லிகளின் வேலை.

இப்படி கொல்லப்படும் நுண்ணுயிர்களால் உடலின் நன்மைக்கான வேலைகளும் நின்றுவிடுகின்றன. அதனால் ஏற்படும் தொந்தரவுகளைத்தான் நாம் மருந்துகளின் பின்விளைவுகள் என்று அழைக்கிறோம்.
அதனால்தான் சமீபத்தில் நடைபெற்ற குழந்தைகள் சிறப்பு மருத்துவர்கள் மாநாட்டில், நுண்ணுயிர் கொல்லி மருந்துகளை குழந்தைகளுக்கு பரிந்துரைக்க கூடாது என்று முடிவை நம் நாட்டு ஆங்கில மருத்துவர்கள் அறிவித்தார்கள்.

தமிழ்நாடு மக்கள் நல்வாழ்வு துறை அமைச்சகமும் தன் பங்குக்கு, காய்ச்சல், சளி போன்றவற்றுக்காக ரசாயன மருந்துகளை பரிந்துரைக்கக் கூடாது என்று மருத்துவர்களுக்கு அறிவுறுத்தியுள்ளது .

**கிருமிகளின் உலகம் 12**
(கிருமிகளைப் பரப்பும் அற்பக் கொசு)



ஆரோக்கியமான மனித உடலில் புகுந்து எதிர்ப்பு சக்தியை சீர்குலைத்து உடலின் இயக்கத்தை பாதிப்பதாக மருத்துவம் கூறுகிறது நன்றாக வாழ்ந்து கொண்டிருக்கிற ஒருவரின் உடலில் கிருமிகள் புகுந்து கொண்டால், அவர் நோய்வாய்ப்படுவார். கிருமிகள் செய்யும் மிக முக்கியமான தீமையாக சொல்லப்படுவது நோய்களை ஏற்படுத்துவது.
அப்படியானால் இந்த தீமை செய்யும் கிருமிகளை ஒட்டுமொத்தமாக அழித்து விட்டால், எந்த மனிதரும் நோய்வாய்ப்பட மாட்டார் அல்லவா ?
இங்குதான் சிக்கல். தீமை செய்யும் கிருமி என்பது ஒன்றல்ல பல பாக்டீரியாக்கள், வைரஸ்கள் என்று ஒவ்வொரு நோய்க்கும் ஒவ்வொரு கிருமி காரணம். உதாரணமாக, டைபாய்டு காய்ச்சல் ஏற்படுவதற்கு டைபாய்டு கிருமிகளும், பன்றி காய்ச்சல் ஏற்படுவதற்கு ஹெச்1 என்1 வைரஸும் , டெங்கு காய்ச்சல் ஏற்படுவதற்கு ஆர்போ வைரஸும் காரணம். இப்படித்தான் நம் மருத்துவ அறிவியல் கிருமிகளின் தீமைகளை பட்டியலிடுகிறது.
நிச்சயமாக, அல்லாஹ் கொசுவையோ அதைவிட அற்பமானதையோ உவமானமாகக் காட்டுவதற்கு வெட்கப்படுவதில்லை. – அல்குர்ஆன்.2:26.

உருவத்தில் மிக சிறியதாக, அற்பமானதாக இருந்தாலும், மனிதர்களுக்கு ஏற்படுத்தும் பாதிப்புகளில் கொசுக்களே முதலிடத்தில் இருக்கின்றன. மலேரியா, டெங்கு, யானைக்கால் நோய், மூளைக்காய்ச்சல், ஜிக்கா வைரஸ் போன்ற நோய்களுக்கு கொசுக்களே காரணமாக இருக்கிறது.
குறிப்பாக ‘அனாபெலஸ்” பெண் கொசுக்கள் மூலம்தான் மலேரியா,டெங்கு போன்ற நோய்கள் மனிதர்களுக்குப் பரவுகிறது.

உலகளவில் 2015 ஆண்டு கணக்கின்படி சுமார் 21.2 கோடிப் பேர் மலேரியாவால் பாதிக்கப்பட்டுள்ளனர். மேலும் 4.2 லட்சம் பேர் உயிரிழந்துள்ளனர். 90 சதவீதம் பாதிப்பு ஆப்பிரிக்க நாடுகளில்தான் ஏற்படுகிறது என்கிறது உலக சுகாதார நிறுவனம்.
அல்லாஹ்வின் படைப்பில் பெரும் பெரும் ஜீவராசிகள் இருந்தாலும்,நாம் அற்பமாக கருதும் கொசுவின் மூலம் நமக்கு உதாரணங்கள் காட்டுவதிலிருந்தே, கொசுவின் படைப்புத்தன்மையின் சிறப்பியல்புகளை அல்லாஹ் ஆராய்ந்து பார்க்கக் சொல்லுகின்றான்.
அல் குர்ஆன்.2:26 வசனத்தில், “கொசுவையோ அதைவிட அற்பமானதையோ” என்று கூறுவதன் மூலம் கொசுவை விட அற்பமான உயிரிகளும் உண்டு என்ற அறிவியல் உண்மையை உலகிற்கு உணர்த்துகின்றான்.
மலேரியா,டெங்கு போன்ற நோய்களை பரப்புவதில் அற்பமான கொசு மட்டும் பங்கெடுப்பதில்லை...அதைவிட அற்பமான ஒட்டுண்ணிகளும் (Parasites) இணைந்தே நோய்களை பரப்புகின்றன என்ற அறிவியல் உண்மையும் அவ்வசனத்தில் தொக்கி நிற்கிறது.

மலேரியா நோய்க்கு முதல் காரணியாக இருப்பது கொசுக்கள் அல்ல.ஒரு செல் உயிரியாகிய "பிளாஸ்மோடியம்" (Plasmodium) என்ற ஒட்டுண்ணியாகும். அனோபிலிஸ் என்ற பெண் கொசுவானது நோய் தொற்றுள்ள மனிதரை கடித்து இரத்தத்தை உறுஞ்சுகிறது. இந்த ஒட்டுண்ணி கலந்த இரத்தமானது பெண் கொசு முட்டைகளை உற்பத்தி செய்ய உதவுகிறது.

பின்பு கொசுவின் வயிறு வெடித்து வெளியேறும் பிளாஸ்மோடியம் ஒட்டுண்ணி, கொசுவின் எச்சில் வழியாக வெளியேறி கடிபடும் மனிதர்கள் இரத்தத்தில் கலந்து மலேரியா நோயை பிற மனிதர்களுக்கு பரப்புகின்றது. மனிதர்களுக்கு நோயை பரப்புவது அற்பமான கொசுவும் அதைவிட அற்பமாக கொசுவிலேயே இருக்கும் பிளாஸ்மோடியம் ஒட்டுண்ணி என்ற உயிரியுமே! இத்துடன் அற்ப கொசுவின் ஆச்சரியம் முடிந்துவிடுவதில்லை. பொதுவாக கொசு மனிதரின் மேல் அமர்ந்து தோலை துளைத்து, இரத்தம் உறுஞ்சி, பறந்து சென்ற பின்னரே நமக்கு கடிபட்ட இடம் வலிக்கிறது. அதற்கு முன்பு கொசு அமர்வதையும் பின்பு பறப்பதையும் உணர்வதில்லை.நாம் கொசுவை அடிப்பதற்குள் அது தப்பிப் பறக்கும் மர்மத்தை ஆய்வாளர்கள் ஆய்வு செய்தனர்.

நெதர்லாந்து நாட்டு பல்கலைகழக ஆய்வாளரான புளோரியன் மிஜ்ரெஸ் (Florian Muijres a biomechanics researcher at Wageningen University in the Netherlands) அமெரிக்கா பல்கலைக்கழக ஆய்வாளர்களுடன் சேர்ந்து ஆய்வு செய்து,மனித இரத்தம் குடித்த கொசு நமது கைகளில் அடிபடாமல் தப்பிப் பறக்கும் மர்மத்தை இந்த மாத அக்டோபர் (18 , 2017 Journal of Experimental Biology) ஆய்விதழில் வெளியிட்டனர்.
பொதுவாக கொசுவை போன்றுள்ள ஈக்கள், பறக்கும் பூச்சிகள் முதலியவை மனித உடலில் அமர்ந்து மீண்டும் பறக்கும் போது தமது கால்களை நம் உடலில் அழுத்தி உந்தித் தள்ளியே பறக்கின்றன.ஆனால் நமது அற்ப கொசு புதுவிதமான ஏரோடைனமிக் தொழில் நுட்பத்தை பயன்படுத்தி பறந்து செல்கிறது.
மூன்று அதிவேக கேமிரா (Shooting at 125,000 frames per second.) மூலம் கொசுக்கள் இரத்தம் உறுஞ்சிய பின், பறக்கும் நுட்பத்தை ஆய்வு செய்தனர்.

ஒரு கொசு இரத்தம் குடித்தபின் அதன் எடை இரண்டு அல்லது மூலம் மடங்கு அதிகமாகிவிடும்.இந்த அதிக எடையை தூக்கிகொண்டு பறப்பதற்கு, பிற பூச்சி,மற்றும் ஈக்கள் தங்களின் கால்களால் உந்தித்தள்ளிய பிறகே சிறகை அடிக்க ஆரம்பிக்கும்.
ஆனால் கொசு, தன் நீண்ட கால்களால் தோல் பரப்பை அழுத்தாமல் தங்களின் சிறகுகளை அதி வேகத்தில் அடித்து ஹெலிகாப்டர் போன்று அலக்காக தூக்கி எழும்புகின்றன.
பறப்பதற்கு 30 மில்லி நொடிகளுக்கு முன்பே சிறகை அடிக்க ஆரம்பித்துவிடுகின்றன. ஹெலிகாப்டர் மாதிரியே. அதுவும் உயர் வேகம், நொடிக்கு 600 முதல் 800 தடவை இறக்கையை அடிக்கின்றன.
கொசுவின் எடையுள்ள பிற பூச்சிகள் பறப்பதற்கு நொடிக்கு 200 தடவையே இறக்கையை அடிக்கும். இந்த உயர் வேகத்தில் இறக்கையை அடித்து பறப்பதால், தன் எடையை விட இரு மடங்கு இரத்தத்தை சுமந்து கொண்டு பறப்பது அதற்கு எளிதாக இருக்கிறது.
மேலும் மனிதர்களின் தோல் பரப்பை அழுத்தாமல் உயர எழும்புவதால், நமக்கு கொசு அமர்வதும், பின் எழுவதும் நம்மால் உணர முடிவதில்லை.

சாதாரணமாக பழ ஈக்கள் (Fruit fly) ஓரிடத்தில் அமர்ந்து பின் எழுந்து பறப்பதற்கு எடுத்துக்கொள்ளும் சக்தியை விட சுமார் நான்கு மடங்கு சக்தியை கொசுக்கள் எழும்பிப்பறக்க எடுத்துக்கொள்வதால், நம் உடலானது அதன் தொடு உணர்வை அறிய முடிவதில்லை.
எனவே நம்மால் கொசுவை அடிக்க முயர்ச்சிப்பதற்குள் அது பறந்து விடுகிறது.பறப்பதற்கு தேவையான சக்தியில் சுமார்

61% இறக்கைகளின் உயர்வேகத்திற்கே செலவிடப்படுகிறது.
அற்ப கொசுவின் இறக்கைகளுக்கு அல்லாஹ் கொடுத்த ஆற்றலால் அவைகள் மனிதர்களின் கைப்பிடியிலிருந்து எளிதாக தப்பி, தன் வாழ்வாதாரத்தை பெருக்கிகொண்டும் அல்லாஹ் நாடியவர்கள் மீது நோய்களை பரப்பிக்கொண்டும் பறந்து திரிகிறது.
கொசுவின் இறக்கையின் மதிப்பை அதன் ஆற்றலை அறிவியல் மூலம் பார்த்து விட்டோம். கொசுவின் இறக்கைகளுக்கு மதிப்புள்ளதா? என்ற கேள்விக்கு
ஆம் ! அல்லாஹ்வை நிராகரித்து நரகத்தில் விழும் மனிதர்களை விட அதற்கு மதிப்புள்ளது என்பதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
மறுமை நாளில் உடல் பருத்த கொழுத்த மனிதன் ஒருவன். வருவான். அல்லாஹ்விடம் கொசுவின் இறக்கையளவு எடை கூட அவன் (மதிப்புப்) பெறமாட்டான்.
" மறுமை நாளில் அவர்களின் செயல்களுக்கு எந்த எடையையும் நாம் ஏற்படுத்த மாட்டோம்." ( 18:105) எனும் இறை வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.
அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலி) நூல்: ஸஹீஹ் முஸ்லிம்.5370.

அல்லாஹ்வை ஏற்றுக் கொண்ட நல்லடியார்களுக்கு அற்ப கொசுவின் மூலமும் நல்லுபதேசம் செய்வதில் அல்லாஹ் வெட்கப்படுவதில்லை. ஆனால் நிராகரிப்பாளர்களோ "இத்தகைய உதாரணங்களைக் கொண்டு அல்லாஹ் எதை நாடுகின்றான்? என ஏளனமாக கேட்கிறார்கள்.
இந்த கொசு என்ற ஒரே விசயத்தைகொண்டு அல்லாஹ்வின் நல்லடியார்கள் அவனின் ஆற்றலை அறிந்து கொண்டு அவனுக்கு நன்றி செலுத்துகிறார்கள்.
நிராகரிப்பாளர்களோ நாளை மறுமையில் கொழுத்த மனிதனாக வந்தும், அற்ப கொசுவின் இறக்கைக்குள்ள எடை மதிப்பு கூட இல்லாமல் நரக நெருப்பில் எறியப்படுவார்கள்.
ர.ரா

**கிருமிகளின் உலகம் 13**






முதல் உலகப் போர் 1914- ஜூலை 28 ஐரோப்பியாவில் தொடங்கியது சுமார் 70 மில்லியன் போர் வீரர்கள் யுத்தத்தில் ஈடுபட்டனர் . 40 மில்லியன் வீரர்களுக்கு காயம் ஏற்பட்டது. இதில் 20 மில்லியன் போர் வீரர்கள் ஆன்டி செப்டிக் மருந்து கண்டுப்பிடிக்காத காரணத்தால் போர் புண்களில் பாக்ட்ரியா தொற்றி இறந்தனர் .
1918 நவம்பர் 11ல் முதல் உலகப் போர் முடிவடைந்தது. அது வரை ஆன்டி செப்டிக் என்றால் என்ன என்பது கூட இந்த உலகத்திற்கு தெரியாமல் போர் வீரர்கள் முதல் வீட்டில் ரோட்டில் சாதாரண நோயாளிகள் கூட காயம் பட்டு செப்டிக்காகி இறந்து போயினர் .

1928-ல் இலையுதிர் காலத்தில் ஒரு மாத கால விடுமுறைக்கு பின்னர் அன்றுதான் தனது ஆராய்ச்சி சாலை சாதாரண ஒரு விஞ்ஞானி அலெக்சாண்டர் ஃபிளமிங் (1881-1955) திறந்தார்.
தான் ஆராய்ச்சி செய்யும் மேஜை மீது ஒரு மாதத்திற்கு முன்பு தான் சாப்பிட்ட ரொட்டி துண்டின் மிச்சங்கள் பூசனம் பூத்து நாற்றம் அடித்துக் கொண்டிருந்தன.
அதே நேரத்தில் தான் ஆய்வு செய்ய வைத்திருந்த நிமோனியா முதற்கொண்டு மனிதனுக்கு பலவிதமான வியாதிகள் வரக் காரணமான " staphylococcus " என்ற பாக்ட்ரியாக்கள் ரொட்டி பூசன பூஞ்ஞாங்களால் கொல்லப்பட்டிருப்பதைக் கண்டு ஆச்சரியத்தின் ஆகாயத்தில் பறந்தார் ஃபிளமிங் .
உலக விஞ்ஞானிகள் அத்தனை பேரும் பாக்டிரியாவை வதம் செய்து கொல்லும் ஆயுதத்தை மைக்ராஸ் கோபுக்கு அடியில் தேடிக் கொண்டிருக்கும்போது , ஊசிப் போன உணவு பூசனத்தில் அதற்குரிய ஆயுதம் அழகாக பூத்திருந்தது .

தனது உடம்பையை சோதனை சாலையாக்கி வில்லன் பாக்டீரியாக்களை தனது உடம்புக்குள் செலுத்தி காய்ச்சல் வந்ததும் பூசனத்தால் உருவாக்கப்பட்ட மருந்தை தனது உடம்பில் செலுத்திக் கொண்டார்.சில மணி நேரங்களில் காய்ச்சல் காணாமல் போனது .
ரொட்டி துண்டு பூசனத்தை மைக்ராஸ்கோப் அடியில் பார்த்த போது அது அவருக்கு ஓவியம் தீட்டும் பிரஸ் மாதிரி தெரிந்தது. "பென்சிலின் " என்றால் இத்தாலியில் ஓவிய தூரிகை .
1939-ல் இரண்டாம் உலகப் போர் ஆஸ்திரேலியா விஞ்ஞானி தர்பூசணி பழத்திலிருந்து பென்சிலீனை பெருமளவு தயாரித்து காட்டினார். யுத்த வீரர்களுக்கு பென்சிலீன் இருக்கும் வரை உயிர் கூட பிரியாது என்று சொல்லி வைக்கப்பட்டது

இரண்டாம் உலக யுத்தம் உயிர் காக்கும் மருந்து இருப்பதால் , போர் முன்னை விட உக்கிரமாக நடந்தது.
பாக்ட்ரியாவால் இன்ஃபெக் ஷன் ஆனால் என்ன செய்வது ? என்ற பயத்தில் அறுவை சிகிச்சை பக்கம் திரும்பாமல் இருந்த உலக மருத்துவர்கள் பென்சிலீன் இருக்க பயம் ஏன் ? என்று நிறைய ஆப்ரேஷன்கள் நடந்தது.
எத்தனையோ வருடங்கள் நோயுடன் போராடிய நோயாளிகள் ஆப்ரேஷன்களால் நிவாரணம் பெற்றனர்.
மனித இனத்துக்கு இந்த மாமருந்ததைக் கொடுத்தாலும் ஃபிளமிங் அதற்கான தொகையை வாங்கிக் கொள்ளவே இல்லை. பென்சிலீனுக்கு காப்புரிமை பெற்றிருந்தால் , மிகப் பெரிய கோடீஸ்வராக திகழ்ந்திருக்கலாம். அதை அவர் விரும்பவில்லை . கேட்டதற்கு "இயற்கை அன்னை எனக்கு இலவசமாக அளித்துக் கொடுத்ததை அவளின் மக்களுக்கு நான் விற்பனை செய்ய மாட்டேன் " என்றார்

وَاِذَا مَرِضْتُ فَهُوَ يَشْفِيْنِ ۙ
நான் நோயுற்ற தருணத்தில் அவனே என்னை குணப்படுத்துகிறான். (குர்ஆன் : 26:80)
ஃபிளமிங்கின் உயிர் காக்கும் கண்டுபிடிப்புக்காக 1945 -ம் ஆண்டு நோபல் பரிசு வழங்கி உலகம் இவருக்கு நன்றி செலுத்தியது .

நபி அய்யூப் (அலை) செழிப்புடன் வளமான வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்த போது . நோய் தொற்றி நாளுக்கு நாள் சொரிந்து, சொரிந்து உடல் முழுவதும் புண்ணாது சில சமயம் கற்களைக் கொண்டும் , இரும்பு துண்டுகளைக் கொண்டும் சொரிவார்கள் இதனாலும் உடம்பில் செப்டிக் ஆகி புண் பரவலாகி ரொம்பவும் கஷ்டப்பட்டார்கள். நபியவர்களின் உடலில் பன்னிரண்டாயிரம் புழுக்கள் இருந்ததை "பன்னிரெண்டாயிரத்தை எளிதில் வென்று விட முடியாது மேலும் இந்த நோயால் பதினெட்டு ஆண்டுகள் துன்புற்றனர்கள் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .
பின் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் "உம்முடைய வலக் காலை மண்ணிலே மிதியும் " என்றார்கள் .அங்கு ஒரு வெந்நீர் ஊற்று தோன்றியது .அதில் குளித்தார்கள் . நோய் நீங்கப் பெற்றார்கள் அதன் பின் 40 அடி நடந்து "உமது இடது காலைக் கொண்டு மண்ணிலே மிதியும் " என்றார்கள்

اُرْكُضْ بِرِجْلِكَ هٰذَا مُغْتَسَلٌۢ بَارِدٌ وَّشَرَابٌ
(அதற்கு நாம்) "உங்களுடைய காலை(ப் பூமியில்) தட்டுங்கள்" (என்று கூறினோம். அவர் தட்டவே ஓர் ஊற்று உதித் தோடியது. அவரை நோக்கி) "இதோ நீங்கள் குளிப்பதற்கான குளிர்ந்த நீர். (இதுவே உங்களது) பானமுமாகும்" என்று கூறினோம். (அதனால் அவருடைய நோய்கள் குணமாகி விட்டன.) (குர்ஆன் : 38:42)
அங்கு ஒரு குளிர் நீர் ஊற்று தோன்றியது அதனை வயிறு நிரம்ப அருந்தினார்கள் .நபியவர்களின் உடல் பொன்போல் மின்னியது.

சிரியாவில் உர்துன் மாநிலத்தில் நாவா என்னும் ஊருக்கு அருகில் "அய்னே அய்யூப் " என்ற பெயருடன் நீர்ச்சுனனகள் இன்றும் உள்ளது நோயாளிகள் குளித்து நோய் நீங்கப் பெறுவதாக ரெளஸதுஸ் ஸபாவில் குறிப்பிடப்பட்டுள்ளது
அய்யூப் நபி (அலை) அவர்களுக்கு நீர்ச் சுனைகள் மூலம் தீர்க்க முடியாத நோயக்கு நிவாரணத்தை இறைவன் கொடுத்தான் .
நவீன கால மக்களுக்கு "பென்சிலீன் " என்னும் உயிர் காக்கும் மருந்தை ஊசிப் போன உணவு துகள்களில் ஏற்படும் பூஞ்சனங்களிலிருந்து கொடுத்தான் .
அவன் நம்மை காப்பதற்கு என்று முடிவு எடுத்து விட்டால், எதனைக் கொண்டும் காப்பான் என்பதே இப்பதிவின் இழையோடி இருக்கும் கருத்து .
சிறு விபத்தின் போது எனக்கு பிட்டியில் போடப்பட்ட இன்ஜெக்ஷனில் ஒன்று பென்சிலீன் .அப்போவே நினைவு கூர்ந்தேன் அலெக்சாண்டர் ஃபிளமிங்கை .
( இத்துடன் கிருமிகளின் உலகம் தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது )

**சன்மார்க்க சாதனையாளர் விருது சமர்ப்பணம்**

"நீல முற்றக் கடல் முழுதும் மையால் நேமி
வான் முழுதும் கடிதாசியாய்
தாலமுற்ற மரமுழுதும் கலம் தானுண்டாக்கி
மலக்கு மனிதரும் சீலமுற்றிடும் ஜின் முதல் யாவுமே
சேர்ந்தே எழுதினாலும் அடங்கா தோங்கும்
சாலவுற்ற புகழ் மஹ்மூதரே !"
- ஸலவாத்து சதக்கம் - மீறான் நயினார்ப் புலவர்
"வள்ளல் திருநபியின் வாழ்வதனைக் கற்போரின்
உள்ளம் இனிக்கும், உயிரினிக்கும்
விள்ளும் நூல் பாவினிக்கும்
ஆய்வோர் தம் அறிவினிக்கும்
பாடிடுவோர் நாவினிக்கும்
என்றிடுவேன் நான் "
- மௌலானா ஆலிம் கவிஞர்.
அறிவின் பட்டணமாம் அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா ரசூலே கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களின்
பொற் கமலப் திருப்பாதத்திற்கு சமர்பணம் .

**இன்னொரு பார்வை 1**



குர்ஆன் வசனங்கள் , மற்றும் நிகழ்வுகளுக்கு பிரபலமான சில விளக்கங்கள் சொல்லப்பட்டாலும் , இன்னும் சில விளக்கங்கள் இரண்டாம் தரவாக பின் தங்கிய நிலையில் அந்த கிதாபுகளோடு அவைகள் இருந்து விடுகிறது.
நவீன காலத்தில் **info Tech** தகவல் தொழில்நுட்பத் துறையால் மிக எளிதாக, இருக்கும் இடம் தேடி தகவல்கள் நம்மை வந்தடைகிறது. இதனால் குர்ஆன் விளக்க ஆய்வுகள் பாய்ச்சலிலிருந்து , படுவேகமாக பறக்க ஆரம்பித்திருக்கிறது ! அதற்கு இரண்டாம் தரவுகளும் தேவைப்படுகிறது.
யாருக்கு என்ன மாதிரி விளக்கங்கள் அவர்களின் இல்ஹாமில் உதிக்கும் என்பது யாரறிவர் ?
இந்த இரண்டாம் தரவு விளக்கங்களை அநேகர் தங்கள் பதிவுகளிலோ , தங்கள் சொற்பொழிவுகளிலோ பயன்படுத்தப்படுவதில்லை. அதுவும் மார்க்க அறிஞர்கள் அரும்பாடுபட்டு செய்த ஆய்வுதானே.. ? அதையும் சொல்லி இருக்கலாமே அதுவும் அழகான ஒரு பட்டாம்பூச்சிதானே..? என்ற எண்ணம் எனக்குள் அவ்வப்போது வந்து போகும் .

மார்க்க அறிஞர்கள் செய்த அந்த மகத்தான ஆய்வையும் வெளிப்படுத்தி, இன்னொரு பார்வையாக , மாற்று சிந்தனையாக நண்பர்களுக்கு சொன்னால் என்ன ? என்ற எண்ணம் வர, அதுவே ' இன்னொரு பார்வை ' தொடராக சொல்ல வருகிறேன் .
" நீ உன் ஆன்மாவைத் தேடுகின்றாயா?
சிறையை விட்டு வெளியே வா!
நீரோடையை நீங்கு
கடலில் பாயும் நதியில் சேர்ந்திடு !
இவ்வுலகில் மூழ்கி
அதை உன் சுமையாக்கிக் கொண்டாய் !
இவ்வுலகிற்கு மேலே எழு
இன்னொரு பார்வை உள்ளது ! "
-மௌலானா ரூமி (ரஹ்)
" இவ்வுலகிற்கு மேலே எழு , இன்னொரு பார்வை உள்ளது ! "
என்ற மௌலானா ரூமி அவர்களின் இந்த வரிகள் எனக்குள் பிரபலமான குர்ஆன் விளக்கங்களுக்கு மேலே இன்னொரு விளக்கப் பார்வை உள்ளது . அதைத்தான் சொல்ல வருகிறேன் .
இந்த தொடர் முழுக்க முழுக்க குர்ஆன், ஹதீஸ் ஆய்வு . சில விஷயங்களை சொல்லும்போது, முழுக்கவனமாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஆய்வு என்றாலே சொல்லும்போதுள்ள சுவராசியத்தை விட , அதன் புரிதலின் சுவராசியம் சொக்க வைக்கலாம்.
புலி வாலைப் பிடித்திருக்கிறேன் .

**இன்னொரு பார்வை 2**
( அபாபீல் )



சூரத்துல் ஃபீல்- யானை
அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்
1.யானைப் படையை உமது இறைவன் எப்படி ஆக்கினான் என்பதை நீர் அறியவில்லையா?
2.அவர்களின் சூழ்ச்சியை அவன் தோல்வியில் முடிக்கவில்லையா?
3.அவர்களுக்கு எதிராகப் பறவைகளைக் கூட்டம் கூட்டமாக அனுப்பினான்.
4.சூடேற்றப்பட்ட கற்களை அவர்கள் மீது அவை எறிந்தன. 5.உடனே அவர்களை மெல்லப்பட்ட வைக்கோல் போல் ஆக்கினான். – திருக்குர்ஆன் (105 : 1 - 5)

' **தைரன் அபாபீல்** ' என்பது கொத்துக் கொத்தாக வந்த ஒருவகை கடற்பறவைகளைக் குறிக்கிறது. இதில் அபாபீல் என்பது ஒருமை இல்லாத பன்மைப் பெயர் சொல்லாகும். இதற்கு 'கூட்டம் கூட்டமாக ' என்பதே பொருளாகும்.பலரும் புரிந்து வைத்திருப்பது போன்று அபாபீல் என்பது பறவை இனத்தின் பெயரன்று என்பது இங்கு குறிப்பிடத்தக்கது (தஃப்சீர் இப்னு அபீஹாத்திம்)
எப்படியாயினும் 'அபாபீல்' என்ற சொல்லின் பொருள் அதிகமானவை, ஒன்றன்பின் ஒன்றாக தொடர்ந்து வருபவை என்பதுதான் அர்த்தம் ( தஃப்சீர் அல்பஹ்ருல் முஹீத்)

இப்னு ஹிஷாம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
'அபாபீல் ' என்றால் 'கூட்டங்கள் ' என்பதே பொருளாகும். (இது பன்மையாகும்) இச்சொல்லின் ஒருமையை குறித்து அரபியர்கள் பேசவில்லை.
இப்னு அப்பாஸ் (ரலி), ளஹ்ஹாக் (ரஹ்) ஆகியோர் 'அபாபீல்' என்பதற்கு ' ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வரக்கூடியது' என்றும்,
ஹஸன் அல்பஸரீ, கத்தாதா ( ரஹ்) ஆகியோர் 'அதிகமானது' என்றும்,
முஜாஹித் (ரஹ்) அவர்கள் ' தொடர்ச்சியாக வரும் பல குழுக்கள்' என்றும் பொருள் செய்துள்ளனர்.
அப்துர் ரஹ்மான் பின் ஸைத் (ரஹ்) அவர்கள், "அபாபீல்" என்றால், இங்கிருந்தும் அங்கிருந்துமாக பல பகுதியிலிருந்து வரக்கூடிய பல தரப்பட்டது" எனப் பொருளாகும்." எல்லாப் பகுதியிலிருந்தும் அந்தப் பறவைகள் அவர்களிடம் வந்தன " என்று கூறினார்கள்.
"அந்தப் பறவைகள் பச்சை நிறத்தில் இருந்தன. கடலிலிருந்து கிளம்பி வந்தன. அவற்றின் தலைகள் வனவிலங்குகளின் தலைகள் போன்று இருந்தன 'என இக்ரிமா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.
உபைத் பின் உமைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது: "அல்லாஹ் யானைப் படையினரை அழிக்க நாடியபோது, கடலிலிருந்து உருவாக்கப்பட்ட
பறவைகளை அவர்கள் மீது அனுப்பினான். அதை தூக்கணாங் குருவிகளைப் போன்று இருந்தன ".
இப்னு அப்பாஸ் (ரலி, முஜாஹித் (ரஹ்) ஆகியோர்,
"கூட்டங்கூட்டமாக வந்த அந்தப் பறவைகள் அபூர்வமான (பாலைவனப் பறவை வகையான) ஃபீனிக்ஸ் (அன்காஉ ) பறவைகளைப் போன்று இருந்தன " என்று கூறியுள்ளனர்.
ஆஸ்திரேலியா நாட்டிற்கு குடியேறிய வெள்ளையர்கள் அங்கிருந்த ஆஸ்திரேலியா ஆதிவாசிகளிடம், "இந்த விலங்கின் பெயரென்ன ? "என்று கேட்க,
ஆங்கிலம் தெரியாத அவர்கள் தங்களுக்குத் தெரியாது என்று அவர்களுடைய மொழியில் 'கங்காரு' (தெரியாது) என்றனராம்.
பின்னர் அதுவே இந்த விலங்கின் பெயராகிவிட்டது 'கங்காரு'.
அதுபோலவே அபாபீல் என்றால் 'கூட்டம் கூட்டமாக ' என்று பொருள்படுமே தவிர, அது பறவை இனத்தின் பெயரன்று.
கடந்த சில நாட்களுக்கு முன்னால் ஃபேஸ் புக் மற்றும் வாட்ஸ் அப்பில் அபாபீல் பற்றிய செய்தி மிகவும் பரபரப்பாகப் பரப்பப்பட்டது.

கஃபத்துல்லாஹ்வை அழிக்க வந்த யானைப் படைகளை அழிக்க, அல்லாஹ் அனுப்பிய அபாபீல் பறவைகள் இன்றளவும் உயிரோடு உள்ளன என்ற செய்தி காட்டுத்தீயாய் மக்கள் மத்தியில் பரவியது.
மக்காவை அழிக்க யானைப் படைகள் வந்தபோது, அப்படைகளை அழிக்க இறைவன் அனுப்பிய பறவையினம் அபாபீல். ஆனால் அன்றைய காலகட்டத்தில் கஃபா ஆலயத்தை அழிக்க வந்தவர்களை அழிக்க வந்த பறவை இனம் அன்றைக்கு ஒரே ஒரு நாள்தான் பூமிக்கு வந்தே தவிர இப்போது பூமியில் எங்கேனும் அப்பறவை காணப்படவில்லை.

அபாபீல் பற்றி இறைவனின் தூதர் (ஸல்) அவர்கள் ஏதாவது சொல்லியுள்ளார்களா என்றால் கிடையாது; அபாபீல் என்ற பறவைக் கூட்டத்தை யானைப்படைகளை அழிக்க அல்லாஹ் அனுப்பினான் என்ற செய்தியை இறைவன் தன் வேதத்தில் பதிவு செய்தான் .
சரி , அபாபீல் பறவை எங்கிருந்து வந்து ஏமன் நாட்டு மன்னன் அப்ரஹாவின் யானைப் படைகளை துவசம் பண்ணிவிட்டு எங்கே மறைந்து போனது ?
அபாபீல் வானிலிருந்துதானே வந்தது ? வானிலிலிருந்து வேறு என்ன வந்தது ?
"மர்யமுடைய மகன் ஈஸாவே.. உங்களுடைய இறைவன் வானத்திலிருந்து எங்களுக்காக ஓர் உணவு (ப் பொருள்கள் நிரம்பிய ) தட்டை இறக்கி வைக்க முடியுமா ?" குர்ஆன் ( 5 : 112 )
ஈஸா (அலை) அவர்கள் குளித்து, உளுச் செய்து . கம்பளி உடையணிந்து , இரண்டு ரக்அத்துதொழுது , தலை கவிழ்ந்திருந்து, முஷாஹதாச் செய்து துஆக் கேட்டார்கள் .
உடனே அவரது சமூகத்தார் பார்த்திருக்க ,இரண்டு மேகங்கிடையே சிவப்பு நிறமுள்ள ஒரு ஸுப்ரா (உணவுப் பதார்த்தங்கள் வைக்கப்பட்டுள்ள தட்டு) வானில் இருந்து இறங்கியது .
நபி ஈஸா (அலை) அவர்கள் அந்த தட்டை மூடியிருந்த துணியை " பிஸ்மில்லாஹி கைரிர் ராஜ்க்கீன்" என்று சொல்லி திறந்தார்கள் .அதில் ஏழு ரொட்டிகளும் , ஏழு மீன்களும் இருந்தன. (நூல் : தஃப்ஸீர் தபரீ , இப்னு அபீ ஹாத்திம்)
ஹவாரிய்யூன்களுக்கு தலைவரான ஷம்ஊன் என்பவர் , நபியவர்களிடத்தில் "இது இம்மையிலுள்ள உணவுப் பதார்த்தங்களைச் சேர்ந்ததா ? அல்லது மறுமையிலுள்ள உணவுப் பதார்த்தங்களைச் சேர்ந்ததா ? என்று கேட்டார் .
அதற்கு நபி ஈஸா (அலை) அவர்கள் "அங்குள்ளதும் அல்ல; இங்குள்ளதும் அல்ல ; அல்லாஹ் நூதனமாக இதை உண்டாக்கினான் " என்று கூறி,உணவைச் சாப்பிடச் சொன்னார்கள் .
ஈஸா (அலை) அவர்களுக்கு உணவு தட்டு வானில் எங்கிருந்து வந்ததோ , அங்கு அபாபீல் பறவைகளும் போயிருக்கலாம் அல்லவா ? அல்லாஹ்வே அறிவான் .
படம் : அபாபீல் பறவைகள் அல்ல

**இன்னொரு பார்வை 3**
( சிம்மாசனத்தில் ஒரு முண்டம் )



நபி சுலைமான் (அலை) (سليمان) அவர்கள் நபி தாவூது (அலை) அவர்களின் மகனாவார்கள். அவர்கள் இறைவனிடம் ஒரு கோரிக்கையை வைத்தார்கள். அது 'எவரும் அடைய முடியாத ஓர் அரசாங்கத்தை எனக்கு நீ வழங்குவாயாக!' என்பதுதான் அந்த கோரிக்கை.( 38 : 35 )
அதன்படி அல்லாஹ் அவருக்கு மிகப்பெரும் அரசாங்கத்தை வழங்கினான். பளிங்குகளிலான மாளிகையை அமைத்து வாழ்ந்தார்கள்.

அவர்கள் மனிதர்களை கட்டுப்படுத்தக் கூடியவர்களாகவும் ஜின்களையும் பறவைகளையும் கட்டுப்படுத்தக் கூடியவர்களாவும் இருந்தார்கள்.பறவைகளின் மொழியை அவர்களுக்கு அல்லாஹ் கற்றுக் கொடுத்தான். மேலும் காற்றையும் அவர்களுக்கு வசப்படுத்திக் கொடுத்தான். அந்தக் காற்று அவர்களைச் சுமந்து அவர்கள் விரும்பும் இடத்திற்கு கொண்டு செல்லும். ( 38:36 )

கட்டிடங்களை கட்டும் ஜின்களையும் முத்துக் குளிக்கும் ஜின்களையும் அவருக்கு வசப்படுத்திக் கொடுத்தான். (38: 37)
அப்போறப்பட்ட அரசாங்கத்தில்,துரோகங்கள், சோதனைகள் , இருக்கத்தானே செய்யும் .

وَلَقَدْ فَتَنَّا سُلَيْمٰنَ وَاَلْقَيْنَا عَلٰى كُرْسِيِّهٖ جَسَدًا ثُمَّ اَنَابَ
"நிச்சயமாக நாம் ஸுலைமானை (மற்றொரு விதத்திலும்) சோதனை செய்து, அவருடைய சிம்மாசனத்தில் ஒரு முண்டத்தை எறிந்தோம். உடனே, அவர் நம்மளவில் திரும்பிவிட்டார் " (அல்குர்ஆன் : 38:34)
சுலைமான் நபியிடம் ஊழியக்காரன் ஆக இருந்த "யர்பஆம் " என்பவன் நபி சுலைமான் (அலை) அவர்களுக்கு பரம விரோதியாகி அவர்களுடன் உக்கிரமாக போரிட்டான். இதனால் அரசே ஆட்டம் கண்டு விட்டது. இதுகுறித்து பழைய ஏற்பாடு இராஜாக்கள் 11வது பாடத்தில்,
"நான் உங்களுக்குக் கட்டளையிட்ட, என் உடன்படிக்கையையும், என் கட்டளையும் நீ கைக்கொள்ளாமற் போய் இந்த காரியத்தை செய்தபடியினால், ராஜ்ய பாரத்தை உன்னிடமிருந்து பிடிங்கி, அதை உன் ஊழியக்காரனுக்குக் கொடுப்பேன் " என்று குறிப்பிடப்படுகிறது.
ஆட்சியில் பெரும் புரட்சி ஏற்படும்போது அதனை சமாளிப்பது மிகப்பெரிய பளுவாக இருக்கும். இப்புரட்சிக்கு அரபிய வழக்கில். "சிம்மாசனத்தில் ஓர் உடலை போடப்படுவதாக கூறப்படுவதுண்டு".
இந்த அடிப்படையில்தான் நபி சுலைமானைச் சோதித்தோம். அவருடைய சிம்மாசனத்தில் ஓர் உடலையும் (அதாவது சமாளிப்பதற்கு சிரமமான ஒரு பெரும் சுமையையும் ) போட்டோம் என கூறப்பட்டிருப்பதாக முக்கிய விரிவுரையாளர்கள் கூறுகின்றனர் ( ஹக்கானி)

ஜே.கிருஷ்ணமுர்த்தி சொல்வது போல், " நீங்கள் பேராவல் கொண்டவராகவும் (Ambitious) , உங்கள் சமூகத்தில் ஓர் உயர்ந்த நிலையை அடைய விரும்புவதாகவும், சாதனையை தேடுபவராகவும், வெற்றியை கொண்டாடுபவராகவும் இருக்கின்றபோது , நீங்களே போர் தோன்ற ஒரு காரணமாக இருக்கிறீர்கள்"
நபி சுலைமான் (அலை) அவர்கள் தம்முடைய ஆட்சி தமக்குப் பின்னரும் தமது சந்ததியிலேயே இருந்து வரவேண்டும் என்று எண்ணியவராகத் தமது புதல்வர் "ரஹீப்ஆம் " என்பவரை தமக்குப் பின்னர் ஆட்சி புரிய ஏற்பாடு செய்திருந்தார்.
இதையும் ஒரு சோதனை எனக் கூறப்படுகிறது. ஆட்சி என்பது பொதுவாக இருக்க வேண்டுமேயல்லாமல், ஒரு குடும்பத்திற்கே ஏகபோகமான சொத்தாக இருக்கக்கூடாது என்பதை, அவர்களுக்கு உணர்த்துவதற்காக ஒரு சோதனையை இறைவன் ஏற்படுத்தினான்.

நபி சுலைமான் (அலை) அவர்கள் தேர்ந்தெடுத்த இளவரசர் ரஹீப்ஆம் தகுதி குறைந்த ஓர் இளைஞர். அவர் ஆட்சியில் அமர்த்தப்பட்டார். தாவூத் நபி , சுலைமான் நபி ஆகியோர் ஆட்சி செய்தபடி நான்கு நாள் கூட அவரால் அந்த ஆட்சியை சமாளிக்க முடியவில்லை.இது குறித்தே ஓர் உடலை அவருடைய சிம்மாசனத்தில் போட்டோம் எனக் கூறப்படுவதாக கருதப்படுகிறது.
எனவே சுலைமான் நபி அவர்கள் தமது குடும்பத்திலேயே ஆட்சி இருக்கவேண்டும் என எண்ணியது தவறு என உணர்ந்து, இறைவனிடம் மன்னிப்புக்கோரி மீண்டு விட்டார். இறைவனும் அவரை மன்னித்தான் என்பது இதன் கருத்தாகும்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'
(இறைத்தூதர்) சுலைமான்(அலை) அவர்கள் (ஒரு முறை), 'நான் இன்றிரவு (என்னுடைய) தொண்ணூறு துணைவியரிடமும் சென்று வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் இறைவழியில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்கள்' என்று கூறினார்கள்.
அப்போது அன்னாருடைய தோழர்களில் ஒருவர் 'இன்ஷா அல்லாஹ்' (அல்லாஹ் நாடினால்) என்று (சேர்த்துச்) சொல்லுங்கள்' என்று கூறினார்.
(ஆனால்,) சுலைமான்(அலை) அவர்கள் 'இன்ஷா அல்லாஹ்' என்று கூறவில்லை. (மறந்துவிட்டார்கள்.) மேலும், தம் துணைவியர் அனைவரிடமும் சென்றார்கள். அவர்களில் ஒரேயொரு மனைவியைத் தவிர வேறெவரும் கர்ப்பமடையவில்லை. அந்த ஒருவரும் ஒரு புஜமுடைய அரை மனிதரைத் தாம் பெற்றெடுத்தார்.
"(இந்த) முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! அவர், 'இன்ஷா அல்லாஹ்' என்று கூறியிருந்தால், (அந்த தொண்ணூறு துணைவியரும் கர்ப்பதியாகி பிள்ளைகள் பெற்று, அப்பிள்ளைகள் அனைவரும் இறைவழியில் அறப்போர் புரிகிற (குதிரை) வீரர்களாய் ஆகியிருப்பார்கள்" என அபூ ஹுரைரா(ரலி)
புகாரி : 6639.

அல்லாஹுத்தஆலாவின் நாட்டம் இல்லாமல் எதுவும் நிகழாது என்ற கொள்கையின் சாமானியர்கள் கூட உறுதியாக இருக்கும்பொழுது, நபி சுலைமான் (அலை) போன்ற நபிமார்கள் எவ்வளவு உறுதியாக இருப்பார்கள் என்பதை கூற வேண்டியதில்லை.
என்றாலும் நபிமார்கள் மற்றைய ஜனங்களுக்கு வழிகாட்டியாக இருப்பதால், "இன்ஷா அல்லாஹ்" என்று கூறத் தவறி இருக்கலாகாது. இதுவும் மறதியால் நிகழ்ந்ததால் தவறு இல்லை.
என்றாலும் மக்களுக்கு எச்சரிக்கை செய்வதற்காக இறைவன் செய்த ஏற்பாடு . நபி சுலைமான் (அலை) அவர்களை சோதித்தான் அவர்கள் கூறியது நிகழாமல் போகும்படி செய்ததுடன், அது நிகழாமற் போனதன் காரணத்தையும் பொது மக்கள் உணர வேண்டும் என்பதற்காக, மனித உருவத்தில் ஒரு பாதியுள்ள பிண்டத்தை ஒரு பெண் பிரசவிக்குமாறு இறைவன் செய்தான். (தப்ஸீருல் ஹமீத்)
அல்லாஹ்வே அறிவான்.

**இன்னொரு பார்வை 4**
(உடன்படிக்கைப் பேழை)



وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اٰيَةَ مُلْكِهٖۤ اَنْ يَّاْتِيَكُمُ التَّابُوْتُ فِيْهِ سَكِيْنَةٌ مِّنْ رَّبِّكُمْ وَبَقِيَّةٌ مِّمَّا تَرَكَ اٰلُ مُوْسٰى وَاٰلُ هٰرُوْنَ تَحْمِلُهُ الْمَلٰٓٮِٕكَةُ ‌ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيَةً لَّـكُمْ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ
பின்னும், அவர்களுடைய நபி, அவர்களை நோக்கி "அவருடைய அரசுரிமைக்கு அறிகுறியாவது: உங்கள் இறைவனிடமிருந்து மலக்குகள் சுமந்த வண்ணமாக ஒரு பேழை திண்ணமாக உங்களிடம் வரும்.
அதில் உங்களுக்கு ஆறுதல் அளிக்கக்கூடியதும், மூஸாவின் சந்ததிகள் மற்றும் ஹாரூனுடைய சந்ததிகள் விட்டுச் சென்றதில் மீதமுள்ளதும் இருக்கும்.
நீங்கள் உண்மை நம்பிக்கையாளர்களாக இருந்தால், நிச்சயமாக உங்களுக்கு அதில் ஓர் அத்தாட்சி உண்டு" என்று கூறினார். (அல்குர்ஆன் : 2:248)

தாலூத் என்பவர் ஹிப்ரு மொழியில் ஸவுல் (SAUL) என்பதாக அழைக்கப்படுவர். உடற்கட்டிலும், உயரத்திலும் தாலூத்தை வென்றவர் எவரும் அக்காலத்தில் இல்லை. இவர் தந்தையின் பெயர் கீஸ். யஃகூப் நபியின் புதல்வரான புன்யாமீன் சந்ததியில் தோன்றியவர்.
தாலூத்தின் அரசுரிமைக்கு அடையாளமென்ன ? என்று இஸ்ரவேலர்கள் நபி ஷம்வீல் (அலை) அவர்களிடம் கேட்டனர். அவருடைய அரச பதவிக்கு உரிய அடையாளமானது உங்களிடம் பேழை ஒன்று நிச்சயமாக வரும் என்று பதிலளித்தார்.

இறைவன் நபி ஆதம் (அலை) அவர்களுக்கு ஒரு பேழையை இறக்கியருளினான். அவர்கள் காலத்திற்கு பின்னர் அது அவர்கள் குமாரர்களில் ஒருவரான நபி ஷீது (அலை) அவர்களுக்கு கிடைத்தது.
பின்னர் வாரிசு முறையில் ஒருவர் பின் ஒருவராக அப்பேழையை அடைந்தனர். பின் நபி இப்ராஹீம் (அலை) அவரிடமும், நபி இஸ்மாயில் (அலை) அவர்களிடமும் , நபி யாகூப் (அலை) அவர்களிடமும் முறையே வந்துசேர்ந்தது.
பின்னர் நபி யாகூப் ( அலை) சந்ததிகளான பனீ இஸ்ராயீல்களிடம் வந்து, நபி மூஸா (அலை ) அவர்களுக்கு அது கிடைத்தது .அதில்தான் தங்களது தவ்ராத்தையும் தங்களின் சில சாமான்களையும் நபி மூஸா (அலை) அவர்கள் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

நபி மூஸா (அலை) அவர்கள் காலம் சென்ற பிறகு, பனீ இஸ்ராயீல்களில் தோன்றிய நபிமார்கள் ,முறைப்படி அதைப் பயன்படுத்தி வந்தனர். முடிவில் அது நபி ஷம்வீல் (அலை) அவர்களிடம் வந்து சேர்ந்தது. (காஜின்)
இஸ்ரவேலர்கள் எங்கே சென்றாலும் அப்பேழையை உடன் கொண்டு செல்வர். இப்பேழையினால் அவர்களுக்கு ஒரு அமைதி ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. அதாவது, அப்பேழை எவ்விடத்தில் இருந்ததோ, அதனை கண்ணுறுகிற அவர்களது மனமும் சாந்தியடையும்.

இத்தகைய புனிதத்துவம் பெற்ற அப்பேழை, இஸ்ரவேல் மக்களிடையே இருந்தது. அவர்கள் எதிரிகளுடன் போரிடச் சென்றால், தங்களுக்கு முன்னர் அதை வைத்துக் கொள்வர். அதன் மூலம் எதிரிகளை வெல்லும் சக்தியும், இறைவனின் அருளும் அவர்களுக்கு கிடைக்கும் என்பது அவர்களது முழு நம்பிக்கை.
நபி ஷம்வீல் (அலை) அவர்களை வளர்த்துப் போஷித்து வந்த அய்லீ என்ற பெரியவருக்கு பின்ஹாஸ், ஹம்னீ என்னும் பெயர் கொண்ட இரு புதல்வர்கள் இருந்தனர். அய்லீயோ இஸ்ரவேலர் மக்களின் குருவாகவும், இறைவனுக்கு முறைப்படி பலியை செலுத்தும் தலைவராகவும் இருந்தார்.
ஆனால் அவருடைய மக்கள் இருவரும் செய்யக்கூடாத சில தவறுகளை செய்து கொண்டு இருந்தனர். பைத்துல் முகத்தஸ் பள்ளிவாசலில் தொழ வருகின்ற பெண்களிடத்தில் இவ்வாலிபர் இருவரும் தகாத முறையில் நடந்து கொண்டு வந்தார்கள். இவர்களின் துற்செயல்கள் இஸ்ரவேலருக்கும் அருவருப்பை ஊட்டின. இச்செய்தியை இறைவன் நபி ஷம்வீல் (அலை) அவர்களுக்கு அறிவித்து, அய்லீக்கு உணர்த்தினான்.
அய்லீ தம்மிரு மகன்களையும் அழைத்து, நயமாகவும், பயமுறுத்தலுடனும் அவர்களின் தவறை எடுத்துக்காட்டி, மற்றவர்களுடன் சென்று எதிரிகளுடன் போரிடுமாறு கட்டளையிட்டார். அவ்விருவரும் புறப்பட்டனர். தங்களுடன் அப் பேழையையும் கொண்டு சென்றனர்.

போர்க்களத்தில் இருந்து வரும் செய்தியை எதிர்பார்த்தவராக அய்லீ ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டு இருந்தார். அவரிடம் ஒருவன் ஓடிவந்து, " நம் மனிதர்கள் தோல்வி அடைந்து விட்டனர்.உம் இரு மகன்களும் கொல்லப்பட்டு விட்டனர் " என்று அறிவித்தான்.
பேழை என்ன ஆயிற்று ? என்று கேட்டார். எதிரிகள் அபகரித்துச் சென்று விட்டனர் என்று பதிலளித்தான். இதனைக் கேட்டு, அவர் அதிர்ச்சியுற்று அலறியவராக மல்லாந்து விழுந்தார். பிடரி எலும்பு உடைந்து மரித்துவிட்டார். (தப்ஸீர் காஜின்)
பனீ இஸ்ராயீல்களிடமிருந்து பேழையைப் பறித்துச் சென்ற எதிரிகளான அமாலிக்காக்கள், அதனைப் பாலஸ்தீனத்தைச் சேர்ந்த "அஸ்தோத்" என்ற ஊரில் உள்ள கோயிலுக்கு கொண்டு சென்றனர். அங்கு அவர்கள் வணங்கிக் கொண்டிருந்த விக்கிரகமான ''தாகோன் " என்னும் பெயருள்ள சிலைக்கு அடியில் அதனை வைத்து அதன் மேல் விக்கிரகத்தை வைத்து விட்டனர்.
மறுநாட் காலையில் சென்று பார்க்கும் பொழுது, விக்ரகம் கீழே கிடந்தது. பேழை அதன் மேல் இருந்தது. ஆகவே அச்சிலையை எடுத்துப் பேழையின் மேல் வைத்து சிலையின் இரு கால்களையும் பேழையுடன் சேர்த்திணைத்து, ஆணியால் அறைந்து அகன்று விடாமல் செய்து விட்டனர்.

மறுநாட் காலை சென்று பார்க்கும் பொழுது விக்ரகத்தின் தலையும், கால்களும், கைகளும் துண்டிக்கப்பட்டு பேழைக்கு அடியில் எறியப்பட்டு கிடந்தன. இதர விக்கிரகங்களும் தலைகீழாக விழுந்து கிடந்தன.
எனவே அப்பேழை அவர்கள் அங்கிருந்து அப்புறப்படுத்தித் தங்கள் நகரத்தில் உள்ள ஒரு ஒதுக்குப்புறமான இடத்துக்கு கொண்டு போய் வைத்து விட்டனர். அதனால் அவ்விடத்தில் வசித்துக் கொண்டிருந்தோர் அனைவரும் கழுத்து நோவு ஏற்பட்டு, அவர் அவர்களில் பெரும்பாலோர் மரித்தும் விட்டார்கள்.
இதனால் பீதியுற்ற அவர்கள் ஒன்றுகூடி, இஸ்ரவேல் மக்களின் ஆண்டவனுடைய கரம் நம்மேல் மிகக் கடினமாக இருப்பதால், அவனுடைய பேழை இங்கு இருக்கலாகாது என்று முடிவு செய்து வேற்றூருக்கு அப்பேழையை அப்புறப்படுத்தி விட்டனர்.
ஆனால் அங்கு உள்ளவர்களையும் அது சும்மா விடவில்லை. அல்லாஹ் அங்கு எலிகளை தோற்றுவித்தான். அந்த எலிகள் இரவில் யாருடைய வீட்டினுள் தங்கிறதோ அவ்வீட்டார் காலையில் பிணமாகி விடுவர். அவர் வயிற்றில் உள்ளவற்றை எலி சாப்பிட்டிருக்கும் .

அப்பேழையினால் ஏற்பட்ட துன்பமே இது என உணர்ந்து, அவர்கள் அதை ஒரு காட்டிற்க்கு கொண்டுசென்று மலங்கழிக்கும் ஒரு இடத்தில் புதைத்து விட்டனர்.
அங்கு எவரொருவர் மலம் கழிக்கிறாரோ, அவர் மூலவியாதியும் , மூட்டு வலியையும் தாக்கித் தொல்லை கொடுக்க ஆரம்பித்தன. ஆகவே மக்கள் செய்வதறியாது பிரமை பிடித்துப்போய் இருந்தனர்.
அவர்கள் மத்தியில் நபிமார்களின் பரம்பரையைச் சேர்ந்த இஸ்ரவேல் பெண்ணொருத்தி இருந்தாள்.அவள் அவர்களை நோக்கி, " உங்கள் மத்தியில் இப்பேழை இருக்கும் வரை இத்தகைய தொல்லைகளைத்தான் நீங்கள் அனுபவிப்பீர்கள். ஆகையினால், இதை இங்கிருந்து அகற்றி விடுங்கள்.
ஒரு புது வண்டியை செய்து, அதில் இரு பசுக்களை பூட்டி, வண்டியின் மேலே பேழையை வைத்து, பசுக்களை ஓட்டி விடுங்கள். தானாக அது எங்கு வேண்டுமானாலும் போகட்டும்" என்று யோசனை கூறினாள். அவ்வாறே அவர்கள் செய்தனர். இரு பசுக்களும் பேழை வைக்கப்பட்ட வண்டியை இழுத்துச் சென்றன.
அப்பசுக்களை ஓட்டி செல்வதற்காக அல்லாஹ் நான்கு மலக்குகளை நியமித்தான். அவர்கள் அவற்றை இஸ்ரவேல் மக்கள் வசிக்கும் பூமிக்கு ஓட்டிக் கொண்டு சென்றனர். அப்போது அங்கு கோதுமை அறுவடை நடைபெற்று கொண்டிருந்தது. அந்த நிலையத்திற்கு வண்டி வந்ததும் மாடுகளை வண்டியை விட்டு மலக்குகள் அவிழ்த்து விட்டனர். மாடுகள் திரும்ப சென்றுவிட்டன.

தங்களிடமிருந்து கவரப்பட்டு போன அப்பேழையை கண்ணுற்ற இஸ்ரவேல் மக்கள் மகிழ்ச்சி அடைந்தனர். முன்னர் கூறப்பட்ட பிரகாரம் அத்திருப்பேழையை அவர்கள்பால் வந்துவிட்டது. எனவே தாலூத்தை அரசர் என்று ஏற்றுக் கொண்டு, அவருடைய உத்தரவுக்கு பணிந்து , எதிரிகளுடன் போரிட அவருடன் புறப்பட்டனர். அப்பேழையை முன்னிறுத்தி வைத்து, யுத்த களத்தில் வெற்றியை வேண்டினர் . அல்லாஹ்வும் அவர்களுக்கு வெற்றியைக் கொடுத்தான்.
நபிமார்கள் பயன்படுத்தும் பொருட்களைக் கொண்ட பேழையை வஸீலாவாக்கி,வெற்றியைக் கேட்டனர். அல்லாஹ் வெற்றியையும் கொடுத்தான். ஆனால் நாம் அந்த நபிமார்களையே வஸீவாக்கி துஆ கேட்பதற்குள் மனதிற்குள் ஷிர்க் வந்து தொலைந்து விடுகிறது.
மேலே கூறப்பட்டுள்ள திருக்குர்ஆன் வசனத்தை இன்னொரு பார்வையைச் செலுத்துங்கள் . ஜெயம் பெறுங்கள்.

**இன்னொரு பார்வை 5**



பனூ இஸ்ரவேலர்களுக்கு 400 வருட கொடூரமான அடிமை வாழ்வு ஏன் விதியாக்கப்பட்டது ?

وَاِذْ نَجَّيْنٰكُمْ مِّنْ اٰلِ فِرْعَوْنَ يَسُوْمُوْنَكُمْ سُوْٓءَ الْعَذَابِ يُذَبِّحُوْنَ اَبْنَآءَكُمْ وَيَسْتَحْيُوْنَ نِسَآءَكُمْ وَفِىْ ذٰلِكُمْ بَلَآءٌ مِّنْ رَّبِّكُمْ عَظِيْمٌ
உங்களைக் கடுமையாக வேதனைப்படுத்தி வந்த ஃபிர்அவ்னுடைய கூட்டத்தாரிடமிருந்து உங்களை நாம் விடுவித்ததையும் (நினைவு கூறுங்கள்); அவர்கள் உங்கள் ஆண் பிள்ளைளைக் கொன்று, உங்கள் பெண் (பிள்ளை)களை (மட்டும்) உயிருடன் வாழவிட்டிருந்தார்கள்; அதில் உங்களுக்கு உங்கள் இறைவனுடைய ஒரு பெரும் சோதனை ஏற்பட்டிருந்தது. (அல்குர்ஆன் : 2:49)

இஸ்ரவேலரின் மூலத்தந்தையாகிய யஅகூப் (அலை) அவர்களுக்கு 12 பிள்ளைகள் இருந்தார்கள். அந்தப் பன்னிரண்டு பேரின் சந்ததிகளையே இஸ்ரவேலரின் பன்னிரண்டு பிரிவினர் என கூறப்படுகிறது .
யாகூப் (அலை) அவர்களின் 12 பிள்ளைகளிலும் யூசுஃப், புன்யாமின் என்ற இருவரும் இளைய பிள்ளைகள் இவ்விருவரும் இரண்டாம் தாயின் மக்கள். இதில் யூசுஃப் என்பவர் பின்னர் நபியானார்கள். குர்ஆனில் உள்ள 12-வது அத்தியாயம் முற்றிலும் நபி யூசுஃப் (அலை) அவர்களுடைய வரலாறாகவே இருக்கின்றது. ஆகவே அந்த அத்தியாயத்தில் யூசுஃப் என்று இவர்களுடைய பெயரே கூறப்படுகிறது.
இவர்கள் மிக அழகானவர்கள். இவர்களுடைய வரலாறு மிக அழகானது. சிறு பருவத்திலேயே இவர்கள் பொறுமையும், சாந்தமும், மிக்க அறியும் உடையவராக இருந்ததுடன், தந்தைக்கு செய்ய வேண்டிய பணிகளை செய்து கொண்டும், எந்நேரமும் அவர்களை விட்டு விலகாதிருப்பார். எனவே இஸ்ராயில் என்னும் யஅகூப் (அலை) அவர்களும் இவரை மிக்க அன்போடு பாசமாக நடத்திவந்தார்கள் .

யூசுஃப் (அலை) அவர்கள் நம்முடைய சகோதரர்கள் அனைவரும் தமக்கு கீழ்ப்படிந்து சஜ்தா செய்யும்படியான அர்த்தத்தை தரக்கூடிய ஒரு கனவைக் கண்டதாக தம்முடைய தந்தையிடம் கூறினார்.
இவற்றையெல்லாம் அறிந்த அவருடைய சகோதரர்கள் இவர்கள் மீது பொறாமை கொண்டு அனைவரும் ஒன்று சேர்ந்து சதி ஆலோசனை செய்து, வேட்டையாட காட்டுக்குப் போவதாக கூறி, இவர்களையும் தங்களுடன் அழைத்துக் கொண்டு போய் அவருக்கு பல துன்பங்கள் இழைத்து இவரைக் கொலை செய்து விடவும் கருதினார்கள்.

அவர்களில் ஒருவர் அதனை தடுத்ததால், யூசுஃபைக் கொலை கொலை செய்யாது அங்கிருந்த ஒரு பாழும் கிணற்றில் எறிந்துவிட்டு தங்களுடைய தந்தையிடம் வந்து யூசுப்பை ஓர் ஓநாய் அடித்துத் தின்றுவிட்டது" என்று கூறியுள்ளார்கள்.

மறுநாளன்று அவ்வழியாக எகிப்துக்கு சென்று கொண்டிருந்த வணிக கூட்டத்தில் உள்ள ஒருவன் தண்ணீர் எடுக்க அக்கிணற்றில் வாளியை விட்டான். வாளியை விட்ட அவன் யூசுஃப் நபி (அலை) அவர்கள் அக்கிணற்றில் இருப்பதைக் கண்டு, அவரை வெளியில் எடுத்தான்.
இதற்குள் யூசுஃப் (அலை) அவருடைய சகோதரர்களும் அங்கு வந்து சேர்ந்தார்கள். வந்த அவர்கள் யூசுஃப் ( அலை) அவர்கள் தங்களுடைய அடிமை எனக்கூறி, (கவனிக்கவும் "அடிமை" ) அந்த வணிகனிடமே சொற்ப விலைக்கு விற்று விட்டார்கள்.
இவ்வாறு யூசுஃப் (அலை) அவர்களுக்கு பல துன்பங்கள் இழைத்து, சொந்த சகோதரரை அடிமை எனவும் கூறி விலைக்கு விற்றுவிட்ட அவருடைய அந்தச் சகோதரர்கள் தங்களுடைய இத்தீவினைகளின் பயனை எவ்வாறு அடைகிறார்கள் என்பதைப் பின்வரும் அவர்களுடைய வரலாற்றைக் கொண்டு நன்கு அறிந்து கொள்ளலாம்.
யூசுஃப் (அலை) அவர்களை விலைக்கு வாங்கிய அவ்வணிகன் இவரை அழைத்துக் கொண்டுபோய், எகிப்தின் அதிபதியிடம் விலையாக கொடுத்துவிட்டான். அங்கு சென்றும் இவருடைய துன்பம் நீங்கினபாடில்லை.
அந்த அதிபரின் மனைவி இவரின் அழகைக் கண்டு மயங்கி தன் இச்சையை நிறைவேற்றும்படி இவரை வற்புறுத்தினாள். இதனை இவர் குற்றமென்று மறுத்ததால், அவள் இவர் மீது பொய்யானது ஒரு குற்றத்தை சுமத்தி இவரை சிறையில் இருக்கும்படி செய்துவிட்டாள். இவ்வாறு சிறை சென்ற யூசுஃப் (அலை) முடிவில் அந்த எகிப்துக்கு அதிபரானார்.
இவர் எகிப்தின் அதிபராக இருந்த காலத்தில் மிகக் கொடியதொரு பஞ்சம் ஏற்பட்டு 7 வருட காலம் அது நீடித்திருந்தது. தவிர, பஞ்சம் நாடெங்கும் பரவியது. மக்கள் வறுமையில் சிக்கி, மிகத்துன்புற்று தவித்தார்கள். எனினும் பஞ்சம் ஏற்படுவதற்கு முன்னதாகவே அல்லாஹ் அறிவித்து எச்சரிக்கை செய்து இருந்தபடி நபி யூசுஃப் (அலை) அவர்கள் ஏராளமான தானியங்களை சேர்த்து களஞ்சியங்களில் குவித்து வைத்திருந்தார்கள். ஆகவே பஞ்சத்தால் வருந்திய தூரமான நாட்டினரும் தானியத்திற்காக இவரிடம் வந்தார்கள். இவரும் அவர்களுக்கு வேண்டிய உணவளித்து வந்தார்.

கன்ஆன் நாட்டில் பஞ்சத்தால் வருந்திக்கொண்டிருந்த இவருடைய தந்தையாகிய யாஆகூப் (அலை) அவர்களும் தம்முடைய பிள்ளைகளை தானியத்திற்காக எகிப்துக்கு அனுப்பி வைத்தார்கள். எகிப்துக்கு வந்த இவர்கள் எகிப்தில் அதிபராக இருப்பது தங்களுடைய சிறிய சகோதரன் யூசுஃப் தான் என்பதை சிறிதும் அறிந்து கொள்ளவில்லை. எனினும், அவர்களை யூசுஃப் (அலை) தமக்கு கொடிய துன்பங்களை விளைவித்த தமது சகோதரர்கள்தான் என்பதை அறிந்து கொண்டார்கள் .
அவர்கள் தம்மை அடிமை என்று விற்றதற்கும் , தம்மை அப்பாலும் கிணற்றில் தள்ளியதற்கும், தம்மைப் பலவித துன்பங்களை இழைத்து கொலை செய்யக் கருதியதற்கும் பழி வாங்கக் கூடிய நேரம் யூசுஃப் (அலை) அவர்களுக்கு வாய்த்திருந்தது.
எனினும் அவர்கள் பழிவாங்கவும் இல்லை, நான் உங்களுடைய சகோதரன் என அவர்களுக்கு அறிவித்து கொள்ளவும் இல்லை. எனினும் அவர்கள் விரும்பியதை விட அதிகமான தானியங்களை அதுவும் விலைஇன்றியே கொடுத்து அனுப்பினார்கள். இதுதான் அவர்கள் , இவருக்குச் செய்த துன்பத்திற்கு இவர்கள் அவர்களுக்கு செய்த பதிலாகும்.
மறுமுறையும் அவர்கள் தானியத்திற்காக யூசுஃப் (அலை) அவர்களிடமே வந்தார்கள் .பிறகும் ,அவர்களுக்கு வேண்டிய தானியங்களை கொடுத்து அனுப்பினார்கள். எனினும் தம்முடன் பிறந்தவராகிய புன்யாமினைத் தந்திரமான ஓர் உபாயம் செய்து தன்னிடம் நிறுத்திக் கொண்டார்கள்

மூன்றாவது முறையும், அவர்கள் தானியத்திற்காக யூசுஃப் (அலை) அவரிடம் வந்தார்கள். அச்சமயம் அவர்களுக்குத் தம்மை யூசுஃப் என்று அறிவித்தார்கள். இதனை அறிந்த அவர்கள் இவருக்குத் தாங்கள் செய்த கொடுமைகளை நினைத்து திடுக்கிட்டு கலங்கி நெருங்கி நின்றார்கள்.
எனினும் யூசுஃப் (அலை) அவர்களோ அவர்களை நோக்கி,
"சென்று போன காரியங்களைப் பற்றி கவலைப்படாதீர்கள். நீங்கள் எனக்கு செய்த அனைத்தையும் நான் மன்னித்து விட்டேன் " என்று கூறி கன்ஆனில் இருக்கும் தம் தந்தையை அழைத்து வரும்படி அவர்களை அனுப்பி வைத்தார்கள் இவர்களுடைய தந்தையாகிய யஅகூப் (அலை) அவர்களும் தம்முடைய குடும்பத்துடன் எகிப்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

எகிப்தில் குடியேறிய இவர்கள் விவசாயம், வணிகம் போன்ற பல துறைகளிலும் இறங்கி வெகுவிரைவில் உயர்ந்த பதவியை அடைந்து வந்தார்கள் எனினும், அந்நிய நாட்டிலிருந்து வந்து குடியேறிய இவர்கள் இவ்வாறு பல துறைகளிலும் மேன்மை அடைந்து வருவதைக் கண்ட எகிப்து வாசிகளுக்கு இவர்கள் மீது பொறாமை ஏற்பட்டது. ஆனால் யூசுஃப் (அலை) எகிப்தின் அதிபராக இருந்ததனால் இவர்களை அவர்கள் ஒன்றும் செய்ய முடியவில்லை. யூசுஃப் ( அலை ) அவர்களுடைய இறப்புக்கு பின்னரோ இவர்களுடைய நிலைமை முற்றிலும் மாறிவிட்டது.அந்த யூசுப் (அலை) அவர்களுக்கு இவர்கள் செய்த கொடுமையின் பயனை அனுபவிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

எகிப்துவாசிகள் அனைவரும் கட்டுப்பாடாக ஒன்றுசேர்ந்து இவர்களுடைய சொத்து சுதந்திரம் அனைத்தையும் பறிமுதல் செய்து இவர்களையும் தங்களுக்கு அடிமையாக்கி கொண்டார்கள். எகிப்தை விட்டு இவர்கள் வெளியேறி விடாதபடி விலங்கினங்களை காப்பது போல் இவர்களையும் தடைசெய்து காத்து வந்தார்கள். அதனால் பல இழி தொழில்களும் இவர்கள் செய்யும்படி நிர்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

ஆண், பெண், சிறியவர், பெரியவர் என்ற வித்தியாசமின்றி இழி தொழிலை இவர்கள் செய்யும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். இவ்வாறு பல துன்பமான வேலைகளை இவர்கள் செய்தும் அதற்குரிய கூலியை அவர்களுக்கு சரிவர கிடைப்பதில்லை. இவர்களையும் இவர்களுடைய ஆடு, மாடு ஆகியவற்றை எகிப்துவாசிகள் தங்கள் விருப்பப்படி பயன்படுத்திக் கொள்வார்கள்.
இஸ்ரவேலர் எகிப்துவாசிகளிடம் சிக்கி இவ்வாறு தவித்துக் கொண்டிருந்த போதிலும், இவர்களுடைய சந்ததி விருத்தி மட்டும் குறையவே இல்லை .அது மேன்மேலும் அதிகரித்துக்கொண்டே சென்றது.
யூசுஃப் (அலை) அவர்களுடைய காலத்தில் கன்ஆன் நாட்டில் இருந்து வந்து குடியேறிய இவர்கள் ஆண், பெண் ,சிறியவர், பெரியவர் அனைவரும் சேர்ந்து சுமார் வெறும் என்பது நபர்கள்தான். அந்த என்பது நபர்களும் 400 ஆண்டுகளுக்குள் அதாவது அவர்களை அவர்களுடைய இவ்வடிமை வாழ்க்கையிலிருந்து விடுவிப்பதற்காக மூஸா (அலை) வந்தபோது 20 லட்சமாக பெருகி இருந்தார்கள்.
இவ்வாறான இவர்களுடைய மக்கள் தொகை பெருக்கத்தை கண்டு எகிப்துவாசிகள் திடுக்கிட்டார்கள் ; அதனைத் தடை செய்வதற்காக அரசாங்கத்தின் மூலம் பல சட்டங்கள் இயற்றிப் பல கொடிய முறைகளையும் கையாண்டார்கள்.
இஸ்ராயீலின் சந்ததியிலுள்ள எந்த பெண்ணாவது கர்ப்பமானால் , அதனை உடனே அரசாங்கத்திற்கு தெரியப்படுத்தி விட வேண்டும் என்று ஒரு கண்டிப்பான உத்தரவு போட்டு இருந்தார்கள்.
மேலும் அவளுக்குப் பிறக்கும் குழந்தை ஆணாக இருந்தால், அதனை உடனே கொலை செய்துவிட வேண்டும் என்றும், பெண்ணாக இருந்தால் அதை உயிருடன் வாழ வைக்க வேண்டும் என்றும் அவர்களுடைய பிரசவத்துக்கு செல்லும் மருத்துவர்களுக்கு கட்டியிருந்தார்கள். இவ்வாறு 16 ஆயிரம் ஆண் குழந்தைகள் கொலை செய்யப்பட்டுவிட்டன.
இவர்கள் இவ்வாறான துன்பத்திற்கு உள்ளாவதற்குப் போதுமான காரணம் இல்லாமலும் இல்லை. நபி யூசுப் (அலை) அவர்களுக்கு இவர்களுடைய தந்தைகள் செய்த கொடுமை சாதாரணமானதா ? அதனை யூசுப் (அலை ) மன்னித்து விட்டபோதிலும், " தந்தைகளுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறை வரை விசாரிக்கிறவராய் இருக்கிறேன் " என்று யாத்திராகமம் 20:5 வசனத்திலும், இவர்களுடைய வேதத்தில் வேறுபல இடங்களிலும் கூறப்பட்டிருப்பதற்கு ஏற்ப இவர்கள் தங்களுடைய தந்தைகள் செய்த அவ்வினையின் பயனை இவ்வாறு அடைய வேண்டி இருந்தது போலும்.

ஏறக்குறைய 400 ஆண்டுகள் வரை இவ்வாறான துன்பங்களுக்கு உள்ளாகித் தவித்துக் கொண்டிருந்த இவர்கள் மீது அல்லாஹ் கருணை கூர்ந்து, இவ்வடிமை வாழ்க்கையில் இருந்து அவர்களை விடுவிப்பதற்காக நபி மூஸா (அலை) அவர்களை இவர்களிலிருந்தே அனுப்பி வைத்தான்.
அவர்களும் இவர்களை எளிதில் விடுவித்து விடவில்லை. இவர்களை அடிமையாக்கி வைத்திருந்த எகிப்துவாசிகளும், அவர்களுடைய அரசனாகிய ஃபிர்அவ்னிடமும் மூஸா (அலை) அவர்கள் பலமுறைகள் பல தர்க்கங்களை செய்து, வெகு சிரமத்திற்குப் பிறகு தான் விடுவித்தார்கள்.
அல்லாஹ் இஸ்ரவேலருக்கு புரிந்த அருள்களில் எல்லாம் பிரதானமானது அவர்களை எகிப்தை விட்டும் வெளியேற்றியதுதான். எனவேதான், " உங்களை எகிப்து என்னும் இரும்புக் காளவாயிலிருந்து புறப்படப்பண்ணினான்" என்று உபாகமம் 4:20 குறிப்பிடப்பட்டுள்ளது .
இஸ்ரவேலர்கள் அடிமையாக வைத்திருந்த காலத்தில் அடைந்த துன்பங்களில் எல்லாம் மிகப் பெரியது, இவர்களுடைய ஆண் மக்களை கொலை செய்து , பெண் மக்களை மட்டும் அவர்கள் உயிருடன் வாழவிட்டதே ஆகும்.
ஆகவே அல்லாஹ் இவ்வசனத்தில் அவர்களை நோக்கி, "உங்கள் ஆண் மக்களை கொன்று விட்டு உங்கள் பெண் மக்களை மட்டும் உயிருடன் வாழவிட்டு உங்களுக்குத் தீய நோவினைச் செய்து வந்த ஃ பிர்அவ்னுடைய கூட்டத்தாரிடமிருந்து நாம் உங்களை விடுவித்தோம் " என்று அல்லாஹ் அவர்களுக்கு செய்த இந்த அரிய நன்றியை எடுத்துக் கூறுகிறான்.

இன்னொரு பார்வை 6



திருக்குர்ஆனின் முதல் அத்தியாயத்திற்கும் (சூரத்துல் அல் ஃபாத்திஹா ), இரண்டாம் அத்தியாயத்திற்கும் ( அல் பகரா ) உள்ள தொடர்பு (மிக சுருக்கமாக)
அல்ஃபாத்திஹா என்னும் முதல் அத்தியாயத்தில் 5, 6 ,7 ஆகிய மூன்று வசனங்களின் மூலம் மனிதன் பிரார்த்தனை செய்து கோரிக்கொண்டிருக்கும் விஷயங்களையும்,
அல் பகரா என்னும் இரண்டாவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்களையும் கவனித்தால், முதல் அத்தியாயத்தில் மேற்கூறிய மூன்று வசனங்களின் மூலம் மனிதன் செய்த பிரார்த்தனையை அல்லாஹ் அங்கீகரித்துக் கொண்டு அதற்கு அறிகுறியாகவே , இந்த இரண்டாவது அத்தியாயத்தில் அல்லாஹ் அருள் புரிந்து இருப்பதாக தோன்றும்.
ஏனென்றால், மேற்கூறிய மூன்று வசனங்களின் மூலம் மனிதன் நான்கு விஷயங்களைப் பிரார்த்தனை செய்து கோரியிருக்கிறான். அந்த நான்கு விஷயங்களும் அல்லாஹ், இந்த இரண்டாம் அத்தியாயத்தின் மூலம் முறையே விவரித்து விடை அளிக்கிறான்
சொல்றேன். கொஞ்சம் கூடுதல் கவனம் தேவை.

**1) முதல் அத்தியாயத்தின் ஐந்தாவது வசனத்தில் "எங்களை நேரான வழியில் நடத்துவாயாக " என்று மனிதன் கோருகிறான் .**
**அல்லாஹ் இதற்கு விடையாக ,இரண்டாம் அத்தியாயத்தின் இரண்டாம் வசனத்தில், " இறையச்சம் உடையோருக்கு இந்த வேதம் நேரான வழியை அறிவிக்கும் " என்று கூறுகிறான்.**
**எனினும், இதற்கு முன்னதாகவே " (அல்லாஹுத்தஆலா ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூலமாக நபி முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்களுக்கு இறக்கிய குர்ஆனாகிய ) இதுதான் வேதம். இதில் சந்தேகமே இல்லை ''என்பதையும் முதல் வசனத்தில் அறிவித்து விடுகிறான்.**

**2) முதல் அத்தியாயத்தில் 6 ஆவது வசனத்தில், "அல்லாஹ்வின் அருளை அடைந்தவர்களது வழியில் செலுத்துமாறு " மனிதன் கோருகிறான் .**
**இதற்கு விடையாக நேரான வழியில் செல்ல விரும்பும் இறையச்சமுடையோர் கடைபிடிக்க வேண்டிய பண்புகளை 3, 4 ஆகிய வசனங்களில் விவரித்துக் கூறி "இத்தகையோர்தாம் நேரான வழியில் இருக்கிறார்கள். இவர்களே நிச்சயமாக வெற்றி அடைவார்கள் " அதாவது அல்லாஹ்வின் அருளை அடைவார்கள் என்று இரண்டாம் அத்தியாயத்தின் 5 ஆவது வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்.**

**3) முதல் அத்தியாயத்தின் 7 ஆவது வசனத்தில் , " உன் கோபத்திற்கு உள்ளானவர்கள் சென்ற வழியில் என்னை செலுத்தாதே " என்று மனிதன் கோருகிறான்.**
**இதற்கு விடையாக இரண்டாம் அத்தியாயத்தில் 6 ஆவது வசனத்தில், மனமுண்டாக இந்த வேதத்தை நிராகரிப்பவர்களின் தன்மையை விவரித்து கூறி, "இத்தகையோருக்கு மகத்தான வேதனையுண்டு "அதாவது இவர்கள்தாம் அல்லாஹ்வின் கோபத்திற்குள்ளானவர்கள் என்று அறிவிக்கிறான்.**

**4) முதல் அத்தியாயத்தின் 7ஆவது வசனத்தில் "வழி தவறியவர்கள் சென்ற வழியில் எங்களை செலுத்தாதே !" என்று மனிதன் பிரார்த்திக்கிறான்.**

இதற்கு விடையாக, இரண்டாவது அத்தியாயத்தில் 8 ஆவது வசனத்தில், "அல்லாஹ்வையும் , இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டிருக்கிறோம் என்று கூறுவோரும் மனிதர்களில் சிலர் உண்டு. ஆனால், உண்மையில் அவர்கள் நம்பிக்கையாளர்களல்ல " என்று அறிவித்து ,
அவர்களுடைய தன்மைகளை 9 ஆவது வசனத்திலிருந்து வருவது 15 ஆவது வசனம் வரை விவரித்துக் கூறி , "இவர்கள்தாம் நேரான வழிக்குப் பதிலாக தவறான வழியை விலைக்கு வாங்கிக் கொண்டவர்கள் " அதாவது, வழிதவறியவர்கள் என்று 16 ஆவது வசனத்தில் அறிவிக்கிறான்.
அத்துடன், இவர்களுக்குரிய இரு ஒரு உதாரணங்களையும் 17 முதல் 20 வரையிலான வசனங்களில் கூறி மேலும் தெளிவுபடுத்துகிறான்.

இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள மற்ற மற்ற வசனங்களையும், குர்ஆனின் கடைசி வரையிலும் உள்ள மற்ற அத்தியாயங்களின் வசனங்களையும் கவனித்தால், அவற்றிலும் இந்த நான்கு விஷயங்களையே மனிதர்களுடைய மனதில் பதியுமாறு பற்பல வகைகளில் கூறப்பட்டிருப்பதுடன்,
முற்காலத்தில் சென்று போன நபி நூஹ், நபி இப்ராஹிம், நபி லூத், நபி மூஸா , நபி ஈஸா (அலைஹிமுஸ் ஸலாம்) போன்ற நபிமார்களின் வரலாறுகளையும், அவர்களுடைய காலத்திலிருந்த மக்களின் வரலாறுகளையும், இவற்றுக்கு உதாரணமாகவே கூறி தெளிவுபடுத்தப்பட்டிருப்பதை காணலாம். (ஆ.கா அப்துல் ஹமீது பாகவி அவர்கள் எழுதிய அல்குர்ஆன் விரிவுரை யிலிருந்து... )

**இன்னொரு பார்வை 7**



மூஸா (அலை) அவர்களுக்குப் பின் அவர்களைப் போலுள்ள தீர்க்கதரிசி யார் ?
يٰبَنِىۡۤ اِسۡرَآءِيۡلَ اذۡكُرُوۡا نِعۡمَتِىَ الَّتِىۡۤ اَنۡعَمۡتُ عَلَيۡكُمۡ وَاَوۡفُوۡا بِعَهۡدِىۡۤ اُوۡفِ بِعَهۡدِكُمۡ ۚ وَاِيَّاىَ فَارۡهَبُوۡنِ
இஸ்ராயீலின் சந்ததியினரே! நான் உங்களுக்கு அளித்த என்னுடைய அருட்கொடையை நினைவு கூறுங்கள்; நீங்கள் என் வாக்குறுதியை நிறைவேற்றுங்கள்; நான் உங்கள் வாக்குறுதியை நிறைவேற்றுவேன்; மேலும், நீங்கள் (வேறெவருக்கும் அஞ்சாது) எனக்கே அஞ்சுவீர்களாக.
(அல்குர்ஆன் : 2:40)

இஸ்ரவேலருக்கு அல்லாஹ் அளித்த வாக்குறுதி :
"கர்த்தர் உனக்கு வாக்கு கொடுத்து உனக்குச் சொல்கிறபடி நீ என்னுடைய கட்டளையெல்லாம் கைக்கொண்டால், எனக்குச் சொந்த மக்களாயிருப்பாய் என்றும், நான் உண்டு பண்ணிய எல்லா இனங்களையும் பார்க்கிலும், புகழ்ச்சியிலும், கீர்த்தியிலும், மகிமையிலும், உன்னைச் சிறந்திருக்கும்படிச் செய்வேன் என்றும், நான் சொன்னபடியே, நீ உன் தேவனாகிய கர்த்தராகிய எனக்குப் பரிசுத்த மக்களாயிருப்பாய் என்றும், அவர் இன்று உனக்குச் சொல்கிறார்"
இஸ்ரவேலர் அல்லாஹ்வுக்கு கொடுத்த வாக்குறுதி :
"கர்த்தர் எனக்குத் தேவனாயிருப்பார் என்றும் , நான் அவர் வழிகளில் நடந்து, அவர் கட்டளைகளையும் , அவர் கற்பனைகளையும், அவர் விதிகளையும் கைக்கொண்டு, அவர் சப்தத்திற்குக் கீழ்ப்படிவேன் என்றும், நீ இன்று அவருக்கு வாக்கு கொடுத்தாய்" ( உபாகமம் 26 :11)
"அவர் சப்தத்திற்குக் கீழ்ப்படிவேன்" என்றதன் கருத்து பிற்காலத்தில் மூஸா (அலை) அவர்களை போன்றவராக வரும் அந்த தீர்க்கதரிசிக்கு, அல்லாஹ்வுடைய வார்த்தைகளாக இறக்கப்படும் வேதத்தைப் பின்பற்றி நடப்பேன் என்பதாகும்.
உபாகமம் 18 : 18,19 ஆகிய வசனங்களில் கர்த்தர் மூஸாவை நோக்கி,

"உன்னைப்போல் ஒரு தீர்க்கதரிசியை நான் இஸ்ராயீலின் சந்ததிகளாகிய அவர்களுக்காக, அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப் பண்ணி, என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன். நான் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் அவர் அவர்களுக்குச் சொல்லுவார் ; என் நாமத்தினாலே அவர் சொல்லும் என் வார்த்தைகளுக்குச் செவி கொடாதவன் எவனோ அவனை நான் விசாரிப்பேன்"
என்று கூறியதாகக் காணப்படுகிறது. ஆகவே, இவ்விரு வசனங்களிலும் அறிவிக்கப்பட்டபடி பிற்காலத்தில் மூஸாவைப் போன்றவராக வரும் அந்த தீர்க்கதரிசிக்கு இறக்கப்படும் வேதத்தை, கர்த்தருடைய வார்த்தைகள் என்று தெளிவாக தெரியவருகிறது.

மூஸா (அலை) அவர்களுக்கு பின்னர் தாவூது, சுலைமான், ஸகரிய்யா,யஹ்யா (அலைஹிவஸல்லம்) போன்ற நபிமார்கள் இவ்வுலகில் தோன்றியுள்ளனர். எனினும் அவர்களில் ஒருவரையும் அந்தத் தீர்க்கதரிசிதான் என்று கூறுவதற்கு இல்லை. ஏனென்றால் மூஸா (அலை) அவர்களுக்கு பின் ஈஸா (அலை) அவர்களுடைய காலம் வரை தோன்றிய அந்த நபிமார்கள் அனைவரும் இஸ்ரவேலரில் தோன்றியவர்களே.
அந்த வசனத்தில் கூறப்பட்ட தீர்க்கதரிசியானவரோ, இவர்களுடைய சகோதரர்களில் தோன்றுவார் எனக் கூறப்பட்டுள்ளது.
மேலும் தாவூத், சுலைமான் ஈஸா (அலை) போன்றவர்களுக்கு இறக்கப்பட்ட வேதங்களில் ஒன்றுமே அல்லாஹ்வுடைய வாக்கியங்களல்ல , அதாவது இவர்கள் தங்களுக்கு அல்லாஹ்வால் அறிவிக்கப்பட்ட செய்திகளை தங்களுடைய வாக்கியங்களைக் கொண்டு மக்களுக்கு அறிவித்திருக்கின்றனர்.
தவிர இவர்கள் ஒருவரும் மூஸா (அலை) அவர்களை போன்றவரும் அல்ல; ஏனென்றால் உபாகமம் 34 :12 வசனத்தில் "மோசேயைப் போன்ற, ஒரு தீர்க்கதரிசியும் இஸ்ரவேலரில் அப்புறம் எழுப்பினதே இல்லை " என்று கூறப்பட்டுள்ளது.
இதேவிதம் ஈஸா (அலை) அவர்களுக்கு அந்தத் தீர்க்கதரிசியானவர் என்று கூறுவதற்கு இல்லை. ஏனென்றால், இவரும் இஸ்ரவேலரில் தோன்றியவரே. மேலும் இவருக்கு அருளப்பட்ட வேதம், அல்லாஹ்வுடைய வாக்கியங்களும் அல்ல . அல்லாஹ் இவருக்கு அறிவித்த செய்திகளை, இவர் தம்முடைய வாக்கியங்களைக் கொண்டே மக்களுக்கு அறிவித்திருக்கிறார்.
தவிர இவர் மூஸா (அலை) அவர்களை போன்றவரும் அல்ல. ஏனென்றால், குற்றவாளிகளை கண்டித்துத் தண்டிக்க தம்மால் முடியாதென்று கூறியதுடன், ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் திருப்பிக் கொடுக்கும்படி கூறிச் சென்றார்.
ஆனால் ,மூஸா (அலை) அவர்களோ , யுத்தம் புரிந்துமிருக்கிறார் : குற்றவாளிகளைக் கண்டித்துத் தண்டித்தும் இருக்கிறார்.

முஹம்மது (ஸல்) அவர்களே பைபிள் கூறும் தீர்க்கதரிசி .
1) மூஸா (அலை) அவர்கள் தம்முடைய எதிரிகளுக்கு அஞ்சி, தாம் பிறந்த ஊராகிய எகிப்தை விட்டுப் புறப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்களும் நிராகரிப்பாளர்களின் தொல்லை காரணமாகத் தாம் பிறந்த ஊராகிய மக்காவை விட்டு ஹிஜ்ரத் புறப்பட்டார்கள்.

2) மூஸா (அலை) அவர்கள் தாம் பிறந்த ஊராகிய எகிப்திலிருந்து புறப்பட்டு, எசிரூன் என்பவரால் நிர்மாணிக்கப்பட்ட " எச்ரிப் "என்னும் ஊர் சென்று தங்கினார்கள். அதேவிதம் நபி (ஸல்) அவர்களும் தாம் பிறந்த ஊராகிய மக்காவிலிருந்து புறப்பட்டு, " எச்ரிப் " என்னும் ஊர் சென்று தங்கினார்கள். அதற்கு (மீதியான்) மதினா நகர் என்று கூறப்படுகிறது.

3) மூஸா (அலை) அவர்களுக்கு துன்பம் விளைவித்துக் கொண்டிருந்த எதிரிகளுடன் போர் செய்யும்படி அல்லாஹ் அவர்களுக்கு கட்டளையிட்டான். அதேவிதம், நபி (ஸல்) அவர்களுக்கும் இஸ்லாமிற்கும் எதிராகப் பல இடையூறுகளை விளைவித்துக் கொண்டிருந்த எதிரிகளுடன் போர் செய்யும்படி இவர்களுக்கும் அல்லாஹ் கட்டளையிட்டான்.

4) மூஸா (அலை) அவர்கள் சிதறிக்கிடந்த தம் இனத்தவராகிய இஸ்ரவேலரை எகிப்தை விட்டு வெளிப்படுத்தி ஒன்று சேர்த்தார்கள். அதேவிதம் நபி (ஸல்) அவர்களும் ஒருவருக்கொருவர் தங்களுக்குள்ளாகவே போர் செய்து கொண்டு சிதறிக்கிடந்த தன் இனத்தாராகிய பனூ இஸ்மாயீகளென்னும் அரபியர்களை ஒன்று சேர்த்தார்கள்.

5) மூஸா (அலை) அவர்கள் போர் செய்து வெற்றி பெற்று இஸ்ரவேலர்களுக்கோர் அரசாங்கத்தை நிர்மாணித்தார்கள். அதே விதம் நபி (ஸல்) அவர்களும் போர் செய்து வெற்றி பெற்று பனூ இஸ்மாயீல்களாகிய அரபியர்களுக்கோர் அரசாங்கத்தை நிர்மாணித்தார்கள்.

6) மூஸா (அலை) அவர்களுக்கு இறக்கப்பட்ட வேதம் மதம் தொடர்பான அனைத்து சட்ட திட்டங்களும் உள்ளதாக இருந்தது. அதேவிதம் நபி (ஸல் ) அவர்களுக்கு இறக்கப்பட்ட திருக்குர்ஆனும் மதம் தொடர்பான அனைத்து சட்ட திட்டங்களும் உள்ளதாக இருக்கிறது.

7) மூஸா மூஸா அலை அவர்கள் தம்முடைய இறுதிக் காலத்தில் தம் இனத்தாரை நோக்கி, "உங்களுடைய பொருட்களில் ஏதேனும் நான் கடன்பட்டவனாக இருந்தால், அதனை அறிவியுங்கள் என்று கூறினார்கள். அதேவிதம் நபி (ஸல்) அவர்கள் தம்முடைய இறுதிக் காலத்தில் தங்கள் மக்களை நோக்கி இவ்வாறே கூறியிருக்கிறார்கள். நபி ஸல் அவர்கள் வெறும் சிந்தனை செய்து கொண்டிருப்பவர் அல்ல . மூஸா (அலை) அவர்களை போலவே தான் நினைத்த விஷயங்களைச் செயல்பாட்டிலும் முடிப்பவர்களே. அதனால்தான், இவ்விருவரும் மனித இனத்தின் மீது முழு ஆதிக்கத்தையும் செலுத்தினார்கள் என்று மத ஆராய்ச்சியாளராகிய மிகப் புகழ்பெற்ற ரீனான் (Renon) என்னும் பிரெஞ்சு அறிஞர் கூறுகிறார்.

தவிர மூஸா (அலை) அவர்களுக்கும், நபி (ஸல்) அவர்களுக்கும் இவ்வாறே இன்னும் ஏராளமான விஷயங்களில் முழு ஒற்றுமை இருக்கின்றது. அவற்றை வரலாற்று ஆய்வாளர்களாகிய அந்நிய மதத்தினரும் எண்ணி எண்ணி குறிப்பிட்டுள்ளனர்.
எனவே மூஸா (அலை) அவர்களுக்குப் பின் அவர்களைப் போலுள்ள தீர்க்கதரிசி நபி முஸ்தபா முஹம்மது ரஸூலே கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது அவர்கள் மட்டுமே.

**இன்னொரு பார்வை 8**



( இறை நெருக்கம் வேண்டுமா ? இறைவனே கூறும் யுக்தி )
وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ وَنَعْلَمُ مَا تُوَسْوِسُ بِهٖ نَفْسُهٗ وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيْدِ
"நாம் மனிதனைப் படைத்தோம். அவன் மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் நாம் அறிவோம். அன்றியும் அவனின் பிடரி நரம்பை விட, நாம் அவனுக்கு அருகில் இருக்கிறோம்" குர்ஆன் (50:16)
இறைவன் நமக்கு அருகில் நம்முடன் நெருங்கி இருப்பதை இயம்பும் இறைமறை குர்ஆனின் பிற வசனங்கள்.
ஆயினும், நாமோ அவனுக்கு உங்களை விட சமீபமாக இருக்கிறோம். எனினும் நீங்கள் பார்க்கிறீர்களில்லை. (அல்குர்ஆன் : 56:85)

"நீங்கள் எங்கிருப்பினும் அல்லாஹ் உற்று நோக்கிக் கொண்டிருக்கிறான்'' (57:04).
"நீங்கள் செய்யும் மறைவான அனைத்தையும் அல்லாஹ் நன்கறிவான்'' (2:271)
"அல்லாஹ் அவனின் அடியார்களை உற்று நோக்கியவனாக இருக்கிறான்'' (3:20).
"(நபியே) உங்களிடம் என் அடியார்கள் என்னைப் பற்றி கேட்டால், நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன். என்னை அழைத்தால் அந்த அழைப்பாளரின் அழைப்புக்கு விடை அளிப்பேன்" குர்ஆன் (2:186).
சிரமத்தில் சிக்கிய மனிதனின் அபயக்குரலைக் கேட்டு அல்லாஹ் அவனின் சிரமத்தை நீக்குவான்'' (27: 62).
... இப்படி நிறைய குர்ஆன் வசனங்கள் அல்லாஹ் நம்மோடு மிக மிக நெருக்கமாக இருப்பதை சொல்லிக் காட்டுகிறது. தன் நெருக்கம் பற்றி அல்லாஹ் நபி மூஸா (அலை) அவர்களிடம் பேசிய உரையாடலை ஹதீஸ் நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது (நண்பர்கள் இந்த ஹதீஸ் கிதாபின் பெயரை தேடி சொன்னால், மிகவும் நன்றியுடையவனாக இருப்பேன்)

"மூஸாவே நான் உம்மோடு நெருக்கமாக இருக்க வேண்டுமா ?" என்று அல்லாஹ் கேட்பான்.
"என்ன நாயனே, இப்படி ஒரு கேள்வியா ? நீ என்னோடு நெருக்கமாக இருந்தால் எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கும் " என்று சொல்வார்கள் மூஸா (அலை) அவர்கள்
அல்லாஹ் மீண்டும் கேட்பான், " உம்முடைய நாக்கிற்கும் பேச்சுக்கும் உள்ள தொடர்பை விட நான் உனக்கு நெருக்கமாக இருக்க வேண்டுமா ?" (நாவு அசைந்தால் பேச்சு வந்து விடும். அவ்வளவு நெருக்கம் இருக்கிறது நாவுக்கும் பேச்சுக்குமிடையில் )
அதற்கு முஸா (அலை) "கண்டிப்பாக நாவுக்கும் பேச்சுக்குமிடையில் ), அதற்கு மூஸா (அலை) கண்டிப்பாக நாவுக்கும் பேச்சுக்குமிடையே உள்ள நெருக்கத்தைக் காட்டிலும் நான் உனதுடன் நெருக்கமாக இருக்க வேண்டும்" என்று சொல்வார்கள்.

இன்னும் "ரூஹுக்கும், உடலுக்கும் இடையில் உள்ள நெருக்கத்தை காட்டிலும் நான் உமக்கு நெருக்கமாக வேண்டுமா ? " எனக் கேட்பான் அல்லாஹ். ( ரூஹு இருந்தால் அங்கே உடல் இருந்தாக வேண்டும். உடல் இருந்தால் அதில் ரூஹு இருந்தாக வேண்டும். இல்லையெனில் மையத்தாகி விடும் )
"ஆம்..! ரூஹுக்கும் உடலுக்கும் இடையில் உள்ள நெருக்கத்தை காட்டிலும் நான் உனக்கு நெருக்கமாக இருக்க வேண்டும்" என்பார்கள் மூஸா (அலை) அவர்கள் .
அல்லாஹ் அடுத்துக் கேட்பான்." கண்ணுக்கும் பார்வைக்கு மத்தியில் உள்ள நெருக்கத்தை காட்டிலும், நான் உமக்கு நெருக்கமாக இருக்க வேண்டுமா ? "என்று கேட்பான்
கண் இருந்தால் அதிலேயே பார்வையில் இருக்கும் அல்லவா ? இவ்வளவு நெருக்கம் வேண்டுமா எனக் கேட்பான் அல்லாஹ்.
அப்போது " என்ன அல்லாஹ் ? கேள்விக்கு மேல் கேள்வி
கேட்டுக் கொண்டே போகிறாயே ,விஷயத்தைச் சொல்
நாயனே ! என்று மூஸா (அலை) அவர்கள் கேட்கிற போது,
அல்லாஹ் சொல்வான் : "எனது ஹபீப் நாயகம் (ஸல்) அவர்கள்
மீது, இனி உமக்குப் பின்னால் வரை இருக்கிற அஹ்மதின்
மீது நீர் அதிகம் ஸலவாத்து ஓதிக்கொள். என்னை நீர் , நான்
சொன்னது போல் உள்ள நெருக்கத்தில் பெற்றுக் கொள்வாய்
என்று.
மூஸா (அலை) அவர்கள் மட்டுமல்ல எல்லா நபிமார்களும்
ஸலவாத்து ஓதி இருக்கிறார்கள். அதனால் நாம் தான் ஸலவாத்து ஓதுவதில் பின்தங்கி இருக்கிறோம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

**இன்னொரு பார்வை 9**




கேட்கப்படும் கேள்விகளால் பலன் இருக்க வேண்டும்; பாரம் இருக்கக் கூடாது.
சாக்கிரட்டீஸ் (Socrates) (கி.மு 470/469 – கி.மு 399,ஏதென்சைச் சேர்ந்த ஒரு மெய்யியலாளர் (தத்துவஞானி) ஆவார். இவர் எப்போது பிறந்தார் என்பதற்கான தெளிவான ஆதாரங்கள் எதுவும் கிடைக்கப்பெறவில்லை. மேற்கத்திய தத்துவ மரபின் முக்கியமான சின்னமாகத் திகழ்பவர்களுள் ஒருவராக இவர் கருதப்படுகிறார்.
சிறுவனாக இருந்தபோதே சாக்ரடீஸ் கேள்விகள் கேட்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தார். எதைப்பற்றியும் கேள்வி கேட்டு, அது பற்றிய உண்மையை அறிந்துகொள்வதே சாக்ரடீஸின் வழக்கமாகும். நீதி, நியாயம், ஆத்மா, கடவுள், சமூகம், அரசு, வழக்கம் என எல்லாவற்றையும் ஆய்வுக்கு உட்படுத்தினார் சாக்ரடீஸ்.

சக்ரடீஸிடம் கேள்வி கேட்டால் அதற்கு நேரடியாகப் பதில் அளிக்காமல், சாக்ரடீஸ் கேள்வி எழுப்புவார். ஏதாவது ஒரு பிரச்சினையை மையமாகக் கொண்டு மக்களிடம் கேள்வி மேல் கேள்வி கேட்டு, அவர்களிடமிருந்தே பதிலைக் கேட்டு, அந்தப் பிரச்சினையை எழுப்பியவர்களே காரணத்தைப் புரிந்து கொள்ளுமாறு செய்வார். பிரச்சினையின் காரணத்தைத் தமது கேள்வியின் மூலம் உணரச்செய்த சாக்ரடீஸ், அந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கும் கேள்விகளைக் கேட்டார். இதுபோன்ற செயல்களால் பொதுமக்கள் தெளிவு பெற்றனர் சாக்ரடீஸின் இந்தக் கேள்வி கேட்கும் முறை ஏதென்ஸ் நகர இளைஞர்களைக் கவர்ந்தது. இளைஞர்கள் மத்தியில் சாக்ரடீஸ் எப்போதும் காட்சி தந்தார். சாக்ரடீஸ் இருக்குமிடங்களில் எப்போதும் இளைஞர்கள் கூட்டம் சூழ்ந்திருந்தது.அவரின் கேள்வி கேட்கும் பழக்கம் இளைஞர்களிடமும் தொற்றிக் கொண்டது.

கிரேக்க சமூகத்தில் காலகாலமாக கடைப்பிடித்து வந்த மூடக் கொள்கைகளையெல்லாம் சாக்ரடீஸை சிந்திக்க வைத்ததல்லாமல், மெல்ல இளைஞர்களையும் மாற்ற ஆரம்பித்திருந்தது.இதுபோல் சாக்ரடீஸின் கொள்ககளால் ஈர்க்கப்பட்டு, பிளேட்டோவும் சாக்ரடீசுடன் சேர்ந்தார்.பின் நாளில் இவரும் உலக புகழ் பெற்ற தத்துவஞானி ஆனார்.

இளைஞர்களைத் தூண்டி விடுவதாகவும், மத எதிர்ப்பைக் கிளப்பி விடுவதாகவும், தனக்குப் பெருமை சேர்ப்பதற்காக சாக்ரடீஸ் தவறான வழிகளில் இளைஞர்களை ஈடுபடுத்துவதற்காகவும், அதன் வழியாக ஏதென்ஸ் அரசுக்கு ஆபத்தை விளைவிப்பதாகவும் சாக்ரடீஸ் மீது அனிடஸூம், லைகோனும், மெலிட்டஸூம் குற்றம் சுமத்தி வழக்குத் தொடுத்தனர்.

சாக்ரடீஸ், 'என்னை வழக்கு மன்றத்தில் நிறுத்திய என் எதிரிகளை நீதிமன்றத்தில் நிறுத்தி குறுக்கு விசாரணை செய்ய நான் விரும்பவில்லை. என்னுடைய நியாயமான எதிரிகள் அநீதியும் அறிவின்மையும்தான்.
நான் கல்லையும், மண்ணையும் 'ஆண்டவன் ' என்று ஒப்புக்கொள்ள மறுக்கிறேன். ஆண்டவனைப் பற்றியும் அவனுடைய படைப்பைப் பற்றியும் ஆராய்ச்சி செய்வது நாத்திகம் என்றால், ஆண்டவனை ஒப்புக்கொள்ள எங்கே மறுத்து விடுவார்களோ என்று பயப்படுவது அதை விட நாத்திகம்' என்றார்.
இதன் பின்னர் நீதி மன்றத்தில் தீர்ப்பு கூறும் தருணம் வந்தது. மரணம், மன்னிப்பு என்ற இரண்டு பெட்டிகள் வைக்கப்பட்டன . நீதிக் குழுவின் உறுப்பினர்கள் 501பேர் வாக்குப்பதிவு செய்யத் தொடங்குகின்றனர்.
220 பேர் சாக்ரடீஸை மன்னித்து விடுமாறும், 281 பேர் மரண தண்டனை அளிக்கவும் வாக்களித்தனர்.அதனால் சாக்ரடீஸை விஷம் கொடுத்துக் கொல்ல வேண்டும் என்று கி.மு. 339ஆம் ஆண்டு பிப்ரவரி 15ஆம் தேதி நீதிபதிகள் உத்தரவிட்டனர்.
சிரித்த முகத்துடன் ஒரு கோப்பை விஷத்தையும் குடித்து முடித்தார் சாக்ரடீஸ் எந்தக் கேள்வியும் கேட்காமலேயே !
ஆனால் குர்ஆனில் கேள்விகள் கேட்கப்படுவதைக் குறித்து ...
اَمْ تُرِيْدُوْنَ اَنْ تَسْــَٔلُوْا رَسُوْلَـكُمْ كَمَا سُٮِٕلَ مُوْسٰى مِنْ قَبْلُ وَمَنْ يَّتَبَدَّلِ الْـكُفْرَ بِالْاِيْمَانِ فَقَدْ ضَلَّ سَوَآءَ السَّبِيْلِ
இதற்கு முன்னர் மூஸாவிடம் கேள்விகள் கேட்கப்பட்ட மாதிரி நீங்களும் உங்கள் ரஸூலிடம் கேட்க விரும்புகிறீர்களா? இறை நம்பிக்கைக்குப் பதிலாக இறைமறுப்பை மாற்றிக் கொண்டவர் நேர்வழியிலிருந்து தவறி விட்டார். (அல்குர்ஆன் : 2:108)
இஸ்ரவேலர்கள் மூஸா நபியிடம் அனாவசிய கேள்விகளைக் கேட்டுக்கொண்டே இருந்ததால், அவர்களுக்குத் சட்டங்களும் கடினமாக்கப்பட்டன. இறுதியில் அவர்கள் அச்சட்டங்களின்படி நடக்க இயலாமல் வழி தவறினர்.
சில விஷயங்கள் நடப்பதற்கு முன்பே அவற்றைப்பற்றி நபி (ஸல்) அவர்களிடம் துருவித்துருவிக் கேள்வி கேட்கக் கூடாது என இறை நம்பிக்கையாளர்களுக்கு இறைவன் இங்கே தடை விதிக்கிறான்.
மற்றொரு வசனம் :
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تَسْــَٔـلُوْا عَنْ اَشْيَآءَ اِنْ تُبْدَ لَـكُمْ تَسُؤْكُمْ‌ وَاِنْ تَسْــَٔـلُوْا عَنْهَا حِيْنَ يُنَزَّلُ الْقُرْاٰنُ تُبْدَ لَـكُمْ عَفَا اللّٰهُ عَنْهَا وَاللّٰهُ غَفُوْرٌ حَلِيْمٌ
ஈமான் கொண்டவர்களே! சில விஷயங்களைப்பற்றி (அவசியமில்லாமல்) கேட்டுக் கொண்டிராதீர்கள். (அவை) உங்களுக்கு வெளிப்படுத்தப்படுமானால், உங்களுக்கு (அது) தீங்காக இருக்கும்; மேலும் குர்ஆன் இறக்கப்படும் சமயத்தில் அவை பற்றி நீங்கள் கேட்பீர்களானால், அவை உங்களுக்குத் தெளிவாக்கப்படும்; (அவசியமில்லாமல் நீங்கள் விசாரித்ததை) அல்லாஹ் மன்னித்து விட்டான்; அல்லாஹ் மிக்க மன்னிப்போனும், மிக்க பொறுமை உடையோனுமாவான் (அல்குர்ஆன் : 5:101)

அதாவது ஒரு விஷயத்தைப் பற்றி அதுதொடர்பான இறை வசனம் அருளப்பட்ட பிறகு நீங்கள் விளக்கம் கேட்டால், உங்களுக்கு விளக்கம் கூறப்படும். அதே நேரத்தில் அந்த விஷயத்தைப் பற்றி அது நிகழ்வதற்கு முன்பே கேள்வி கேட்காதீர்கள்.ஏனெனில் அவ்வாறு கேட்ட காரணத்தினாலேயே அது தடைபட்டு விடலாம். அல்லது பாரமான விஷயம் உங்களுக்குக் கடமையாக்கவும் படலாம்.
ஒருமுறை நபி (ஸல்) அவர்கள், " அல்லாஹ் உங்கள் மீது ஹஜ்ஜை கடமையாக்கியுள்ளான்" என்று மக்களிடம் கூறினார்கள்.
உடனே ஒருவர், " அல்லாஹ்வின் தூதரே ! ஒவ்வொரு ஆண்டிலுமா ? "என்று கேட்டார். இவ்வாறு திரும்பத் திரும்ப மூன்று முறைகள் அவர் கேட்டுக் கொண்டே இருந்தார்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் அமைதியாக இருந்தார்கள். சற்று நேரத்திற்கு பிறகு, " இல்லை " என்று கூறிவிட்டு, " நான் மட்டும் ' ஆம் ' என்று கூறி இருந்தால், ஆண்டுதோறும் அது கடமையாக்கப்பட்டிருக்கும். அப்படி கடமையாகியிருந்தால், உங்களால் அதை நிறைவேற்ற இயலாமல் போயிருக்கும் " என்றார்கள்.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
" நான் எதை (செய்யுங்கள் என்றோ, செய்ய வேண்டாமென்றோ அல்லது ஒன்றும் கூறாமல்) உங்களு(டைய முடிவு)க்குவிட்டுவிட்டேனோ, அதை(ப் பற்றி எதுவும் கேட்காமல்) நீங்களும் விட்டுவிடுங்கள்.
உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களை அழித்ததெல்லாம் அவர்கள் தங்கள் இறைத்தூதர்களிடம் (அதிகமாகக்) கேள்வி கேட்டதும், அவர்களுடன் கருத்து வேறுபட்டதும் தான்.
ஒன்றைச் செய்ய வேண்டாமென உங்களுக்கு நான் தடை விதித்தால் அதிலிருந்து நீங்கள் தவிர்ந்து கொள்ளுங்கள். ஒன்றைச் செய்யுமாறு உங்களுக்கு நான் கட்டளையிட்டால் அதை உங்களால் முடிந்த அளவிற்குச் செய்யுங்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.ஸஹீஹ் புகாரி : 7288.
ஒவ்வொரு நாளும் பதிலற்ற சில கேள்விகளுடன்தான் நாம் படுக்கைக்கு செல்கிறோம். நாம் உறங்கும் போது கூட நம்முடைய கேள்விகள் விழித்திருக்கின்றன !

**இன்னொரு பார்வை 10**
( நீதியின் சின்னம் தராசு )



"நிச்சயமாக நம் தூதர்களைத் தெளிவான அத்தாட்சிகளுடன் அனுப்பினோம்; அன்றியும், மனிதர்கள் நீதியுடன் நிலைப்பதற்காக, அவர்களுடன் வேதத்தையும் (நீதியின்) தராசையும் இறக்கி வைத்தோம்" (அல்குர்ஆன் : 57:25)
உலக மக்கள் அனைவரையும் நீதி நெறி உள்ள தெய்வீக ஆட்சியின் கீழ் கொண்டு வரவேண்டும் என்பதற்காகவே இறை தூதர்களை அனுப்பியதாகவும் , திருவேதங்களையும் அருளியதாகவும் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.
' தாராசை' நீதியை குறிக்கும் ஒரு சின்னமாக அனைத்துலகமும் ஏற்றுக்கொண்டிருக்கிறது. நீதிமன்றங்களில் தராசியின் சின்னம் பொறிக்கப்பட்டு இருப்பதையும் காண்கிறோம்.
யார் நிறுக்கிறார்கள் என்றோ, என்ன பொருள் நிறுக்கப்படுகின்றன என்றோ பாராது உண்மையான, நியாயமான எடையை கூறுகிறது தராசு.

இரும்பை ஒரு தட்டிலும் அதே நிலைக்கு பஞ்சை ஒரு தட்டிலும் வைத்தாலும் சரி, அல்லது தங்கத்தை ஒரு தட்டிலும் அதே நிறைக்கு தவிட்டை ஒரு தட்டிலும் வைத்தாலும் சரி, அப்பொருட்களை சம எடையாக தராசு காட்டுமே தவிர,இரும்பு, பஞ்சு, தங்கம், தவிடு.. என்று தராசு வேற்றுமை காட்டுவதில்லை எனவே அதுதான் நீதியின் சின்னமாக ஏற்றுக்கொள்ள தகுதியுடையது .
இக்காரணங்களினால் தான் மக்கள் அனைவரும் எளிதாகப் புரிந்து கொள்ளக் கூடிய ஓர் உதாரணத்தின் மூலம் எல்லா நபிமார்களையும் நீதி என்னும் தராசு (மீஸான்) கொடுத்து அனுப்பி உள்ளோம் என்று இறைவன் அறிவிக்கின்றான்.
அதே சமயம் நீதி பெறுவதற்கு ஒவ்வொரு மனிதனும் உரிமை பெற்றிருக்கிறான் என்பதை..
"எவர் ஓர் அணுவளவு நன்மை செய்தாலும் அவர் அதன் பயனைக் கண்டு கொள்வார்; எவர் ஓர் அணுவளவு தீமை செய்தாலும் அவர் அதன் பயனையும் கண்டு கொள்வார் குர்ஆன் (99 : 7-8) என்று அல்லாஹுத்தஆலா உத்தரவாதம் அளிக்கிறான்.

உலக நீதிமன்றங்களில் சாட்சியங்கள் வகிக்கும் முக்கியமான இடத்தை காண்கிறோம். தான் நீதி வழங்கும் போது, மனிதனின் காது, கண், இதயம் யாவும் சாட்சியமாக அமையும் என்று அல்லாஹ் எச்சரிக்கிறான்.
"நிச்சயமாக செவி,பார்வை, இதயம் இவை ஒவ்வொன்றும் - அது பற்றி விசாரிக்கப்பட கூடியதாக இருக்கிறது" குர்ஆன் (11 : 36) என்று இறைவன் திருமறையில் உறுதிப்படுத்துகின்றான் .

நீதி வழங்குதல் என்பது மனிதனின் உரிமையை, உடைமையை காப்பது மட்டுமல்ல , அவனைக் கொடுமை செய்வோரிடமிருந்து காப்பதும் நீதி பரிபாலனமாகும்.
அத்லு ( நீதி செலுத்துதல்) என்பது மனிதனின் உரிமையைக் காத்து அதை நிலை நிறுத்துவதும்; கொடுமைக்கு முடிவு காணுவதுமாகும் என "உம்ததுல் காரீ " என்னும் ஹதீது விளக்க நூல் கூறுகிறது.
கொடுஞ்செயல்கள் - வன்முறைகள் நேரும்போது, அவற்றிலிருந்து பாதுகாவல் தருவது அரசனின், ஆட்சியாளனின் கடமை .
கொடுமை செய்பவனைத் தண்டிப்பது ஆட்சியாளர்கள் ஏற்படுத்தும் நீதிமன்றத்தின் கடமை .ஆனால் ஆட்சியாளனே கொடியவனாக மாறிவிட்டால்..?
இது பற்றி இமாம் ஸஃதீ (ரஹ்) தங்கள் "குலிஸ்த்தான் " என்னும் நூலில் இதுபற்றி ஓர்
**அருமையான**
கதை சொல்கிறார்கள்.
மக்களைக் கொடுமைப்படுத்தி வந்த அரசன் ஒருவன் இறைநேசச் செல்வரான சூஃபி ஒருவரிடம் வந்து, " எந்த இபாதத் (வணக்கம் ) மேன்மையானது ? "என்று வினவினான்

" உன்னைப் பொறுத்த மட்டில்,பகலிலும் நீ தூங்குவதே மேன்மையான வணக்கமாகும் " என்று அந்த சூஃபி பதில் கொடுத்தார்.
அக்கொடுங்கோல் மன்னன் பேராச்சரியப்பட்டான். பகலில் தூங்குவதும் மேன்மையான ஒரு வணக்கமாகும் என்று அவன் கேள்விப்பட்டதே இல்லை எனவே அவன் சூஃபி சொன்னதற்கு விளக்கம் கேட்டான்.
" நீ விழித்திருக்கும் நேரத்தில் மக்கள் உன் கொடுமைகளுக்கு ஆளாகிறார்கள்; எனவே நீ தூங்கினால் மக்கள் துன்பப்படாமல் இருப்பார்கள். ஆகவே தான் பகலில் தூங்குவது நன்மை தரவல்லது -எனவே அதுவும் ஒரு வணக்கமாகும் என்று அந்த சூஃபி பெரியவர் தெளிவுபடுத்தியதும்,மன்னன் வெட்கி தலை குனிந்தான்.
நபி (ஸல்) அவர்கள் தோழர்கள் புடைசூழ ஓரிடத்தில் அமர்ந்திருந்தபொழுது, ஒரு ஜனாஸா பிரேதம் அவர்களைக் கடந்து சென்றது. நபியவர்கள் அதை சுட்டிக்காட்டி, 'இவர் ஓய்வு பெற்றவர் அல்லது ஓய்வு அளித்தவர்' என்றார்கள்.
" இதன் பொருள் என்ன? " தோழர்கள் கேட்க ,
"இறைநம்பிக்கை கொண்ட ஒரு நல்லடியார் இறக்கும்பொழுது இவ்வுலகத்தின் துன்பங்களிலிருந்து ஓய்வு பெறுகிறார். பாவியான அடியான் இறக்கும்பொழுது அவனிடமிருந்து மற்ற படைப்புகள் ஓய்வு பெற்று நிம்மதி அடைகின்றன.

**இன்னொரு பார்வை 11**



( கொலைகாரனைக் காட்டிக் கொடுத்த ஹலாலான உணவு )
اِنَّمَا السَّبِيْلُ عَلَى الَّذِيْنَ يَظْلِمُوْنَ النَّاسَ وَ يَبْغُوْنَ فِى الْاَرْضِ بِغَيْرِ الْحَقِّ اُولٰٓئِكَ لَهُمْ عَذَابٌ اَلِيْمٌ
ஆனால் எவர்கள் மக்களுக்கு அநியாயம் செய்து நீதமின்றி பூமியில் அட்டூழியம் செய்கிறார்களோ, அவர்கள் மீது தான் (குற்றம் சுமத்த) வழியிருக்கிறது - இத்தகையோருக்கு நோவினை செய்யும் வேதனையுண்டு.
(குர்ஆன் : 42:42)
/.;....
நபி தாவூது (அலை) அவர்களின் ஆட்சி காலம். இளைஞன் ஒருவன் எப்போதும், "யா அல்லாஹ் நாள்தோறும் உண்ணும் உணவு ஹலாலானதாக இருக்க அருள் செய்வாயாக ! ஹராமான ,நேர்மை இல்லாத முறையில் ஈட்டப்பட்ட எப்பொருளும் என் உதட்டில் படாமலிருக்கக் கருணை செய்வாயாக ! "என்று பிரார்த்தித்து வந்தான்.
ஒரு தடவை இரண்டு நாட்கள் அவனுக்குப் போதிய உணவு கிடைக்கவில்லை ; இளைஞன் பொறுமையோடு இருந்தான். மூன்றாம் நாள் கொழுத்த ஆடு அவன் வீட்டைச் சுற்றி சுற்றி வந்தது. அன்று வைகறையில் கூட 'ஹலாலான உணவை தந்தருள் ' என்று இறைவனிடம் பிரார்த்தித்து, அவனுக்கு நினைவு வந்தது.
"இந்த ஆடோ எவ்வளவு விரட்டியும் என் இருப்பிடத்தை விட்டுப் போக மறுக்கிறது. எனவே அல்லாஹுத்தஆலா தான் இதை எனக்கு ஹலாலான உணவாக அனுப்பியிருக்க வேண்டும் " என்று முடிவு செய்த இளைஞன் அந்த ஆட்டை அறுத்து தானும் உண்டு, அண்டை அயலவர்களுக்கும் பகிர்ந்து கொடுத்தான்.
பொழுது சாயும் நேரம் ஒரு முரடன் அந்த இளைஞனின் வீட்டில் அத்துமீறி நுழைந்தான் .

"ஊரான் பொருளை உண்டு வாழ்கிறாயே உனக்கு வெட்கமில்லையா ? நீ அறுத்து தின்றது என்னுடைய ஆடாகும். அதற்குள்ள பணத்தை கீழே வைத்துவிட்டு மறு வேலையை பார் " என்று கத்தினான்.
இளைஞன் சிறிதும் பதறவும் இல்லை. பயப்படவும் இல்லை !
"நிச்சயமாக அது உங்களுடைய ஆடாக இருக்கவே முடியாது. ஏனென்றால், நித்தம் அல்லாஹுத்தஆலா எனக்கு ஹலாலான உணவையே தந்து கொண்டிருக்கிறான். அதே உணவுக்காக நான் அவனிடம் அல்லும், பகலும்

இறைஞ்சியும் வருகிறேன். அவன் உங்களுடைய ஆட்டை எனக்கு ஹராமான உணவாக அளிக்க மாட்டான் " என்று பதிலளித்தான்.
" உன்னுடைய தத்துவமெல்லாம் எனக்குத் தேவை இல்லை ; சொல்லவேண்டியதை அரசவையில் வந்து பேசிக் கொள்" என்று கூறி, இளைஞனை இழுத்துக்கொண்டு சென்று, அரசரான நபி தாவூத் (அலை) அவர்கள் முன் நிறுத்தித் தன் வழக்கை எடுத்துச் சொன்னான்.
நபி தாவூத் (அலை) கள்ளங்கபடமற்று தம் முன்னே நிற்கும் இளைஞனையும் பார்க்கிறார்கள்; அதே சமயம் பாவத்தின் கோடுகள் முகத்திலே பதிந்தவனாக நிற்கும் வாதியையும் பார்க்கிறார்கள். ஆனால் ஒருவன் முகம் பயங்கரமாக இருக்கிறது என்பதற்காக அவனுக்கு எதிராகத் தீர்ப்பு கொடுத்துவிட முடியுமா ?

"இளைஞனே ! நீ ஏன் இம் மனிதரின் ஆட்டைப் பிடித்து அறுத்துத் தின்றாய் ? "என்று கனிவுடனேயே விசாரித்தார்கள்.
"யா நபியுல்லாஹ் ! இது நிச்சயமாக அவருடைய ஆடாக இருக்க முடியாது. ஏனென்றால் மெய், மொழி, காயத்தால் நான் வணங்கும் இறைவன் எனக்கு ஹராமான உணவை ஊட்டவே மாட்டான் ! என்று பணிவோடு ஆனால் துணிவோடு கூறினான்.
இளைஞனின் குரலில் ஒலித்த உறுதி, நபி தாவூத் (அலை) அவர்களுக்கு சிந்திக்க வைத்தது.இளைஞர் தரப்பில் சாட்சியங்களோ ,ஆதாரங்களோ இல்லை என்றாலும், அவன் சொல்வதில் உண்மை எங்கோ ஒளிந்து இருக்கிறது என்று மற்றும் புலனாயிற்று.
" ஆண்டவன்தான் ஒரு நல்ல முடிவுக்கு வழிகாட்ட வேண்டும்" என்று எண்ணியவர்களாக, "சரி நாளைக்கு தீர்ப்பு வழங்குகிறேன் சென்று வாருங்கள்" என்று இருவரையும் அனுப்பி விட்டார்கள்.
அன்று இரவு நபி தாவூது (அலை) நெடுநேரம் பிரார்த்தனையில் கழித்தார்கள். நெஞ்சத்தில் ஒரு கோடியில் ஒரு மின்னல் கீற்று ஒளி வீசிற்று. இறைவன் நியாயம் இருக்கும் திக்கை அவர்களுக்கு வஹீ மூலம் காட்டிவிட்டான்.
மறுநாள் காலை வாதியையும், இளைஞனையும் அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினார்கள். இருவரும் வந்ததும், ஊரை அடுத்துள்ள இன்ன காட்டுக்குச் சென்று வரவேண்டும் ஏற்பாடு செய்யுங்கள் "என்று தன் பணியாளர்களுக்கு உத்தரவிட்டார்கள் .
ஆனால் காட்டின் பெயரை சொன்னதும், வழக்கு கொண்டு வந்தவன் முகத்தில் படர்ந்த பீதியையும்,அவன் உடல் ஒரு குலுக்கு குலுக்கியதையும் தாவூது (அலை) அவர்கள் பார்த்து நெஞ்சத்தில் குறித்துக் கொண்டார்கள்.
காட்டிற்குள் நுழைந்து, மரங்களடர்ந்த ஒரு குறிப்பிட்ட திக்கை நோக்கிச் சென்றார்கள்.
"இந்த மரத்தின் பக்கத்தில் வேர்களுக்கு சிறிது தள்ளிப் தோண்டுங்கள்" என்று தாவூத் (அலை) அவர்கள் கூறும் போதே..,
" அல்லாஹ்வின் தூதரே ! வந்து… நான்.. நான்.. என்று ஆரம்பித்தான் வழக்கை கொண்டு வந்த வாதி. அதற்குமேல் அவன் நா எழவில்லை .
பணியாட்கள் தோண்டினார்கள். உக்கி உலர்ந்துபோன இரு கால்களும், இரு கைகளும் தோண்டிய இடத்தில் தென்பட்டன. "மரத்தை சுற்றி வாருங்கள் இடதுபக்கம் தோண்டுங்கள்" என்று உத்தரவிட்டார்கள் நபி தாவூத் (அலை)
இப்போது தோண்டியய இடத்தில் கிடைத்தது ஒரு மனிதனின் தலை, தோண்டிய பணியாட்கள் அதைப் பார்த்து பயந்து பின்வாங்கினார்கள். வாதியும் கண்கள் பிதுங்கி விடும் போலிருந்தன.
" இந்த இளைஞன் கூறியபடி அவன் உண்டது ஹலாலான உணவுதான். இந்த வழக்கைக் கொண்டு வந்தவன் உண்மையில் இளைஞனின் தகப்பனாரின் வேலைக்காரன்.
இவ்விளைஞன் பச்சிளம் பாலகனாக இருக்கும்போது, இவ்வேலைக்காரன் தன் எஜமானாகிய இந்த இளைஞனின் தந்தையுடன் காட்டுக்கு வந்தான். எஜமானின் சொத்துக்கு ஆசைப்பட்டு ,இதே மரத்தடியில பெரியவரை வஞ்சகமாகக் கொன்று , தலை வேறு உடல் வேறாக புதைத்து விட்டான் .
பிறகு தன் எஜமானின் சிறுவனை விரட்டிவிட்டு, அவருடைய வீடுவாசல், காடு, கழனி ,கன்று, காலி அனைத்தையும் அபகரித்துக் கொண்டான். எனவே அச்சொத்து முழுவதும் நியாயமாக இந்த இளைஞனுக்குரியதே ஆகும்.
இவனுக்கு அல்லாஹ் அளித்த உணவும் ஹலாலானதுதான் என்று வழக்கின் பூர்வீக நிகழ்வை எடுத்துரைத்த நபி தாவூத் (அலை) அவர்களைப் பார்த்து, தாங்கள் கூறியதை எல்லாம் உண்மையே என்று சொல்லுவது போல் தன் தலையை அசைத்தவாறு பரிதாபமாக பார்த்துக்கொண்டு நின்றான் வழக்கைத் தொடுத்த வாதி.
கொடூரமாக தன் எஜமானை கொலை செய்து, அவரின் சொத்தையும் அபகரித்த அவனுக்கு அந்த உடனேயேயும் மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது.
கொலைகாரனைக் காட்டிக் கொடுத்தது இளைஞனின் தக்வாவான ஹலாலான உணவு.
இறைவனின் அளப்பரிய கருணை மீது அசையாத நம்பிக்கை கொண்டிருந்த இளைஞனுக்குச் சொத்து முழுவதும் திருப்பிக் கிடைத்தது.
அநீதி நேர்ந்து விடாது , நியாயமான தீர்ப்பு வழங்கத் தங்களுக்கு திசைகாட்டிய அல்லாஹ்வைப் போற்றி நின்றார்கள் நபி தாவூத் (அலை) அவர்கள்.

**இன்னொரு பார்வை 12**
( ஏளனம் )



إِنَّا كَفَيْنَٰكَ ٱلْمُسْتَهْزِءِينَ
உம்மை பரிகாசம் செய்பவர்கள் சம்பந்தமாக நாமே உமக்குப் போதுமாக இருக்கின்றோம். (அல்குர்ஆன் : 15:95)
இந்த ஆயத்து குறைஷிகளில் உள்ள ஐந்து தலைவர்களைக் குறித்து அருளப்பட்டதாக கூறப்படுகின்றது . அந்த ஐந்து தலைவர்களும் பத்ரு போருக்கு முன் ஒரே நாளில் வேறுவேறு விதமாக மரணித்தனர் என்பதுதான் ஆச்சரியமான சம்பவங்கள்
அதன் விவரம்

1) ஹளரத் காலிதுப்னுல் வலீத் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுடைய தந்தையான வலீதுப்னுல் முஙய்யறா என்பவன் ஒருவன்.
அம்பு வேலை செய்து கொண்டிருந்த ஒருவன் அருகில் வலீதுப்னுல் முஙய்யறா சென்றான். அவனது ஆடையில் செய்து வைக்கப்பட்ட அம்பு கொளுகிக் கொண்டது. அதனை திரும்பிப் பார்த்து நின்று அகற்ற வெட்கித்து இறுமாப்புடன் நடந்தான்.
பின்னர் சென்று தன் அங்கவஸ்திரத்தை (துண்டை) தோளில் போட அலட்சியமாக உயர்த்தி உதறினான். அந்த அங்கவஸ்திரத்தில் கொளுகி இருந்த அம்பு அவனது பிடரி நரம்பில் தைத்து, ரத்தம் பீறிட்டு வழிந்தோடியது. அந்த ரத்தம் நிற்காமல், ஏற்பட்ட காயத்தினால் அவன் அந்த இடத்திலேயே மரணித்தான்.

2) அம்ருப்னுல் ஆஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுடைய தந்தையான ஆஸுப்னுல் வாயிலிஸ் ஸஹ்மீ என்பவன், இவன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின்னால் நின்று வாயையும், மூக்கையும் சுழித்து, அலங்கோலமாக முகத்தை வைத்துப் பரிகாசம் செய்வது வழக்கம்.
ஒருநாள் அவன் தனது இரு புதல்வர்களுடன் ஒரு வாகனத்தின் மீது ஏறிச் சென்று, ஓரிடத்தில் இறங்கி, பூமியில் காலை வைத்தவுடன் ஏதோ கடித்து விட்டது என கூறினான்.
அங்கிருந்த யாவரும் தேடிப்பார்த்து ஒன்றும் காணப்படவில்லை. என்றாலும், அவனது கால் ஒட்டகையின் திமில் போல் வீங்கி அந்த இடத்திலேயே மரணித்தான்.

3) ஹாரிதுப்னு கைஸ் என்பவன். அவன் உப்பு வைத்து உலர்ந்த மீனைப் புசித்தான். அதனால் அவனுக்குத் தாகம் அதிகமாகி தண்ணீரை மிக அருந்தி அருந்தி வயிறு வீங்கி வெடித்து மரணித்தான்.

4) அஸ்வதுப்னுல் முத்தலிபிப்னில் ஹாரிஸ் என்பவன், அவன் தனது அடிமையுடன் ஒரு மரத்தின் அடியில் இருந்தபோது, ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவன் தலையைப் பிடித்து மரத்தில் ஓங்கி ஓங்கி முட்ட வைத்தார்கள்.
அப்போது அவன் தன் அடிமையிடம் , "என்ன பார்த்துக் கொண்டிருக்கிறாய் தெரியவில்லையா ? "என்று கூறினான்
அதற்கு அந்த அடிமை, " நான் என்ன செய்யமுடியும் ? நீங்களாக மரத்தில் ஓங்கி ஓங்கி முட்டிக் கொள்கிறீர்கள் " என்று பதிலளித்தான்.
இதனால் அவன் மண்டை கீறி, இரத்த வெள்ளத்தில் அந்த இடத்திலேயே மரணித்தான்.

5) அஸ்வதுப்னு அப்தி யகூத் என்பவன், அவன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய ஸஹாபிகளை காணும்போதெல்லாம் தனது நண்பர்களிடம்,

" இதோ பாருங்கள் ! இவர்கள்தாம் கிஸ்ரா , கைஸர் அகியவர்களுடைய அரசாங்கங்களை அடையும் வாரிசுகள் " என்று கூறி பரிகாசம் செய்வான்.
ஒருநாள் அவன் வீட்டிலிருந்து வெளியில் செல்லும்போது, அவனது நெஞ்சில் ஒருவிதமான காற்றுப்பட்டு அவனது உடல் முழுவதும் கருத்து விட்டது . அவன் வீட்டுக்குச் சென்றபோது, அவன் கரிய நிறமாக இருந்ததால்,அவனை அடையாளம் தெரியாமல், அவனை வீடேற்ற மறுத்துவிட்டார்கள். அவனும் அன்றைய தினமே மரணித்து விட்டான்.
இந்த ஐந்து பேரும் ஒரே நாளில் வேறுவேறு இடத்தில் மரணித்தனர்.
நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை பரிகாசம் செய்வதில் அபூஜஹ்ல், அபூலஹப், அக்பா, ஹக்கம் போன்ற பலர் சேர்ந்து இருந்தனர். ஆயினும் மேற்கூறப்பட்ட ஐவர் அனைவரும் முன்னணியில் இருந்தனர். இவர்கள் ஐவரும் ஒரே நாளில் மரணித்தனர் . இவர்களை குறித்துதான் மேற்கண்ட வசனம் அருளப்பட்டது என்பதாக கூறப்படுகிறது.

## இன்னொரு பார்வை 13



(குரோதமில்லாத குணத்தைக் கேட்பேன் )
وَنَزَعْنَا مَا فِىْ صُدُوْرِهِمْ مِّنْ غِلٍّ اِخْوَانًا عَلٰى سُرُرٍ مُّتَقٰبِلِيْنَ
மேலும், அவர்களுடைய நெஞ்சங்களிலிருந்து குரோதத்தை நாம் நீக்கி விடுவோம்; (எல்லோரும்) சகோதரர்களாக ஒருவரையொருவர் முன்னோக்கி அரியாசனங்களில் (ஆனந்தமாக) அமர்ந்திருப்பார்கள். (குர்ஆன் : 15:47)
சுவனவாசிகளான அவர்களுடைய இருதயங்களில் இவ்வுலகில் விரோதத்தின் காரணமாக ஏற்படுகிற குரோதத்தை இறைவன் அகற்றி விடுவான். சொர்க்கத்தில் அவர்கள் சகோதரராக ஒருவருக்கொருவர் எதிரில் அமர்ந்திருப்பார்கள் என்பது இந்த வசனத்தின் கருத்தாகும்

சுவனத்தில்தான் மனிதர்களின் குரோதத்தை அல்லாஹ் நீக்கி அவர்களை சகோதரர்களாகி விடுகின்றனர்.
குரோதம் இல்லா குணம் இவ்வுலகின் மனிதர்களுக்கு எப்படி சாத்தியமாகும் ?
சாத்தியம் என்பதாக நபி (ஸல்) அவர்கள் ஒரு நிகழ்வை குறிப்பிடுகிறார்கள் .
நபிகளார் திருச்சபை வழக்கம் போல, 'மஸ்ஜிதுன் நபி'யில் கூடியிருந்தது. நபிகளாரின் அருளுரைகளைக் கேட்டு அவற்றைத் தங்கள் வாழ்வில் செயல்படுத்தத் தயாராய் நபித்தோழர்கள் அங்கு குழுமியிருந்தனர்.
அவர்களிடம் நபிகளார் சொன்னார்கள் : "தோழர்களே, இப்போது சுவனவாசி ஒருவர், உங்கள் முன் வர இருக்கிறார் பாருங்கள்"
நபிகளாரின் மதிப்புக்குரிய அந்த மனிதரைப் பார்க்க நபித்தோழர்கள் ஆவலுடன் காத்திருக்க அங்கே மதீனாவாசியான அன்சாரியின் தோழர் ஒருவர் வந்தார்.
தொழுவதற்குத் தயாராய் தாடியில் நீர் சொட்டச் சொட்ட, தனது செருப்புகளை சுமந்துகொண்டு அவர்களைக் கடந்து சென்றார்.
இரண்டாவது நாளும் அவர் அங்கே வந்தார். மூன்றாவது நாளும் இப்படியே நடந்தது. நபிகளாரும் சுவனவாசிக்குரிய இந்த அன்சாரியின் தோழரைப் பற்றிதான் முன்அறிவிப்பு செய்தார்கள்.
மூன்று நாட்கள் கழிந்தன இதைக் கேட்டு அங்கு குழுமியிருந்த நபித்தோழர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் அம்ர் வியப்படைந்தார்.

நபிகளாரின் திருச்சபை கலைந்ததும், நபிகளாரால் சுவனவாசி என்று அறிவிக்கப்பட்ட அந்த அன்சாரி தோழரிடம் சென்றார். ஒரு மூன்று நாள் அவரோடு தங்கியிருக்க அனுமதி வேண்டினார். அவரும் அதற்குச் சம்மதித்தார்.
அன்சாரியின் தோழரோடு மூன்று நாட்கள் தங்கியிருந்த அப்துல்லாஹ் பின் அம்ர் எந்தவிதமான பிரத்யேக வணக்கமுறைகளையும் அவரிடம் காணவில்லை. எல்லாம் வழக்கம்போலவே இருக்கக் கண்டார்.

ஆனால், அவர் தூங்கச் செல்லும்போது, இறைவனை நினைவுகூர்ந்து தியானிப்பவராக இருந்தார். அதேபோல, யாரைக் குறித்தும் எவ்விதமான தீய வார்த்தைகளையும் அவர் கூறாமலிருப்பதையும் கண்டார். இப்படியே மூன்று நாட்களும் கழிந்தன.
வழக்கமான நடத்தைகள் கொண்ட ஒருவரை 'சுவனவாசி' என்று நபிகளார் முன்அறிவிப்பு செய்தது எப்படி? குழம்பித் தவித்த அப்துல்லாஹ் பின் அம்ர் தனது சந்தேகத்தை விடைபெறும்போது, அந்த அன்சாரி தோழரிடம் கேட்கவும் செய்தார்.
அதைக் கேட்ட அன்சாரி தோழர், புன்முறுவலுடன் சொன்னார்: "சகோதரரே! நீங்கள் மூன்று நாட்கள் என்னோடு தங்கியிருந்து கண்டது முழுக்க முழுக்க உண்மைதான்! அதே நேரத்தில் நீங்கள் காணாத ஒரு விஷயமும் இருக்கிறது. நான் யார் மீதும் குரோதம் கொள்வதில்லை. அதேபோல, பிறருக்கு இறைவனால் அருளப்படும் அருட்கொடைகளைக் கண்டு பொறாமைப்படுவதும் இல்லை!"
இந்த அருங்குணங்கள் பெற்றிருந்ததாலே அந்த அன்சாரி தோழர், சுவனவாசி என்று நபிகளாரால் முன்னறிவிப்பு செய்யப்பட்டார் என்பதை அப்துல்லாஹ் பின் அம்ர் புரிந்து கொண்டார்.

## இன்னொரு பார்வை 14

(நபிமார்களின் பார்வையில் இறைவன்)




نَبِّئْ عِبَادِىْۤ اَنِّىْۤ اَنَا الْغَفُوْرُ الرَّحِيْمُۙ
(நபியே!) என் அடியார்களிடம் அறிவியுங்கள் : "நிச்சயமாக நான் மிக்க மன்னிப்போனாகவும், மிக்க அன்புடையவனாகவும் இருக்கின்றேன்."
وَاَنَّ عَذَابِىْ هُوَ الْعَذَابُ الْاَلِيْمُ
"(ஆயினும்) நிச்சயமாக என்னுடைய வேதனையும் நோவினைமிக்க கொடியதாக இருக்கும்" (என்றும் சொல்லும்).
(அல்குர்ஆன் : 15:49,50)
ஒருநாள் நபி (ஸல்) அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமில் உள்ள பாபு பனீ ஷைபா என்ற வாசல் வழியாக வெளியில் வந்தார்கள்.
அப்போது நபித் தோழர்களது ஒரு கூட்டத்தினர் சிரித்துக் கொண்டிருப்பதை பார்த்து, " நீங்கள் சிரிப்பதை நான் காண்கின்றேனே" என்று கூறி விட்டுச்சென்றார்கள்.

நபி ( ஸல் ) அவர்கள் தங்களது சிரிப்புக்காக கண்டனஞ் செய்வதாக நபித்தோழர்கள் கருதி வருந்தினார்கள். இந்நிலையில் நபி (ஸல்) அவர்கள் தங்கள் வீட்டுக்கு வந்தவுடன், " என்னுடைய அடியார்களை நிராசை உள்ளவராக நீர் ஏன் செய்கிறீர் ? "என்று இறைவன் வஹீ அறிவித்தான் என்பதாக ரிவாயத்து செய்யப்படுகிறது.
நபி ஈஸா (அலை) அவர்களை நபி யஹ்யா (அலை) அவர்கள் சந்தித்தார்கள்.
அப்பொழுது ஈஸா (அலை) அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள். அதற்கு யஹ்யா (அலை) அவர்கள் "கவலை அற்றவராக தங்களைப் பார்க்கிறேன். தாங்கள் அபயமுள்ளவரோ ?" என்றார்கள்.
அதற்கு ஈஸா (அலை) அவர்கள், "தாங்களை நான் கடுகடுத்த முகம் உள்ளவராகக் காண்கின்றேன். தாங்கள் நிராசையுள்ளவராகி விட்டீர்களோ ? "என்றார்கள்.
இறுதியாக இருவரும், " நமக்கு வஹீ வருவதை எதிர்பார்ப்போம் " என்று இருந்தனர்.
அப்பொழுது இறைவன், "என்பால் நல்ல நம்பிக்கை உள்ளவர்கள் எவரோ அவர்தான் அதிக அன்பு உள்ளவர். அல்லது மலர்ந்த முகத்துடன் புன்சிரிப்பு உள்ளவர்தான் உங்களில் எனக்கு அதிகம் பிரியமானவர்கள் " என்று வஹீ அறிவித்தான் .

நபி ஜக்கரியா (அலை) அவர்கள் தங்களது புதல்வர் யஹ்யா (அலை) அவர்களை எந்நேரமும் கவலை அடைந்தவர்களாகவும், அழுபவர்களாகவுமே கண்டார்கள்.

எனவே " பிரயோஜனமடைவதற்குத் தகுந்த ஒரு புதல்வனை நான் வேண்டினேன் " என்று இறைவனிடம் கூறினார்கள்.
அதற்கவன் , "நீர் வலிய்யாகவுள்ள ஒருவரை வேண்டினீர் . வலிய்யாகவுள்ளவர் இவ்வாறு அல்லாமல் இருக்க மாட்டார் " என்று அறிவித்தான்.
அல்லாஹ்வின் கிருபையின் அளவை அடியான் அறிந்திருந்தால், ஹராமைச் செய்யாமல் அவன் பேணிக் கொள்வான்.
அல்லாஹ்வின் வேதனையின் அளவை அறிந்திருந்தால், தன்னை (அவனது வழிபாட்டில்) அழித்து கொண்டிருப்பான். பாவம் செய்ய முன் வர மாட்டான். _ ஹதீஸ்
பிழை பொறுப்பதற்குரிய காரணங்கள் ஏராளம் உண்டு. அவற்றில் மிகப் பெரியது " இஷ்க் "என்னும் பேரின்பக் காதலும், அவன்பால் இடையூறாத அன்புமே ஆகும்.

தெய்வீக மெஞ்ஞானத்தின்பாலும், இறைவன்பால் பிரியம் கொள்வதன்பாலும் சேர்ப்பிக்கக் கூடிய வணக்கத்திற்காகவே மனிதனையும், ஜின்னையும் இறைவன் படைத்தான்.
இதுபோல வேதனைக்குரிய காரணங்களும் ஏராளம் உண்டு. அவற்றில் மிகப் பெரியது இறைவனையும், அவனது தன்மைகளையும் அறியாமல் இருக்கிற அறியாமையாகும்.
ஆகவே பேரின்பக் காதல் வழியிலும் மஅரிஃபத் என்னும் மெய்ஞானத்தின்பாலும் முயல்வதே அறிவுடையோரின் கடமையாகும்.
படம் : இதுதான் இயற்கையின் நியதி - குர்ஆன் (15 : 49,50 )

**இன்னொரு பார்வை 15**
( நட்சத்திரக் கலை )




தொடு குறி சாஸ்திரம், கிளி ஜோஸ்யம், பங்கஜா லாட்ஜ் பாமிஸ்ட் , "கிரகம் பாடாய் படுத்தும் " என்று சொல்லும் "பாலத்து ஜோஸ்யர்கள் " போன்ற வியாபாரக்காரர்களை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு...
இந்த சாஸ்திரத்தின் அடிப்படைச் சிந்தனையை யோசித்து பார்த்தால் , ரொம்பவும் வசீகரமாகத்தான் இருக்கிறது.
( இந்த ரஹ்மத் ராஜகுமாரன் ஜோசியத்தை நம்புற ஆள் இல்லை )

அந்த வசீகர சிந்தனை என்ன?
ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஓர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்சவெளியிலும் ஒரு பிரத்தியேகமான நிகழ்ச்சி நிகழ்கிறது என்கிறார்கள்.
ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள் .
இதெல்லாம் நிஜமாலுமா ..? என்று நீங்கள் கேட்பது புரிகிறது . தொடர்ந்து படியுங்கள் .

நட்சத்திரங்களால்தான் நம் வாழ்வு பிரகாசிக்கிறது எனவே அதனை "ஷிஃரா " என்னும் நட்சத்திரத்தை கடவுளாக்கி வழிபட்டதாக "ஆது" மக்களைப் பற்றி குர்ஆன் (53 : 49,50) குறிப்பிடுகிறது.
ஷிஃரா 10 ஒளியாண்டு தூரத்தில் உள்ளது. டெலஸ்கோப் மூலம்தான் பார்க்க முடிகிற நட்சத்திரத்தை வெறுங்கண்ணால் "ஆது மக்கள் எப்படி பார்த்தார்களோ. ? " இது குர்ஆன் கூற்று .
''நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்துப்பார்த்தார் " குர்ஆன் (37 : 88) " இலா" என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருப்பதால் "கூர்ந்து " என்று அர்த்தம் வரும். எனவே நட்சத்திரக் கலையை பயின்றார்.

மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹிம் (அலை) அவர்கள் " பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து, நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது " என்று கூறுகிறார்கள். குர்ஆன் (37 : 88,89)
"எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரம் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை "
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்
நபி மூஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள், "வானில் ஜென்ம நட்சத்திரம் தோன்றி விட்டது. இது ஓர் அவதாரப் புருஷன் பனீ இஸ்ரவேலர்களில் பிறந்தற்குரிய அறிகுறி " என்று கணித்தார்கள்.
இந்த வான சாஸ்திரிகளின் கணிப்பால் ஒரு லட்சத்திற்கும் அதிகமான பனீ இஸ்ரவேலர்களின் பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டது .
அக்கால வான இயல் வல்லுநர் கணித்ததில் தவறெதும் உண்டா ? நபி மூஸா (அலை) பிறக்காமலா போனார்கள் ? பிறந்தார்கள் அல்லவா ? குர்ஆன் ( 20 : 39 ) ( 28 : 07 )
இது போன்றே நபி ஈஸா (அலை) அவர்கள் பிறக்கும்போது, மூன்று வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதை கண்டு, பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து, இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா ? என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க, பின் விசாரித்தில் மாட்டுத் தொழுவத்தில் மாநபி ஈஸா (அலை) அவர்கள் பிறந்தது உண்மைதானே.?

"பதினோரு நட்சத்திரங்களும் . சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன்" குர்ஆன் (12 : 04) என்று சிறுவர் நபி யூசுப் (அலை) கனவில் கண்ட நட்சத்திரங்கள் தன்னுடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி யாகூப் (அலை) அவர்கள் அறிவிக்கவில்லையா ?
ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ? புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07
மனிதர்களின் பிறப்புகளுக்கும் வான நட்சத்திரங்கள் கிரகங்களுக்கும் அப்படி ஒரு தொடர்பை வானியல் கருவிகள் ஏதும் இல்லாமல் அக்கால வான இயல் வல்லுநர்களால் எப்படி துள்ளியமாக வகுக்க முடிந்தது ? இப்போ எங்கே மறைந்து போனது 'அந்த' வான சாஸ்திரம் ?
இது இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களால் ஃபால் கிதாபு எழுதப்பட்டதாக சொல்லப்படுகிறது .
உளூச் செய்து இரண்டு ரகஅத் தொழுது ஃபாத்திஹா ஓதிய பின் இதனைக் கண்களை மூடிக் கொண்டு கிதாபைத் திறந்து , அதில் தங்களின் விரலை வைத்து, அதில் உள்ள எழுத்து அல்லது எண்ணுக்கான விளக்கத்தைப் படித்துத் தங்களுக்கான ஃ பாலை விளங்கிக் கொள்கிறார்கள்.
இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் ஃபால் எவ்விதத் தீமையும் செய்யாது என்று ஃபார்ஸியில் ஒரு பழமொழியே இருக்கிறது .
,,
ஷைகு பஹாயீ எழுதிய மற்றொரு ஃபால் நாமாவும் உள்ளது .'லறூறுல் முஃமினீன்' என்ற நூலில் 9 முதல் 12 பாகங்களில் ஒன்பது கட்டங்களில் எண்களிட்டு ஃபால் பார்க்கும் முறையும் , 24 கட்டங்களில் எண்களிட்டு ஃபால் பார்க்கும் முறையும் , உள்ளது .
அப்ஜத் கணக்கின்படியும் , விண்மீன் நட்சத்திரங்களைக் கொண்டும் ஃபால் பார்க்கும் முறையும் , இன்னும் நுட்பமான விஷயங்களைக் கொண்டும் ஃபால் கணிக்கப்படுகிறது !
நட்சத்திரத்தைப் பற்றிய வான சாஸ்திர நூல் ஃபால் கிதாபுகளுக்கெல்லாம் முன்னோடியாக திகழ்ந்தது என்று மேற்கண்ட நிகழ்வுகளை குறிப்பிடப்படுகிறார்கள். ( மீள் )

**இன்னொரு பார்வை 16**

(மூவகைப் படைப்பினங்களும் , அவர்களுக்கு கட்டளையிடப்பட்ட ஸுஜுதும்)

وَالْجَـآنَّ خَلَقْنٰهُ مِنْ قَبْلُ مِنْ نَّارِ السَّمُوْمِ
(அதற்கு) முன்னர் ஜான்னை (ஜின்களின் மூல பிதாவை) கடிய சூடுள்ள நெருப்பிலிருந்து நாம் படைத்தோம். (குர்ஆன் : 15:27
' அல்ஜான்னு' ( وَالْجَـآنَّ) என்பது ஜின்களின் மூல பிதாவின் பெயர். இப்லீஸ்தான் ஜின்களின் மூலபிதா என்பதாக அர்ரௌலத் என்ற நூலில் எழுதப்பட்டிருக்கிறது.
எனினும் ஜின் இனம் முழுவதற்கும் இப்பெயர் கூறப்படுவதுண்டு. ஆகவே ஜின் இனத்தை மனித இனத்திற்கு முன்னர் இறைவன் படைத்தான் என்பது இந்த ஆயத்தின் கருத்து. ஆதம் அலை அவர்களைப் படைப்பதற்கும் ஜின்னை படைப்பதற்குமிடையில் 6000 வருட காலங்கள் வித்தியாசம் உண்டாம் .
மனித வர்க்கத்துக்கு முன்னதாக ஜின் வர்க்கமும், ஜின் வர்க்கத்துக்கு முன்னதாக மலக்குகள் என்னும் வானவர்கள் வர்க்கமும் படைக்கப்பட்டன. ஆனால் ஆதம் (அலை) அவர்களுக்கு முன்னதாக மண்ணிலிருந்து எந்த ஜீவ வர்க்கமும் படைக்கப்படவில்லை.

ஆதம் (அலை) அவர்கள் அல்லாஹுத்தஆலாவுக்குப் பணிவான, கீழ்படிதலுள்ள அடியாராகவும், ஸுஜூது என்னும் சிர வணக்கம் செய்வதன்பால் சார்ந்தவராகவும் இருப்பதற்காக மண்ணில் படைக்கப்பட்டார்கள். ஸுஜூதுதான் பரிபூரணமான ' உபூதிய்யத் ' என்னும் அடிமைத்தனத்தையுடைய ஸ்தானம். ஒவ்வொன்றும் தன் தன் இனத்தின் குணம் சார்ந்தே இருக்கும் என்பதற்கிணங்க ஆதம் (அலை) அவர்கள் இறைவனுக்குப் பணிந்தார்கள்.
அவ்வாறு பணிய இப்லீஸ் மறுத்துப் பெருமை கொண்டான். அவன் நெருப்பில் படைக்கப்பட்டு இருப்பதால், தனது இனத்தின்படி நெருப்பு எரியும்பொழுது சதா மேலோங்கி மேலோங்கி எரியும் சற்று சாய்ந்து பணியாது.
அஸ்ஸமூம் ( السَّمُوْمِ ) என்பதற்கு சூடான காற்று என்பது இயற்பொருள். இது மிகவும் நுட்பமானதாக இருப்பதால், உடலிலுள்ள மயிர்க் கண்களுக்குள் சென்று விடும். ஆதலால் அதற்கு "ஸமூம்" என்று பெயர். புகையில்லாத நெருப்புக்கும் "நாருன் ஸமூமுன் " என்று கூறப்படுகிறது.
அதாவது வெப்பக்கதிர் வீச்சு முறையில் இயங்கும் நவீன இன்டக்ஸன் அடுப்பு மாதிரி.எனவே ஷைத்தான் மிக எளிதாக மனிதனுள் புகுந்து விடுவான் .
وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓٮِٕكَةِ اِنِّىْ خَالِـقٌ بَشَرًا مِّنْ صَلْصَالٍ مِّنْ حَمَاٍ مَّسْنُوْنٍ
மேலும், பேதலித்து கருத்த அளர் மண்ணிலிருந்து (உலர்ந்த களிமண்ணினால்) மனிதனை நிச்சயமாக நான் சிருஷ்டிக்கிறவன் என்று மலக்குகளுக்கு உமது றப்பு கூறிய நேரத்தை (எண்ணிப் பார்ப்பீராக) ,(குர்ஆன் : 15:28)
இந்த வசனத்தில் குறிப்பிடப்படும் மலக்குகள், ஆன்மா என்ற அந்தஸ்திலிருந்து உடல்நிலைக்கு இறங்கிய மலக்குகள்தாம் இங்கு இறைவனால் குறிப்பிடப்பட்டுள்ள மலக்குகள்.
இவர்களில் ஜிப்ரீல் (அலை) அவர்களும், அவர்களைப் போன்ற முக்கிய மலக்குகளும் சேர்ந்திருந்தனர். இம்மலக்குகளில் தாழ்ந்தவர்களும் கூடச் சம்பந்தப்பட்டவர்களே, இவர்கள் யாவரும் நுட்பமாக அரூபமான உடலை ஆடையாக அணிந்தவர்கள்

நல்லவர்களை விட்டு கெட்டவர்களை பிரித்து ஒதுக்குவதற்காக, பரீட்சை செய்யும் நோக்கத்துடன் இறைவன் மலக்குகளிடம் மனிதனைச் சிருஷ்டிக்க போகும் விஷயத்தை இந்த வசனத்தில் கூறினான். இப் பரீட்சையில் மலக்குகள் தேறினர். இப்லீஸ் தோற்று பாக்கியமற்றவனாகி விட்டான்.

فَاِذَا سَوَّيْتُهٗ وَنَفَخْتُ فِيْهِ مِنْ رُّوْحِىْ فَقَعُوْا لَهٗ سٰجِدِيْنَ
அவரை நான் செவ்வையாக உருவாக்கி, அவரில் என்னுடைய ஆன்மாவை ஊதியதும், “அவருக்கு ஸுஜுது செய்து பணியுங்கள்” என்றும் கூறியதை (நினைவு கூர்வீராக)!
(குர்ஆன் : 15:29)
மனிதனுக்கு ஏற்பட்ட திறமை பூர்த்தியாகி, அவரில் ஆன்மாவை நாயன் ஏற்படுத்தி, அவரது அங்கங்களில் அதன் குணம் வெளியாகி., அவர் உணர்வுள்ளவராக சுவாசம் வாங்கி விடுபவராக ஆகும் பொழுது "அவருக்கு ஸுஜுது செய்தவர்களாக நீங்கள் விழ வேண்டும் "என்று கூறினான்
இதிலிருந்து சாதாரணமான முறையில் தலை சாய்த்தல் அல்லது குனிதல் மட்டும் போதாது, சாஷ்டாங்கமாக விழுந்து விட வேண்டும் என்பது இக்கட்டளையின் கருத்து.

அல்லாஹுத்தஆலா உடைய ஆற்றலின் நூதனமான அடையாளங்களெல்லாம் மனிதனில் வெளியாவதால், முதல் மனிதனை அதாவது ஆதம் (அலை) அவர்களை கிப்லாவாக வைத்து தனக்கு ஸுஜுது செய்யுமாறு இறைவன் கட்டளையிட்டான். அந்த உடனேயே மலக்குகள் ஸுஜுது செய்தார்கள் .
ஒளி வளையுமா ? வளையாதுதான். ஆனால் சக்தி படைத்த ஊடகங்கள் முன் ஒளி வளையும்.
சூரியனைச் சுற்றிலுள்ள கால வெளி வளையத்தை, சூரியனின் சக்தி மிகுந்த ஈர்ப்பாற்றலால் வளைத்துவிடும் போது,சூரியனுக்கு அருகில் வரும் விண்மீனின் ஒளி , சூரியனை நோக்கி வளைந்துவிடும் என்பது இயற்கையின் நியதி தானே !
மலக்குகள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள்.மாபெரும் சக்தி படைத்த இறைவனுக்கு அவர்கள் ஸுஜுது செய்வார்கள். இறைவனின் ரூஹூவை ஆதமுக்குள் ஊதியதும் , அதற்கு ஸுஜுது செய்தார்கள்.
மனிதனது சகல செய்கைகளிலும் அவன் தொழுகையில் ஸுஜுது செய்வதுதான் இப்லீஸை அதிகமாக அழச் செய்யும் செய்கை. ஏனெனில் அவன் செய்த தவறும் ஸுஜுதுதான்.
அதிகமாக ஸுஜூது செய்வதும் இப்லீஸாகிய ஷைத்தானை அதிக துக்கத்தில் ஆழ்த்துகிறது. மேலும் இப்லீஸை விட்டு மனிதன் தொழுகையில் ஸுஜூது ஒன்றைத் தவிர வேறு எதிலும் தப்பித்துக் கொள்ள முடியாது.
மனிதன் தொழுகையில் ஸுஜூது செய்யும் பொழுது ஷைத்தான் தனது தவறை எண்ணிக் கொள்கிறான். அவன் துக்கப்பட்டு கவலையடைவதுடன் மனிதனை விட்டு விலகிக் கொள்கிறான்.
எனவே ஆதமுடைய மகன் ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதி ஸுஜுது செய்யும் போது, ஷைத்தான் அவனை விட்டு விலகிக் கொண்டு அழுகிறான்.

ஸுஜுது செய்யுமாறு ஆதமுடைய மகன் கட்டளையிடப்பட்டான்.உடனே அவன் ஸுஜூது செய்து சொர்க்கத்திற்கு தகுதி ஆகிவிட்டான். நானோ ஸுஜுது செய்யுமாறு ஏவப்பட்டு, அதனைச் செய்யாமல் விலகிக் கொண்டேன் என் மீது நரகம் வாஜிபாகி விட்டது "என்று ஷைத்தான் " கூறுகிறான் என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

எனவே அடியானாகிய மனிதன் ஸுஜுது செய்து கொண்டிருக்கும்பொழுது, ஷைத்தானை விட்டு காக்க பட்டவனாக இருக்கிறான். ஆனால் நஃப்ஸை விட்டு அவன் காக்கப்படவில்லை !
ஆதலின் ஸுஜுது செய்யும்பொழுது ஏற்படும் எண்ணங்கள் ரப்பானிய்யாவாக அதாவது இறைவனால் உண்டாக்கப்படுவதாக அல்லது மலக்கிய்யாவாக அதாவது மலக்குகளால் உண்டாக்கப்படுபவனவாக அல்லது நஃப்ஸிய்யாவாக அதாவது நஃப்ஸால் உண்டாக்கப்படுபனவாக இருக்கின்றன .
ஸுஜுது செய்யும் சமயம் சைத்தானுக்கு அவன் மீது ஆதிக்கம் இல்லை . ஆனால் அடியான் ஸுஜுதை விட்டு எழுந்து விட்டால், இப்லீஸுக்கு அந்த துக்கநிலை மாறி விடுகிறது .அடியானை கவனிக்க வேண்டிய விதத்தில் கவனித்து விடுகிறான்.

**இன்னொரு பார்வை 17**
( பட்டோலைகள் )



وَوُضِعَ الْكِتٰبُ فَتَرَى الْمُجْرِمِيْنَ مُشْفِقِيْنَ مِمَّا فِيْهِ وَ يَقُوْلُوْنَ يٰوَيْلَـتَـنَا مَالِ هٰذَا الْـكِتٰبِ لَا يُغَادِرُ صَغِيْرَةً وَّلَا كَبِيْرَةً اِلَّاۤ اَحْصٰىهَا وَوَجَدُوْا مَا عَمِلُوْا حَاضِرًا وَ لَا يَظْلِمُ رَبُّكَ اَحَدًا
இன்னும் (பட்டோலையாகிய) புத்தகம் (அவர்கள் முன்) வைக்கப்படும்; அதிலுள்ளதைக் கண்டு குற்றவாளிகள் மிக்க அச்சத்துடன் இருப்பதைக் காண்பீர்;
மேலும் அவர்கள், “எங்கள் கேடே! இந்த ஏட்டிற்கு என்ன (நேர்ந்தது)? மிகச் சிறியவையோ மிகப் பெரியவையோ எதையும் எழுதாமல் இது விட்டுவைக்கவில்லையே!” என்று கூறுவார்கள்;
இன்னும், அவர்கள்செய்த யாவும் அவர்கள் முன் வைக்கப்படுவதைக் காண்பார்கள்; ஆனால் உம்முடைய இறைவன் ஒருவருக்கும் அநியாயம் செய்யமாட்டான். (குர்ஆன் : 18:49)

மனிதனின் ஒவ்வொரு அசைவுகளும், சிறிய செயல்களும், பேசிய சொற்களும், கண் சிமிட்டல்களும், காதில் கேட்டவைகளும், மனதில் தோன்றியவைகளும் என்று அப்பப்பா...ஏகப்பட்டவைகளை பதிவு செய்யப்பட வேண்டுமானால், ஏடுகள் எவ்வளவு பிரமாண்டமானதாக இருக்க வேண்டும். அது எப்படி வலது கையால் பார்க்குமளவுக்கு இருக்க முடியும் என்று விதண்டாவாதம் புரிவோர் கேட்கக் கூடும்.
ஆனால் ஒரு கிடங்கு (warehouse) நிறையை உள்ள ஆவணங்களை சின்ன ஞாபகப் தொகுப்பு தகடில் (mini memory card) சேமித்து வைக்க முடியும் என்றால், இவ்வுலகை படைத்து, நியாயதீர்ப்பு நாளின் அதிபதி, ரப்புல் ஆலமீனான அல்லாஹ்வால் அதை விட மேலும் எளிய வழியில் நிச்சயமாக வைத்திருக்க இயலும். இதுவே நம்முடைய ஈமான்.
ஆகவே, நிச்சயமாக தீயோர்களின் பதிவேடு ஸிஜ்ஜீனில் இருக்கிறது (83:7)
நிச்சயமாக நல்லோர்களின் பதிவேடும் “இல்லிய்யீ”னில் இருக்கிறது. (83:18)
மனிதர்களின் இவ்வுலக வாழ்க்கையென்பது, தாயின் வயிற்றுக்குள் மட்டுப்படுத்தப்பட்ட கர்ப்பப்பை சூழலில் உயிர்வாழும் சிசுவின் வாழ்வைப் போன்றதாகும்.

கர்ப்பத்திலிருக்கும் சிசு, திறமை, சாதுரியம் என எத்தகைய இயல்புடையதாக இருப்பினும் வெளிப்புற உலகிலுள்ள சூரியன், சந்திரன், தென்றல், காற்று, தாவரங்கள், பசுந்தரைகள், கடலலைகள் போன்ற எதனையும் உணர்ந்து கொள்ளமாட்டாது.
அதுபோலவே, மனிதனின் இவ்வுலக வாழ்க்கையில் மறுமை பற்றிய உண்மைகளான சுவனம் பற்றியோ, ஹூருள் ஈன் பெண்களைப் பற்றியோ , அட , ஹூருள் ஈன் பெண் அணிந்திருக்கும் முந்தானை இந்த உலகத்தை விட சிறந்ததாகும் என்பது பற்றியோ பூரணமாக அறிந்து கொள்வதென்பதும் சாத்தியமற்றதே.
மனிதர்களாகிய நம்மைப் பொறுத்த வரையில் கியாமத் வாழ்வு என்பது கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கு தெரியாத வெளியுலக வாழ்வு போன்றதாகும்.

மேலும் (மறுமையில்) அவர்கள், “எங்கள் கேடே! இந்த ஏட்டிற்கு என்ன (நேர்ந்தது)? மிகச் சிறியவையோ, மிகப் பெரியவையோ எதையும் எழுதாமல் இது விட்டுவைக்கவில்லையே!” என்று கூறுவார்கள்.
மிகச் சிறியதென்பது 'தொடுதல்' . மிகப்பெரியதென்பது விபச்சாரம் என்பதாக ஸயீதுப்னுல் ஜுபைர் (ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

மனோ இச்சையைக் கொண்டு செய்கிற சகல காரியமும் அது இறைவனிடம் முறையீடு செய்வதாக இருந்த போதிலுஞ் சரியே அவைகள் சிறியவைகளாகும்.
உலகில் பற்று வைத்து அதில் உழல்வது யாவும் பெரியவைகளாகும். அது ஹலாலான பொருளாக இருந்தாலும் சரியே, ஏனெனில் உலகப்பற்று தான் சகல குற்றத்துக்கும் தலையாக இருக்கிறது.
ஹஸ்ரத் அலீ (ரலி) அவர்கள் இவ்வாறு சொன்னார்கள்:
''உலகத்தையே உண்மையாகக் கொண்டவருக்கு அது உண்மையின் இருப்பிடமாகும். அதனைப் பயன்படுத்தியவர்களுக்கு அது செல்வங்களைத் தருமிடமாகும். அதிலிருந்து கற்றுக் கொள்பவருக்கு அது படிப்பினை தரும் இடமாகும். அது இறைநேசர்களின் வழிபாட்டுத் தலமாகவும், மலக்குகளின் தொழும் இடமாகவும், வஹியின் இறங்கு தளமாகவும் அல்லாஹ்வுடைய நேசர்களின் சந்தையாகவும் இருக்கின்றது."
(நஹ்ஜுல் பலாகா - மொழி 131)
அற்பமான பாவங்களை விட்டு உங்களைக் காத்துக் கொள்ளுங்கள். அவைகள் கியாமத்து நாளில் பெரிய பெரிய மலைகளைப் போல் வரும். அவற்றிற்குப் பரிகாரம் என்ன என்று கேட்டபோது, ''ஸதக்கா " என்று பதிலளிக்கப்பட்டது.

**இன்னொரு பார்வை 18**
(திருக்குர்ஆன் அருமருந்து )



وَنُنَزِّلُ مِنَ الْقُرْاٰنِ مَا هُوَ شِفَآءٌ وَّرَحْمَةٌ لِّلْمُؤْمِنِيْنَ‌ۙ وَلَا يَزِيْدُ الظّٰلِمِيْنَ اِلَّا خَسَارًا
இன்னும், நாம் முஃமின்களுக்கு ரஹ்மத்தாகவும், அருமருந்தாகவும் உள்ளவற்றையே குர்ஆனில் (படிப்படியாக) இறக்கிவைத்தோம்; ஆனால் அக்கிரமக்காரர்களுக்கோ இழப்பைத் தவிர வேறெதையும் (இது) அதிகமாக்குவதில்லை.
(அல்குர்ஆன் : 17:82)

திருக்குர்ஆன் ஆத்மார்த்த நோய்களுக்கு அருமருந்தாக இருப்பது போல உடல் நோய்களுக்கும் மருந்தாக இருக்கிறது.
ஹளரத் அபுல்காஸிமில் குஷைரீ குத்திஸ ஸிர்ருஹு அவர்களது புதல்வரில் ஒருவருக்குக் கடுமையான நோய் ஏற்பட்டு, பிழைப்பது கூட கஷ்டம் என்ற நிலை ஏற்பட்டது.
இந்த சந்தர்ப்பத்தில் இமாமவர்கள் அல்லாஹுத்தஆலாவை கனவு கண்டு, இறைவனிடம் தமது புதல்வருக்கு ஏற்பட்ட நோய் குறித்து முறையிட்டார்கள்.
அதற்கு இறைவன் திருக்குர்ஆனிலுள்ள ஷிஃபாவுடைய ஆயத்துக்களை ஓதி, நோயாளி மீது ஊதுவதுடன், ஒரு பீங்கான் தட்டில் அவற்றை எழுதிக் கழுவிக் கொடுக்குமாறும் கட்டளையிட்டான்.
அவ்வாறு செய்ததன் காரணமாக அவரது புதல்வர் நோயை அகன்று குணமடைந்தார்.

திருக்குர்ஆனில் ஷிபாவுடைய ஆயத்துக்கள் ஆறு இருக்கின்றன.
وَيَشْفِ صُدُوْرَ قَوْمٍ مُّؤْمِنِيْنَۙ

1) இதயங்களுக்கு ஆறுதலும் அளிப்பான். (அல்குர்ஆன் : 9:14)
شِفَآءٌ لِّمَا فِى الصُّدُوْرِ

2) உங்கள் இதயங்களிலுள்ள நோய்களுக்கு அருமருந்தும் வந்திருக்கிறது (அல்குர்ஆன் : 10:57)
فِيْهِ شِفَآءٌ لِّلنَّاسِ

3) அதில் மனிதர்களுக்கு (பிணி தீர்க்க வல்ல) சிகிச்சை உண்டு; . (அல்குர்ஆன் : 16:69)
وَنُنَزِّلُ مِنَ الْـقُرْاٰنِ مَا هُوَ شِفَآءٌ وَّرَحْمَةٌ لِّـلْمُؤْمِنِيْنَ

4) ரஹ்மத்தாகவும், அருமருந்தாகவும் உள்ளவற்றையே குர்ஆனில் இறக்கிவைத்தோம் (அல்குர்ஆன் : 17:82)
وَاِذَا مَرِضْتُ فَهُوَ يَشْفِيْنِ

5) “நான் நோயுற்ற காலத்தில், அவனே என்னைக் குணப்படுத்துகிறான். (அல்குர்ஆன் : 26:80)
قُلْ هُوَ لِلَّذِيْنَ اٰمَنُوْا هُدًى وَشِفَآءٌ

6) “இது ஈமான் கொண்டவர்களுக்கு ஒரு வழிகாட்டியும்,
அரு மருந்துமாகும்” (அல்குர்ஆன் : 41:44)

அநேகமான மஷாயிகுகள் நோயாளிகளுக்கு இந்த ஆயத்துக்களை ஒரு பாத்திரத்தில் எழுதி, கரைத்து கொடுப்பதை நான் பார்த்திருக்கிறேன் என்பதாக தாஜுதீனிஸ் ஸுப்கீ (ரஹ்) அவர்கள் தங்களது தபகாத்தில் எழுதியுள்ளார்கள்.

"திருக்குர்ஆனைக் கொண்டு ஆரோக்கியத்தைத் தேடாதவருக்கு, அல்லாஹ் ஆரோக்கியத்தை அளிக்கமாட்டான்" - என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியிருப்பது ஆத்மார்த்த நோய் நோய்களுக்கும் உடல் நோய்களுக்கும் பொதுவானது.

தன் இதயத்தில் ஒரு மாறுதலையோ, சந்தேகத்தையோ ததும்புதலையோ, திகிலையோ காண்பவர் சூரத்துல் ஃபாத்திஹாவை ஒரு சுத்தமான பாத்திரத்தில் எழுதி, சுத்தமான தண்ணீரில் கரைத்துக் கழுவி, அந்த தண்ணீரை அருந்துவாராயின், அவரது இதயம் நிம்மதி அடைந்து அமைதியாகிவிடும். அவருக்கு இருக்கும் இதய வலியும் நீங்கிவிடும்.

பளிங்கு பாத்திரத்தில் கஸ்தூரி கொண்டு எழுதி பன்னீரால் கரைத்து, தீட்சண்ய புத்தி இல்லாதவர்களுக்குக் குடிக்கக் கொடுத்தால் , ஞாபகமின்மை, விளக்கமின்மை, தீட்சண்யமின்மை ஆகியவைகள் நீங்கிவிடும். இவ்வாறு ஏழு
நாட்கள் கொடுக்க தான் செவியேற்கிற யாவையும் மனனம் செய்து கொள்வான்" என்பதாக அஷ்ஷெய்குத் தமீமீ (ரஹ்) அவர்கள் தங்களது கவாஸ்ஸுல் குர்ஆன் என்னும் நூலில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

திருக்குர்ஆன் உங்களது நோய்களையும், உங்களுக்குரிய மருந்துகளையும், உங்களுக்கு அறிவிக்கிறது. உங்களது நோய்கள் என்பது உங்கள் பாவங்கள்தான். உங்களது மருந்துகள் என்பது இஸ்திஃபார் (பிழை பொறுக்கத் தேடுதல்) என்னும் தவ்பாதான் -ஹதீஸ்

## இன்னொரு பார்வை 19

( வழிகாட்டும் வான் நட்சத்திரங்கள் )




وَهُوَ الَّذِىْ جَعَلَ لَـكُمُ النُّجُوْمَ لِتَهْتَدُوْا بِهَا فِىْ ظُلُمٰتِ الْبَرِّ وَالْبَحْرِ قَدْ فَصَّلْنَا الْاٰيٰتِ لِقَوْمٍ يَّعْلَمُوْنَ

அவனே உங்களுக்காக நட்சத்திரங்களை உண்டாக்கினான்; அவற்றைக் கொண்டு நீங்கள் கரையிலும், கடலிலும் உள்ள இருள்களில் நீங்கள் வழியறிந்து செல்கிறீர்கள் - அறியக்கூடிய மக்களுக்கு நிச்சயமாக (நம்) வசனங்களை இவ்வாறு விவரிக்கிறோம். (குர்ஆன் : 6:97)

அல்லாஹ் இம்மாபெரும் பிரபஞ்சத்தை படைத்தது வெறும் வீண் விளையாட்டு வேடிக்கைக்காக அல்ல.தக்க காரணத்துக்காகவே அன்றி வேறில்லை,என்று பல வசனங்களில் குறிப்பிடுகிறான்.

வானம்,பூமி,சூரியன்,சந்திரன் கோள்கள், நட்சத்திரங்கள் என அனைத்துமே காரண காரியங்களுடன் படைப்பினங்களுக்காகவே சிருஷ்டிக்கப்பட்டுள்ளன.

உதாரணமாக,

நட்சத்திரங்களை படைத்ததின் ஒரு நோக்கம் இருளில் பயணிப்பவர்கள் வழி அறிந்து கொள்வதற்காக. இருள் சூழ்ந்த இரவுகளில் பயணிப்பதற்கு வழி காட்டியாக ஆதி காலத்திலிருந்தே நட்சத்திரங்கள் திசையை வைத்து பயணப்பாதையை மனிதன் அறிந்து கொள்கிறான்.
குறிப்பாக நான்கு பக்கமும் நீர் சூழ்ந்த கடற்பயணத்தில் அவனுக்கு இரவில் வழி காட்டுவது விண்மீன் விளக்குகளே !
பல கோடிக்கணக்கான நட்சத்திரங்களை வானில் பரப்பி அல்லாஹ் பார்ப்பவர்களுக்கு அலங்காரமாக்கி உள்ளான்.
சுமார் 6000 நட்சத்திரங்கள் நம் கண்களால் அடையாளம் காண முடியும். நன்கு பிரகாசமுள்ள 58 நட்சத்திரங்கள் இருப்பிடத்தை அடையாளமாக வைத்து கடலில் மாலுமிகள் கப்பலை செலுத்துகின்றனர். இதனை "Celestial Navigation" என்று அழைக்கிறார்கள்.
இன்றும் அமெரிக்காவில் வருடந்தோறும், வானில் நட்சத்திரங்கள் இருக்கும் இடத்தை அட்டவணைப்படுத்தி **"Nautical Almanac"** என்ற பெயரிலும், இங்கிலாந்தில் "Her Majesty's Nautical Almanac Office" என்ற வழிகாட்டும் விண்மீன் பஞ்சாங்கத்தை வெளியிடுகிறார்கள்.
நிலம்,நீர்,ஆகாயம் இம்மூன்றிலும் பயணம் செய்யும் மனிதர்களுக்கு இந்நட்சத்திர வழி காட்டி பெரிதும் பயன்படுகிறது.
இன்றைய நவீன அறிவியலில் வழி அறிவதற்கு GPS போன்ற பல நுட்பமான சாதனங்களை மனிதன் பயன்படுத்தினாலும், இன்றும் அமெரிக்கா மற்றும் இங்கிலாந்து நாடுகளில் கப்பல்,விமானப்படைகளில் பயிற்சி பெறும் பைலட்,மற்றும் மாலுமிகள் அடிப்படை நட்சத்திர வழிகாட்டும் (Celestial Navigation Test) தேர்வில் வெற்றி பெறாமல் பணியில் சேரமுடியாது.

**Global Positioning System –GPS** என்னும் செயற்கைக்கோள் வழி காட்டி சாதனம் எந்நிலையிலும் பழுதாகக்கூடும். அந்த அவசர காலங்களில் பயன் தருவது விண்மீன்கள் வழி காட்டுதலே. கடந்த காலங்களில் மனிதனின் பயணம் நீரிலும் நிலத்திலும் மட்டுமே நடந்தது. நவீன மனிதன் விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையில் பயணம் செய்கின்றான்.
தரைப்பயணிகளுக்கும், கடல் பயணிகளுக்கும் பகலில் நமது சூரிய நட்சத்திரமும் இரவில் பிரபலமான துருவ நட்சத்திரமும் **(Polaris-North Star)** வழி காட்டின. இவை இரு பரிமாண பயணம் **(2 Dimensional Space)** அதாவது இடது/வலது,அல்லது முன்னால்/பின்னால் மட்டுமே செல்லக்கூடியவை.
மண்ணிலிருந்து மேலெழும்பி உயரே விண்ணை தாண்டிச்செல்லும் ராக்கெட் விண்வெளி பயணம் முப்பரிமாணத்தில் **(3 Dimensional Space)** அமைந்துள்ளது.

1400 ஆண்டுகளுக்கு முன்பு பாலை வனத்தில் ஒட்டகத்தில் பயணம் செய்த மனிதர்கள் மத்தியில் இறங்கியதே அல் குர்ஆன் வசனங்கள். மனிதன் விண்ணில் பயணம் செய்வான், சந்திரனில் இறங்குவான் என்று எவரும் கற்பனை கூட செய்திராத காலத்தில் விண்வெளிப் பயணத்தை பற்றி குர்ஆன் பேசுகிறது. முன்னறிவிக்கிறது ஆர்வமூட்டுகிறது.
"மனித,ஜின் கூட்டத்தார்களே! நீங்கள் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்று விட உங்களால் கூடுமாயின் அவ்வாறு சென்று விடுங்கள். ஆயினும் மிகப்பெரும் பலத்தைகொண்டே தவிர நீங்கள் செல்லமுடியாது." குர்ஆன் (55:33)
ஆம்! இன்று வானம்,பூமியின் எல்லையை தாண்டிச்செல்லும் பலத்தை மனிதன் பெற்று விட்டான். பூமியின் ஈர்ப்பு சக்தியை மீறிச் செல்வதற்கு 1 வினாடியில் 11 கி.மீ.வேகம் செல்லக்கூடிய உந்து சக்தி (ராக்கெட்) ஆற்றலை மனிதன் பெற்றுவிட்டான்.
வானத்தில் வழி அறிவது எப்படி?
விண்வெளி வீரர்களுக்கு வழி காட்டுவது யார்? ஆதி மனிதனுக்கு வழி காட்டிய அல்லாஹ் படைத்த நட்சத்திரங்கள்தான் விண்வெளி வீரர்களுக்கும் வழி காட்டுகின்றன. சந்திரனில் காலடி வைத்த அப்போலோ பயணத்திலும் **(Apollo Mission)** நட்சத்திரத்தை அடையாளமாக வைத்தே **(Celestial Navigation)** வழி அறிந்தனர்.
விண்வெளி ராக்கெட்டின் முன்பகுதியில் **(Star Tracker**) "விண்மீன் காட்டி" எனும் கருவி பொருத்தப்பட்டிருக்கும். இதிலுள்ள கேமரா, தொலை தூர நட்சத்திரங்களை நிலையாக நோக்கியவாறு இருக்கும் **(Fixed Reference Point**) இரு நட்சத்திரத்தின் திசை,தூரம் இவைகளை கணக்கிட்டு ராக்கெட் செல்லும் திசையையும், பூமியிலிருந்து இருக்கும் உயரத்தையும் அறிந்து கொள்வார்கள்.
இதில் உள்ள கம்ப்யூட்டரில் 50 நட்சத்திரங்களின் அமைவிடம் பதிவு செய்யப்பட்டிருக்கும். இவைகளை வழி காட்டியாகக் கொண்டு விண்வெளி ஓடம் பயணிக்கும்.
பூமியிலுள்ள இலக்குகளை துல்லியமாக தாக்குவதற்கு கண்டம் விட்டு கண்டம் தாண்டிச் செல்லும் அமெரிக்காவின் "TRIDENT" ஏவுகணைகளும் ஒரு நட்சத்திரத்தை நிலையான அடையாளமாக வைத்தே செயல்படுகின்றன.

அமெரிக்காவின் அதிவேக உளவு விமானமான SR-71, 11 நட்சத்திரங்களை (பகலிலும்) வழிகாட்டியாக வைத்தே பறக்கின்றன. ரஷ்யாவின் நீர் மூழ்கிக் கப்பலிலிருந்து ஏவப்படும் ஏவுகணைகள் இரண்டு நட்சத்திரங்களை வழிகாட்டியாகக் கொண்டே இலக்கை அடைகிறது.
ஐன்ஸ்டீனின் சார்பியல் கொள்கையை (Theory of Relativity) அறிவியல் ரீதியாக ஆய்வு செய்ய 2004 ஏப்ரல் 4 ல் Gravity Probe-B என்னும் செயற்கைகோளை நாஸா ஏவியது. இது பூமியிலிருந்து 400 மைல் உயரத்தில் GYROSCOPE கருவி உதவியுடன் IM-Pegasi என்னும் ( HR 8703) நட்சத்திரத்தை நிலையான அடையாளமாக வைத்து, பூமியின் சுழற்சியை ஆய்வு செய்து சார்பியல் கொள்கையை நிரூபித்தது.

விண்வெளியில் பறந்து கொண்டே பிரபஞ்சத்தை ஆய்வு செய்யும் ஹப்பிள் தொலை நோக்கி, (Hubble Space Telescope-HST) தொலைதூர விண்மீன் கூட்டங்களை புகைப்படம் எடுக்க இரண்டு கைடு நட்சத்திரங்களை (Guide Stars) வைத்து தன்னை நிலைப்படுத்திக்கொள்கிறது. இதன் கம்ப்யூட்டர் நினைவகத்தில் சுமார் 20 மில்லியன் விண்மீன்கள் இருப்பிடம் பதிவு செய்யப்பட்டுள்ளது.
பூமியிலே வசிக்கும் மனிதர்களுக்கு மட்டும் அல்லாஹ் வழி காட்டவில்லை. அனைத்து ஜீவராசிகளுக்கும் அல்லாஹ்வுடைய வழி காட்டுதல் உள்ளது. ஏனெனில் மற்ற உயிரினங்களும் நம்மைப்போன்ற ஒரு இனமே! அல்லாஹ்வுடைய படைப்பில் அனைத்து உயிர்களும் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்த சங்கிலித் தொடரின் கண்ணிகளே! அல்லாஹ் கூறுகிறான்.
“பூமியில் ஊர்ந்து திரியும் பிராணிகளும்,தம் இரு இறக்கைகளால் பறக்கும் பறவைகளும் உங்களைப்போன்ற இனமேயன்றி வேறில்லை.”
அல்குர்ஆன் (6:38 )

ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த உயிரியல் ஆய்வாளர் எரிக் வாரன்ட் ஸ்வீடன் லேன்ட் பல்கலைகழகத்தில் ஆராய்ச்சியாளராக உள்ளார். பூச்சிகளின் சிறப்புத் தன்மைகள் குறித்து பல ஆய்வுகள் நடத்தி புகழ்பெற்றவர். இரவில் இரை தேடும் சிறு பூச்சி போன்ற உயிரினங்கள் சந்திரன்,மற்றும் நட்சத்திரங்களை வைத்து வழி அறிவதாக முன்பு கண்டறிந்தார்.
இவரது சமீபத்திய ஆய்வில் சாணத்தை தன் உணவுக்காக உருட்டிச் செல்லும் வண்டு இரவில் தொலை தூர பால் வீதி நட்சத்திர மண்டல (Milky Way Galaxy) ஒளியை வைத்து திசை அறிவதாக அறிவித்தார். செயற்கையான கோளரங்கத்தில் (Planetarium) வைத்து பல்வேறு சோதனை நடத்தியும் இவ்வண்டுகள் மிகச் சரியாக நட்சத்திர மண்டல ஒளியை பின்பற்றி நேர்கோட்டில் சாணத்தை உருட்டிச் சென்றன.
இதுபோல் சில பறவைகள்,விலங்குகள்,ரெயின்டீர் மான்கள்,கடலில் உள்ள சீல் மீன்கள் போன்றவை நட்சத்திரங்களின் ஒளியின் மூலம் தங்கள் திசைகளை வழி அறிவதாக விஞ்ஞான ஆய்வுகள் கூறுகின்றன.
அல்லாஹ் கூறுகிறான்,
“ (வழி காட்டும்) அடையாளங்களையும் (வழி காட்டுவதற்காக அவன் அமைத்துள்ளான்); நட்சத்திரங்களைக் கொண்டும் அவர்கள் வழிகளை அறிந்து கொள்கிறார்கள்"குர்ஆன் (16:16)
“(இறைவன்) ஒவ்வொரு படைப்பினங்களுக்கும் அதற்கான அமைப்பை வழங்கி பின்னர் வழி காட்டியிருக்கிறான்.” குர்ஆன் (20:50 )

**இன்னொரு பார்வை 20**
(மலக்குகளும், மனிதர்களும்)



وَهُوَ الْقَاهِرُ فَوْقَ عِبَادِهٖ وَيُرْسِلُ عَلَيْكُمْ حَفَظَةً حَتّٰٓى اِذَا جَآءَ اَحَدَكُمُ الْمَوْتُ تَوَفَّتْهُ رُسُلُنَا وَهُمْ لَا يُفَرِّطُوْنَ
அவன் தன் அடியார்களை அடக்கியாளுபவனாக இருக்கிறான்; அன்றியும், உங்கள் மீது பாதுகாப்பாளர்களையும் அனுப்புகிறான்; உங்களில் ஒருவருக்கு மரணம் வந்துவிடுமானால், நம் தூதுவர்கள் அவர் ஆத்மாவை எடுத்துக் கொள்கிறார்கள் - அவர்கள் (தம் கடமையில்) தவறுவதில்லை.
(அல்குர்ஆன் : 6: 61)

" ஹஃபலத்தன் "அதாவது 'காவலர்கள்' என்று கூறியது கிராமன், காத்திபீன் என்ற மலக்குகளைக் குறிக்கும். இவர்கள் மனிதர்களது செய்கைகளைப் பாதுகாப்பவர்கள். இவர்களை நியமித்திற்குக் காரணம் என்னவெனில், மனிதர்கள் தங்களது செய்கைகள் எழுதி வைக்கப்பட்டு, பகிரங்கமாக அவைகள் அறிவிக்கப்படும் என்ற விவரத்தை தெரிந்திருந்தால், அவமானத்திற்கு அஞ்சி கெட்ட காரியங்கள் எதையும் செய்ய மாட்டார்கள். ஆகவே, இந்த வசனம் பாவத்தை
செய்பவர்களுக்குச் சரியான எச்சரிக்கையாக இருக்கிறது !
நம்மில் ஒவ்வொருவருக்கும் பகலில் இரண்டு மலக்குகளும், இரவில் இரண்டு மலக்குகளும்
நியமிக்கப்படுகிறார்கள். அவ்விருவரில் ஒருவர் நன்மையை எழுதுகிறார். மற்றொருவர் தீமை எழுதுகிறார். வலப்பக்கமுள்ளவர் இடப்பக்கம் உள்ளவருக்கு தலைவர்.

ஒரு அடியார் ஒரு நன்மையான காரியத்தை செய்தால், அதற்கு பத்து மடங்கு நன்மை எழுதப்படுகிறது. ஆனால் ஒரு தீமையைச் செய்து விட்டால், அதனை எழுதிக்கொள்ள இடப்பக்கம் உள்ளவர் விரும்பினால்,அவரை வலப் உள்ளவர் தடுத்து , "பொறு பொறு ஆறு ஸாஅத்து அல்லது ஏழு ஸாஅத்து" என்று கூறுகிறார்.
அதற்குள் அவன் அல்லாஹ்விடத்தில் பாவமன்னிப்புக் கேட்டு விட்டால், அத் தீமை எழுதப்படுவதே இல்லை. அந்த ஆறு அல்லது ஏழு ஸாஅத்துக்குள் பாவமன்னிப்பு கேட்கவில்லையானால், தீமை ஒன்றுக்கு ஒன்று மட்டுமே எழுதி வைக்கப்படுகிறது.
மனிதர்கள் செய்யும் செய்கைகளை மலக்குகள் எழுதி வைக்கிறார்கள். ஆனால் செய்கைகள் செய்யாமல் உள்ளத்தில் நினைக்கிறதை மலக்குகள் அறிவார்களா ? என்ற வினா உண்டாகிறது. உள்ளத்தில் நினைக்கிறதையும் அவர்கள் நல்லவிதமாக அறிகிறார்கள் என்று தஃப்ஸீர் ரூஹுல் பயானில் சொல்லப்பட்டிருக்கிறது .
ஒரு தினத்தில் நியமிக்கப்பட்ட மலக்குகளே மறுதினத்திலும் மனிதர் செய்யும் காரியங்களை எழுதிவைக்க வருகிறார்களா ? அல்லது வேறு வேறு மலக்குகள் தினம் தினம் புதிதாக வந்து கொண்டிருக்கிறார்களா ? என்ற வினா இங்கு உண்டாகிறது.

லாஹிரியத்தான சில உலமாக்கள் மலக்குகள் மாறுவதில்லை பகலுக்குள்ள மலக்குகள் இருவரும் பகலிலும், இரவுக்குள்ள மலக்குகள் இருவரும் இரவிலும், அவனது ஆயுள் காலம் வரை மாறாமல் இருக்கிறார்கள் என்று கூறுகிறார்கள்.
ஆனால் சில மஷாயிகுகள் இதற்கு நேர்மாறான கருத்துக்களை தெரிவித்து இருக்கிறார்கள்.
அதாவது பகலுக்கு நியமிக்கப்பட்ட இருவர் ஒரு பகலில்வந்துவிட்டால்,அப்புறம் அவர்கள் திரும்புவதில்லை. இரவுக்கு நியமிக்கப்பட்ட இருவர் அந்த இரவு முடிந்தவுடன் சென்று விடுவர். அப்புறம் அவர்கள் திரும்புவதில்லை. மறுநாளில் வேறு வேறு புதுப்புது மலக்குகள்தான் வருகிறார்கள்.
இவ்வாறு மனிதனின் ஆயுள் காலம் முடியும் வரை தினசரி பகலுக்கு இருவரும், இரவுக்கு இருவருமாக புதுப்புது நான்கு மலக்குகள் வந்து கொண்டே இருக்கிறார்கள் என்று கூறியிருக்கின்றனர்.

'தூதுவர்கள் ' என்ற பதம் மரணிப்பவர்களின் உயிரைக் கைப்பற்றுபவரான மலக்குல் மவ்த்தையும்,அவரது துணை மலக்குகளையும் குறிக்கிறது.

மலக்குல் மவ்த் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இவ்வுலகம் ஒரு தட்டையைப் போன்று ஆக்கப்பட்டிருக்கிறது. தட்டையில் இருக்கிற பொருட்களை மனிதர் சுலபமாக எடுப்பது போல, இவ்வுலகத்தில் எந்த இடத்தில் இருந்தாலும் சரியே அங்குள்ள ஆன்மாக்களை சுலபமாக மலக்குல் மவ்த்து (இஸ்ராயீல்) எடுத்துக் கொள்வார்.
ரூஹு (உயிர்)களை கைப்பற்ற வேண்டிய வேலை அதிகமாக இருந்தால், அவற்றை அவர் அழைத்தாலே போதும் அவர் அழைக்கும் உயிர்கள் தாங்களாகவே அவரிடம் சென்று விடும்" என்று ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது.
மலக்குல் மவ்த் (அலை) அவர்களது துணைவர்கள் 14 பேர்கள். இவர்களில் 7 பேர் ரஹ்மத்துடைய மலக்குகள், மற்றொரு ஏழு பேர் அதாபுடைய மலக்குகள். மூமின்களது ரூஹ்களை ரஹ்மத் உடைய மலக்குகளிடமும், நிராகரிப்பாளர்கள் ரூஹ்களை அதாபுடடைய மலக்குகளிடமும் ஒப்படைக்கப்படும்.
அல்லாஹுத்தஆலா மவ்த்தை (மரணத்தை) தும்பை ஆட்டின் வடிவத்தில் சிருஷ்டித்து, அதற்குரிய வடிவத்திலேயே மலக்குகளுடைய கூட்டத்திற்குள் செல்லும்படி கூறினான்.
மலக்குகள் அனைவரும் மவ்த்தை கண்டவுடன் மதி மயங்கி விழுந்து 2000 வருடம் அப்படியே கிடந்தார்கள். அப்புறம் அவர்கள் தெளிவு பெற்று எழும்பி, " இறைவா இது என்ன ?"என்று கேட்டார்கள்
அதற்கு அவன் ' மவ்த்து 'என்றான்
அப்பொழுது அவர்கள் " இது யாருக்கு ? " என்று வினவினார்கள் .
அதற்கு அவன் " உயிர்ப் பிராணிகள் யாவற்றுக்கும் " என்று கூறினான்.
அப்பொழுது அவர்கள், " துன்யாவை(உலகை)ஏன் படைத்தாய் ? " என்றார்கள்.
அதற்கு அவன் " ஆதமுடைய மக்கள் குடி இருப்பதற்காக " என்றான் .
அதற்கு அவர்கள், " பெண்களை ஏன் படைத்தாய் ? "என்றனர்
அதற்கு அவன், " சந்ததி பெருக்குவதற்காக " என்றான்.
அதற்கு அவர்கள், "மவ்த்தை ஏற்படுத்தப்பட்டிருக்கிற அவர்கள் துன்யாவை (உலகை) யும், பெண்களையும் கவனிப்பார்களா ?" என்றனர்
அதற்கு அவன், " அவர்களது மேலெண்ணம் அவர்களது மவ்த்தை மறக்கும்படி செய்து விடும் .ஆதலால், அவர்கள் துன்யா (உலகை) வையும், பெண்களையும் கவனிப்பார்கள்" என்றான்.

**பெண்களின் உலகம் 1**
ஏன் கோணல் எலும்பைக் கொண்டு இறைவன் பெண்ணை படைத்தான் ?




பெண் ஆணை விட 20 % எடைக்குறைவு .அவனைப் போல் வேகமாக ஓடவோ , தாவவோ முடியாது. கால்களில் பலம் குறைச்சல். இதய சுவாசப்பையும் அவளுக்குச் சின்னது.
மூளையின் அளவு அவனுக்கு 1400 CC அவளுக்கு 1250 CC.அளவு மட்டும்தான் சொன்னேன்.மற்றபடி புத்தியைப் பற்றி அல்ல .

ஆண்களை விட சின்ன பொருட்களையே விரும்புகிறாள் . சின்ன குடை, சின்ன பர்ஸ் , கைக்குட்டை சின்னது .ஆடை, உள்ளாடை சின்னது. காலணி மெல்லிய வாருடைய சின்ன செருப்பு .அவள் வாகனம் ஸ்கூட்டி.மெல்லிய மல்லிகை வாசனை இப்படி எல்லாமே சின்னது.
புத்தகங்களை எப்போதும் நெஞ்சோடுதான் அணைத்துச் செல்வாள். ஆண்களைப் போல் பக்கவாட்டில் இல்லை. மிரளும் இள மான்விழி அதுவும் சின்னது. விரல்களில் மென்மை இளவெண்டை.
அவளுடைய எலும்பு நளினமானது. தசை நார்கள் 30% வலிமை குறைவு. தொண்டை சின்னது. அதனால் கீச்சுக் குரல். பாடினால் பரவசம். ஆடினால் இவன் தடுமாறுவான் .
இடுப்பு கொஞ்சம் பெரிசு (குழந்தைப் பிறப்புக்கு வசதியாக)
அவள் ரத்தத்தின் அடர்த்திக் குறைவு . ஹிமோகுளோபின் குறைவு. நாடித்துடிப்பு ஆணை விட அதிகம்.படக் கென வெட்கப்பட்டு கன்னம் சிவப்பாள். லேசாக கண்டித்தால், உடனே கண்ணீர் . அப்புறமா நேர் செய்ய இவனுக்கு ரொம்பவும் கஷ்டம் . இது தேவையா ?
அவள் உடம்பில் கால்சியம் ஸ்திரமாக இருக்காது. மாதவிலக்கின் போதும், கர்ப்ப காலத்திலும் அவள் நிறையவே கால்சியம் இழக்கிறாள். காரணம் அவள் படைப்பின் மூலப்பொருள் எலும்பு . எலும்பின் மூலப்பொருள் கால்சியம் .

இதனால் அதிக தினங்கள் உடல் நலக்குறைவு , அதனால் மனத்தளவில் அதிகம் பாதிக்கப்பட்டிடுக்கிறாள்.
... இப்படி பெண்ணைப் பற்றி ஆய்வு செய்யும் ஸோஷியோ பயாலாஜி துறை கூறுகிறது .
நபி(ஸல்) அவர்கள் கோணல் என்று குறிப்படுவது இத்தனையும் சேர்த்துதான்.
ஆதம் (அலை) மண்ணால் படைக்கப்பட்டிருக்க, அவரின் இடது புற விலா எலும்பால் ஹவ்வா படைக்கப்பட்டதனால் , ஆண்கள் வயது ஏற ஏற அழகும், பெண்கள் வயது ஏற ஏற அழகின்மையும் பெறுகிறார்கள் .
மோனோபாஸ் என்கிற முதிர் பருவத்தில் பெண்களால் குழந்தை பெற முடியாது.ஆனால் ஆண்களால் அந்த கிழப்பருவத்திலும் ஒரு பெண்ணை கர்ப்பம் தரிக்க செய்ய முடியும் என்பது உலகம் அறிந்த உண்மை.
மேலும் பெண்ணைப் பற்றி படித்ததில் ...
ஆண் உட்பட எல்லா உயிர்களையும் படைத்து விட்ட கடவுள், இறுதியாக பெண்ணை படைக்க ஆரம்பித்தார்.ஒரு நாள், இரு நாள் அல்ல தொடர்ந்து 6 நாட்களாக பெண்ணை படைத்துக் கொண்டிருந்தார் கடவுள்.
இதை பார்த்துக் கொண்டிருந்த தேவதை ஒன்று, “ஏன் இந்த படைப்புக்கு மட்டும் இவ்வளவு நேரம்?” என்றது.
அதற்கு கடவுள், “இந்த படைப்புக்குள் நான் நிறைய விஷயங்களை வரங்களாக கொடுக்க வேண்டும்.
இந்த பெண் படைப்பு பிடித்தது, பிடிக்காதது என்று எதையும் பிரிக்காமல் கிடைப்பதை சாப்பிட்டாக வேண்டும்.
அடம் பிடிக்கும் குழந்தையை நொடியில் சமாளிக்க வேண்டும்.
சின்ன காயத்திலிருந்து உடைந்து போன மனது வரைக்கும் எல்லாவற்றுக்கும் அவள் மருந்தாக இருக்க வேண்டும்.
அவளுக்கு உடம்பு சரியில்லாத போதும் அவளே அவளை குணப்படுத்திக் கொண்டு ஒரு நாளைக்கு 18 மணி நேரம் உழைத்தாக வேண்டும்.
இது அத்தனையும் செய்ய அவளுக்கு இரண்டே இரண்டு கைகள் மட்டும்தான் இருக்கும்,” என்று விளக்கமாகச் சொன்னார்.
“இது அத்தனைக்கும் இரண்டே கை மட்டுமா ?” என்று ஆச்சரியப்பட்டது தேவதை .
ஆர்வத்துடன் லேசாக பெண்ணைத் தொட்டுப் பார்த்து விட்டு,
“ஆனால் இவளை ரொம்ப மென்மையாக படைத்திருக்கிறீர்களே?” என்றது தேவதை
அதற்கு கடவுள், “இவள் உடலளவில் மென்மையானவள்.ஆனால் மனதளவில் ரொம்ப பலமானவள்.அதனால் எல்லாப் பிரச்னைகளையும் சமாளித்து விடுவாள்.
அது மட்டுமல்ல, அவளால் எல்லா பாரத்தையும் தாங்க முடியும்.கஷ்டம், அன்பு, கோபம் என்று எல்லா உணர்வுகளையும் அவளுக்குள்ளேயே அடக்கிக் கொள்ளத் தெரியும்.
கோபம் வந்தாலும், அதை சிரிப்பு மூலமாக உணர்த்துகிற தன்மை இந்தப் படைப்பிடம் உண்டு
தனக்கு நியாயமாகப் படுகிற விஷயத்துக்காக போராடி ஜெயிக்கவும் செய்வாள்.
மற்றவர்களிடம் எதையும் எதிர்பார்க்காமல் அன்பை மட்டும் கொட்டுவாள்,” என்றார்
" ஓ...இந்தளவுக்கு பெண்ணால் யோசிக்க முடியுமா?” தேவதை கேட்டது.
எல்லா விஷயங்களைப் பற்றி யோசிக்க மட்டுமல்ல,
அவற்றுக்கு தீர்வையும் அவளால் சொல்ல முடியும்,” என்று விவரித்தார் கடவுள்.
அந்த தேவதை பெண்ணின் கன்னங்களை தொட்டுப் பார்த்து விட்டு, “இவள் கன்னத்தில் ஏதோ வழிகிறதே?” என்றது .
“அது அவளுடைய கண்ணீர். அவளுடைய சந்தோஷம், துக்கம், கவலை, ஆச்சரியம் என்று எல்லா உணர்வுகளையும் வெளியே காட்டுகிற விஷயம் அது,” என்று பதிலளித்தார் கடவுள்
ஆச்சரியமான தேவதை, “உங்க படைப்பிலேயே சிறந்தது இதுதான்.
இந்த படைப்பில் எந்த குறையுமே கிடையாதா?” என்றது தேவதை
“தன்னுடைய மதிப்பு என்னவென்று அவளுக்கு எப்போதுமே தெரியாது,”...... கடவுள் சிம்பிளாக பதிலளித்தார் .
அனைத்து பெண்களுக்கும் சமர்ப்பணம்.

**பெண்களின் உலகம் 2**
பெண்கள் சுமையல்ல; அவர்கள் சுமைதாங்கிகள்.



பெண்கள் மனித இனத்தில் சரி பாதியாக உள்ளனர். பெண்களை மதிக்காத, அவர்களுக்குச் சம உரிமை வழங்காத ஒரு சமூகம் முன்னேற்றப் பாதையில் நடைபோட முடியாது.

உலகம் இன்று விஞ்ஞானம், தொழில்நுட்பம் என எல்லாத் துறைகளிலும் கொடி கட்டிப் பறந்தாலும், பெண்களை இழிவாக, சுமையாக, போகப் பொருளாக பார்க்கும் நிலை நீடிக்கிறது. பெண்களைச் சுமையாகப் பார்த்ததன் விளைவாக இந்த நூற்றாண்டிலும் கருக்கொலை, சிசுக்கொலை தொடர்கிறது.
இதன் காரணமாக நமது நாட்டில் நாளுக்கு நாள் பெண்களின் விகிதாச்சாரம் குறைந்து கொண்டே வருகிறது. இன்று ஆயிரம் ஆண்களுக்கு 940 பெண்கள் என்ற நிலை உள்ளது.
நபிகள் நாயகம் காலத்தில் நடந்த ஒரு நிகழ்வைப் பாருங்கள்.
நபிகளார் தோழர்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.அப்போது இஸ்லாத்திற்கு முந்தைய அறியாமைக் காலத்துப் பேச்சு எழுந்தது.

ஒரு தோழர் தன் அடி மனதில் உறைந்து கிடந்த நிகழ்வைச் சொல்லத்தொடங்கினார்.
“இறைத் தூதரே! அந்த அறியாமைக் காலத்தில் என் மனைவி நிறை மாதக் கர்ப்பிணியாக இருந்த நேரம். நான் வியாபார விஷயமாகப் பயணம் செல்ல வேண்டிய கட்டம். என் மனைவியிடம், ‘ஆண் குழந்தை பிறந்தால் பத்திரமாகப் பார்த்துக் கொள். பெண் குழந்தை பிறந்தால் கொன்று புதைத்து விடு’ என்று சொன்னேன்.
பிறகு நான் பயணத்தில் இருந்து திரும்பியபோது, மனைவி என்னிடம், ‘நமக்குப் பெண் குழந்தை பிறந்தது. நல்லவேளை அது இறந்து விட்டது’ என்று சொன்னாள்.

சில ஆண்டுகள் சென்றன. ஒருநாள் என் வீட்டிற்கு ஒரு அழகான பெண் குழந்தை வந்து விளையாடுவதைக் கண்டு, ‘யாரவள்?’ என்று திடுக்கிட்டுக் கேட்டேன். அதற்கு என் மனைவி, ‘பக்கத்து வீட்டுக் குழந்தை’ என்றாள். அந்தக் குழந்தை என்னிடம் பழகத் தொடங்கியது. குழந்தைக்கும் எனக்கும் இடையே இருந்த பாசத்தைக் கண்ட என் மனைவி, ‘இந்தக் குழந்தை மீது உங்களுக்கு அவ்வளவு பாசமா?’ என்று கேட்டாள். ‘ஆம்.. இவள் என் உயிரல்லவா?’ என்றேன்.
அப்போது என் மனைவி, ‘அன்று நான் சொன்னது பொய். இது பக்கத்து வீட்டு குழந்தை அல்ல. நம் குழந்தைதான். உங்களுக்குப் பயந்து நான் அப்படிச் சொன்னேன்’ என்றாள்.
நான் மகிழ்ச்சியில் நனைந்திருக்க வேண்டுமல்லவா? ஆனால் அறியாமைக் காலத்து வெறித்தனத்தில் நான், அந்தக் குழந்தையைக் கொல்ல முடிவு செய்தேன். ஆனாலும் பாசம் என்னை விடவில்லை. பாசத்திற்கும், அறியாமைக் கால சிந்தனைகளுக்கும் இடையே நடந்த போராட்டத்தில் பாசம் தோற்றது.
ஒருநாள் என் அன்பு மகளைப் பாலை வெளிக்கு அழைத்துச் சென்றேன். என்னுடன் அவள் விளையாடிக் கொண்டும், கதை பேசிக் கொண்டும் இருந்தாள். ஒரு இடத்தில் குழி தோண்டினேன். பாலை வனத்தின் மணல் என் தாடியில் பதிந்தன. அந்தச் செல்ல மகள் ஏதும் அறியாமல், தன் பிஞ்சு விரல்களால் என் தாடியில் உள்ள மணலைத் தட்டி விட்டாள்.
இறைத்தூதரே! நான் கல்நெஞ்சக்காரன். என் மகளைக் குழியில் தள்ளி மணலைப் போட்டு, உயிரோடு புதைத்து விட்டேன்” என்று நபித் தோழர் சொன்னபோது, நபிகளார் அழ ஆரம்பித்து விட்டார்.
அருகில் இருந்த தோழர்கள், அந்தத் தோழரைப் பார்த்து, “என்ன காரியம் செய்தீர்? நபிகளாரையே அழச் செய்து விட்டீரே!” என்றபோது,
நபிகள் நாயகம், “அந்தக் காலம் மறைந்து விட்டது. நாம் பாவமன்னிப்பைத் தேடி மீண்டு விட்டோம்” என்று கூறியவண்ணம் தனது தாடி நனையும் அளவு அழுதார்கள்.
பின்னர் நபிகள் நாயகம் கூறினார்கள்: “நாம் எவ்வளவு கல் நெஞ்சகர்களாய் இருந்துள்ளோம். (இஸ்லாத்தின் வருகைக்கு முந்தைய) அறியாமைக் காலத்தில் செய்த செயல்கள் அனைத்தையும் இறைவன் மன்னித்து

விடுவான். ஆகவே உமது நற்செயல்களை புதுப்பித்துக் கொள்வீராக!" என்று அத்தோழரைப் பார்த்துக் கூறினார்கள்.
நபிகள் நாயகம் தாம் வாழ்ந்த காலத்திலேயே பெண் குழந்தைகளைப் புதைக்கும் கொடுமைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்கள்.
"வறுமைக்கு அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொல்லாதீர்கள் குர்ஆன் (6:151) என்ற இறை வசனத்தை ஓதிக் காட்டினார்கள். மறுமையில் உயிருடன் புதைக்கப்பட்ட குழந்தையிடம், "எந்தக் குற்றத்திற்காக நீ கொல்லப்பட்டாய்?" குர்ஆன் (81:8) என்று கேட்கப்பட்டு, குற்றம் புரிந்தவர்களுக்குத் தண்டனை வழங்கப்படும் என்பதைக் கூறி மக்களை எச்சரித்தார்கள்.

"ஒருவன் தன் பெண் குழந்தைகளை உயிருடன் புதைக்காமலும், கொடுமைப்படுத்தாமலும், ஆண் குழந்தைகளுடன் ஒப்பிட்டு வேறுபாடு காட்டாமலும் இருந்தால், இறைவன் அவனைச் சொர்க்கத்தில் நுழையச் செய்வான்" என்று நபிகள் நாயகம் கூறினார்கள். (நூல்: அபூதாவூத்)
"ஒருவருக்கு மூன்று பெண் குழந்தைகள் இருந்து, அவர்களைச் சிறந்த முறையில் வளர்த்து, கருணை புரிந்து, எந்தவிதக் கேடும் செய்யாமல் இருந்தால் அவருக்குச் சொர்க்கம் நிச்சயம்" என்றார்கள், நபிகள் நாயகம்.
அருகில் இருந்த நபித்தோழர் கேட்டார்: "இறைத்தூதர் அவர்களே! இரு பெண் குழந்தைகள் என்றால்...?" அதற்கு நபிகளார், "இரு பெண் குழந்தைகள் என்றாலும் சரியே!" என்றார்கள்.
ஆண்களும், பெண்களும் ஒரே மூலத்தில் இருந்தே படைக்கப்பட்டார்கள். எனவே இருவருமே கண்ணியத்திற்குரியவர்கள், சமமானவர்கள்.
இவ்வாறு பெண்களின் மாண்பை உயர்த்தும் வகையில் பல கருத்துகளைச் சமூகத்தில் பதிய வைத்து, பெண்களைப் பற்றிய கண்ணோட்டத்தை நபிகள் நாயகம் மாற்றி அமைத்தார்கள்.
பெண் சிசுக் கொலையை நிறுத்தியதோடு பெண்களுக்குப் பல உரிமைகளையும் வழங்கினார்கள். மண விலக்குப் பெறும் உரிமை, மறுமண உரிமை, பொருளீட்டும் உரிமை, சொத்துரிமை, வாரிசுரிமை, கல்வி உரிமை, அரசியலில் பங்கேற்கும் உரிமை என ஆண்களுக்குரிய எல்லா உரிமைகளையும் பெண்களுக்கும் வழங்கினார்கள்.

நமது நாட்டில் தொடரும் கருக் கொலைகளையும், சிசுக் கொலைகளையும் தடுத்து நிறுத்தாவிடில், பெண்களின் எண்ணிக்கையில் மிகப் பெரும் சரிவு ஏற்பட்டு, பல சமூக பிரச்சினைகள் உருவாகும்.
இத்தீமைக்கு மூல காரணமான வரதட்சணை, சீர் வரிசைகள் ஆகியவற்றுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பதன் மூலம், பெண்களுக்கு எதிரான கொடுமைகளைத் தடுத்து நிறுத்த முடியும்.பெண்கள் சுமையல்ல; அவர்கள் சுமைதாங்கிகள். டாக்டர் கே.வி.எஸ்.ஹபீப் முகம்மத் அவர்களின் பதிவிலிருந்து..

**பெண்களின் உலகம் 3**
(மகளுக்கு அப்பா...)



"மனிதனை மனிதனாக வாழவைப்பது கல்வியே. இஸ்லாம் ஆணுக்கும், பெண்ணுக்குமுரிய கடமைகளில் ஒன்றாக கல்வி கற்பதை ஆக்கியிருக்கின்றது "
"கல்வி கற்பது ஒவ்வொரு முஸ்லிமினதும் கட்டாயக் கடமையாகும்." (பைஹகி) என நபி (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

'(நாங்கள் உங்களை அணுகி மார்க்க விளக்கங்களை கேட்க முடியாதவாறு) தங்களிடம் (எப்போதும்) ஆண்களே எங்களை மிகைத்து நிற்கிறார்கள். எனவே, தாங்களாகவே எங்களுக்கென்று ஒரு நாளை ஏற்பாடு செய்யுங்கள்" என்று பெண்கள் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டுக் கொண்டார்கள்.
அவர்களும் அப்பெண்களுக்கென ஒரு நாளை வாக்களித்து, அந்நாளில் அவர்களைச் சந்தித்து அவர்களுக்கு அறிவுரை பகர்ந்தார்கள். (புகாரி-101)

பெண்களின் கல்வி உரிமையை உறுதிப்படுத்துவதற்காக மேலேயுள்ள நபி மொழி அமைந்துள்ளது. பெண்கள் கல்வி கற்பது தடையேதும் இல்லை என்பது இதிலிருந்து தெரியவருகிறது.
இன்னும் பெண்ணுக்கு மணமுடிக்கும் உரிமையை இஸ்லாம் வழங்கியுள்ளது. பெண்ணின் சம்மதம் பெற்றே அவளுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட வேண்டும் எனவும் கூறுகின்றது. திருமணத்தின் போது ஒரு பெண் தனது கணவனிடம் மஹர் கேட்கும் உரிமையைப் பெற்றுள்ளாள்.
மேலும் பெண்ணுக்கு அறிவுரை கூறுவது பற்றி படித்ததில் ...
பெண் குழந்தைகளுக்கு அப்பா சொல்லித்தர வேண்டிய விஷயங்கள்...
நாம் நிறைய நேரங்களில் மகளை அம்மாவின் பொறுப்பில் விட்டுவிடுகின்றோம். வயது வந்த பெண் குழந்தையை அடிக்காதீர்கள்! என்று கூறுவார்கள்.
அம்மாவுடன் கூட்டணி அமைத்துக்கொண்டு அவர்கள் ஒதுங்கிவிடுவதால், அவர்கள் வாழ்வில் என்ன நடக்கிறது என்றே அப்பாக்களுக்குத் தெரியாமல் போய்விடும். பெண் குழந்தைகளுக்கு அப்பாக்கள் சொல்லித்தர வேண்டிய விஷயங்கள் நிறைய உள்ளன. ஒவ்வொன்றாக அவற்றை கவனிப்போம்.

1) நன்றாக யோசித்துப் பார்த்தால் வயது வந்த மகளுடன் தந்தையர் செலவிடும் நேரம் மிகக்குறைவு. ஆங்கிலத்தில் "குவாலிடி டைம்" என்று சொல்லுவார்கள். அதைப்போல முக்கியமான விஷயங்களை கேட்டறிய வேண்டும். அவர்கள் நம்முடன் பேசும்போது, நிறைய விஷயங்களைப் பற்றி நமக்கு தெரிய வரும்.

2) மகளுடைய நட்பு வட்டத்தைப் பற்றி தெளிவாகத்தெரிந்து கொள்ளுங்கள். நட்பு வட்டத்தில் தினமும் என்ன நடக்கிறது என்று கேட்டுத்தெரிந்து கொள்ளுங்கள். நமது நண்பர்களில் யார் நல்லவர் யார் கெட்டவர் என்று நாம் ஆராயும்போது, நம் மகள் யாருடன் பழகுகிறாள் அவர்களுடைய நடத்தை எப்படி என்று தெரிந்துகொள்வது முக்கியம் அல்லவா ?

3) கல்வியின் முக்கியத்துவத்தை எடுத்துச்சொல்லுங்கள். ஒருகாலத்தில் பெண்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டது. தற்போது கல்வியில் பெண்கள் சாதனை செய்கிறார்கள். கல்வியில் அவருடைய சந்தேகங்களை கேட்டு விளக்கம் கொடுங்கள்.

4) ஆண்களைப் பற்றி சொல்லுங்கள். ஆண்களின் குணங்கள், அவர்களால் பெண்களுக்கு ஏற்படும் பிரச்சினைகளை விளக்குங்கள். குறிப்பாக நல்லவர்களை எப்படி அடையாளம் காண்பது என்று விளக்குங்கள்!
5) வாழ்க்கையைப் பற்றி அவருடன் பேசுங்கள். வாழ்க்கையில் என்னவாக விரும்புகிறார்? என்பதை கேளுங்கள். உரிய அறிவுரையுடன் நீங்கள் அவருக்கு உதவுவது எப்படி என்று திட்டமிடுங்கள்.

6) கடை, ஷாப்பிங் என்று அழைத்துச்செல்லுங்கள். பெண்கள் அந்த இடங்களில் எப்படி நடந்து கொள்கிறார்கள், ஆண்கள் எப்படி நடந்துகொள்கிறார்கள் என்பதை மகள் அறியட்டும். பொது இடங்களில் கடைப்பிடிக்கும் நாகரீகம், எப்படி உடை அணிகிறார்கள் என்பதை அவருக்குச் சொல்லிக்கொடுங்கள்.

7) நீங்கள் எவ்வளவு தூரம் உங்கள் மகளை நம்புகிறீர்கள், மகளுக்கு நீங்கள் எவ்வளவு முக்கியமான நபர் என்பதை அடிக்கடி உணர்த்துங்கள். இது மகளுக்கு தன்னம்பிக்கையையும், மன உறுதியையும் கொடுக்கும். நம் குடும்பத்தைப் பற்றி அவருக்கு எடுத்துச்சொல்லுங்கள். குடும்ப வரலாறை அவள் அறியட்டும். முன்னோர்களின் சிறப்புக்களைப் பற்றி மகள் தெரிந்து கொள்ளட்டும். உங்கள் வரலாற்றையும் கொஞ்சம் சொல்லுங்கள். நீங்கள் எப்படி, எங்கு படித்தீர்கள், உங்கள் இளமைக்காலம், உங்கள் பொழுது போக்குகள், நீங்கள் எப்படி இந்த நிலைக்கு வந்தீர்கள், உங்கள் குடும்பம் அடைய வேண்டிய இலக்கு ஆகியவற்றை அவருக்கு தெளிவாக சொல்லுங்கள்.

9) புத்தகங்கள் படிக்கும் பழக்கத்தை இளம் வயதிலேயே உங்கள் மகளுக்கு பழக்கப்படுத்துங்கள். வீட்டில் புத்தகங்களை சேர்த்து சிறு நூலகமாக உருவாக்குங்கள். நூலகங்களிலிருந்து நல்ல நூல்களைக் கொண்டுவந்து கொடுங்கள்.

10) உடலளவிலும் மனதளவிலும் பலசாலியாக உருவாக்குங்கள். வெளியுலகில் எந்த மாதிரி பிரச்சனைகள் வரும், அதை எப்படி சமாளிப்பது என்று சொல்லிக்கொடுங்கள். மேலும் தற்காப்பு கலைகளையும் சொல்லி கொடுங்கள்.

11) இன்றைய காலகட்டத்தில் அனைத்து விஷயங்களுக்கும் அடுத்தவர் கையை எதிர்பார்க்க முடியாது. அனைத்து வேலைகளை பற்றியும் சொல்லி கொடுங்கள். ஆண்கள் வரவேண்டும் என்று காத்திருக்கவும் கூடாது. வீட்டில் ஃபியூஸ் போடுவது முதல் வண்டி டயரை மாற்றுவது வரை சிறு சிறு வேலைகளைக் கற்றுக் கொடுங்கள்.

12) இவை எல்லாவற்றையும் விட நீங்கள் ஒரு உதாரணமான வாழ்க்கை வாழுங்கள். உங்களைப் பற்றி உங்கள் மகள் பெருமைப்படட்டும். உங்கள் மனைவியை மதியுங்கள். உங்கள் மனைவி எப்படி உங்களை நடத்துகிறாரோ, அதைத்தான் உங்கள் மகளும் தன் கணவனிடம் செயல்படுத்துவாள்!

**பெண்களின் உலகம் 4**
(விலா எலும்பு)



நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
பெண்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள் என நான் உங்களுக்கு அறிவுரை கூறுகிறேன்.
ஏனெனனில் பெண்கள் கோணலான வளைந்த விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டுள்ளனர்.விலா எலும்பின் மிகக் கோணலான பகுதி அதன் மேல் பகுதியாகும் .அதை பலவந்தமாக நிமிர்த்திக் கொண்டே போனால், அதை நீ ஒடித்தே விடுவாய் .அதை அப்படியே நீ விட்டுவிட்டால், கோணலாகவே அது நீடிக்கும்.புகாரி 3331 - அபூ ஹுரைரா (ரலி)
மார்புக் கூட்டில் உள்ளவை பன்னிரண்டு ஜோடிவிலா எலும்புகள். அவைகள் ஒன்று போல மற்றொன்று கிடையாது - அளவிலும் சரி, அமைந்துள்ள கோணத்திலும் சரி இவற்றில் பத்து ஜோடிதான் நம் மார்ப்புப் பகுதி செயல்பட உதவுகின்றன .
கீழ்ப்பகுதியிலுள்ள மீதி இரண்டு ஜோடியும் ஒப்புக்குச் சப்பாணி இவற்றை ஃப்ளோட்டிங் ரிப்ஸ் (Floating Ribs) என்கிறார்கள் .எனினும் வயிற்றின் பின் தசைகளுக்கு இந்த இரண்டு ஜோடியும் அரவணைப்பாக உள்ளன .
ஆதாரம் : "உச்சி முதல் உள்ளங்கால் வரை "மிஸ்டர் போன்ஸ் "
Dr எம்.பார்த்தசாரதி
நம் உடலில் Extra ஒரு கிட்னி மாதிரி இந்த இரண்டு ஜோடி எலும்புகள் உள்ளன. அதுமாதிரி அப்பென்டிஸ் ஆப்ரேஷனில் கடைசியாக உள்ள குடல் வாலை வெட்டி எடுத்தாலும் உடம்புக்கு ஒன்றும் ஆகிவிடாது என்பது போல ....
இந்த கோணல் எலும்பை ஆதம் (அலை) அவர்கள் துயிலும் போது ஒரு வெள்ளிக்கிழமை அன்று வெளியே எடுத்து, அவரது மனைவி ஹவ்வாவைப் படைத்தான்.
சிறுநீராக மாற்று , இதய மாற்று அறுவை சிகிச்சை எல்லாம் அந்த உறுப்பு பாதிப்படையும் போது, அதே மாதிரி மாற்று உறுப்பைக் கொண்டு மாற்றி அமைக்கிறது நவீன மருத்துவ விஞ்ஞானம் .
ஆனால் ஒரு கோணல் எலும்பைக் கொண்டு ஒரு பெண்ணை படைத்தது என்பது விஞ்ஞானம் கற்பனை செய்ய முடியாத விஷயம்.
ஏன் தூங்கும்போது விலா எலும்பை மார்புக் கூட்டிலிருந்து வெளியே எடுக்கப்பட்டது ?
இறை நினைவில் இருக்க வேண்டிய ஆதம் (அலை) அவர்கள் இறைவனை மறந்து, துயில் கொள்ளும்போது அவர்களின் விலா எலும்பிலிருந்து ஹவ்வா படைக்கப்பட்டாள். அதிலிருந்து அவர்களைத் துன்பம் தொடரலாயிற்று என சூஃபிகள் கூறுகின்றனர்.
அவ்வாறு விலா எலும்பு இறைவன் ஜிப்ரீல் மூலமாக ஆதமிடமிருந்து எடுக்கும்போது , எவ்வித வேதனையும் ஏற்படாமல், அவர்கள் தூக்கமும், விழிப்புமற்ற நிலையில் இருக்கும்பொழுது, அவ்வெலும்பை எடுக்கச் செய்தான் என்றும்,

எலும்பை எடுக்கும்போது,ஆதமுக்கு வேதனை ஏற்பட்டிருப்பின், ஆண்களுக்குப் பெண்கள் மீது இயற்கையாகவே ஏற்படும் அன்பு ஏற்பட ஏதும் இல்லாமல் போயிருக்கும் என்றும் வேத ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

மனிதனின் மிக உயர்ந்த உறுப்பாகிய தலைக்கும், தாழ்ந்த உறுப்பாகிய காலுக்கும் மத்திய இடமான விலாப்புறத்திலிருந்து பெண்ணை படைத்தது, ஆணை விட பெண் உயர்ந்தவளுமல்ல; தாழ்ந்தவளுமல்ல என்பதை உணர்த்துவதற்காகவே, விலா எலும்பு தேர்வு செய்யப்பட்டது என்று குர்ஆன் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.
மார்பின் இடது புறத்தில் இதயத்திற்கு அண்மையிலுள்ள கோணலான எலும்பை எடுத்து ஹவ்வா அவர்களை இறைவன் படைத்தான் என ஈஸா (அலை) அவர்கள் கூறியதாக பர்னபாஸ் சுவிசேஷத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. உயிர், அன்பு ஆகியவற்றின் இருப்பிடம் இதயமாகும். எனவே அதன் அருகில் உள்ள எலும்பை எடுத்து, ஹவ்வாவைப் படைத்ததன் காரணமாக மனைவி, கணவனின் உயிருக்கு உயிரானவளாகவும், அன்பிற்கு உரியவளாகவும் இருக்க வேண்டும் என்பதாக இருக்கலாம் எனவும் பைபிள் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

**பெண்களின் உலகம் 5**
( ஒரே ஒரு தாய் )



உறவுகளில் முதலில் வந்த உறவு தாயா ? தாரமா ? பதில் :
" தாரம் " .இது பற்றி பட்டி மன்றம் அப்புறமா பின்னூட்டத்தில் வையுங்கள் .
மனிதர்களை ஜாதிகளாகப் பாகுபடுத்தும் பழக்கம் ஆதி நாட்களிலிருந்தே வந்திருக்கிறது .வருணா சிரமம் என்னும் சதுர்வர்ண முறை நம் துணைக் கண்டத்தையே ஆக்கிரமித்து , இன்னும் தி இந்து நாளிதழின் ஞாயிற்றுக்கிழமை மேட்ரிமோனியல் விளம்பரங்களில் " " "...அதே ஜாதி சேர்ந்த மணமகள் தேவை " ஜாதிகள் மனித இனத்தை விட்டு இந்நிமிடம் வரை மறையவில்லை.

அறிவியல் ஜாதிகளைப் பற்றி என்ன சொல்கிறது ? மருத்துவப்படி ஜாதிகளை ரத்தக் க்ரூப் ஏ , பி , ஓ+ve , _ve என்றுதான் பிரித்திருக்கிறது. மருத்துவம் ஜாதி பார்ப்பதில் கொஞ்சம் பொல்லாதது. இரத்த தானம் செய்யும்போது பொருத்தமான ஜாதி ரத்தம்தானா ? என்று பார்த்து கொடுக்க வேண்டும் . இல்லையேல் ... "இன்னா லில்லாஹி... அன்த்ரபாலஜி என்னும் மானிட இயலில் மனித சாதியை ஆப்ரிக்கன் , ஏசியன் . ஆஸ்திரேலியன் , நியூகினியன் , காகேசியன் . நாமெல்லோரும் ஏசியன்வகை . (கொஞ்சம் சாஃப்ட் ) "மிஹயீல் நெஸ்தூர்ஹ் " எழுதிய "மனித இனங்கள் " புத்தகத்தைப் பார்க்கவும் .
இந்த வகைகளிடையே சரும நிறம் , கண்களின் அளவு , தலைமுடி சுருட்டை போன்ற வெளித்தோற்றங்களில் வேறுபாடுகள் தெரிகின்றன.ஆனால் உள்ளுறுப்புகளின் அமைப்பில் வித்தியாசம் இல்லை.
ஒரு ஆப்பிரிக்கனின் இதயத்தை ஒரு ஆசியனுக்கு வைக்கமுடிகிறது. நியூகினியன் சிறுநீரகத்தை ஒரு காகேசியனுக்கு பொருத்த முடிகிறது .
'இறைச்சித் தோல் எலும்பிலும் இலக்கமிட்டிருக்குதோ ' _ என்று கேட்ட சிவவாக்கியருக்கு சொல்லுங்கள் "இல்லை " என்று.
நவீன மனிதன் எப்போது உண்டானான் என்பதைப் பற்றி 1987 ம் ஆண்டு அமெரிக்க பர்க்லி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அலன் வில்ஸன் என்பவர் நேக்சர் இதழில் எழுதிய ஒரு கட்டுரை இன்றும் பரபரப்பாகப் பேசப்படுகிறது.
இன்றைய மனித சமுதாயம் அத்தனை பேரும் அந்த ஆப்ரிக்கக் குழுவிலிருந்து தோன்றியவர்கள். இதற்குரிய ஆதாரத்தை மாலிக்யுலர் பயாலஜி என்னும் புதிய இயலில் உள்ளது.

"மைட்டோகாண்ட்ரியா"என்பது நம் செல்களில் உயிரணுக்களின் ஒரு பகுதி. கர்ப்பமாகும்போது ஆணின் விந்து பெண்ணின் முட்டைக்குள் நுழைந்து ஆணின் மைட்டோகாண்ட்ரியா முழுவதும் துறக்கப்படுகிறது .
புதிய பாப்பாவின் செல்லில் உள்ள மைட்டோ காண்ட்ரியா முழுவதும் தாயிடமிருந்து வந்திருக்கிறது. இந்த உண்மையை வைத்துக் கொண்டு இந்த மைட்டோ காண்ட்ரியாவின் மாற்றங்களை மட்டும் அலசிப்

பார்த்தார்கள்.லட்சம் வருஷத்துக்கு அது ஆதார அமைப்பில் 'ம்யுட்டேஷன்' மூலம் எப்படி மாறுகிறது ? என்று கண்டுபிடித்தார்கள் .
இதன் மூலம் உலக மக்கள் அனைவருமே ஒரே ஒரு கறுப்புத் தாயிலிருந்து வந்தவர்கள் என்பதை நிரூபிக்க முடிந்தது !
அப்படியென்றால் , ஒரே சமுதாயமாக இருக்க வேண்டிய மனித இனம் ஏன் பிளவுபட்டது ? இதுபற்றி விஞ்ஞானத்திடம் எந்த ஆதாரமும் இல்லை . ஆனால் அவர்களைப் படைத்த இறைவன் அதற்குரிய பதிலை குர்ஆனில் கூறப்பிடுகின்றான்.
அல்லாஹ் நாடினால் உங்கள் அனைவரையும் ஒரே சமுதாயத்தவராக ஆக்கியிருக்கலாம்; ஆனால், அவன் உங்களுக்குக் கொடுத்திருப்பதைக் கொண்டு உங்களைச் சோதிப்பதற்காகவே (இவ்வாறு செய்திருக்கிறான்);
(குர்ஆன் : 5:48)

மனிதர்கள் அனைவரும் (ஆரம்பத்தில் ஒரே மார்க்கத்தைப் பின்பற்றும்) ஒரே வகுப்பினராக இருந்தனர். பின்னரே (தங்களுக்குள் ஏற்பட்ட பொறாமையின் காரணமாக பல வகுப்பினராகப்) பிரிந்து விட்டனர். (குர்ஆன் : 10 : 19)
உம் இறைவன் நாடியிருந்தால், மனிதர்கள் அனைவரையும் ஒரே சமுதாயத்தவராக ஆக்கியிருப்பான்; (அவன் அப்படி ஆக்கவில்லை.) எனவே, அவர்கள் எப்போதும் பேதப்பட்டுக் கொண்டே இருப்பார்கள்.(குர்ஆன் : 11:118)
அல்லாஹ் நாடியிருந்தால் உங்களை ஒரே சமுதாயத்தவராய் ஆக்கியிருப்பான்; என்றாலும் தான் நாடியவர்களை வழி கேட்டிலே விட்டு வைக்கிறான் - இன்னும் தான் நாடியவர்களை நேர் வழியில் சேர்ப்பான்; நீங்கள் செய்து கொண்டிருந்தவை பற்றி நிச்சயமாக (மறுமையில்) நீங்கள் கேட்கப்படுவீர்கள்.
(குர்ஆன் : 16:93)

நாம் எல்லோருக்கும் ஒரே ஒரு மூலத்தாய் என்றால் எங்கள் வயலில் வேலை செய்யும் அந்தோணிக்கும் , எங்க வீட்டு வேலை செய்யும் சுப்பம்மாளுக்கும் , என் நண்பர்களாகிய உங்களுக்கும் , எனக்கும் ஒரே தாய் என்றால் , இனம் புரியாத சகோதரத்துவம் இழையோடிருப்பதை உங்களால் கவனிக்க முடிகிறதா ?
கலிமாவை மொழிந்ததால் , ஒவ்வொரு வேலை தொழுகையின் வரிசையில் வெவ்வேறான சகோதரத்துவத்தையும் ஒரே தாய் மக்கள் என்பதை உணரமுடிகிறது.
என் உழைப்பில் இரண்டரை சதவீகிதத்தை பங்களிப்பில் செய்யும்போது ,ஒரே தாய் மனதில் வந்து போகிறாள் .
நோன்பு திறக்க இஃப்தார் விருந்தில் தொப்பிப் போட்ட நடிகர் விஜய்காந்த் சகோதரராக தெரிகிறார் .
என் ஹஜ்ஜின் முஸ்தலிப்பாவில் அபிசீனிய ஹாஜி என் சகோதரனாகவும், சீனத்து முதிர் தாயின் காலடியில் இரண்டாம் சொர்க்கத்தை என் தலை சுஜூது செய்யும்போது, மூலத்தாயை சீனத்தாயின் உருவில் காண முடிகிறது.
ஹஜ்ஜில் நான் பலியிட்ட குர்பானி இறைச்சி உலக ஏழை நாட்டு சகோதர , சகோதரிக்கு பங்கிட்டு கொடுக்கப்படுகிறது.
இந்த சகோதரத்துவ கோட்பாட்டை வேறு எந்த மதமும் சொல்லித் தராததை இஸ்லாம் மார்க்கம் மட்டுமே கட்டமைத்து கொடுத்திருக்கிறது .
اِنَّ هٰذِهٖۤ اُمَّتُكُمْ اُمَّةً وَّاحِدَةً وَّاَنَا رَبُّكُمْ فَاعْبُدُوْنِ
நிச்சயமாக உங்கள் “உம்மத்து” - சமுதாயம் - (வேற்றுமை ஏதுமில்லா) ஒரே சமுதாயம் தான்; மேலும் நானே உங்கள் இறைவன். ஆகையால், என்னையே நீங்கள் வணங்குங்கள்.
(குர்ஆன் : 21:92)
وَاِنَّ هٰذِهٖۤ اُمَّتُكُمْ اُمَّةً وَّاحِدَةً وَّاَنَا رَبُّكُمْ فَاتَّقُوْنِ
“இன்னும், நிச்சயமாக (சன்மார்க்கமான) உங்கள் சமுதாயம் (முழுவதும்) ஒரே சமுதாயம் தான்; மேலும், நானே உங்களுடைய இறைவனாக இருக்கின்றேன்; எனவே நீங்கள் எனக்கே அஞ்சுங்கள்” (என்றும் கூறினோம்).(குர்ஆன் : 23:52)

**பெண்களின் உலகம் 6**
( அண்ணன் சொத்தில் தங்கைக்குரிய பங்கு)




திருக்குர்ஆனின் ஞானத்திலும் , கணிதத்திலும் மிகச் சிறப்பாக தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பதற்கு ஆதாரமாக ஒரு நிகழ்வை வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.
கேள்வி: என் உடன் பிறந்தவன் இறந்து விட்டான். அறுநூறு திர்ஹங்கள் அவனின் சொத்து. அவனின் தங்கையாகிய எனக்குரிய பங்கு ஒரு திர்ஹம் தானா?
அக்குடும்ப உறுப்பினர்களை அலீ (ரலி) அறிந்திருந்தார்கள் அதாவது இறந்தவருக்கு இரண்டு பெண் மக்களும் , தாயும், ஒரு மனைவியும் , பன்னிரண்டு சகோதரர்களும் , ஒரு தங்கையும் உண்டு. அந்த தங்கைதான் அலீ (ரலி) அவர்களிடம் அண்ணனின் சொத்து விபரத்தில் தனக்குறிய பங்கைப் பற்றி கேட்டறிந்தாள்.
பதில்: உன் உடன் பிறந்தவன் அறுநூறு திர்ஹம்களையும் இரு பெண் மக்களையும் , தன் தாயையும் , மனைவியையும் , பன்னிரண்டு சகோதரர்களையும் , உன்னையும் விட்டுச் சென்றான் .
அந்த அறுநூறு திர்ஹம்களில் இரண்டு பெண் மக்களுக்கும் அல்லாஹ் சொல்லியபடி நானூறும் , தாய்க்கு நூறும் , மனைவிக்கு எழுபத்தைந்தும் , சகோதரர்கள் பன்னிரண்டு பேர்களுக்கும் இருபத்து நான்கும் , உனக்கு ஒரு திர்ஹம் வருகின்றன " என்றார்கள்.

அலீ (ரலி) அவர்கள் திருக்குர்ஆனின் படி பங்கீடு செய்ததற்கு கீழ்க்கண்ட வசனத்தை ஆதாரமாக கையாண்டார்கள்.
يَسْتَفْتُوْنَكَ قُلِ اللّٰهُ يُفْتِيْكُمْ فِى الْـكَلٰلَةِ اِنِ امْرُؤٌا هَلَكَ لَـيْسَ لَهٗ وَلَدٌ وَّلَهٗۤ اُخْتٌ فَلَهَا نِصْفُ مَا تَرَكَ وَهُوَ يَرِثُهَاۤ اِنْ لَّمْ يَكُنْ لَّهَا وَلَدٌ فَاِنْ كَانَـتَا اثْنَتَيْنِ فَلَهُمَا الثُّلُثٰنِ مِمَّا تَرَكَ وَاِنْ كَانُوْۤا اِخْوَةً رِّجَالًا وَّنِسَآءً فَلِلذَّكَرِ مِثْلُ حَظِّ الْاُنْثَيَيْنِ يُبَيِّنُ اللّٰهُ لَـكُمْ اَنْ تَضِلُّوْا وَاللّٰهُ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ
(நபியே!) கலாலா (தகப்பன், தாய், பாட்டன், பிள்ளை, பேரன் ஆகிய வாரிசுகள் இல்லாத சொத்து) பற்றிய மார்க்கக் கட்டளையை அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்:
அல்லாஹ் உங்களுக்கு (இவ்வாறு) கட்டளையிடுகிறான்; ஒரு மனிதன் இறந்துவிட்டால், அவனுக்கு மக்கள் இல்லாமலிருந்து ஒரு சகோதரி மட்டும் இருந்தால், அவளுக்கு அவன் விட்டுச் சென்றதிலிருந்து சரி பாதி பங்கு உண்டு.
இதற்கு மாறாக ஒரு பெண் இறந்து விட்டால், அவளுக்கு மக்கள் யாரும் இல்லாதிருந்தால், (அவளுடைய சகோதரனாகிய) அவன் அவள் சொத்து முழுமைக்கும் வாரிசு ஆவான்;
இரு சகோதரிகள் இருந்தால், அவன் விட்டுச் சென்ற சொத்தில் மூன்றில் இரண்டு பாகத்தை அடைவார்கள்;
அவளுக்கு உடன் பிறந்தவர்கள் ஆண்களும் பெண்களுமாக இருந்தால், இரண்டு பெண்களுக்குரிய பாகம் ஓர் ஆணுக்கு உண்டு - நீங்கள் வழி தவறாமல் இருப்பதற்காகவே அல்லாஹ் உங்களுக்கு (இவ்விதிகளை) விளக்கி வைக்கிறான்; அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிந்தவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் : 4:176)

**பெண்களின் உலகம் 7**
(பெண் நிலம்)

நவீன யுகம் காதலைக் கொச்சைப் படுத்தி விட்டது . இதில் திரைப்படங்களுக்கு பெரும் பங்கு உண்டு.
ஆண் பெண் இருவருக்கும் இடையே ஏற்படும் ஈர்ப்பெல்லாம் காதலல்ல; அது இனக் கவர்ச்சி (Sex appeal)
எந்த ஓர் ஆணும் , பெண்ணும் நான்கைந்து நாள் தொடர்ந்து சந்தித்து பழகினால் , அவர்களுக்கு இடையே இன கவர்ச்சி உண்டாகும் இது காதலல்ல . ஆனால் பெரும்பாலோர் இதைக் காதல் என்று நினைத்து ஏமாறிப் போகிறார்கள்.
இனக் கவர்ச்சிக்கும் காதலுக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு இனக்கவர்ச்சி பொதுவானது; அது எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையேயும் உண்டாகும் .

காதல் சிறப்பானது அது இருவருக்கிடையே மட்டுமே உண்டாகும் .
இனக் கவர்ச்சி எப்போதும் உண்டாகும். காதல் எப்போதாவதுதான் உண்டாகும். இனக் கவர்ச்சி உடலில் உண்டாகிறது. காதல் உள்ளத்தில் உண்டாகிறது.
உடலுறவுக்குப் பின் இனக் கவர்ச்சி குறைந்து போகும் .காதல் எப்போதும் குறையாது .
இனக் கவர்ச்சி வன்முறையைத் தூண்டும். காதல் மென்மையே உண்டாக்கும்.
இனக் கவர்ச்சி சுயநலம்.காதலோ தியாகம்.
இனக் கவர்ச்சி சாத்தான் பற்ற வைக்கும் தீ. காதல் தெய்வம் ஏற்றி வைக்கும் தீபம்.
காதல் நாம் நினைப்பது போல எளிமையானதல்ல.
அது ஒரு மர்ம புதிர் .
எந்த தொடர்பும் இல்லாத இருவரிடையே காதல் உண்டாவது வியப்பானதல்லவா ?
காதல் விதியால் உண்டாகிறது என்பது சிலரது கருத்து .தொல்காப்பியர் அப்படித்தான் கூறுகிறார் .
எங்கோ பிறந்த இருவர் இவ்வாறு விதியால் ஒன்றுபடுவதற்கு இறையனார் அகப்பொருள் உரையில் ஒரு சுவையான உவமையைக் கூறுகிறார் .

வட கடலில் ஒரு நுகம் மிதக்கிறது. தென் கடலில் ஒரு கழி மிதக்கிறது .இந்த இரண்டும் கோர்த்துக் கொள்வது போன்றது தொடர்பே இல்லாத இருவர் காதலால் ஒன்றுபடுவது என்கிறது அந்த உரை .
திருக்கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியரோ காதலுக்குக் காரணம் விதியல்ல என்று வாதிடுகிறார் .
இருவருக்கிடையே உண்டாகும் காதலுக்குக் காரணம் விதியென்றால் அவர்கள் சேர்க்கை " இயற்கைப் புணர்ச்சி " ஆகாது. செயற்கை புணர்ச்சி ஆகிவிடும் .
இருவரும் சென்ற பிறவியில் செய்த நல்வினை பயனைத்தான் அனுபவிக்கிறார்கள் என்றால் , அது அனுபவிக்க அனுபவிக்க தீர்ந்து போகும். காதலோ தீர்ந்து போகாது என்று பேராசிரியர் கூறுவது சிந்தனைக்கு விருந்தாக இருக்கிறது .
இருவரும் பிரிக்க முடியாத ஒன்றாக கலந்து விட்டார்கள் என்பதற்கு காதலன் ஓர் அற்புதமான உவமையை கூறுகிறான் .
'நல்ல நிலத்தில் மழை பெய்தால் எப்படி மண்ணும் நீரும் ஒன்றாய் கலந்து விடுமோ அப்படி நாம் கடந்து விட்டோம்' என்கிறான் .
செம்புலம் என்பதற்கு 'சிவந்தமண் 'என்று உரையெழுதிச் "செம்மண்ணில் பெய்த நீரானது அம்மண்ணோடு கலந்து அதன் நிறத்தையும் சுவையையும் பெற்று ஒன்று படுவது போல " என்று விளக்கமும் தந்திருக்கிறார்கள் .
இந்த உரை அவ்வளவு பொருத்தமானதல்ல. ஏனெனில் சிவந்த மண்ணில் கலந்த நீரை பிரிக்கமுடியும். சூரிய வெப்பத்தில் அல்லது காய்ச்சினால் மண்ணில் இருந்து நீர் பிரிந்து விடும்.
'செம்புலம்' என்றால் நன்செய் என்று பொருள் .
நன்செய் நிலத்தில் மழை பெய்தால் பயிர் வளரும் .அந்தப் பயிரில் மண்ணின் சாரமும் நீரின் சாரமும் ஒன்றாக கலந்திருக்கும் .அவற்றை பிரிக்க முடியாது .இப்படி பொருள் கொள்வதுதான் சிறப்பு
பெண்ணை நிலமாகச் சொல்லும் மரபு எல்லா நாட்டிலும் உண்டு.
நிலத்தை போலவே அவளும் 'விதை'யைக் கருவில் சுமந்து பிரசவிப்பதால் இவ்வாறு கூறப்படுகிறது
வானத்தை ஆண் என்றும், பூமியே பெண் என்றும் ரிக்வேதம் கூறுகிறது
"உங்கள் மனைவியர் உங்களின் விளைநிலங்கள் "என்று குர்ஆன்
(2 : 223) கூறுகிறது .

நிலத்திற்குரியவன் அதனிடம் சென்று செய்ய வேண்டியவற்றை செய்யாமல் இருந்துவிட்டால் அதுவும் மனைவி போல் ஊடல் கொண்டு விடும் என்கிறார் திருவள்ளுவர் .
"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து இல்லாளின் ஊடி விடும்" குறள் (1039)
இதற்கு உரை எழுத வந்த பரிமேலழகர் ' ' 'மனையாள் ஊடுமாறு போல என்றது அவன் போகம் இழத்தல் நோக்கி ' என்று சுவையாக கூறுகிறார் .
இங்கே "போகம் " என்ற சொல்லை நிலம். மனைவி இரண்டுக்கும் பொருந்தும் படியாக சிலேடையில் கையாண்டிருக்கிறார் .
நிலத்தின் விளைச்சலையும்
' இருபோகம் ' 'முப்போகம் ' என்பார்கள் மனைவியிடம் அனுபவிக்கும் இன்பத்தையும் 'போகம் ' என்பார்கள்
ஆங்கிலத்தில் ஹஸ்பண்டரி (husbandry) என்றால் வேளாண்மை என்று பொருள் . ஹஸ்பண்ட்மன் (husbandman) என்றால் 'உழவன் ' என்று பொருள்.
கணவனும் 'ஹஸ்பண்ட்' (husband) தான். அதாவது மனைவி நிலம் கணவன் உழவன் என்று பொருள் .
தமிழிலும் 'வேளாண்மை ' என்ற சொல்லில் 'ஆண்மை ' இருப்பதையும் கணவனை குறிக்கும் 'கொழுநன்' என்ற சொல்லின் பகுதியே இருப்பதும் சிந்திக்கத்தக்கது .
நீரும் நிலமும் கலக்கும்போது நிலம் நீரின் குளிர்ச்சியை வாங்கிக்கொள்ளும். நீர் நிலத்தின் வெப்பத்தை பெற்றுக் கொள்ளும் .
காதலர்கள் இன்ப துன்பங்களை பகிர்ந்து கொண்டு அனுபவிப்பார்கள்.
நீர் விழுகின்ற நிலத்தின் நிறத்தையும் சுவையையும் அடையும்.

காதலில் ஆண் பெண் வசமாவான் . விழுகின்ற இடத்தைப் பொறுத்து நீரின் மதிப்பு மாறிவிடும் .
அது ஓரிடத்தில் தீர்த்தம் எனப்படும் மற்றோரிடத்தில் சாக்கடை எனப்படும்
காதலிக்கும் பெண்ணுக்கேற்பக் காதலனின் தன்மையும் மாறிவிடும் .
நீரும் நிலமும் கலக்கும் போது ஒன்றையொன்று பாதிக்கும்
காதலர்களும் ஒருவரை ஒருவர் பாதிப்பார்கள் .
ஒருவேளை அவர்கள் பிரிய நேர்ந்தாலும் இருவரும் காதலிக்கும் முன் இருந்தது போல் இருக்க மாட்டார்கள்.
நீரின்றி அமையாது உலகு . ஆணின்றி பெண் வாழமுடியாது .
உலகு இல்லையேல் நீருக்குத் தேவையே இல்லை .
பெண் இல்லையேல் ஆணுக்குத் தேவையே இல்லை.
"பூக் காலம் "
கவிக்கோ அப்துல் ரகுமான்
மீள் பதிவு

**பெண்களின் உலகம் 8**
(முதல் உறவு)




உலகில் ஏற்பட்ட முதல் உறவு கணவன், மனைவி என்ற குடும்ப உறவுதான். இந்த உறவுக்கு இஸ்லாத்தில் மிக அதிக முக்கியத்துவம் தரப்பட்டு, உயரிய நோக்கத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளது.
உலகில் ஏற்பட்ட முதல் உறவு கணவன், மனைவி என்ற குடும்ப உறவுதான். இந்த உறவுக்கு இஸ்லாத்தில் மிக அதிக முக்கியத்துவம் தரப்பட்டு, உயரிய நோக்கத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளது.
திருக்குர்ஆன், வீட்டை அமைதி பெறும் இடமாக சித்திரிக்கிறது. எனவே வீட்டில் அமைதியில்லையேல் நாட்டில் ஏது அமைதி? குடும்பத்தின் மீது அக்கறை செலுத்துவதும் இறைக்கட்டளை என்று இறைமறை போதிக்கிறது.
‘இறைநம்பிக்கை கொண்டவர்களே! மனிதர்களும் கற்களும் எரிபொருள்களாகக்கூடிய அந்த நரக நெருப்பிலிருந்து உங்களையும் உங்கள் மனைவி மக்களையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள்’. (திருக்குர்ஆன் 66:6)
குடும்பத்தின் மீது அக்கறை செலுத்துவது குடும்பத்தலைவனின் மிக முக்கியமான பொறுப்பாக நபிகள் நாயகம் (ஸல்) வலியுறுத்தியிருக்கிறார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் :
‘உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளரும், பாதுகாவலரும் ஆவார். உங்களில் ஒவ்வொருவரும் அவரது கண்காணிப்பின், பொறுப்பின் கீழ் உள்ளவர்களைப் பற்றிக் கேட்கப்படுவார். ஆட்சியாளரும் பொறுப்பாளரே, அவரிடமும் அவரது குடிமக்களைப் பற்றி வினவப்படும்.
கணவன் தன் வீட்டாருக்குப் பொறுப்பாளியாவான்.

பெண், தன் கணவனின் வீடு, அவனுடைய குழந்தைகளுக்குப் பொறுப்பாளியாவாள்.
பணியாள் தன் எஜமானின் பொருளுக்குப் பொறுப்பாளனாவான்.
உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளரே! உங்களில் ஒவ்வொருவரிடமும் அவர்களின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டவர்களைப் பற்றிக் கேட்கப்படும்'. (அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி), நூல்: புகாரி, முஸ்லிம்)
இவ்வுலகில் சிறந்த ஒழுக்க முறையிலும், இறையச்சத்தின் அடிப்படையிலும் வாழும் மக்களை நாம் விட்டுச் செல்லவேண்டும். இவர்களின் மூலமாக வீட்டிலும், நாட்டிலும் அமைதி நிலவவேண்டும். மறுமையில் அமைதிப் பூங்காவாகிய சொர்க்க சோலையில் குடும்பத்துடன் வாழும் பேற்றைப் பெறவேண்டும்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் :
'மனிதன் இறந்துவிடும்போது அவனது செயல்களும் முடிவடைந்து விடுகின்றன. ஆனால் மூன்று வகையான செயல்களுக்கு மட்டும் அவன் இறந்த பின்னாலும் நற்கூலி கிடைத்துக் கொண்டே இருக்கின்றது.
தொடர்ந்து நீடித்துப் பலன் தரும் நிலையான நல்லறம் எதையேனும் ஆற்றிவிட்டுச் செல்வது.
மக்கள் பயனடையக்கூடிய கல்வியை அளித்துவிட்டுச் செல்வது.
அவனுக்காக இறைஞ்சிய வண்ணமிருக்கும் அவன் பெற்றெடுத்த மகன். ( அபூஹுரைரா (ரலி), மிஷ்காத்)
அல்லாஹ் திருமறையில் கூறுகின்றான்: 'மேலும் அவனுடைய சான்றுகளில் இதுவும் ஒன்றாகும். அவன் உங்களுக்காக உங்கள் இனத்திலிருந்தே மனைவியரைப் படைத்தான். நீங்கள் அவர்களிடம் அமைதி பெறவேண்டும் என்பதற்காக. மேலும் உங்களிடையே அன்பையும் கருணையையும் தோற்றுவித்தான். திண்ணமாக சிந்திக் கும் மக்களுக்கு இதில் நிறையச் சான்றுகள் உள்ளன'. (திருக்குர்ஆன் 30:21)

மகிழ்ச்சியான குடும்பம் உருவாக முதலாவது அடிப்படை கணவன், மனைவி உறவுகளில் அன்பும், கருணையும், பாசமும் மலர வேண்டும். தம்பதிகளுக்கிடையே அமைதி நிலவ அவர்களுக்குள் அன்பையும், கருணையையும் அல்லாஹ் உருவாக்குகிறான் என்பதை மேற்குறிப்பிட்ட வசனம் சுட்டிக்காட்டுகிறது.
இரண்டாவதாக: கணவன், மனைவி இருவரும் இஸ்லாம் அவர்களுக்கு அளித்திருக்கின்ற கடமைகளையும், உரிமைகளையும் உணர்ந்து பேணுபவர்களாக இருக்கவேண்டும்.
கணவன் ஆற்ற வேண்டிய கடமைகளும் உள்ளன, பெற வேண்டிய உரிமைகளும் உள்ளன.
அவ்வாறே மனைவியும் கணவனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் உள்ளன, பெற வேண்டிய உரிமைகளும் உள்ளன.
இந்த அடிப்படைக் கல்வியை இருவரும் கற்று, சரிவர உணர்ந்து செயல்படவேண்டும். இருவரில் யாராவது குறை செய்தாலும் குடும்பம் சீர்பெறாது.
இதற்குக் குர்ஆன் கூறும் அழகான எடுத்துக்காட்டு 'ஒருவர் மற்றவர்க்கு ஆடையாக அமைய வேண்டும்' என்பதே. ஆக இருவரும் இந்த ஆடையை அணியவேண்டும். அக ஒழுக்கங்களாகிய மானம், மரியாதை பேணப்படவேண்டும். புற அபாயங்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவேண்டும்.
குடும்ப சீர்திருத்தத்தின் தொடக்கம் கணவன், மனைவியிலிருந்து தொடங்கி பிள்ளைகள், உற்றார் உறவினர்கள், சமூகம் என்று பரவவேண்டும். தன்னை மறந்து பிறரின் சீர்திருத்தத்திற்காக உழைப்பது பெரும் மடத்தனமாகும். ஆக தொடக்கம் தன்னிடமிருந்துதான்.

நமது சொல்லும், செயலும் ஒன்றாக இருக்கவேண்டும். தம்பதிகள் இருவரும் இஸ்லாமிய வாழ்க்கையின் வடிவங்களாய்த் திகழ வேண்டும்.
மாற்றத்தையும், முன்னேற்றத்தையும் ஏற்படுத்தாத கல்வி எந்தப் பயனும் அளிக்காது. ஒருவர் மிக அழகாகச் சொன்னார், 'கல்வி - செயலின் வீட்டைத் தட்டும், பதில் வரவில்லையெனில் திரும்பி விடும்'.
நமது செயல் சான்றுதான் வீட்டில் பிள்ளைகள் மத்தியில் சாதக அல்லது பாதக விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை நாம் மறந்து விடக்கூடாது.
பெற்றோர்கள் என்ற வகையில் குடும்பத்தில் உலக செல்வச் செழிப்பை மட்டும் பார்க்காமல் அவர்களின் ஈருலக செழிப்பும் நமது இலக்காக இருக்கவேண்டும். இல்லையேல் மறுமையில் நமது பிள்ளைகள் நம்மைச் சபிப்பவர்களாக மாறிவிடக்கூடும்.
இஸ்லாமியக் குடும்பத்தின் முன்மாதிரி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் குடும்பம். அன்பும், பாசமும், பரிவும் நிறைந்த முழுமையான குடும்பம் அது. பிள்ளைகளின் பயிற்சிக்கும், பேரப்பிள்ளைகளின் பயிற்சிக்கும் மிகச் சிறந்த எடுத்துக்காட்டு.
இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'உங்களில் சிறந்தவர் யார் என்றால், உங்களது மனைவியரிடம் சிறந்தவர் எவரோ அவரே! என்னுடைய மனைவியரைக் குறித்து நான் மிகவும் சிறந்தவனாக இருக்கின்றேன் என்று கூறினார்கள்'. (அறிவிப்பாளர்: அபுஹுரைரா (ரலி), நூல்: திர்மிதி).

**பெண்களின் உலகம் 9**
(விலா எலும்பு )


பெண்ணிடமிருந்துதான் பிறக்கிறோம் . பெண்ணோடுதான் வாழ்கிறோம் . ஆனால் அவளைப்பற்றி நாம் எந்த அளவிற்கு அறிந்திருக்கிறோம் ?
பெண் எப்போதும் முத்திரையோடுதான் இருக்கிறாள் . அதனால் நாம் அவளை முழுமையாகப் பார்க்க முடியவில்லை .
அவள் நம் பக்கத்தில் இருந்தாலும் , உண்மையில் அவள் தூரத்தில் இருக்கிறாள் .
விவிலியத்தில் இருக்கும் ஆதாம் _ ஏவாள் தொன்மம் (myth ) பெண்ணைப் பற்றி சில ரகசியங்களை வெளிப்படுத்துகிறது .
பெண் எப்படிப் படைக்கப்பட்டாள் என்பதை அது குறியீடுகளின் மூலம் சொல்கிறது.
தேவனாகிய கர்த்தர்: மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல ,ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்றார்....
தேவனாகிய கர்த்தர் ஆதாமுக்கு அயர்ந்த நித்திரையை வரப்பண்ணினார் அவன் நித்திரையை அடைந்தான்; அவர் அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து , அந்த இடத்தைச் சதையால் அடைத்தார்.
தேவனாகிய கர்த்தர் தாம் மனுஷனில் எடுத்த விலா எலும்பை மனுஷியாக உருவாக்கி, அவளை மனுஷனிடத்தில் கொண்டு வந்தார் .
அப்போது ஆதாம்: இவள் என் எலும்பில் எலும்பும், என் மாம்சத்தில் மாம்சமுமாய் இருக்கிறாள் .இவள் மனுஷனில் எடுக்கப்பட்டபடியினால் மனுஷி எனப்படுவாள் என்றான்.
இதனிமித்தம் புருஷன் தன் தகப்பனையும் , தன் தாயையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்திருப்பான் ; அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள் .
_ ஆதியாகமம் (2:18, 21 – 24)
இது ஓர் அழகான தொன்மம். தொன்மத்திற்கு நேரடியாகப் பொருள் கொள்ளக் கூடாது ஏனெனில் அது குறியீடுகளால் பேசுகிறது .
பெண் ஆணுக்குத் துணையாக இருப்பதற்காகப் படைக்கப்பட்டாள் என்று இத்தொன்மம் கூறுகிறது .
அதாவது பெண் அடிமையல்லள் .
பெண் ஆணின் உறக்கத்தில் படைக்கப்பட்டாள் .
உறக்கம் என்பது ஓய்வு , மயக்கம் , மறதி . சுகம் . சிறு மரணம்.
பெண் ஆணின் உறக்கமாக இருக்கிறாள் .
உறக்கத்தில் உதிப்பது கனவு.
பெண் ஆணின் கனவாக இருக்கிறாள்.
பெண் ஆணின் விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டாள் .
விலா எலும்பு குறியீடு.
அதாவது பெண் விலா எலும்பு போன்றவள் .எலும்பு உறுதியானது. பெண் ஆணுக்கு உறுதியாக இருக்கிறாள் .
அதாவது ஆணின் வெற்றிக்கு பின்னால் பெண் இருக்கிறாள் .
விலா எலும்பு இதயம் ,சுவாசப்பை போன்ற முக்கியமான உறுப்புகளைக் காக்கும் கவசமாக இருக்கிறது .
பெண் ஆணைக் காப்பவளாக இருக்கிறாள் .
பெண் தலை எலும்பால் படைக்க்கப்படவில்லை.அப்படி படைக்கப்பட்டிருந்தால் அவள் ஆணுக்கு மேலானவளாக இருந்திருப்பாள் .
அவள் கால் எலும்பால் படைக்கப்படவில்லை. அப்படி படைக்கப்பட்டிருந்தால் அவள் ஆணுக்குக் கீழானவளாக இருந்திருப்பாள்.
அவள் விலா எலும்பால் படைக்கப்பட்டாள்.எனவே அவள் ஆணுக்குச் சமமானவள் .
யூத மரபில் எலும்பு என்பது உயிரின் குறியீடாக அழியாத பகுதியாகக் கருதப்படுகிறது.
அது விதையாகவும் எண்ணப்படுகிறது.

பெண் உயிரைப் படைப்பவளாக மறுவுயிர்ப்பைத் தருபவளாக இருக்கிறாள்.
ஆணும் பெண்ணும் சதையும் எலும்பும் போன்றவர்கள்.
இந்த பந்தம் ரத்த பந்தத்தை விடச் சக்தி வாய்ந்தது.
அதனால்தான், 'புருஷன் தன் தகப்பனையும் தன் தாயையும் விட்டு தன் மனைவியோடே இசைந்திருக்கிறான்'
ஏனெனில் ''அவர்கள் ஒரே மாம்சமாய் '' இருக்கிறார்கள்.அதாவது ஒரே உடலாய் இருக்கிறார்கள்.
பெண் ஆணிலிருந்து பிரிக்கப்பட்டுப் படைக்கப்பட்டவள் .
அதனால்தான் இருவரும் இணைய விரும்புகிறார்கள் . அதனால்தான் ஒருவரை ஒருவர் ஈர்க்கிறார்கள் .
பெண் ஆணிலிருந்து எடுக்கப்பட்டவள்.எனவே ஆண்
குறையுடையவனாக இருக்கிறான் .
ஆண் பெண்ணோடு சேரும் போதுதான் அவன் நிரம்புகிறான் .
நபிகள் நாயகம் விலா எலும்புக்கு வேறொரு பொருள் சொல்கிறார் .
" பெண் விலா எலும்பால் படைக்கப்பட்டிருக்கிறாள் , அவள் ஒரு வழியிலும் உனக்கு நேராய் நடக்கவே மாட்டாள் .
அவளால் நீ சுகம் பெற வேண்டுமென்றால் ,அவளிடம் கோணல் இருக்கும் நிலையிலேயே சுகம் பெறுவாயாக .
அவளை நீ நேராக்க முயன்றால் அவளை முறித்து விடுவாய். அவளை முறித்தலாவது அவளுடைய
மணவிலக்காகும் " – முஸ்லிம்
விலா எழும்பு கோணலாக இருந்தால்தான் பயன்படும் . அதற்காகத்தான் அது கோணலாகவே
படைக்கப்பட்டிருக்கிறது .
அதே நேராக்க முயலக் கூடாது. முயன்றால் உடைந்துவிடும்.
உடைந்தால் பயன்படாது.
பெண்களுடைய சில குணங்கள் நமக்கு கோணலாக தெரியலாம்.அவற்றை மாற்ற முயலக் கூடாது ஏனெனில்
அவை தேவை கருதியே படைக்கப்பட்டிருக்கின்றன .
எடுத்துக்காட்டாக பெண்கள் ஒன்றை எளிதில் பிடிக்க மாட்டார்கள் . பிடித்துவிட்டால் பிறகு விடவே மாட்டார்கள் .
இது சில நேரங்களில் நமக்கு பிரச்சனையாக இருக்கலாம் .ஆனால் இந்த குணம்தான் கற்புக்கு காரணமாகிறது
என்பதை நாம் மறந்து விடக்கூடாது .
'கோணல் ' என்பது இழிவானதல்ல .
நேரைப் போல அதுவும் இயற்கை .
வில் வளைய வேண்டும்; அம்பு நேராக இருக்க வேண்டும் .
வில்லும் நேராக இருந்தால் அம்பெய்ய முடியாது .
ஆதம் _ ஏவாள் தொன்மம் மற்றொர் உண்மையை உணர்த்துகிறது .
ஆதாம் அவளைக் கண்டதும், ''என்
எலுபும்களின் எலும்பு. சதையின் சதை" என்று கவிதை பாடினார்.
பெண்ணே கவிதையின் தோற்றத்திற்குக் காரணமாக இருக்கிறாள்.
(பூக்காலம் - கவிக்கோ அப்துல்ரகுமான் - மீள்பதிவு)

**பெண்களின் உலகம் 10**
(ஆண் / பெண் உளவியல் ரீதியான ஆய்வு )




பெண்களின் உளவியல் எப்போதுமே புரிந்துகொள்ள முடியாத நுட்பமானது என்ற கருத்து ஆண்களிடம் உள்ளது. அதிகமான பேச்சு, மென்மை, ஷாப்பிங் ஆர்வம், அச்சமூட்டும் கனவுகள் எனப் பெண்களின் சில இயல்புக்கான உளவியல் காரணங்களை பட்டியலிடுகிறார்கள் .
ஞாபகசக்தியைப் பொறுத்தமட்டில் ஆண்களைவிட பெண்கள் ஷார்ப்பாக இருக்கிறார்கள். ஒருவர் கூறிய வார்த்தை... அது கூறப்பட்ட நாள், நேரம்வரை நினைவடுக்குகளிலிருந்து சர்வ சாதாரணமாக எடுக்கிறார்களா... எப்படி?

மூளையில் நினைவுகளைச் சேகரித்து வைக்கும் `எபிசோடிக் நினைவகம்' (Episodic Memory) பகுதி பெண்களுக்கு ஆண்களைவிட நன்றாகச் செயல்படும்.
அதுமட்டுமல்லாமல், ஆண்கள் அனைத்து விஷயங்களையும் லாஜிக்காகப் பார்ப்பார்கள். பெண்கள் தாங்கள் பெறும் அனைத்து தகவல்களையும் உணர்வுரீதியாக தங்களுக்குள் தொடர்புப்படுத்தி நினைவில் வைத்துக்கொள்வார்கள். எனவே, பெண்களுக்கு குறிப்பாக யார், என்ன பேசினார்கள் என்பது குறித்த நினைவுகள் பலமாக இருக்கும்.

எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை ஒரு மனிதன் சமுதாயத்தில் இருந்து தெரிந்துகொள்கிறான். உடல்ரீதியாக முரட்டுத்தனமாக நடந்துகொள்வது ஆண்களுடைய இயல்புகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. அதுவே, ஒரு பெண் முரட்டுத்தனமாக நடந்துகொண்டால், இச்சமுதாயம் அவளை ஏற்பதில்லை. மேலும், நியூரோ சயின்ஸின் கூற்றுப்படி, `டெஸ்டோஸ்டிரோன்' மற்றும் `கார்டிசோல்' ஹார்மோன்கள் பெண்களுக்குக் குறைவாகச் சுரப்பதால், அவர்களிடம் முரட்டுத்தனம் வெளிப்படுவதில்லை. இவை ஆண்களுக்கு அதிகம் சுரப்பதால், முரட்டுத்தனம் அதிகமாக உள்ளது.

இருபாலினத்தவர் படிக்கும் கல்வி நிலையங்களில் பெண்களுக்குக் கிடைக்கும் உளவியல் நன்மைகள்...
ஒரு பெண், மகளிர் பள்ளியில்/கல்லூரியில் மட்டுமே படித்திருந்தால், அவளுக்கு ஆண்களின் உலகத்தை, உணர்வு களைப் புரிந்துகொள்ள வாய்ப்பு இல்லாமல் போகலாம். மேலும், பள்ளி, கல்லூரி முடித்து பணியிடத்துக்கு நகரும்போது, எதிர்கொள்ளும் ஆண்களை அவர்களால் இயல்பாக, தைரியமாக எதிர்கொள்ள முடியாமல் போகலாம்.

உதாரணமாக ஆண்களைப் பார்த்தால் பயப்படுவது, திரும்பிக்கொண்டு செல்வது, ஒதுங்கி நிற்பது, அவர்களின் செயல்பாடுகள், உணர்வுகளைத் தவறாகப் புரிந்துகொள்வது போன்ற சிக்கல்கள் ஏற்படலாம்.
இதுவே இருபாலினத்தவர் படிக்கும் கல்வி நிலையங்களில் ஆண்களுடன் பயின்று, பழகி வளரும் பெண்கள், சமூக வாழ்க்கையில் ஆண்களை எளிதாகக் கையாளக் கற்றுக்கொள்வார்கள்.
பயமுறுத்தும் மற்றும் உணர்வு ரீதியான கனவுகள் ஆண்களைவிட பெண்களுக்கு அதிகம் வருமா? என்றால் வரும் ஆண்களுக்கு அத்தகைய கனவுகள் வராது என்பது அர்த்தமல்ல. ஆனால், ஒப்பீட்டளவில் பெண்களைவிட ஆண்களுக்குக் குறைவாகவே வரும். இதற்கு முக்கிய காரணம், பதற்ற கோளாறுகள் என்று சொல்லலாம். ஆண்களைவிட பெண்களுக்கு அதிக அளவில் பதற்றப் பிரச்னை ஏற்படுகிறது. இதற்கு உயிரியல் ரீதியான காரணங்களுடன் சமூக ரீதியான காரணங்களும் உண்டு. ஒரு பெண் எந்த அளவுக்குப் பதற்றம் அடைகிறாரோ அந்தளவுக்கு அவருடைய கனவுகள் அதைப் பிரதிபலிக்கும்.
பெண்கள் பேசிக்கொண்டே இருக்கிறார்கள்; மற்றவர்களின் விஷயங்களில் அதிக ஆர்வம் காட்டுகிறார்களே... ஏன் ?

இயற்கையாகவே உணர்வுகளை வார்த்தைகளாக வெளிப்படுத்தும் குணம் கொண்டவர்கள் பெண்கள். ஆண்கள் அந்தளவுக்கு வெளிப்படுத்தமாட்டார்கள். மேலும், பெண்கள் அதிகமாகப் பேசுவது அவர்களின் இயல்பு என்று கருதப்படுகிறது.
ஆண்கள் வேலைக்குச் செல்வது, நண்பர்களுடன் விளையாடுவது, சினிமா, அவுட்டிங் என்று பொழுதுப் போக்குவது என ஏதேனும் ஒரு வேலையில் தங்களை ஈடுபடுத்திக்கொள்வார்கள். அதனால் அவர்களுக்குப் பேசும் வாய்ப்புகள் குறைகின்றன.
மாறாக, ஒரே இடத்தில் இருக்கும் பெண்களுக்கு அந்த இடத்திலிருந்தே நேரத்தை செலவழிக்க மற்றவரிடம் பேசுவதையே சிறப்பான வழியாக எண்ணுகிறார்கள். வெளியே செல்ல அனுமதியில்லாத பெண்களுக்கும், வேலை குறைவாக உள்ள பெண்களுக்கும் பேசுவதற்கு அதிகமான வாய்ப்புகள் உருவாக்கப்படலாம். மற்றவர்கள் வீட்டில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள பெண்கள் ஆர்வம் காட்டவும், மேலே சொன்ன சூழலே காரணம்.

ஓர் ஆண் மீண்டும் மீண்டும் ஓர் உடையை அணிந்தால், அது பெரிதாகக் கவனிக்கப்படாது. அதுவே ஒரு பெண் ஓர் உடையை வாரத்தின் இரண்டு நாள்களில் உடுத்தினால், அது கவனிக்கப்பட்டு பேச்சாகும். எனவே, ஆடையில் அதிக கவனம் காட்ட வேண்டும், மற்றவர்களிடமிருந்து வேறுபட்டு தெரிய வேண்டும் என்ற ஆர்வத்தை சமுதாயம் பெண்களுக்குத் தூண்டுகிறது.
ஆண்களுக்கு நீலம் என்றால் நீலம். அதுவே பெண்களுக்கு ராயல் நீலம், ஸ்கை நீலம் என்று அடுக்குவார்கள். காரணம், பெண்கள் சிறந்த ஆடையை வாங்கும் ஆர்வத்தில் அது குறித்த பல விஷயங்களை அறிந்துகொள்கிறார்கள்.
மிக முக்கியமாக, தினசரி வேலையை விட்டு கடைவீதிகளுக்குச் செல்லும்போது, பெண்களுக்கு அது ஒரு வகையான கொண்டாட்டமாக இருக்கிறது. எனவே, அதை அவர்கள் மகிழ்ச்சியுடன் செய்கிறார்கள். ஆண்களுக்கு நண்பர்கள், அவுட்டிங் என்று பிற பல கொண்டாட்டங்கள் இருப்பதால், ஷாப்பிங்கில் அவர்களுக்கு ஆர்வம் இருப்பதில்லை.

ஓர் ஆண் குறைந்த மதிப்பெண் எடுத்தால்கூட மேலே படிக்க, வேலை பார்க்க அவருக்கு அதிக வாய்ப்புகள் உண்டு.
பெண்களுக்கு, தாங்கள் மேலே படிக்க, வேலைக்குச் செல்ல மதிப்பெண்தான் துடுப்பாகிறது. இதனால் பெண்கள் கல்விக்கு அதிக முக்கியத்துவம் தருகிறார்கள். மேலும், எல்லா வீடுகளிலும் ஆண் பிள்ளைகளைப் படிக்க வைப்பதில் கட்டுப்பாடுகள் இருப்பதில்லை. அதுவே, கட்டுப்பாடுகளுடனே வளர்க்கப்படும் பெண் பிள்ளைகள் படிப்பிலும் அதைப் பின்பற்றி நல்ல மதிப்பெண் எடுக்கிறார்கள்.

ஆண்களை அழக் கூடாது என்று இந்தச் சமுதாயம் பழக்கப் படுத்தியிருக்கிறது. பெண்களுக்கு அழுகையை ஓர் இயல்பாக்கி வைத்திருக்கிறது. உண்மையில், அழுகை ஒரு நல்ல வடிகால்.பெண்கள் தங்கள் கவலைகளை, பிரச்னைகளை ஓர் அழுகையில் கொட்டித் தீர்த்துவிடுகிறார்கள். பிறகு, ரிலாக்ஸ் ஆகிவிடுகிறார்கள். ஆனால், ஆண்களுக்கு அவ்வாய்ப்பு கிடைப்பதில்லை என்பதே உண்மை.

பொருளாதார ரீதியாக மற்றொருவரை சார்ந்திருக்கும்
பெண்களால் ரிஸ்க் எடுக்க முடிவதில்லை. ஓர் ஆண் தன் முடிவால் நஷ்டமடைந்தால், அவனுக்கு ஏற்படும் நெருக்கடியை விட பல மடங்கு நெருக்கடியை,இதே சூழலில் ஒரு பெண் சந்திக்க வேண்டியிருக்கும். அதுவே பெரும்பாலான பெண்களை எல்லையைத் தாண்டி யோசிக்க விடுவதில்லை.
(உளவியல் ஆய்வாளர் ராகிதா ராதாகிருஷ்ணன் விகடன் பதிவிலிருந்து... )
இஸ்லாம் பெண்கள் வேலைக்கு போவது குறித்து...
சிலரை விட மற்றும் சிலரை அல்லாஹ் மேன்மைப்படுத்தியுள்ளதில் பேராசை கொள்ளாதீர்கள்! ஆண்களுக்கு அவர்கள் பாடுபட்டதில் பங்குண்டு. பெண்களுக்கு அவர்கள் பாடுபட்டதில் பங்குண்டு. அல்லாஹ்விடம் அவனது அருளை வேண்டுங்கள்! அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவனாக இருக்கிறான். (குர்ஆன்:4:32.)
மேற்கண்ட வசனத்தில் பெண்கள் சம்பாதித்ததில் அவர்களுக்கு பங்கு உண்டு என்று இறைவன் குறிப்பிடுவதிலிருந்து பெண்கள் சம்பாதிக்கலாம் என்ற அனுமதி நேரடியாக வழங்கப்படுகின்றது. பெண்கள் வேலை செய்து சம்பாதிப்பதை மார்க்கம் தடைசெய்யவில்லை. நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் விவசாயப் பணியை செய்திருக்கிறார்கள். அதை நபி(ஸல்) அவர்களும் அங்கீகரித்துள்ளார்கள். இதை பின்வரும் ஹதீஸ்களில் அறியலாம்.

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்:
என் தாயின் சகோதரி மணவிலக்குச் செய்யப்பட்டார். அவர் ("இத்தா'வில் இருந்தபோது) தமது பேரீச்ச மரத்தின் கனிகளைப் பறிக்க விரும்பினார். (இத்தருணத்தில்) நீ வெளியே செல்லக் கூடாதென அவரை ஒருவர் கண்டித்தார். ஆகவே, என் தாயின் சகோதரி, நபி (ஸல்) அவர்களிடம் வந்(து, அது குறித்துத் தெரிவித்)தபோது நபி (ஸல்) அவர்கள், "ஆம்; நீ (சென்று) உமது போரீச்ச மரத்தின் கனிகளைப் பறித்துக்கொள் ஏனெனில், (அதில் கிடைக்கும்

வருமானத்தில்) நீ தர்மம் செய்யக் கூடும்; அல்லது ஏதேனும் நல்லறம் புரியக் கூடும்” என்றார்கள். நூல்: முஸ்லிம் (2972)
பெண்கள் வேலைக்குச் செல்வது மார்க்கத்தில் ஹராம் என்று நாம் கூறவில்லை. தற்காலத்தில் பெண்கள் வேலைக்குச் செல்வது அவ்வளவு சிறந்ததல்ல என்றே கூறுகிறோம்.
ஏனென்றால் தற்காலத்தில் பெண்கள் வேலைக்குச் செல்வதால் ஏராளமான மார்க்க நெறிமுறைகளை மீறக்கூடிய நிலை ஏற்படுகிறது. இஸ்லாமிய நெறிமுறைகளை பேணி பெண்கள் தற்காலத்தில் வேலைக்கு செல்வதென்பது கடினமான விஷயமாக உள்ளது.
குடும்பத்துக்காக பொருளீட்டும் பொறுப்பு ஆண்கள் மீது சுமத்தப்பட்டிருக்கின்றது. குடும்பத்தை கவனிக்கும் பொறுப்பு பெண்கள் மீது சுமத்தப்பட்டுள்ளது.
الرِّجَالُ قَوَّامُونَ عَلَى النِّسَاءِ بِمَا فَضَّلَ اللَّهُ بَعْضَهُمْ عَلَى بَعْضٍ وَبِمَا أَنفَقُوا مِنْ أَمْوَالِهِمْ (34)4
சிலரை மற்றும் சிலரை விட அல்லாஹ் சிறப்பித்திருப்பதாலும், ஆண்கள் தமது பொருட்களைச் செலவிடுகிறார்கள் என்பதாலும் ஆண்கள் பெண்களை நிர்வாகம் செய்பவர்கள். (குர்ஆன் (4:34.)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளிகளே. உங்கள் பொறுப்புக்குட்பட்டவை பற்றி நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்.
மக்கள் மீது ஆட்சி புரியும் தலைவர் அவர்களுக்குப் பொறுப்பாளியாவார். அவர்களை (ஆட்சி புரிந்த விதம்) குறித்து அவர் விசாரிக்கப்படுவார்.
ஆண், தன் வீட்டாருக்குப் பொறுப்பாளியாவான். அவர்களை (பராமரித்த விதம்) குறித்து அவன் விசாரிக்கப்படுவான்.
பெண், தன் கணவனின் வீட்டிற்கும் அவனது குழந்தைக்கும் பொறுப்பாளியாவாள். அவர்களை (பராமரித்த விதம்) குறித்து அவள் விசாரிக்கப்படுவாள்.
அடிமை, தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான்.அவன் அதை (பாதுகாத்த விதம்) குறித்து விசாரிக்கப்படுவான்.
ஆக, நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளிகளே. உங்கள் பொறுப்புக் குட்பட்டவை குறித்து நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள். நூல்: புகாரி (2554)
பெண் தன் கணவனையும் கணவனின் வீட்டையும் குழந்தைகளையும் பராமரிக்க வேண்டும். இது பெண்ணுடைய பொறுப்பாகும். இன்றைக்கு வேலைக்குச் செல்லும் பெண்களில் பலர் தங்கள் மீது சுமத்தப்பட்டுள்ள இந்தப் பொறுப்புகளை முறையாக நிறைவேற்றுவதில்லை.
ஆண்கள் மீது சுமத்தப்பட்ட பொருளீட்டும் பொறுப்பை இவர்கள் தங்கள் கையில் எடுத்ததன் விளைவு தாங்கள் ஆற்ற வேண்டிய பொறுப்புகளை இவர்களால் நிறைவேற்ற முடியாமல் போனது.
மேலும் வேலைக்குச் செல்லும் இடத்தில் அந்நிய ஆண்களுடன் தனித்திருத்தல் அந்நிய ஆண்களுடன் குலைந்து பேசுதல் ஹிஜாபைப் பேணாமல் இருத்தல் மஹ்ரமானவரின் துணையின்றி தூரமான இடத்திற்கு பயணம் மேற்கொள்ளுதல் போன்ற ஒழுக்கக் கேடுகளும் ஏற்படுகின்றன. மார்க்கக் கடமைகளை மீறுவதற்கு ஒரு செயல் காரணமாக இருந்தால் அந்த செயலும் மார்க்கத்தில் தடைசெய்யப்பட்டதாகும்.
எனவே பெண்கள் வேலைக்குச் சென்றால் மார்க்க நெறிமுறைகள் மீறப்படுமேயானால் அப்போது அவர்கள் வேலைக்குச் செல்வது கூடாது. மார்க்க ஒழுங்கு முறைகளுக்கு உட்பட்டு தனது பொறுப்புகளுக்கு பங்கம் ஏற்படாத வகையில் வேலை செய்தால், அது மார்க்கத்தில் தவறல்ல. உங்களுடைய வருங்கால மனைவியால் மார்க்க சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட பணிபுரிய முடியுமா? என்பதை நீங்கள் யோசித்து முடிவு செய்துகொள்ள வேண்டும்.

**பெண்களின் உலகம் 11**
(சாமுத்ரிகா லட்சணம் 1 )

"கலக்கல் இன்ஸான அலா சூரத்திஹி " _ மனிதனை அவன் தன் எண்ணத்தில் உண்டான உருவில் படைத்தான். மனிதனுடைய பொதுவான தோற்றம், பொதுவான உடலமைப்பு தெய்வம்சத் தொடர்புடையவை என்று சமுத்ரிகா சாஸ்திரம் சொல்வதிலும் அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது.

அங்க அவயங்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு விதமாக முற்றிலும் வேறுபட்டு காணப்படுவது மட்டுமே ஆச்சரியமல்ல; இந்த வேறுபட்ட அவயவ அமைப்பு ஒவ்வொன்றுக்கும் தனித்தனி ஆழமான அர்த்தமும் இருக்கிறது என்கிறது சாமுத்ரிகா சாஸ்திரம் .
அவயவ அமைப்பு ஒரு மனிதனுடைய தோற்றத்துக்கு எழில் கூட்டுவது மட்டுமல்ல : அவனுடைய உள் உணர்வுகளுக்கும் விளக்கம் தருவதாக இருக்கிறது என்ற பிரமிப்பூட்டும் அறிவியல் உண்மைகளையும் போட்டு உடைக்கிறது இந்தசாமுத்ரிகா சாஸ்திரம்.
இந்த சாஸ்திரத்தை தூசி தட்டி வெளியே எடுத்து மன இயல் வல்லுநர்களும் , துப்பறியும் தடயவியல் துறையினரும் நிறைய நிறைய ஆய்வு செய்து ஆதிகால அறிவியலை நவீன விஞ்ஞானமாக மாற்றி இருக்கிறார்கள்.

அதுவும் நவீன கால கம்ப்யூட்டர் இந்த பணியை வெகு சிறப்பாக செய்து முடிக்கிறது .
சாமுத்ரிகா சாஸ்திரம் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் இருந்துள்ளது அதையும் நபி (ஸல்) அவர்களும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் . உதாரணமாக
ஸைத் பின் ஹாரிஸ்யை அவர்கள் நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனாவார். அவருடைய மகன் உஸாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் மீது நபியவர்கள் அதிக அன்பு வைத்திருந்தார்கள் இதனால் உஸாமாவை "ஹுப்பு ரசூலில்லாஹ் " அல்லாஹ்வின் தூதருடைய செல்லப் பிள்ளை என்று நபித்தோழர்கள் கூறுவார்கள்.
உஸாமாவின் தாயார் உம்மு அய்மன் (ரலி) அவர்கள் அபிசீனிய கருப்பினத்தைச் சேர்ந்தவராவார். கணவர் ஸைத் வெண்ணிறமுள்ளவராகவும் இருந்தார் இருவருக்குப் பிறந்த உஸாமா கருப்பு நிறத்தவராக இருந்தார் .
இந்த நிற வித்தியாசத்தை வைத்து தந்தை - மகன் உறவில் களங்கம் கற்பிக்க, அன்றைய அறியாமைக் காலத்து மக்களில் சிலர் முயன்றனர். இது நபி (ஸல்) அவர்களுக்கு கவலையளித்தது.
இந் நிலையில் ஒரு நாள் தந்தையும் மகனும் ஒரே போர்வையில் படுத்திருக்க, இருவரின் கால்கள் மட்டுமே வெளியே நீட்டிக் கொண்டிருந்தன.

அவ்வழியாகச் சென்ற , இருவரின் சாயலை வைத்து உறவு முறையை கணித்து விடும் ஆற்றலுடைய "முத்லிஜீ" என்பார் இருவரின் கால்களையும் பார்த்து விட்டு , " இந்தக் கால்கள் ஒன்று மற்றொன்றிலிருந்து தோன்றியவை" என்று குறிப்பிட்டார் .
அதாவது தந்தை மற்றும் மகனின் கால்கள் என்றார். இதையறிந்த நபி (ஸல்) அவர்கள் பேரானந்தம் அடைந்தார்கள் .
உஸாமா மற்றும் ஸைத் பற்றிப் பொய்யர்கள் கூறி வந்த அவதூறு இதன் மூலம் முறியடிக்கப்பட்டது.
ஆதாரம் : புகாரி 3555

**பெண்களின் உலகம் 12**
(சாமுத்ரிகா லட்சணம் 2 )

நபி (ஸல்) அவர்களிடம் "நீங்கள் இறந்த பிறகு உங்களை எங்களில் யார் முதலில் சந்திப்போம் ? என்று மனைவிமார்கள் கேட்க, அதற்கு நபிகளார் ."உங்களில் யாருடைய கை நீளமாக இருக்கிறதோ அவர்கள் என்றார்கள்" .
உடனே ஒவ்வொரும் ஒரு குச்சியை எடுத்து தங்களின் கை நீளத்தை அளக்க, சௌதா (ரலி) என்ற மனைவியின் கைதான் நீளமானதாக இருந்தது. ஆனால் முதலில் இறந்தது ஜைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) என்ற மனைவிதான் .அதன் பின்னர்தான் "நீளமான கை" என்பது தான தர்மம் அதிகமாகச் செய்பவரை குறிக்கிறது என்பதை மற்ற மனைவிமார்கள் புரிந்து கொண்டனர். (புகாரி 1420)

இப்பொழுது சாமுத்ரிகா சாஸ்திரப்படி நீளமான கைகளை உடையவர்கள் அரச போகத்தை அனுபவிப்பார்கள் .இவர்கள் மனதில் பட்டதை யாருக்கும் அஞ்சாமல் வெளிப்படையாகச் சொல்லிவிடுவதும், குற்றம் குறைகள் யாரிடம் அமைந்தாலும் நேருக்கு நேர் கண்டதும் கண்டனம் தெரிவிப்பது இயல்பாக இருக்கும்.
அன்னை சௌதா (ரலி) அவர்கள் மிகவும் உயரமான வளர்ச்சி உடையவர்கள் .இவர்களின் கை விரல்கள் , கால் விரல்கள் நீளமாக அமைந்திருக்கும். நகைச்சுவை குணமுடையவர்கள் .இவர்களது உருவத் தோற்றம் நபிகளாரை குதூகலத்தில் ஆழ்த்தி சிரிப்பை வரவழைக்கும் .மிக எளிதில் உணர்ச்சி வசப்படுவார்கள் .

பத்ரு போரில் பிடிபட்ட எதிரிகளில் அன்னை சௌதா (ரலி) அவர்களின் முதல் கணவரின் சகோதரர் சுஹைல் பின் அமர் அவர்களும் ஒருவராக இருந்தார். எதிரிகளை மதீனாவிற்கு அழைத்து வரும் போது இவர் தப்பியோடி விட்டார் . மீண்டும் கைது செய்து .அவரது கைகளை கட்டி, அதனை கழுத்துடன் பிணைத்து இழுத்து வந்தார்கள். இதனைக் கண்ட சௌதா (ரலி) அவர்கள் உடனே உணர்ச்சிவசப்பட்டவர்களாக ." இந்த இழிநிலையைப் பார்த்துக் கொண்டு உயிர் வாழ்வதைக் காட்டிலும் கண்ணியமான முறையில் இறந்திருக்க வேண்டும் ., அவமானம் அவமானம் என்று கூறியதை நபிகளார் கேட்டு விட்டார்கள்.

"நீங்கள் வார்த்தை சொல்லி விட்டீர்கள் நீங்கள் கூறிய இந்த வார்த்தை அல்லாஹ்வின் எதிரியான இவர்களை உசுப்பேத்தி விடக் கூடியதாக இருக்கின்றதே! அல்லாஹ்வையும் , அவனது தூதரையும் எதிர்த்துப் போர் புரிகின்ற எதிரிகள் எவ்வாறு கண்ணியமான முறையில் மரணமடைய முடியும் ? என்றார்கள்.
நபிகளாரின் இந்தக் கேள்வி சௌதா (ரலி) அவர்களை வெட்கப்படச் செய்தது உடனே உணர்ச்சி வசப்படும் இந்த செயலுக்காக வருத்தம் தெரிவித்து மன்னிப்புக் கோரினார்கள் .

இது சாமுத்ரிகா சாஸ்திரப்படி நீளமான கரங்களை பெற்ற பெண்களின் இயல்பைக் குறிக்கிறது .
அடுத்து , கை சற்று நீளம் குறைவாக இருப்பவர்கள் வறியோருக்கு வாரி வாரி வழங்கும் வள்ளலாக, மற்றவர்கள் பசித்திருக்க இவர்கள் வாழப் பொறுக்க மாட்டார்கள் .மற்றும் முற்போக்கு சிந்தனை கடும் உழைப்பாளிகளாகவும் இருப்பார்கள் என்கிறது சாமுத்ரிகா

ஜைனப் (ரலி) அவர்களை நபி(ல்) அவர்களின் வளர்ப்பு மகனான ஸைத் பின் ஹாரிதா (ரலி) மணமுடித்து கருத்து வேறுபாடு ஏற்பட்ட மணவிலக்கு பெற்று பின் நபி (ஸல்) அவர்கள் மணமுடித்தார்கள் .
தான தர்மங்கள் தேவை உள்ளவர் களுககு தேடிப் போய் உதவி செய்தல், உள்ளச்சத்துடன் தொழுகை இனங்களில் சிறந்து விளங்கினார்கள் . கடின உழைப்பாளி அல்லாஹ் வின் நெருக்கத்தை பெற இவர்களின் தான தர்மத்தை அளவிட முடியாது என்பதாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.
உமர் (ரலி ) ஆட்சி காலத்தில் நபியவர்களின் மனைவியருக்கு வருடத்திற்கு 12,000 திர்ஹம் உதவி தொகை வழங்கப்பட்டது இவையனைத்தும் தான தர்மம் செய்ததோடு இப் பணம் சோதனைக்குரியது என்றார்கள்
ஜைனப் (ரலி) அவர்கள் இறக்கும்போது ஒரு தினார் கூட மீதம் வைக்காமல் அனைத்தையும் தானம் செய்திருந்தார்கள் . இவர்களின் மரணச் செய்தி மதீனாவிலுள்ள ஏழைகள் கண்ணீர் வடித்தனர் (மீள்)

**பெண்களின் உலகம் 13**
சாமுத்ரிகா லட்சணம் : 3
(பெண்களின் வாசனை)

பெண்களின் மீது வீசும் வாசனை ! சாமுத்ரிகா லட்சணம் என்ன சொல்லுகிறது?
அந்த காலத்தில், நம் முன்னோர்கள் எல்லாம் பெண்களை பார்க்கும் போது, 'இந்தப் பெண் சாமுத்திரிகா லட்சணதோடு' இருக்கின்றாள் என்று ஒரு வார்த்தையை கூறுவார்கள். இந்த சாமுத்ரிகா லட்சணம் என்ற வார்த்தையை நம்மில் பலபேர் கேள்விபட்டிருப்போம்.
ஆனால், சாமுத்ரிகா லட்சணத்தை பற்றி ஒரு பதிவில் முழுமையாக தெரிந்துகொள்ள முடியாது. அது ஒரு மிகப் பெரிய சாஸ்திர குறிப்பு என்றே கூறலாம். சாமுத்திரிகா லட்சணம் என்பது பெண்களுக்கும் உண்டு. ஆண்களுக்கும் உண்டு.

ஒரு மனிதனின் அங்கமானது எப்படி இருக்க வேண்டும், எப்படி இருந்தால் எந்த குணாதிசயங்களை கொண்டிருப்பார்கள், என்பதை பற்றிய குறிப்புகளை சொல்லும் சாஸ்த்திர குறிப்பு தான் 'சாமுத்ரிகா லட்சணம் ' என்று கூறுவார்கள்.
சாமுத்ரிகா லட்சணப்படி ஒரு பெண்ணின் மீது வீச வேண்டிய வாசனை எது? வீசக்கூடாத வாசனை எது? என்பதைப் பற்றி இந்த பதிவின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.
எல்லாப் பெண்களும், எல்லா சாமுத்ரிகா லட்சணத்தையும் ஒரு சேர பெற்றுவிட முடியாது. ஒவ்வொரு பெண்ணுக்கு ஒவ்வொன்று அழகு என்றே கூறலாம். எல்லா சாமுத்திரிகா லட்சணமும் பெற்றிருந்தால், அவள் தேவலோகத்தில் உள்ள தேவதை என்றுதான் கூற வேண்டும்.
அதற்காக பூலோகத்தில் இருக்கும் பெண்கள் எல்லாம் அழகு இல்லை என்று சொல்லப்படவில்லை! ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒவ்வொரு தனித்துவம் கட்டாயம் இருக்கும் என்பதில் எந்த ஒரு சந்தேகமும் இல்லை.
பெண்ணின் கூந்தலுக்கு கூட இயற்கையாகவே மணம் உண்டு என்று சொல்வார்கள் அல்லவா? இந்த வரிசையில் ஒரு பெண்ணின் மேல் வீசக்கூடாத வாசனையாக 3 வாசனைகள் சொல்லப்பட்டுள்ளது.
வேம்பு வாசனை, கற்றாழை வாசனை, மாமிச வாசனை. கட்டாயம் ஒரு பெண்ணின் மீது இந்த 3 வாசனைகள் வீசக் கூடாது என்று சொல்கிறது சாமுத்திரிகா லட்சணம்.
இயற்கையாகவே சில பெண்களின் மீது இந்த வாசம் வீசினால், அவர்களுக்கு என்ன பிரச்சனை வரும் என்பதையும் குறிப்பிட்டுள்ளது.

இயற்கையாகவே இந்த வாசத்தை கொண்ட பெண்கள் பெரும்பாலும் தோல்வியை சந்திக்கலாம். திருமணத்தடை உண்டாகும். இப்படிப்பட்ட பெண்களுக்கு நட்பு வட்டாரம் அதிகமாக இருக்காது. அதாவது துர்நாற்றம் வீசினால் நம் அருகில் வருவதற்கே சங்கோஜப்படுவார்கள் அல்லவா? அப்படி வைத்துக் கொள்ளலாம்.
அதாவது இயற்கையாகவே எவரொருவர் நறுமணத்தோடு இருக்கின்றாரோ, அவரிடம்தான் நேர்மறை ஆற்றல் அதிகமாக இருக்கும் என்று சொல்லப்படும். கெட்ட வாடை வீசும் போது, அவர்களுக்கு கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கும்.
இப்படியிருக்க, நம்மை சுற்றி இருப்பவர்களுக்கு நம்மீது வரக்கூடிய வாசனை மூலம் எந்தவித சங்கடமும் ஏற்பட்டு விடக்கூடாது.
ஆனால் இந்த பிரச்சனை ஒன்றும் தீர்க்க முடியாத பிரச்சினை அல்ல. பெண்கள் தினந்தோறும் குளிக்கும்போது, இதற்காகத்தான் கஸ்தூரி மஞ்சள், அல்லது சாதாரண மஞ்சளை உடம்பு முழுவதையும் தேய்த்து குளிக்க வேண்டும் என்று முன்னோர்கள் சொல்லுவார்கள்.
அரகஜா, ஜவ்வாது, புனுகு, ரோஸ் வாட்டர் போன்ற வாசனைத் திரவியங்களைக் கலந்து குளித்து வரும்போது இந்த மோசமான 3 வாசனைகள் நம் உடம்பை விட்டு நிரந்தரமாக வெளியேறிவிடும் என்பதில் எந்த ஒரு சந்தேகமும் இல்லை.
சரி. பெண்களின் மீது வீசக் கூடிய வாசனை என்றால் அது என்னென்ன என்பதைப் பற்றியும் தெரிந்து கொள்ளலாமா?

பெண்கள் என்றாலே பொதுவாக வாசனை பூக்களைச் சூடிக் கொள்ள வேண்டும். அவர்கள் மீது வாசனையுள்ள பூக்களின் வாசம் வீசலாம். இதுமட்டுமல்லாமல் மஞ்சள், சந்தனம் போன்ற மங்களகரமான பொருட்கள் கலந்த வாசனை வீசுவது மிகவும் நல்லது.
எது எப்படியாக இருந்தாலும், மாடாக உழைத்து, ஓடாக தேய்ந்து தங்களுடைய வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கும் பெண்களாக இருந்தாலும், ஆண்களாக இருந்தாலும், அவர்கள் மீது வரும் வியர்வை வாசனையும் எந்த விதத்திலும் குறைந்தது அல்ல என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.
பெண்கள் நறுமணம் பூசுவது பற்றி இஸ்லாம்
பிறரை கவர்ந்து இழுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நறுமணம் பூசுவதை இஸ்லாம் மார்க்கம் தடைசெய்துள்ளது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
"ஒரு பெண் நறுமணத்தை பூசிக்கொண்டு தன் வாடையை (பிறர்) நுகர வேண்டும் என்பதற்காக ஒரு கூட்டத்தைக் கடந்து சென்றால் , அவள் விபச்சாரியாவாள்" - அபூ மூஸா (ரலி) நூல்: நஸயீ 5036
'' பிறர் நுகர வேண்டும்'' _என்பதற்காக என்று நபி (ஸல் ) அவர்கள் கூறும் வார்த்தை கவனிக்கத்தக்கதாகும். தவறான எண்ணமில்லாமல் துர்நாற்றத்தைப் போக்குவதற்காக பூசுவது தவறில்லை என்பது இதிலிருந்து விளங்குகிறது.
நபி (ஸல்) அவர்களின் காலத்தில் பெண்கள் நறுமணத்தை பயன்படுத்தியுள்ளார்கள். இஷாத் தொழுகைக்கு வரும் போது மாத்திரம் நறுமணத்தை தவிர்த்துக் கொள்ளுமாறு பெண்கள் கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள். மற்றத் தொழுகைக்கு வரும் போதோ, அல்லது தொழுகை அல்லாத மற்ற நேரங்களிலோ, பெண்கள் நறுமணம் பூசக் கூடாது என்றோ அவர்கள் தடை விதிக்கப்படவில்லை.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :
"எந்தப் பெண் நறுமண புகையை பயன்படுத்தினாரோ அவர் கடைசி தொழுகையான இஷாவில் நம்மிடம் கலந்து கொள்ளவேண்டாம் "_ அபூஹுரைரா (ரலி) முஸ்லீம் 675
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து (வீட்டில்) உறங்கினார்கள். அப்போது அவர்களுக்கு வியர்வை வெளிப்பட்டது. எனது தாய் ஒரு கண்ணாடிக் குடுவையை கொண்டுவந்து, அதில் நபி (ஸல்) அவர்களின் வியர்வையை சேகரித்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் விழித்துவிட்டார்கள். " உம்மு சுலைமே ! நீங்கள் என்ன செய்கிறீர்கள் ?" என்று கேட்டார்கள். அதற்கு எனது தாய் உம்மு சுலைம் , " இது உங்களின் வியர்வை இது நறுமணங்களில் சிறந்த நறுமணமாக இருப்பதால், இதை நாங்கள் எங்களின் நறுமணத்துடன் சேர்த்துக் கொள்வோம்." - அனஸ் பின் மாலிக் (ரலி) முஸ்லீம் 4300
நறுமணத்தை போன்றே பூக்களையும் பிறரைக் கவரும் நோக்கத்தில் பயன்படுத்தக்கூடாது. தவறான எண்ணமில்லாமல் பூவின் அழகே விரும்பியோ, அதன் வாசனையே விரும்பியோ பூக்களைச் சூடிக் கொண்டால், அதில் தவறு ஏதும் இல்லை .
ஆனால் ஆண்களின் கவனத்தை ஈர்க்கும் விதத்தில் எந்த காரியத்தையும் ஒரு பெண் செய்யக்கூடாது என்பதால், பலரது கவனத்தை ஈர்க்கும் வகையில் அமைந்த அதிக நறுமணத்தை தருகின்ற வாசனை திரவியங்களை பெண்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

## பெண்களின் உலகம் 14

(அர்த்தநாரீஸ்வரம் )



சிற்பத்திலோ, சித்திரத்திலோ அர்த்தநாரீஸ்வரர் வடிவத்தை நீங்கள் பார்த்திருக்கலாம் .வலப்பக்கம் சிவபெருமான் இடப்பக்கம் பார்வதி இதுதான் அர்த்தநாரீஸ்வர வடிவம்.
அர்த்தநாரி என்றாள் பாதி பெண் என்று பொருள். இறைமையில் ஆதிமூலத்தில் ஆண்மையும் இருந்தது பெண்மையும் இருந்தது .இரண்டும் சமமாக இருந்தன .

இந்த பிரபஞ்ச தோற்றத்திற்கு எது மூலமோ அதில் ஆண்மையும் , பெண்மையும் இணைந்திருந்தன.
அந்த ஆண்/பெண் புணர்ச்சியின் காரணமாகவே பிரபஞ்சம் பிறந்தது.
விஞ்ஞானம் இந்த ஆண் பெண்ணையே ஜடப்பொருள் (matter ), சக்தி (Energy) என்கிறது.
இந்திய மெய்ஞானம் இறைமையின் பெண் பகுதியை சக்தி என்றே அழைக்கிறது.
நாமும் ஆண்/பெண் புணர்ச்சியிலேயே பிறந்தோம்.
நாம் மட்டுமல்ல , உயிரினங்கள் எல்லாம் இப்படித்தான் பிறந்தன.
உயர்திணையில் மட்டுமல்ல , அஃறிணையிலும் கூட இப்படித்தான் நடக்கிறது .நேர்மம் (postive) எதிர்மம் (Negative) என்ற ஆண்-பெண் புணர்ச்சியில்தான் மின்சாரம் பிறக்கிறது.
நாம் ஆண்-பெண் புணர்ச்சியில் பிறந்ததால் நமக்குள்ளும் ஆணும் பெண்ணும் இருக்கின்றனர்.ஆணுக்குள் பெண் ஒளிந்திருக்கிறாள் பெண்ணுக்குள் ஆண் ஒளிந்திருக்கிறான் .
ஆணின் ஆழ்மனத்தில் (unconsious mind) பெண் இருக்கிறாள். பெண்ணின் ஆழ்மனத்தில் ஆண் இருக்கிறான்.
ஆணிடம் பெண்மை மிகுந்தால் அவன் கவிஞனாகவோ , ஓவியவினாகவோ பாடகனாகவோ , நாடகக் கலைஞனாகவோ ஆவான் .

பெண்ணிடம் ஆண்மை மிகுந்தால் அவள் நிர்வாகத் தலைமையை விரும்புவாள் . வீரதீர சாகச துறைகளில் ஈடுபடுவாள் .
ஆணிடம் பெண்மையோ , பெண்ணிடம் ஆண்மையோ அளவுக்கு அதிகமாக இருந்தால் அவர்கள் அலியாகி விடுவார்கள் .
ஆண்கள் சிலரிடம் எப்போதாவது பெண்மை மிகுவதும் உண்டு. இந்த நேரத்தில் ஆண் அழுவான் .
அழுகின்ற ஆண்களைப் பார்த்து, "என்ன பெண்ணைப் போல் அழுகிறாயே !"என்று சொல்வது உலக வழக்கம்.
பெண்கள் சிலரிடம் எப்போதாவது ஆண்மை மிகும் உண்டு இந்த நேரங்களில் பெண் கொடூரமாக நடந்து கொள்வாள்

ஆண் ஆணாகவும் பெண் பெண்ணாகவும் இருந்து புணர முடியாது. புணர்ச்சிக்கும் சமநிலை வேண்டும்.
புணர்ச்சிக்கு முன் பெண்ணிடம் ஆசை வார்த்தைகள் கூறும்போது ஆண் மென்மை அடைவதை பார்க்கலாம்.
அதே போலவே பெண்ணும் புணர்ச்சி நேரத்தில் வலிமை மிகுந்தவளாக மாறுவதையும் பார்க்கலாம்.
இருபால் இணையும்போது இன்பம் உண்டாகிறது .
நமக்குள் இருக்கும் ஆண்/பெண் என்ற இரு பாலும் இணைந்தால் இன்பம் உண்டாகும் .
ஆணும் பெண்ணும் இணைந்தால் ஏற்படும் இன்பம் சிற்றின்பம் எனப்படுகிறது .காரணம் அது சிறிது நேரமே இருப்பதால்.
நமக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் உணர்ந்தால் ,பேரின்பம் உண்டாகும். ஏனென்றால் , இந்த இன்பம் நீடித்திருக்கும்.
நேர்மம் எதிர்மம் என்ற இரு முரண்கள் இணையும்போது சக்தி பிறக்கிறது. அது விளக்கெரிக்கிறது .
நமக்குள் இருக்கும் ஆண்_பெண் என்ற முரண்கள் இணைந்தால் , நமக்குள்ளும் ஒரு புதிய சக்தி பிறக்கும் . அது நமக்குள் இருக்கும் விளக்குகளை எரிக்கும்
இரு பால்கள் இணையும்போது , புதிய பிறப்பு ஒன்று உண்டாகிறது .
நமக்குள் இருக்கும் இரு பால்களும் இணையும்போது , நாம் ஒரு புதுப் பிறவியே அடைவோம்.
இது நம்மிலிருந்து நாமே ஒரு புதிய நாமைப் பிரசவிக்கும் அதிசயம் .

ஒவ்வொன்றுக்குள்ளும் , அது இயற்கையானாலும் சமூகமானாலும் அதற்கே உரித்தான , உள்ளார்ந்த ஒன்றை ஒன்று பிரிக்க முடியாத எதிர்நிலைகள் இருக்கின்றன. இந்த எதிர் நிலைகளின் பாஸ்பரக் கிரியையை பொருள்களின் இயக்கத்திற்கு காரணம் என இயக்கவியல் (Dialectics ) கூறுகிறது.
முரண்களின் மோதலால் மாற்றம் உண்டாகிறது . மாற்றம் வளர்ச்சியின் அடையாளம் முரண்கள் என்றாலும் இணைகள் என்றாலும் ஒன்றே. குர்ஆன் முரண்களையே 'இணைகள் ' என்றே சொல்கிறது .
மோதல் என்றாலும், புணர்ச்சி என்றாலும் ஒன்றே .
ஆண்/பெண் புணர்ச்சி மோதலாகவும் இருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். நமக்குள் இருக்கும் முரண்கள் மோத வேண்டுமானால் அல்லது இணைகள் இணைய வேண்டுமானால் இரண்டும் சமநிலை அடைய வேண்டும்.
இந்த சம நிலையை அடைவது எப்படி ?

ஆண் எப்போதும் தன்னை ஆணாகவே நினைக்கிறான். பெண் எப்போதும் தன்னை பெண்ணாகவே நினைக்கிறாள் .
இதனால் பிரச்சனைகள் உண்டாகின்றன.

ஆணுக்குள் இருக்கும் பெண் பலவீனமாக இருந்தால் , அவன் புறத்தில் உள்ள பெண் பக்கம் அதிகமாக கவரப்படுகிறான் .
இதனால் கீழ்நிலையில் பெண்களை பரிகசித்தலும் ( Eve _teasing) மேல்நிலையில் கற்பழித்தலும் நடக்க வாய்ப்பு உண்டு .
இதே போலவே பெண்ணுக்குள் இருக்கும் ஆண் பலவீனமாக இருந்தால், அவள் ஆண்களின் பக்கம் அதிகமாகக் கவரப்படுவாள் .இதனால் அவள் சோரம் போக வாய்ப்புண்டு .
இந்த பிரச்சனைகளை தடுக்க வேண்டுமென்றால் , நமக்குள் இருக்கும் ஆணையும் பெண்ணையும் சமநிலைக்கு கொண்டுவர வேண்டும்.
இந்தச் சமநிலையை எப்படி கொண்டுவருவது ?
ஆண் பெரும்பாலும் அறிவால் இயக்கப்படுகிறான் .பெண் பெரும்பாலும் உணர்ச்சியால் இயக்கப்படுகிறாள் .
ஆணும் பெண்ணும் அறிவையும், உணர்ச்சியையும் சமப்படுத்தினால், நமக்குள்ளிருக்கும் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே சம நிலை ஏற்பட்டுவிடும்.
சம நிலை ஏற்பட்டுவிட்டால் சங்கமம்தான் .
சங்கமத்தில் இரட்டை நிலை மறந்து ஒருமை நிலை உண்டாகும் .இந்த ஒருமை நிலையே புணர்ச்சியின் உச்சம்.
ஞானத்தின் உச்சமும் இதுதான்.
இறைவன் ஒருவன் என்பது ஏகத்துவம் என சிலர் நினைக்கின்றனர் . இது ஆரம்பப்பள்ளி பாடம் .
எல்லாம் ஒன்றே என உணர்வதே உண்மையான ஏகத்துவம் .
நமக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் ஒன்றாகவில்லை என்றால், நாம் இறைவனை உணர முடியாது .
ஒருமைதான் ஒருமையை அறியும்.
- " இது சிறகுகளின் நேரம் "- கவிக்கோ அப்துல் ரகுமான் (மீள்)

**பெண்களின் உலகம் 15**

( பெண்களின் முடியலங்காரம் )
\



பெண்களுக்கு முடி அலங்காரம் என்ற பெயரில் முடியை கட் செய்வது , நீளமாக தொங்க விடுவது , சுருட்டி விடுவது என்று விதவிதமாக முடியலங்காரத்திற்கு ஸ்பேர்ட் ஸ்கட் , இன்வெர்ட் லேயர்டு கட் , ஷார்ட் பாப் கட் , ஸ்பைக் கட் , லேயர் ப்ளாண்ட் கட் என்று பெயர் வைத்து அழைக்கிறார்கள்.
பெண்கள் முடியலங்காரம் குறித்து இஸ்லாம் கூறுவது :
பெண்கள் தன் தலைமுடியை மளிப்பது நபி (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள் என அலி (ரலி), உஸ்மான் (ரலி), இக்ரிமா (ரலி) போன்ற நபித்தோழர்கள் அறிவிக்கின்றனர் (நூற்கள்: நஸயீ, பஸ்ஸார், மற்றும் இப்னு ஜரீர்)
முல்லா அலிகாரி அவர்கள் ' மிஷ்காத் 'என்ற நூலின் விரிவுரையாளர் தன்னுடைய 'மிர்காத்'என்ற நூலில் கூறுகிறார்: " பெண் தன் தலைமுடியை மளிப்பது கூடாது என்பது எதற்காகவென்றால், பெண்கள் கூந்தலை விடுவது தோற்றத்திலும் அழகிலும் ஆண்கள் தாடி விடுவதற்கு ஒப்பானதாகும்" - ஷேக் முஹம்மது பின் இப்ராஹிம் ஃபத்வா தொகுப்பு 2 – 49

ஒரு பெண் தன் தலைமுடியை நீளமாக விடுவது சிரமமானதாகவோ , அதை பராமரிப்பதற்கானச் செலவை மேற்கொள்வது அவளுக்கு முடியாமலோ இருக்குமேயானால், தேவையான அளவு அலங்காரத்தை நோக்கமாகக் கொள்ளாது, தலைமுடியை குறைத்துக் கொள்வதில் தவறில்லை.
நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் அவர்களின் சில மனைவிமார்கள், அலங்காரத்தை விட்டுவிட வேண்டும் என்பதற்காகவும், நீண்ட முடியை வளர்க்கும் தேவையற்று இருந்தாலும், தங்கள் தலைமுடியை குறைத்துக் கொண்டார்கள்.
அதே நேரத்தில் இறைமறுப்பாளர்கள் மற்றும் தீயவர்களுக்கு ஒப்பாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்திலோ, ஆண்களுக்கு ஒப்பாக தோற்றமளிக்க வேண்டும் என்ற எண்ணத்திலோ ஒரு பெண் தன் தலைமுடியை குறைப்பாளானால், அது தடை செய்யப்பட்டதாகும்.
அதேநேரத்தில் அலங்காரத்துக்காக அவ்வாறு செய்வாளானால், நான் அறிந்தவரை அது அனுமதிக்கப்பட்டதாகும்.- முஹம்மத் அமீன் சின்கீதீ "அள்வாஉல் பயான் " என்னும் குர்ஆன் விளக்கவுரை நூலில் குறிப்பிடுகிறார்.

நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்கள் தங்கள் தலை முடியை குறைத்துக் குட்டையாக ஆக்கிக் கொள்வார்கள் என ஹதீஸில் வந்ததன் நோக்கம், நபி (ஸல்) அவர்கள் உயிரோடு இருந்த காலத்தில் அவர்களின் மனைவிமார்கள் அவர்களுக்காக தங்களை அலங்கரித்துக் கொள்வார்கள். அவர்களின் தலை முடிதான் மிகவும் அழகானதாகும். நபி (ஸல் ) அவர்களின் மரணத்திற்குப் பின்னர், அவர்களின் மனைவிமார்களுக்கு என தனிச் சட்டங்கள் உள்ளன. இந்தச் சட்டங்களில் பூமியிலுள்ள எந்தப் பெண்ணும் கூட்டாக முடியாது.
நபி (ஸல்) அவர்களின் மரணத்திற்கு பின் அவர்களின் மனைவிமார்கள் வேறு யாரும் திருமணம் செய்ய முடியாது. ஆசையில்லாத அளவிற்கு அவர்கள் திருமணத்திலிருந்து நிராசை ஆகிவிட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதர் என்ற காரணத்தினால் அப்பெண்களின் மரணம் வரை ' இத்தா 'வில் இருக்கின்ற பெண்களைப் போன்றிருக்கிறார்கள்.
அல்லாஹ் கூறுகிறான் " அல்லாஹ்வின் தூதரை நோவினை செய்வது உங்களுக்கு தகுமானதல்ல; அன்றியும் அவருடைய மனைவிகளை அவருக்குப் பின்னர் நீங்கள் மணப்பது ஒருபோதும் கூடாது; நிச்சயமாக இது அல்லாஹ்விடத்தில் மிகப்பெரும் (பாவ) காரியமாகும். (அல்குர்ஆன் : 33:53)
ஆண்களிலிருந்து முழுமையாகவே அவர்கள் நிராசையாகி விட்டதால், மற்ற பெண்களுக்கு அனுமதிக்கப் படாத சில விஷயங்கள் இவர்களுக்கு சலுகை வழங்கப்படுவதற்கு காலமாக இருக்கலாம் .
(அல்வாஉல் பயான் 5 :598 - 601)
"பிறருக்கு முடிவுடன் வேறு முடியைச் சேர்த்து வைப்பவள், தன் முடியுடன் வேறு முடியைச் சேர்க்கும்படி கேட்பவளையும் நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்" . நூல் : (புகாரி, முஸ்லிம்)
இவ்வாறு செய்வதனால் ஏமாற்றுவதற்கான வாய்ப்புகள் ஏற்படுகின்றன. ' டோப்பா ' மற்றும் ' விக்' இந்த வகையைச் சேர்ந்ததுதான்.
"முஆவியா (ரலி) அவர்கள் ஒருமுறை மதீனாவிற்கு வந்த போது, மக்களுக்கு பிரசங்கம் செய்தார்கள். அப்போது முடிக்கற்றை ஒன்றை கையில் வைத்துக்கொண்டு, "உங்கள் பெண்களுக்கு என்ன நேர்ந்தது ? இது போன்ற முடிகளை எல்லாம் அவர்கள் தங்கள் தலையில் இணைக்கின்றனர்.
"எந்த ஒரு பெண்ணாவது தன் தலை முடியுடன் வேறு முடியைச் சேர்த்து வைப்பாளானால் அது ஏமாற்றும் மோசடி செய்யக் கூடியது ஆகும் என்று, நபி (ஸல் ) அவர்கள் கூற, நான் கேட்டு உள்ளேன்" என்று கூறினார் -
நூல் (புகாரி முஸ்லிம்)
"புருவ முடியை முழுவதுமாகவோ , கொஞ்சமாகவோ நீக்கக்கூடியவளையும், தனக்கு நீக்கும்படி கேட்பவளையும் நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்.

**Rahmath Rajakumaran**

ஸ்பேர்ட் ஸ்கட் :
நீளமான முகம்,பெரிய கண்கள் கொண்ட பெண்களுக்கு இந்த வகை முடியலங்காரம் நன்றாக இருக்கும். இந்த அலங்காரம் உங்களின் நீண்ட முகத்தை வட்டமாகக் காட்ட உதவும்.
முதலில் முடியை நாலாபுறமும் சிறுசிறு லேயராக எடுத்து வெட்டவும். நெற்றி பகுதியுலும் சிறிய லேயாராக எடுத்து வெட்டவும். இதனால் பெரிய காதுகளாக இருந்தாலும் அவை மறைந்தது போலத் தெரியும். நெற்றியும் சிறியதாகத் தெரியும்.
இன்வெர்ட் லேயர்டு கட் :
இந்த வகை முடியலங்காரம் சதுர வடிவ முகம் கொண்ட பெண்களுக்கு ஏற்றது. முதலில் கழுத்துப் பகுதியில் இருக்கும் முடியை சிறிதாக வெட்ட வேண்டும். கழுத்துப் பகுதியை மறைக்கு நீள முடிகளையும் கத்தரிக்கவும், இப்போது சதுரமுகம் வட்ட முகமாய்க் காட்சியளிக்கும்.
ஷார்ட் பாப் கட் :
வட்ட முகம் கொண்ட பெண்களுக்கு இவ்வகை முடியலங்காரம் பொருத்தமாக இருக்கும். இதில் தலையின் நடுவில் உள்ள முடிகளை மட்டும் விட்டுவிட்டு இருபுறமும் உள்ள முடிகளை வெட்ட வேண்டும். அதே போல நெற்றியின் மேல் உள்ள முடிகளையும் சீராக வெட்டிக் குறைக்கவும்.
ஸ்பைக் கட் :
இது எல்லோருக்கும் ஏற்றது. தலையின் நாலாபுறமும் சிறு சிறு லேயர்களாக முடியை எடுத்து வெட்டவும். பின்னர் தலையின் நடுவிலும் முன்புறமும் வெட்டவும்.வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு இவ்வகை ஹேர்கட் அழகாகவும் வசதியாகவும் இருக்கும். இந்த முடியலங்காரம் செய்து கொண்டவர்கள் முடியை சிறிது `ப்ளீச்` செய்தால் இன்னும் அழகாகத் தெரியும்.
லேயர் ப்ளாண்ட் கட்:
இந்த வகை முடியலங்காரத்தில் பலவிதம் உண்டு. ஹேர் டிரையர் மூலம் பல ப்ளாண்ட் கட் செய்யலாம்.நெற்றியில் முடிக் கற்றைகள் வந்து விழுமாறு அலங்காரம் செய்யப்படும். எல்லா வகை முகத்துக்கும் ஏற்றது இந்த முடியலங்காரம்.

**பெண்களின் உலகம் 16**
( இஸ்லாத்தில் பெண்களின் நிலை )



இஸ்லாத்தில் பெண்களுக்கிருக்கிற உரிமைகள் பற்றிப் பேசுவதற்கு முன் பெண்களை மற்ற சமூகத்தினர் எப்படி நடத்திக் கொண்டிருந்தார்கள் என்பதைத் தெளிவுபடுத்துவது அவசியமாகும்.
கிரேக்கர்கள் பெண்களை வியாபாரப் பொருட்களாகவே கருதினர். அவர்களுக்கென எந்த உரிமையும் கிடையாது. உரிமைகள் அனைத்தும் ஆண்களுக்கே என்றனர். இன்னும் அப்பெண்களுக்குச் சொத்துரிமை, கொடுக்கல், வாங்கல் போன்ற உரிமைகள் தடுக்கப் பட்டிருந்தன.
அவர்களில் பிரபல்யமான தத்துவஞானியான சாக்ரடீஸ் பெண்கள் இருப்பது உலகின் வீழ்ச்சிக்கு மிகப்பெரும் மூல காரணமாகும். மேலும் பெண்கள் விஷ மரத்திற்கு ஒப்பானவர்கள். அம்மரத்தின் புறத்தோற்றம் அழகாக இருக்கும். எனினும் அதன் கனிகளை சிட்டுக்குருவிகள் தின்றவுடனேயே இறந்துவிடுகின்றன என்று கூறியுள்ளார்.
ரோமானியர்கள் பெண்களை உயிரற்ற ஒரு பொருளாகவே கருதி வந்துள்ளனர். அவர்களிடம் பெண்களுக்கு எந்த மதிப்பும் உரிமையும் இருந்ததில்லை. பெண்கள் உயிரற்ற பொருளாகக் கருதப்பட்டதால்தான் அவர்களைக் கொதிக்கின்ற எண்ணெயை ஊற்றியும், தூண்களில் கட்டியும் வேதனை செய்தார்கள்.
இதுமட்டுமின்றி குற்றமற்ற பெண்களை குதிரைகளின் வால்களில் கட்டி அவர்கள் மரணித்து போகின்ற அளவிற்கு மிக விரைவாக ஓட்டிவிடுவார்கள்.

பெண்கள் விஷயத்தில் இந்தியர்களின் கண்ணோட்டமும் இவ்வாறுதான் இருந்துள்ளது. அவர்கள் இன்னும் ஒருபடி அதிகமாக கணவன் இறந்துவிட்டால், அவனின் சிதையுடன் மனைவியையும் சேர்த்து எரித்து விடுபவர்களாகவும் இருந்திருக்கின்றனர்.
சீனர்கள் பெண்களை நற்பாக்கியத்தையும் செல்வங்களையும் அழித்துவிடக்கூடிய தண்ணீருக்கு ஒப்பாக்கினர். அவர்கள் தம் மனைவியரை உயிரோடு புதைத்து விடுவதற்கும் விற்றுவிடுவதற்கும் உரிமை பெற்றிருந்தனர்.
பெண்கள் சாபத்திற்குரியவர்களென யூதர்கள் கருதுகிறார்கள். ஏனெனில் அவள் தான் ஆதம் (அலை) அவர்களை வழிகெடுத்து மரக்கனியை சாப்பிடச் செய்துவிட்டாள்.
மேலும் பெண்ணுக்கு மாதவிடாய் வந்துவிட்டால், அவள் அசுத்தமானவள், வீட்டையும் அவள் தொடும் பொருளையும் அசுத்தப்படுத்திவிடக்கூடியவள் எனவும் கருதுகிறார்கள். பெண்ணுக்குச் சகோதரர்களிருந்தால், அவள் தன் தந்தையின் சொத்தில் சிறிதும் உரிமை பெறமாட்டாள் எனவும் கருதுகிறார்கள்.
கிறிஸ்தவர்கள் பெண்களை ஷைத்தானின் வாசலாகக் கருதுகிறார்கள். கிறுத்தவ அறிஞர்களில் ஒருவர் பெண் மனித இனத்தைச் சார்ந்தவளல்ல எனக் கூறினார்.
இன்னும் புனித பூனபெஃன்தூரா என்பவன் கூறினான்: "நீங்கள் பெண்களைக் கண்டால் அவளை மனித இனத்தைச் சார்ந்தவள் எனக் கருதிவிடாதீர்கள். அது மட்டுமல்ல அவளை ஒரு உயிருள்ள ஜீவனாகக் கூட கருதாதீர்கள். மாறாக நீங்கள் காண்பது நிச்சயமாக ஷைத்தானின் உருவத்தைத்தான். இன்னும் நீங்கள் செவியேற்கும் அவளது சப்தம் பாம்பின் சீற்றம்தான் "
மேலும் கடந்த 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை ஆங்கிலேயே பொதுச் சட்டப்படி பெண்கள் பிரஜா உரிமை கொடுக்கப்படாதவர்களாக இருந்தனர். இதுபோன்றே பெண்களுக்கென எந்த தனிப்பட்ட உரிமைகளும் கிடையாது.
இன்னும் அவள் அணியும் ஆடை உட் பட எந்தப் பொருளையும் சொந்தப்படுத்திக் கொள்வதற்கும் உரிமையில்லை.

1567 ஆம் ஆண்டு ஸ்காட்லண்ட் பாராளுமன்றம் பெண்களுக்கு எந்த அதிகாரமும் கொடுக்கக்கூடா தென சட்டம் இயற்றியது. இவ்வாறே எட்டாவது ஹென்றியின் காலத்தில் ஆங்கிலேயப் பாராளுமன்றம் பெண்கள் அசுத்தமானவர்கள் என்பதால் இன்ஜீலைப் படிக்கக் கூடாதென சட்டம் இயற்றியது.

பிரஞ்சுக்காரர்கள் 586 ஆம் ஆண்டில் பெண்கள் மனித இனத்தைச் சார்ந்தவர்களா? இல்லையா? என ஆய்வு செய்து முடிவெடுக்க ஒரு சபையை அமைத்தனர். அச்சபை பெண்கள் மனித இனத்தைச் சார்ந்தவர்கள்தான். எனினும் அவர்கள் ஆண்களுக்குப் பணிவிடை செய்வதற்காகவே படைக்கப்பட்டவர்களென முடிவு செய்தது. 1805-ம் ஆண்டு வரை ஆங்கிலேயரின் சட்டத்தில் ஒரு கணவன் தனது மனைவியை விற்பது கூடுமென்றே இருந்துள்ளது. மனைவியின் விலை ஆறு பெனி (அரை ஷிலிங்) என நிர்ணயமும் செய்யப்பட்டது.
இஸ்லாத்திற்கு முன்பு வரை அரேபியர்களிடத்தில் பெண்கள் இழிந்த பிறவிகளாக இருந்தனர். அவளுக்கு சொத்துரிமை கிடையாது. அவர்களை ஒரு பொருட்டாகக் கருதப்படமாட்டாது. அவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. மட்டுமல்லாமல் அவர்களில் பெரும்பாலோர் தம் பெண்மக்களை உயிருடன் புதைப்பவர்களாக இருந்திருக்கின்றனர்.

இவ்வனைத்து அநியாயங்களைப் பெண்களை விட்டும் நீக்கவும், நிச்சயமாக ஆண்களும் பெண்களும் சமமானவர்கள்தான் என விளக்கவும்தான் இஸ்லாம் வந்தது. எனவே ஆண்களுக்கு உரிமைகளிருப்பது போல் பெண்களுக்கும் உரிமைகளிருக்கின்றன.
அல்லாஹ் கூறுகிறான்: மனிதர்களே! நிச்சயமாக நாம் உங்களை ஓர் ஆண், பெண்ணிலிருந்தே படைத்தோம். பின்னர் நீங்கள் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளும் பொருட்டு உங்களைப் பல கிளைகளாகவும் கோத்திரங்களாகவும் ஆக்கினோம். உங்களில் எவர் மிக பயபக்தியுடையவராக இருக்கின்றாரோ அவர் தாம் அல்லாஹ்விடத்தில் மிக்க கண்ணியமானவர். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிபவன், யாவற்றையும் சூழ்ந்தறிபவன். (49:13)

ஆண் அல்லது பெண் ஈமான் கொண்ட நிலையில் நற்கருமங்கள் செய்தால் அவர்கள் சுவனத்தில் நுழைவார்கள். சிறிதளவும் அநீதமிழைக்கப்பட மாட்டார்கள்.(4:124)
மனிதன் தன் பெற்றோருக்கு உபகாரம் செய்ய வேண்டுமென நாம் அறிவுறுத்தியுள்ளோம்.(46:15)
நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: முஃமின்களில் பூரண ஈமானுடையவர்கள் அவர்களில் அழகிய குணமுடையவர்களே. தனது மனைவியிடத்தில் சிறந்தவரே உங்களில் சிறந்தவர்.
நபி(ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து மனிதர்களில் நான் அழகிய முறையில் நடந்து கொள்ள வேண்டியவர் யார்? எனக் கேட்டார். அதற்கு நபி(ஸல்) அவர்கள் உனது தாய் எனக் கூறினார்கள். பின்பு யார்? எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள் உ னது தாய் எனக் கூறினார்கள். பின்பு யார்? எனக் கேட்டார். உனது தாய் என்றே கூறினார்கள். பின்பு யார்? எனக் கேட்டார். உனது தந்தை எனக்; கூறினார்கள்.(புகாரி,முஸ்லிம்)

சாதனையின் சிகரத்தில் இன்று பெண்கள் உயர்ந்திருக்கின்றனர் என்றால் அது மிகையாகாது. இதற்குக் காரணம் அன்று இவ்வுலக மக்களுக்கு வழிகாட்டியாக இறைவனால் அனுப்பப்பட்ட, இறைத்தூதர் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் வித்திட்டு தொடங்கி வைத்துள்ள பெண்ணுரிமை அல்லவா!
பெண் இனத்திற்கே பெருமையளிக்கும் பெரும் பேறாக "தாய்மை' என்னும் உயர்ந்த பிடிப்பினை ஆண்களின் மூலமாக இறைவன் வழங்கியுள்ளான். பெண் இனத்தை நபிகளார் மிக உயர்வாக எடுத்துரைக்கிறார்கள்.
"பெண்கள் ஆண்களின் மறு பாதியாவார்'' என நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.
திருக்குர்ஆனில் "அன்னிசா' (பெண்கள்) என்ற அத்தியாயம் 4-இல் பெண்களைப் பற்றியும், பெண் கல்வி, மணமகளைத் தேர்ந்தெடுத்தல், சொத்துரிமை, வாரிசுரிமை போன்ற பல உரிமைகள் பற்றியும் கூறப்பட்டுள்ளது.
"கல்வியைத் தேடிப் பெறுவது ஒவ்வொரு முஸ்லிம் ஆண்-பெண் மீது கடமையாகும்'' என நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.
பெண்கள் ஆண்களைவிட பலவீனமாகப் படைக்கப்பட்டவர்கள். இருப்பினும் இஸ்லாமிய வரலாற்றினை திரும்பிப் பார்த்தால், இஸ்லாமியப் பெண்கள் அனைத்துத் துறைகளிலும் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது.
போர்க்காலங்களில் நபித் தோழர்களுடன் பெண்களும் கலந்துகொண்டு போர் வீரர்களுக்குத் தண்ணீர் புகட்டுதல், இறந்தவர்களையும், காயமுற்றவர்களையும் போர்க்களத்திலிருந்து அப்புறப்படுத்துதல் போன்ற பணிகளைச் செய்து ஆணுக்கு நிகராக பற்பல சேவைகளை ஆற்றி அழியாப் புகழ் பெற்றுள்ளனர் என்பதையும் காணலாம்.
தலையில் முக்காடிட்டு பர்தா அணிந்தால் மட்டும் இஸ்லாமியப் பெண்ணாக ஆகிவிட முடியாது. எல்லாம் வல்ல இறைவனை வணங்கி, இறைவேதம் - நபிமொழி ஆகியன கூறும் கருத்துக்களை அறிந்து ஒழுகி தனது மக்களையும் அதன்படி வழி நடத்தக்கூடியவளே உண்மையான முஸ்லிம் பெண்மணியாவாள்.
இஸ்லாமியப் பெண்கள் முறையாக ஹிஜாபை (புருகா) அணிந்து சென்று பாதுகாத்துக்கொள்வது நன்மை பயக்கும்.
""அந்நிய ஆணும்- பெண்ணும் தனித்திருக்கலாகாது. அவ்வாறு தனித்திருக்கும்போது "ஷைத்தான்(சாத்தான்)' மூன்றாவதாக இருப்பான்'' என இஸ்லாம் பகர்கிறது.
இளைய தலைமுறையினரின் நிலைமை மிகக் கவலைக்கிடமாக உள்ளது. வெள்ளம் வரும் முன்னே அணைக்கட்ட வேண்டும். அவர்களைத் திருத்துவது ஒவ்வொரு பெற்றோரின் கைகளில்தான் இருக்கின்றது. வாழ்க்கை என்பது விலை மதிக்க முடியாத பொக்கிஷம். எனவே, இப்படிப்பட்ட வாழ்நாளை வீணடிக்காது இருளில் மூழ்கிக் கிடக்கும் சமுதாயத்தை, ஷரீஅத்தின் (இஸ்லாமிய மார்க்க சட்டம்) ஒளியில் வெளிச்சத்திற்குக்

கொண்டு வரக்கூடியவர்களாக மாறி, இறை பொருத்தத்தைப் பெற்ற சிறந்த பெண்மணிகளாகத் திகழ இறைவன் அருள்வானாக.

**பெண்களின் உலகம் 17**
(பலசாலிகள்.. ஆண்களா ?.. பெண்களா ? )

ஆண் என்றாலே முரட்டுக் காளை, சிங்கம், சிறுத்தை, புலி என்று பலம் பொருந்திய விலங்குகளோடும் பெண் என்றால் மயில், மைனா, குயில், மான் என்று மென்மையான விலங்கு, பறவைகளோடும் ஒப்பிட்டுப் பார்க்கும் மனிதர்கள் இங்கே அதிகம்.
வெளித் தோற்றத்தை வைத்துப் பார்த்தால், பெண்களைவிட ஆண்கள் உயரத்திலும், எடையிலும், பலத்திலும் அதிக சக்தி வாய்ந்தவர்களாகத் தெரிந்தாலும், ஆரோக்கியத்தை வைத்துப் பார்க்கும் போது, ஆண்கள், பெண்களைவிட பின்தங்கியவர் களாகத்தான் இருக்கிறார்கள் என்பதே பல மருத்துவ ஆய்வுகளின் முடிவாக இருக்கிறது.
கருவில் இருக்கும் போதே பெண் சிசு, ஆண் சிசுவைவிட எதிர்ப்பாற்றல் கொண்டதாக வளர்கிறது.
இயற்கையான உடல் வாகு, பழக்கவழக்கங்கள், குடும்பப் பின்னணி இப்படிப் பல காரணிகளையும் அலசி ஆராய்ந்து பெண்கள் பலவிதங்களிலும் ஆண்களைவிட ஆரோக்கியமானவர்களாக இருப்பதை உறுதிசெய்கின்றன பல மருத்துவ ஆய்வுகள்.
மாறிக்கொண்டே வரும் வாழ்வியல் சூழ்நிலையாலும், உணவுப் பழக்கவழக்கங்களினாலும் மனிதர்களின் ஆயுட்காலமும் அதிகரித்துக்கொண்டே போகிறது. குறிப்பாக ஆண்களைவிடப் பெண்களின் ஆயுட்காலம் அதிகரித்துக் கொண்டே போகிறது என்பதுதான் உண்மை.
உலக அளவில் 65 வயதைக் கடந்தவர்களில் 100 பெண்களுக்கு 77 ஆண்கள் என்று புள்ளிவிவரம் தெரிவிக்கிறது. மூன்று பெண்களுக்கு 1 ஆண்தான், 85 வயதைக் கடந்து உயிர் வாழ்கிறார் என்று தெரிகிறது. நூறு வயதைக் கடந்தவர்களுள் 4:1 என்று பெண், ஆண் விகிதாச்சாரம் உள்ளது.
இந்தப் புள்ளிவிவரங்களிலிருந்து ஆண்களின் சராசரி வாழும் திறன், பெண்களைவிடக் குறைந்து காணப்படுகிறது. இறப்பு விகிதம், குறிப்பாகச் சிறுவயதிலேயே இறக்கும் விகிதத்திலும் பெண்களைவிட ஆண்களே அதிகம்.

உலக சுகாதார நிறுவனத்தின் ஆய்வின்படி, உடல் அளவில் ஏற்படும் இதய நோய், இரைப்பை, குடல் நோய்கள், சிறுநீரகக் கற்கள், புற்று நோய், எச்.ஐ.வி. ஆகியவற்றின் பாதிப்பால் பெண்களைவிட ஆண்கள் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள்.
ஒவ்வொரு மனிதருக்கும் 22 ஜோடி குரோமோசோம்கள் பொதுவாக இருக்கும். 23-வது ஜோடிதான் ஒருவர் ஆணா, பெண்ணா என்பதைத் தீர்மானிக்கும் பாலியல் குரோமோசோமாக இருக்கும். XX என்றால் பெண். XY என்றால் ஆண்.
இதில் ஆராய்ச்சியின்படி ஆணின் XY குரோமோசோமில் உள்ள Y குரோமோசோம் சில குறைபாடுள்ள நோய்களை உண்டாவதற்கான ஜீன்களை தன்னுள்ளே கொண்டுள்ளது. அதேசமயம் பெண்ணுக்கு ஒரு X ஜீனில் குறைபாடு இருந்தாலும் இன்னொரு X ஜீன் அந்தக் குறைபாட்டைச் சமன் செய்துவிடுகிறது.
மருத்துவ ஆராய்ச்சிகளின்படி பெண்களுக்குச் சுரக்கும் ஈஸ்ட்ரோஜன் ஹார்மோன் HDL (High Density Lipoprotein) நல்ல கொலஸ்ட்ரால் அளவை அதிகரிப்பதால் அவர்களுக்கு மாரடைப்பு வருவது தடுக்கப்படுகிறது. மாதவிடாய் நின்ற பிறகும் ஈஸ்ட்ரோஜனை மருந்தாக எடுத்துக் கொள்ளலாம்.

அதேசமயம் ஆணின் டெஸ்ட்டோஸ்டிரான் ஹார்மோன் அவர்களுக்கு அவசர புத்தியையும் பரபரப்பையும் ஏற்படுத்துகிறது. இதன் காரணமாகவே ஆண்களில் பெரும்பாலோர் குடித்துவிட்டு அதிவேகமாக வண்டி ஓட்டுவது, ஆபத்தான விளையாட்டுகளில் ஈடுபடுவது, போதைப் பழக்கத்துக்கு அடிமையாவது எனத் தங்களுக்கான முடிவைத் தாங்களே தேடிக் கொள்வதில் பெண்களை முந்துகிறார்கள்.
உடல் பருமன் பிரச்சினை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான பிரச்சினையாக இருந்தாலும், அதனால் ஏற்படும் விளைவுகளால் ஆண்களே அதிகம் பாதிக்கப்படுகின்றனர் என்பதே பல ஆய்வுகளின் முடிவுகளாக உள்ளது.
உடல் பருமன் பிரச்சினையில், பெண்களுக்கு இடுப்பிலும், தொடையிலும் சதை போடும். ஆண்களுக்கு அடிவயிறில் தொந்தி விழும். இந்த அடிவயிறு தொந்தியால் மாரடைப்பு ஏற்படும் அபாயம் உள்ளது.
பணி சார்ந்த சுமைகளைத் திறமையுடன் சமாளிப்பதன் மூலம் மனப் பதற்றம், கோபம், வலிப்பு போன்ற நோய்களிலிருந்து பெண்கள் தப்பிக்கின்றனர். அலுவலக பணிச் சுமைகளைப் பெரும்பாலும் அலுவலகத்தோடே நிறுத்திக் கொள்ளும் மனப்பக்குவம் பெண்களுக்கு உள்ளது. இதனால் மனதளவில் பணியின் காரணமாக ஏற்படும் மன அழுத்தங்கள் பெண்களுக்கு ஏற்படுவதில்லை.

பெண்களின் உடல் நலம் குறித்து மகப்பேறு மருத்துவர் சாதனா, “உடல் ரீதியாகவும் மன ரீதியாகவும் பெண் பலவீனமானவளாக இருந்தாலும் இயற்கையான சில அமைப்புகளால், ஆண்களைவிட நோயின் தாக்கம் குறைந்தவளாகப் பெண் இருக்கிறாள்.

இந்தியச் சூழ்நிலையில் புகை பிடித்தல், மது அருந்துதல் போன்ற கெட்ட பழக்கங்களுக்கு அதிகம் அடிமையானவர்களாக ஆண்களே இருக்கிறார்கள். இதனால் பலவிதமான நோய்களுக்கும் ஆண்கள் ஆளாகிறார்கள். ஆண்களின் ஆயுட்காலம் பெண்களைவிடக் குறைகிறது.
பெண்களின் உடலில் உருவாகும் இயற்கையான சுரபிகளாலும் அவர்களுக்கு மாரடைப்பு போன்ற நோய்கள் உண்டாவதில்லை.
பெரும்பாலான பெண்களுக்கு ஹோட்டல் போன்ற வெளியிடங்களில் தொடர்ச்சியாக உணவு சாப்பிடும் வழக்கம் இல்லை. இதனால் அதிகக் கொழுப்பு, குடல் புற்று போன்ற நோய்கள் வருவது குறைவு" என்கிறார்.
பெண்களே பலசாலிகள் என்று இதற்கு மேலும் சொல்ல வேண்டுமா என்ன?
பெண் என்பவள் ஒரு மனுஷி அல்ல ; அவள் ஒரு ஊக்க சக்தி. உண்மையாகச் சொன்னால், உலகின் சக்தி. ஏதோ ஒருவரின் வெற்றிக்குப் பின்னால் நிற்பவர்கள் பெண்கள் என அவர்களை சுருக்கிப் பார்க்காமல், வானம் முழுக்க வளர்ந்து நிற்கும் சக்தியாக பார்க்க வேண்டும் .
நோக்கம் தெளிவாக இருந்தால் செயல் சரியாக இருக்கும் இதன் அடிப்படையில் பெண் சக்தியைப் பற்றி....
கர்நாடக மாநிலம் சிக்மங்களூர் மாவட்ட சேர்ந்த கன்வி இவர் தனியார் மருத்துவமனையில் செவிலியராக பணியாற்றி கொண்டிருந்தார். திடீரென்று மயங்கி விழுந்து இறந்து போனார். அவரது குடும்பத்தினர் உயிரிழந்த செவிலியரின் உடல் உறுப்புகளை தானமாக மற்ற நோயாளிகளுக்கு வழங்கினர்.
கர்நாடக சுகாதாரத்துறை அமைச்சர் சுதாகர் தனது ட்விட்டர் பக்கத்தில், "செவிலியர் உயிருடன் இருந்தபோது நோயாளிகளைக் குணப்படுத்தினார்.அவர் இறந்த பிறகும் உடல் உறுப்புகள் தானமாக வழங்கி பிறருக்காக வாழ்கிறார் "
லக்னோ பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருத படிப்பில் ஐந்து தங்கப் பதக்கங்களை வென்றிருக்கிறார் முஸ்லிம் பெண் கஜாலா.
2018 ஆம் ஆண்டு ராஜஸ்தானில் நடந்த பளுதூக்கும் போட்டியில் சாம்பியன் பட்டத்தை ஆந்திராவைச் சேர்ந்த ஷதியா வென்றார் . 2019ஆம் ஆண்டு ஹைதராபாத்தில் நடந்த தென்னிந்திய பளுதூக்கும் சாம்பியன்ஷிப் போட்டியில் முதல் இடத்தில் வென்று, "தென்னிந்தியாவின் பலசாலி பெண் " என்ற பட்டத்தையும் பெற்றார்.
2020 ஆம் ஆண்டு உத்திரபிரதேச மாநிலம் கான்பூரில் நடந்த தேசிய பளுதூக்கும் போட்டியில் சாம்பியன் பட்டம் வென்று, "இந்தியாவின் பலசாலி பெண் " என்ற விருதைப் பெற்றார்.
ஆந்திராவின் முதல் ஹிஜாப் அணிந்த பிட்னஸ் பயிற்சியாளர் என்ற சிறப்பு பெற்றிருக்கிறார் ஃபர்சானா.
"ஆரம்பத்தில் என்னை பயிற்சியாளராக ஏற்றுக்கொள்ளாத வைத்து மக்களை குறைகூற விரும்பவில்லை .ஹிஜாப் அணிந்த பெண்கள் தனியாக பார்க்கப்படுகிறார்கள். எங்களுக்கு வாய்ப்பு கொடுங்கள் நாங்கள் திறமையானவர்கள் என்பதை நிரூபிக்கிறோம் " என்றார் ஃபர்சானா
இன்று ஃபர்சானாவைத் தேடி வந்து பல பெண்கள் பயிற்சி எடுக்கிறார்கள். அவர் ஆந்திராவின் புகழ்பெற்ற பயிற்சியாளராக திகழ்கிறார். ஹிஜாப் அணிந்து பயிற்சி அளித்தற்காக சமூகத்தில் ஒதுக்கப்பட்ட அவர், தற்போது அதே ஹிஜாப் மூலம் தனி ஒரு இடத்தைப் பிடித்திருக்கிறார்.
அவள் ஒரு ஊக்க சக்தி.உண்மையாகச் சொன்னால்,
உலகின் சக்தி.

**பெண்களின் உலகம் 18**
(ஆண்களுக்குப் பெண்கள் அடிமைகள் அல்ல )

அன்று முதல் இன்று வரை பெண்களை அடிமைகளாகவே ஆண்கள் நடத்தி வருகின்றனர். சில குடும்பங்களில் இதற்கு நேர்மாறான நிலைமை இருக்கலாம். பெரும்பாலான குடும்பங்களில் பெண்கள் ஒரு பொருட்டாகவே மதிக்கப் படுவதில்லை.
மாமனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது மனைவியரிடம் நடந்து கொண்ட முறை ஆண்கள் அனைவருக்கும் மிகச் சிறந்த முன்மாதிரியாகத் திகழ்கிறது.
"இறை நம்பிக்கை கொண்டவர்களில் முழுமையான இறை நம்பிக்கை கொண்டவர் அவர்களில் நற்குணம் கொண்டவரே! உங்களில் சிறந்தவர் உங்கள் மனைவியரிடம் நற்பண்பால் சிறந்து விளங்குபவரே!" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூஹுரைரா (ரலி) திர்மிதி 1082
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வீட்டில் என்ன செய்து கொண்டிருப்பார்கள்? என்று ஆயிஷா (ரலி)யிடம் நான் கேட்டேன்.
அதற்கவர், தமது குடும்பத்தினரின் பணிகளில் ஈடுபடுவார்கள். தொழுகை நேரம் வந்ததும் தொழுகைக்காகப் புறப்படுவார்கள் என விடையளித்தார்.அறிவிப்பவர் : அஸ்வத்,
நூல் : புகாரி 676, 5363, 6039

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது வீட்டில் என்ன செய்து கொண்டிருப்பார்கள் என்று ஆயிஷா (ரலி)யிடம் கேட்கப்பட்டது. அதற்கவர், தமது (கிழிந்த) ஆடையைத் தைப்பார்கள், (பழுதுபட்ட) தமது செருப்பைச் சரி செய்வார்கள், மற்ற ஆடவர்கள் தமது வீட்டில் செய்யும் எல்லா வேலைகளையும் செய்வார்கள் என்று விடையளித்தார்.
அறிவிப்பவர் : உர்வா - முஸ்னத் அஹ்மத் 23756, 24176, 25039

அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன? என்று நான் கேட்ட போது, "நீ சாப்பிடும் போது அவளுக்கு சாப்பிடக் கொடுக்க வேண்டும். நீ உடை உடுத்தும் போது அவளுக்கும் உடை கொடுக்க வேண்டும். முகத்தில் அடிக்கக் கூடாது. அவளை நீ மனம் நோகச் செய்யக் கூடாது. வீட்டிற்குள்ளேயே தவிர (வேறு இடங்களில் அவள் மீது) வெறுப்பைக் காட்டக் கூடாது" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.
முஆவியா பின் ஹைதா (ரலி) அபூதாவூத் 1830
"அல்லாஹ்வின் திருப்தியை மட்டுமே நாடி நீர் எதைச் செலவு செய்தாலும் அதற்காக கூலி வழங்கப் படுவீர். உமது மனைவியின் வாயில் நீர் ஊட்டும் ஒரு கவள உணவு உட்பட" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
ஸஅது பின் அபீவக்காஸ் (ரலி) ,புகாரி 56
ஒரு பெருநாளின் போது சூடான் நாட்டவர்கள் போர்க் கருவிகளையும் கேடயங்களையும் வைத்து விளையாடினார்கள். நபி (ஸல்) அவர்கள் தாமாகவோ அல்லது நான் கேட்டுக் கொண்டதற்காகவோ, "நீ பார்க்க ஆசைப்படுகின்றாயா?" என்று கேட்டார்கள்.
நான் ஆம் என்றேன். அவர்கள் என்னைத் தமக்குப் பின்புறமாக என் கன்னம் அவர்களின் கன்னத்தில் படுமாறு நிற்க வைத்தனர். (பிறகு அவர்களை நோக்கி) "அர்பிதாவின் மக்களே! விளையாட்டைத் தொடருங்கள்" என்று கூறினார்கள்.
நான் பார்த்துச் சலித்த போது, "உனக்குப் போதுமா?" என்று கேட்டார்கள். நான் ஆம் என்றேன். "அப்படியானால் செல்" என்று கூறினார்கள். ஆயிஷா (ரலி), புகாரி 950

என்னுடைய விளையாட்டுத் தோழிகள் என்னுடன் விளையாடிக் கொண்டிருக்கும் போது நபிகள் நாயகம் (ஸல்) வருவார்கள். அவர்களைக் கண்டதும் எனது தோழிகள் மறைந்து கொள்வார்கள். என்னுடன் விளையாடுவதற்காக அவர்களை நபிகள் நாயகம் (ஸல்) அனுப்பி வைப்பார்கள் என்றும் ஆயிஷா (ரலி) அறிவிக்கிறார். நூல் : புகாரி 6130
ஒரு பயணத்தில் சென்ற போது நானும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் ஓட்டப் பந்தயம் வைத்தோம். அதில் நான் முந்தி விட்டேன். பின்னர் நான் உடல் பருமனாக ஆன போது மற்றொரு முறை நடந்த ஓட்டப் பந்தயத்தில் அவர்கள் என்னை முந்தி விட்டார்கள். அப்போது 'அதற்கு இது சரியாகி விட்டது' என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.
அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி), நூல் : அபூதாவூத் 2214
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது மனைவியை வாழ்க்கைத் துணைவியாகவும், தோழியாகவும்தான் நடத்தினார்களே தவிர அடிமையாகவோ, வேலைக்காரியாகவோ நடத்தவில்லை என்பதை இந்நிகழ்ச்சிகள் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

**பெண்களின் உலகம் 19**
(பெண்கள் கல்வி)

"சாத்தி ரங்கள் பலபல கற்பாராம்;
சவுரி யங்கள் பலபல செய்வராம்;
மூத்த பொய்ம்மைகள் யாவும் அழிப்பராம்;
மூடக் கட்டுக்கள் யாவுந் தகர்ப்பராம்;
காத்து மானிடர் செய்கை யனைத்தையும்
கடவு ளர்க்கினி தாகச் சமைப்பராம்;
ஏத்தி ஆண்மக்கள் போற்றிட வாழ்வராம்;
இளைய நங்கையின் எண்ணங்கள் கேட்டீரோ!
(பாரதியின் புதுமைப்பெண்)
இன்று பெண் கல்வி மிக முக்கியமாக பார்க்கப்படுகிறது. முன்பெல்லாம் பெண்களுக்கு கல்வி எதற்கு என்று ஒதுக்கப்பட்டார்கள். ஆனால் இன்று பெண்கள் அனைத்து துறைகளிலும் முன்னேறி ஆண்களுக்கு நாங்கள் சளைத்தவர்கள் அல்ல என்று காண்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.
அறிந்தோரும், அறியாதோரும் சமமாவார்களா? நல்லுபதேசம் பெறுவோரெல்லாம் அறிவுடையோரே (அல்குர்ஆன் 39:9)
(அரபு நாடான அமீரகத்தில் ரெயில்வேயில் ஓட்டுனராக பணிபுரியும் மர்யம் அல் ஸஃபர்.)
கல்வி கற்பது என்பது ஒவ்வொரு ஆண், பெண் இருவர் மீதுள்ள கட்டாயக் கடமையாகும். கல்வியானது ஒரு மனிதனை அறிவுடையவனாகவும், பண்பாடுள்ளவனாகவும், ஒழுக்கமுடையனாகவும் மாற்றுகிறது.
கல்வி மனிதனின் அறிவுக்கண்ணைத் திறப்பதோடு சொத்துக்களிலெல்லாம் மிகச் சிறந்த சொத்தாகவும் கருதப்படுகிறது. நாம் கற்கக்கூடிய கல்வி இவ்வுலகிற்கு மட்டுமின்றி மறுமைக்கும் பயன்தரக்கூடியதாக இருக்க வேண்டும்.

இஸ்லாத்திற்கு முன்பு பண்டைய அரேபியர்களிடத்தில் பெண்கள் இழிப்பொருளாகவும், சொத்துரிமைப் பெற தகுதியற்றவர்களாகவும், பெண்களும் அவர்களின் சொத்துக்களாகவும் இருந்த நிலையில், இஸ்லாம் இக்கொடிய நிலையை தரைமட்டமாக்கி பெண்களுக்கு உரிமைகளையும், சலுகைகளையும் வாரி வழங்கியது.
இன்று கல்வி கற்பதில் மிகவும் பின்தங்கியிருப்பவர்கள் யாரென்றுப் பார்த்தால் பெரும்பாலும் முஸ்லிம்களாகத்தான் இருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக பெண்கள் கல்வி கற்பதில் மிக மிக பின் தங்கியிருக்கிறார்கள், இல்லை பின் தள்ளப்பட்டு இருக்கிறார்கள் என்பதே உண்மை. காரணம் கல்வியைப் பற்றிய சரியான அடிப்படையறிவு இல்லாததினால்தான்.
இஸ்லாம் ஒரு போதும் பெண்களைக் கல்வி கற்க வேண்டாமென்று தடை போடவில்லை. அந்நிய ஆண்களும், அந்நிய பெண்களும் இரண்டறக் கலந்து விடக்கூடாது என்பதுதான் இஸ்லாமிய சட்டமே தவிர,கல்வி கற்கக் கூடாது என்றோ, தொழில் செய்யக்கூடாது என்றோ இஸ்லாம் ஒருபோதும் கூறவில்லை. மாறாக கல்வி கற்க வேண்டும் என்று ஆர்வமூட்டுகிறது
(ஒலிம்பிக் போட்டியில் வெற்றி பெற்றவுடன் இறைவனுக்கு நன்றி செலுத்தும் பஹ்ரைனின் அல் கஸ்ரா.)
ஜனாதிபதி அலீ அவர்களது சந்ததியில் வந்த நஃபீஸா எனும் பெண் ஹதீஸ் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தார்..அவரின் போதனை வகுப்புகளில் இமாம் ஷாபிஈ அவர்களும் கலந்து கொண்டு அறிவை பெற்றுள்ளார்.
பாக்தாத்தில் வாழ்ந்த ஷெய்கா சுஹதா அவர்கள் இலக்கியம் அணியிலக்கணம் ,கவிதை,போன்றவற்றில் தேர்ச்சி பெற்று திகழ்ந்தார்.
பதினெட்டாம் நூற்றாண்டில் நைஜீரியாவில் ஒரு மிகபெரும் கல்வி புரட்சி ஏற்பட காரணமான முஸ்லிம் பெண்களுக்கு தன் வாழ்க்கையை அசத்தலான முன்னுதாரணமாக்கிய நானா அஸ்மா என்ற முஸ்லிமும் ஒரு பெண்மணிதான்.இவை எல்லாம் சிறந்த உதாரணங்களாக நாம் சொல்ல முடியும்.
பெண் என்பவள் ஒரு குடும்பத்தில் மிக முக்கிய பங்கு வகிக்கிறாள். குறிப்பாக, தன்னுடைய குழந்தையின் அறிவு வளர்ச்சிக்கும் பண்பாட்டிற்கும் அடித்தளம் இடுபவளே பெண்ணாகிய தாய்தான்.
ஒரு குழந்தை முதலில் அறிமுகம் ஆவது தன் தாயாரிடம்தான் அந்தக் குழந்தைக்கு இரண்டு வருடங்கள் பாலூட்டுவதுடன் இறைபக்தியையும், நல்லொழுக்கத்தையும் சேர்த்தே ஊட்டுகிறாள்.
எனவே ஒவ்வொரு ஆண் பெண்ணுக்கும் முதல் பள்ளிக்கூடமாகவும் பாலகப்பருவ ஆசிரியையாகவும் திகழ்பவள் தாயாகிய பெண்தான். அந்தத் தாய்க்கு நல்ல அறிவும், கேள்வி ஞானமும் இருந்தால்தான் அவளிடம் பாடம் கற்கும் குழந்தைகளுக்கும் கிடைக்கும். ஆகவே, அவளுக்கு கல்வியறிவும் கேள்வி ஞானமும் வேண்டுமென்றால் கல்வி மிக அவசியமாக இருக்கிறது.

**பெண்களின் உலகம் 20**
( மனைவி மீது எப்போதுமே அன்பு செலுத்துங்கள் )

1.மனைவி செய்யும் சிறு சிறு தவறுகளை சுட்டிக்காட்டி வாய்க்கு வந்தபடி திட்டாதீர்கள். தவறை நிதானமாக எடுத்து கூறுங்கள்.
2.மனைவியை பார்க்கும் போது புன்னகை செய்ய மறக்காதீர்கள். இதனால் கோபமாக இருக்கும் மனைவி கூட சில நேரங்களில் அதனை மறந்துவிட வாய்ப்புள்ளது.
3.மனைவி முக்கிய வேலைகளில் ஈடுபடும் போது தொந்தரவு செய்வது போல மனைவியிடம் பேசி கொண்டே இருக்காதீர்கள். இதனால் மனைவி கோபமடைந்து, உங்களை திட்ட வாய்ப்பு உண்டு. இதனால் 2 பேரின் "மூடு அவுட்"டாக வாய்ப்பு அதிகம்.
4.வேலைக்கு செல்லும் மனைவியாக இருந்தால், வேலை முடிந்து வரும் போது அவர்களின் அனுபவங்களை கேட்டு அறிந்து கொள்ளுங்கள். அதேபோல நீங்களும் உங்கள் அனுபவங்களை, அவரிடம் பகிர்ந்து கொள்ள மறக்காதீர்கள்.
5.மனைவி செய்யும் சிறு உதவிகளுக்கும் அன்புடன் நன்றி கூறலாம். அதனை சற்று கொஞ்சலாக கூறினாலும் தவறில்லை. நாம் செய்யும் தவறுகளுக்காக உடனே மன்னிப்பு கேட்டு கொள்ளுங்கள். இதன்மூலம் மனைவியிடம் கோபம் நீடிப்பதை தவிர்க்க முடியும்.
6.மனைவி செய்த தவறுகளை மனதில் வைத்து கொண்டு, அதனை குத்தி காட்டி பேசகூடாது. மேலும் சம்பந்தமே இல்லாமல் மனைவியின் பெற்றோரையும், குடும்பத்தையும் திட்டகூடாது. இதனால் மனைவியின் மனதில் வெறுப்பு ஏற்பட வாய்ப்புள்ளது.
7.வேலைக்கு செல்லாத மனைவியாக இருந்தால், நேரம் கிடைக்கும் போது மனைவியை வெளி இடங்களுக்கு கூட்டி செல்ல மறக்க வேண்டாம்.
8.மனைவி விரும்பி ஏதாவது பொருட்களை கேட்கும் போது, பணம் இருந்தால் வாங்கி கொடுக்கலாம். இல்லாவிட்டால் பணம் இல்லை என்றோ அல்லது குறிப்பிட்ட பொருள் இப்போது தேவையில்லை என்றோ சாந்தமாக மனைவியிடம் எடுத்து கூறலாம்.
9.கணவனும் மனைவியும் பேசும் போது பிடிவாதமாக பேசாமல், விட்டுக் கொடுத்து பேசுங்கள். மனைவியும் தனது கருத்தை தெரிவிக்க வாய்ப்பு அளிக்க தவறாதீர்கள்.
10. மனைவி செய்த சமையல், தோட்ட வேலைகள், வீட்டை அலங்கரிப்பது உள்ளிட்ட பணிகளை பார்த்து குறை கண்டுபிடிக்காதீர்கள். நன்றாக இருப்பதாக கூறிவிட்டு, மாற்றத்தை பணிவாக தெரிவிக்கலாம்.

11.மற்றவர்களின் முன் மனைவியை கேவலமாக பார்ப்பது, பேசுவது, திட்டுவது உள்ளிட்ட செயல்களில் ஈடுபடுவதால், மனைவி தனிமை உணர்ந்து தாய்வீட்டு நினைப்பு வந்துவிடுகின்றது.
12.வீட்டில் இருக்கும் போது மனைவிக்கு சிறு சிறு உதவிகள் செய்வதன் மூலம், இருவருக்கும் இடையே உறவும் பலப்படும், அன்பும் பெருகும். கோபம் இருந்த இடம் தெரியாமல் போகும்
13.மனைவி மீது எப்போதுமே அன்பு செலுத்துங்கள். அது உங்களை நல்ல மனிதர் என்கிற அந்தஸ்தை கொடுப்பதோடு, நீங்கள் கண்ணியமானவராக மதிக்கப்படுவீர்கள்.
மனிதரில் சிறந்தவர் யார்?
1195 – حَدَّثَنَا أَبُو كُرَيْبٍ مُحَمَّدُ بْنُ الْعَلاَءِ حَدَّثَنَا عَبْدَةُ بْنُ سُلَيْمَانَ عَنْ مُحَمَّدِ بْنِ عَمْرٍو حَدَّثَنَا أَبُو سَلَمَةَ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « أَكْمَلُ الْمُؤْمِنِينَ إِيمَانًا أَحْسَنُهُمْ خُلُقًا وَخِيَارُكُمْ خِيَارُكُمْ لِنِسَائِهِمْ خُلُقًا ». قَالَ وَفِى الْبَابِ عَنْ عَائِشَةَ وَابْنِ عَبَّاسٍ. قَالَ أَبُو عِيسَى حَدِيثُ أَبِى هُرَيْرَةَ هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ
“இறை நம்பிக்கை கொண்டவர்களில் முழுமையான இறை நம்பிக்கை கொண்டவர் அவர்களில் நற்குணம் கொண்டவரே! உங்களில் சிறந்தவர் உங்கள் மனைவியரிடம் நற்பண்பால் சிறந்து விளங்குபவரே!” என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூஹுரைரா (ரலி) திர்மிதி 1082
ரஹ்மத் ராஜகுமாரன் 9443446903 , வாட்ஸ் அப் 9486909903
(இத்துடன் பெண்களின் உலகம் தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது)

**இருள் 1**
( தத்துவஞானிகளின் இருள்
)




இருளுக்கு அதற்கே உரிய மகிழ்வு இருக்கிறது. ஆயினும் நாம் ஏன் வெளிச்சத்தை விரும்புகிறோம், நாம் வெளிச்சத்திற்காக ஏன் இத்தனை ஆவல் கொள்கிறோம் ? ஒளிக்கான நமது விருப்பம், நம்முள் வேரோடிப் போயிருக்கும் பயத்தின் அறிகுறியை என்பதை எப்போதாவது எண்ணிப் பார்த்ததுண்டா ? அது பயத்தின் அறிகுறியே.
நாம் அந்த பயத்தைக் கண்டு பயப்படுவதால், நமக்கு ஒளி தேவைப்படுகிறது. மனம் அந்த இருளை கண்டு அஞ்சுகிறது. ஒளிக்காக ஏங்குவது சிறந்த குணம் அல்ல. நம்முடைய தன்னுணர்வில் அந்த பயம் உலாவிக் கொண்டிருக்கிறது என்பதற்கான அறிகுறியே அது. பயப்படும் மனிதனுக்குத் தான் ஒளி தேவைப்படுகிறது.
" (தவிர) அந்த மின்னல் இவர்களின் பார்வைகளைப் பறிக்கப் பார்க்கின்றது. அது இவர்களுக்கு வெளிச்சம் தரும்போதெல்லாம் அ(ந்த வெளிச்சத்)தில் நடக்(க விரும்பு)கிறார்கள். (ஆனால், அம்மின்னல் மறைந்து) அவர்களை இருள் சூழ்ந்து கொண்டால் (வழி தெரியாது திகைத்து) நின்று விடுகிறார்கள்.

இன்னும் அல்லாஹ் விரும்பினால் இவர்களுடைய கேள்விப் புலனையும் பார்வைகளையும் போக்கி விடுவான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் (எவ்விதமும் செய்ய) பேராற்றலுடையவன்." (அல்குர்ஆன் : 2:20)
பயம் இல்லாத மனிதன் இருளை இருள் என்று கூட பார்ப்பதில்லை. இருளைச் சுற்றி இவ்வளவு வேதனையும் அதனுடன் இவ்வளவு போராட்டமும் பயத்தினால்தான் உருவாகியுள்ளன. மனிதன் பயத்தில் இருந்து விடுபட்டு விட்டால், பின் ஒளிக்கான இந்தத் தேடுதலும் மறைந்துவிடும்.
இந்த உலகில் கடவுள் இருள் மயமானவர் எனக்கூறும் மனத்திடம் படைத்தவர்கள் வெகுசிலரே, கிட்டத்தட்ட எல்லோரும் கடவுளை ஒளிவடிவமாகவே பார்க்கின்றனர்.
கடவுள் ஒளியே, அவர் ஒளி வடிவானவர் என்றே பலரும் கூறுகின்றனர். ஆனால் இத்தகையவர்கள் கடவுளை பயத்தினால்தான் நம்புகின்றனர்.கடவுளே ஒளி வடிவாக பார்க்கும் மக்கள் பயந்தாங் கொள்ளிகள். அவர்களால் கடவுளை ஒளிவடிவாக மட்டுமே ஏற்றுக்கொள்ள முடியும். பயப்படும் மனிதனால் இருளை ஏற்றுக்கொள்ள முடியாது.
ஆனால் இறைவன்... "அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான். மேலும் இருள்களையும், ஒளியையும் அவன்தான் உண்டாக்கினான் " (குர்ஆன் : 6:1)
ஆனால் தத்துவஞானி ஓஷோ : "கடவுளை இருள் எனக்கூறும் சிலரும் உள்ளனர். என்னுடைய சொந்த அனுபவம் என்னவென்றால் கடவுள் இருள் வடிவானவரே.
கொஞ்சம் யோசித்துப் பார் !
ஒளிக்கு முடிவு உள்ளது. இருள் முடிவில்லாதது. ஒளியைப் பற்றி நீ உன்னுடைய கற்பனையை எவ்வளவு வேண்டுமானாலும் நீட்டலாம் , ஆனால் இறுதியில் ஒரு எல்லை வந்தே தீரும். பல்வேறு வகைகளில் பல்வேறு விதங்களில் எத்தனை தூரத்திற்கு உன்னுடைய எண்ணத்தைக் கொண்டு சென்றாலும், ஒளிக்கான எல்லை வந்தே தீரும்.
ஆனால் இருளைப்பற்றி யோசித்துப்பார். அதற்கு எல்லை தென்படுகிறதா ? இருளுக்கு எல்லை இருப்பதாக கற்பனை செய்வதே கடினமாக இருக்கும். அதற்கு முடிவே கிடையாது. இருள் எல்லைகள் அற்றது, முடிவற்றது. எல்லைகள் அற்றது, முடிவற்றதுதானே கடவுள் !
மேலும் ஒளி பதட்டம் அளிப்பது, உணரக்கூடியது. இருள் ஓய்வு அளிப்பது .அமைதி அளிப்பது. ஆனால் நாம் பயப்படுவதால், ஒளியை 'வாழ்வு' என்கிறோம். இருளை ' இறப்பு ' என்கிறோம்.
உண்மை என்னவென்றால், வாழ்வு பதட்டம் அளிப்பது இறப்பு தளர்வளிப்பது. பகல் ஓய்வற்றது, இரவு ஓய்வானது.
وَهُوَ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الَّيْلَ لِبَاسًا وَّالنَّوْمَ سُبَاتًا وَّجَعَلَ النَّهَارَ نُشُوْرًا
அவன்தான் உங்களுக்கு இரவைப் போர்வையாகவும், ஓய்வளிக்கக் கூடியதாகவும், பகலை (உங்கள்) நடமாட்டத்திற்காக (பிரகாசமாக)வும் ஆக்கினான்.(குர்ஆன் : 25:47)
ஆனால் இறுதி விடுதலை என்பது நிச்சயமாக இருள் தன்மைதான் என்கிறார்கள் தத்துவஞானிகள் .

## இருள் 2

(கருவறை இருள்)



வாழ்வின் அத்தனை முக்கியமான உண்மைகளும் மர்மங்களும் இருளில்தான் ஒளிந்திருக்கின்றன என்பது தெரியுமா உங்களுக்கு ?
மரங்கள் வெளியே தெரியலாம். ஆனால் அவற்றின் வேர்கள் கீழே ஆழத்தில் இருளில்தான் பரவியிருக்கின்றன. மரத்தின் தண்டு, இலைகள், பழங்கள் இவற்றை பார்க்க முடியும். ஆனால் அவற்றின் வேர்கள் பார்க்க முடியாது ஏனெனில் அவை இருளில்தான் சதா வேலை செய்கின்றன.

மரத்தின் வேர்கள் இருளிலிருந்து வெளிச்சத்திற்கு கொண்டு வந்தால்,மரம் இறந்துவிடும்.ஆகவே முடிவற்ற வாழ்வின் விளையாட்டு இருளில்தான் நிகழ்கிறது.
"பூமியின் (ஆழத்தில்) அடர்ந்த இருளில் (புதைந்து) கிடக்கும் (கடுகு போன்ற சிறிய) வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் அவனுடைய தெளிவான (பதிவுப்) புத்தகத்தில் இல்லாமலில்லை" (குர்ஆன் : 6:59)
அன்னையின் கருவறை இருளில்தான் வாழ்வு பிறக்கிறது. இருளுக்குள் இருந்து பிறப்பு என்னும் கதவு வழியாக வருகிறோம், இறப்பு என்னும் கதவு வழியாக இருளில் மறைந்து போகிறோம்.
" உங்கள் தாய்மார்களின் வயிற்றில், ஒன்றன்பின் ஒன்றாக மூன்று இருள்களுக்குள் வைத்து உங்களை படைக்கின்றான் " (அல்குர்ஆன் : 39:6)
ஆக மரமோ, மனிதனோ, மாடோ இவைகளின் சிருஷ்டிக்கப்படும் ஸ்தலம் இருளாகவே இருக்கிறது. சற்று கவனி , படைப்புலகமே இருள்தான் .
யாரோ வாழ்வைப் பற்றிய ஒரு பாடல் பாடியிருந்தார்.
"வாழ்வு என்பது என்ன ? "
இருள் இன்னும் கடலால் சூழப்பட்ட ஒரு கட்டிடம் இருக்கிறது. அதனால் ஒரு சிறிய விளக்கு ஒளி தருகிறது. ஒரு பறவை இருண்ட வானில் இருந்து பறந்து வந்து, அந்த கட்டிடத்தின் ஒரு ஜன்னல் வழியே உள்ளே வருகிறது.உள்ளே சிறிது நேரம் சிறகடித்து பறந்து விட்டு, மறு ஜன்னல் வழியே வெளியேறுகிறது.
அதுபோல நாம் இருளிலிருந்து உருவாகி வந்து சிறிது நேரம் வாழ்வெனும் வெளிச்சத்தை சுற்றி சிறகடித்து பறந்துவிட்டு மறுபடியும் இருளில் மறைந்து போகிறோம். ஆக இருள் என்பதே நிரந்தர நிதர்சனம்.
இறுதியில் நமக்கு துணையாக இருக்கப்போவது இருளே. நீ இருளை கண்டு அச்சம் கொண்டால், நீ உன்னுடைய கல்லறையில் மிகப் பெரும் சிரமத்தைச் சந்திப்பாய். நீ இருளைக் கண்டு பயந்தால், நீ மரணத்தைச் சந்திக்கும் போது மிகவும் சிரமப்படுவாய் . அப்படியின்றி மரணத்தையும் நேசிக்க கற்றுக் கொள்ள வேண்டும்.
ஒளியை நேசிப்பது மிகவும் சுலபம். யார் ஒளியை விரும்பமால் இருக்க முடியும் ? ஆகவே ஒளியே விரும்புவது பெரிய விஷயம் அல்ல; இருளை நேசி.இருளை அதிகமாக நேசி. நினைவில் கொள், ஒளியை விரும்புவர்கள் இருளை வெறுப்பார்கள்; ஆனால், இருளை நேசிக்கும் யாரும் ஒளியையும் நேசிப்பார்கள். தயவுசெய்து இதை புரிந்து கொள்.

## இருள் 3

இருளுக்குள் ஒளிந்திருக்கும் இருள்
“இப் பிரபஞ்சம் பிறப்பதற்கு முன்னால், அங்கே ஏதோ ஒன்று நேர்த்தியானதாய், வடிவமற்றதாய் இருந்தது. அது அமைதியாய் அசைவற்று வெறுமையாய், மாறாமல், முடிவில்லாமல், எக்காலமும் இருந்தது. இதுவே இப்பிரபஞ்சத்தின் மூலத் தாய்.
வேறு சிறப்பான பெயரில்லை. ஆதலால் நான் இதை தாவோ (மார்க்கம்-வழி) என்று அழைக்கின்றேன்.
காலமும் வெளியும் இருந்ததற்கு முன்னாலும் தாவோ இருக்கிறது. இது இருப்பதற்கும், இல்லாததற்கும் அப்பாலுள்ளது.
இது உண்மை என்று எனக்கு எப்படித் தெரியும்? நான் என்னுள் உற்று நோக்கி காண்கிறேன்”
- சீன தத்துவஞானி லாவோட்ஸ்.

## **இருள் 4**

( இருள் பொருளல்ல )
தருக்க சங்கிரக தீபிகை என்னும் தருக்க நூல் இருள் ஒரு பொருள் என்பதை மறுக்கின்றது.
கரிய வடிவமும்,பரவுதலாகிய தொழிலும், உண்மையில் இருளுக்கில்லை. அவற்றை இருளுடையதாகக் கருதுதல் வெறும் மயக்க உணர்ச்சியேயாகும்.
' இருள் ' வடிவுடைப் பொருளன்று. இருளுக்கு எவ்வடிவமும் கிடையாது. மேலும், ஒளியோடு கூடாத விழிக்கே இருள் விடயமாதலால் (காட்சிப்படலால்) ‘ஒளியின்மையே இருள்’ எனப்படும். அதாவது, ‘ஆலோலத்தின் அபாவமே இருளாகும்’.
வடிவுடைப் பொருள்களைக் கண் காண்பதற்குப் புறத்து ஒளியே காரணம். ஆதலால், ஞாயிறு, நெருப்பு முதலியவற்றின் இன்மையே இருள். (தேயுப் பொதுமையின் அபாவமே அந்தகாரம்). ஆதலால், ‘இருள் ஒரு பொருளன்று’ என்பதே தீபிகையாரின் முடிபு.
ஆகாயம், வடிவம் இல்லாதது. இருள் வடிவம் உடையது. ஆதலால் இருள் ஆகாயத்தில் அடங்குவதில்லை.
நீர், குளிர்ச்சி உடையது. வடிவம் இல்லாதது. ஆனால் இருள் குளிர்ச்சியுடையதன்று; கருமையான வடிவம் உடையது. ஆதலின் இருள் நீரில் அடங்குவதில்லை.
இருளுக்கு வெம்மை இன்மையால், வெம்மைத்தன்மையுடைய தீயில் இருள் அடங்குவதில்லை.
வாயு வடிவமற்றது. இடையறாது இயங்குவது. இருள் கரு வடிவமுடையது. இடையறாது இயங்குதல் இல்லாதது. ஆதலால் இருள் வாயுவில் அடங்குதலில்லை.
மண் நாற்றம் உடையது. உற்றறியும் நிலையினது. நாற்றம் உடைகை, உற்றறியும் நிலைமை ஆகிய இரண்டு தன்மையும் இருளுக்கு இல்லை. ஆதலால் இருள் மண்ணில் அடங்குதல் இல்லை.

காலம், திக்கு, ஆன்மா, மனம் என்னும் நான்கினும் இருள் அடங்கும் பொருளன்று என்பது வெளிப்படை. இவ்வாறு ஒன்பது திரவியங்களுள் இருள் ஒன்றிலும் அடங்குவதில்லை. எனவே, இருள் இவ்வொன்பதில் சேராத வஸ்து ஆனால் பொருள் அல்ல எனக் கருதுகின்றனர்,சிலர்.

## இருள் 5

(அமா எனும் இருள் )



அல்லாஹ் இதற்கு முன்பு எங்கே இருந்தான் ?
எப்படி இருந்தான் ?
அமா நுக்தா
குந்து கன்ஸன் மஹ்பிய்யன்
வ அஹ் பப்து அன்வு உறப
இதன் பொருள் :
" நான் மறைந்த பொக்கிஷமாய் இருந்தேன்
நான் அறியப்படுவதற்காக பிரியமானேன் " (ஹதீது குத்ஸி)
நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு அஸ்ஹாபி கேட்டார்கள்
" யா ரசூலுல்லாஹ் ! அல்லாஹ் கல்குகளை (படைப்புகளை) படைக்கும் முன்னர் எங்கே இருந்தான் ? என்று
அதற்கு பெருமானார் (ஸல்) அவர்கள் சொன்ன பதில் :
'" மர்த்தபத்துல் அமா " என்று
அல்லாஹூ தஆலா என்னை மர்தபத்துல் அமா என்கிற நுக்தாவில் இருந்து, என்னை ரசூலாக அனுப்பியிருக்கிறான்
என்பதாக, அந்த அமா எனும் இருளில் இலங்கும் நுக்தாவுக்கு உஜூபு – தன்பு – நுக்தா – ஆதிமூலவித்து – தாத்து என்றும் பெயர்கள் சூடடப்பட்டிருக்கிறது.
உஜூதே முத்லக் (சர்வமும் பொதிந்தது) உடைய நிழல் என்று சதுர்பூதங்களால் இவற்றுக்கு அழிவில்லை என்றும், இன்ஸானிலும் உலகில் உள்ள ஒவ்வொரு பொருள்களிலும் இதன் உள்ளமை இருக்கிறதென்றும் சொல்லபடுகிறது.
கபுரில் இருந்து நம்மை எழுப்பி வைப்பதும்,
மஹ்ஷரில் கேள்விகணக்கு கேட்பதும், உதிப்பு நாட்டம் ஆகியவற்றை உண்டாக்குவதும் இந்த நுக்தாவே.
உலகில் உள்ள எல்லோரின் ஹயாத்தும் இதிலிருந்து தான் ஆனது,
உலகில் உள்ள எல்லாவற்றிலும் உஜூதாய் இருந்து , ஹயாத்து,அறிவு,சித்தம்,தத்துவம்,கேள்வி,பார்வை,பேச்சு இவைகளை உண்டாக்குவதும் இந்த நுக்தா தான்.
இது நமது முதுகந்தண்டுக்கு கீழே பலதுல்ஹை என்ற லாம், அலிபுடைய உருவத்தின் உள்பக்கமாய், குண்டிலினியாய், முச்சுடராய் ' ஸபா ' என்ற மைதானமாய் அந்த அமா நுக்தா இருக்கிறது.
இந்த நுக்தாவுக்கு குதரத் என்ற சக்தி தத்துவம் உண்டாகி இருக்கிறது.இந்த நுக்தா எல்லாவற்றிலும் இருந்து எல்லாவற்றையும் பார்க்கிறது.
மேலும் எல்லா பார்வைகளும் அதற்குடையதாய் இருக்கிறது.
இது தான் நாடவைக்கிறது.

இது தான் நாடுகிறது.
தேவையாகிறதும் இதுவே.
இச்சையானதும் இதுவே.
உதிப்பதும் இதுவே.
இதன் சிபாத்துகள் தாத்தின் சிபாத்துக்களாம்.
இதுவே நமக்கும் மற்றவைக்கும் அல்லாஹ்வின் தாத்தாய் இருக்கும்.
அந்த தாத்து என்கிற நுக்தாவை பார்க்க சுஹுது(தரிசனம்) கிடைக்கும்
என்று வஹியுடைய வார்த்தைகள் கூறுகிறது.
இந்த நுக்தாவை அறிவதே தன்னை அறிதல் எனப்படும்,
இந்த நுக்தாவை எழுப்பி நாபி, தொப்புள், இதயம்,கழுத்து, நடுபுருவம் வழியாக உச்சந்தலைக்கு
கொண்டுவந்தால், அல்லாஹ் என்ற வெட்டவெளியில் கலந்து ஐக்கியமாகி லிஹாவாகிவிடலாம்.
இது தான் மோட்சம்.
வீடுபேறு,பூரண சாந்தி என்று அழைக்கப்படும்.
இந்த நுக்தாவை எழுப்ப சரக்கலை பயன்படுத்தப்படுகிறது.
இது மூச்சு பயிற்சியாகும்.
இஸ்லாத்தில் நான்கு நிலைகளிலும் அதாவது ஷரியத்,தரிகத்,ஹகீகத்,மஹ்ரிபத்
மகாம்களில் வாசியோகத்தை அல்லது சரக்கலையை பின்பற்றும் வழிமுறைகளை பார்ப்போம்.
ஷரியத்தில் திக்றுவானது திக்றுஜல்லியாகவும் மன்ஸில் நாசூத்தாகவும் மகாம் மூக்கு நுனியாகவும் நேரம் சுபுகாகவும் மூச்சு லாஇலாஹ இல்லல்லாஹ் என்றும் இருக்கும்.
இதில் வெளியேறும் மூச்சில் லாஇலாஹ என்றும் உள்ளேறும் மூச்சில் இல்லல்லாஹு என்றும் ஓர்மை இருக்கவேண்டும்.
தரிக்கத்தில் வாசியானது திக்று திக்றுகல்பியாகவும் மன்ஸில் மலகூத்தாகவும் மகாம் இருபுருவமாகவும் நேரம் இசாவுக்கு பிறகாகவும் மூச்சு இல்லல்லாஹு என்றுமிருக்கும்.
இதில் வெளியேறும் மூச்சிலும் உள்ளேறும் மூச்சிலும் இல்லல்லாஹ் என்றும் இருக்கவேண்டும்.
ஹகீகத்தில் வாசியானது திக்று திக்றுரூஹியாகவும் மன்ஸில் உள்நாக்காகவும் நேரம் விரும்பபட்டும் மூச்சு ஹு அல்லாஹ் என்றிருக்கவேண்டும்.
இதில் மூச்சானது வெளியேறும் போது அல்லாஹ் எனவும் உள்ளேறும் மூச்சானது ஹூ எனவும் இருக்கவேண்டும்.
மஹ்ரிபத்தில் வாசியானது திக்று திக்ர் சிர்ரியாகவும் மன்ஸில் லாகூத்தாகவும் மகாம் நடுநெற்றியாகமும் நேரம் சுபுகுக்கு முன்பாகவும் மூச்சு யாஹூ எனவும் இருக்கும் இதில் வெளியேறும் மூச்சில் யா என்றும் உள்ளேறும் மூச்சில் ஹூ என்றும் இருக்கவேண்டும்.
சரக்கலையை முறைப்படி அறிந்த செய்குமார்களின் துணையோடு பயிற்சி செய்யவும்.
சிருஷ்டிகள் எல்லாம் வணங்கும்.ஐந்து நிறங்களும் நான்கு சுவைகளும் ஐந்து அட்சரங்களும் ஐந்து றூகுகளும் உதிக்கும்.
இந்த பதிவு செஹ்கு முரிது கல்வியியல் உள்ளவர்களுக்கு மட்டும் பயன்படுமே அல்லாது மற்றவர்களுக்கு இது விளங்காது. Vaitiyar Malick பதிவிலிருந்து ர.ரா

## இருள் 6

( அமாவுடைய நிலை )
நீங்கள் இறந்த நிலையில் இருந்தீர்கள். இது தான் அமாவுடைய நிலை, ஒன்றுமே இல்லையென்றிருந்த நிலை, ஒன்றுமே இல்லையானால் ஏதாவது இருக்கும் என்பது தத்துவார்த்தம். அதுவே *பரிபூரண* நிலை. அந்த அமாவுடைய நிலையில் நாமிருந்தோம். இதனை நாயகம் ஸல்லள்ளாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கீழ்க்கண்டவாறு கூறினார்கள்.
(இன்ஸான் காமில் பக்கம் 33) அதற்குமேலும் ஆகாயமில்லை அதற்குக் கீழும் ஆகாயமில்லை. அதாவது ஹக்குமில்லை. கல்கும் இல்லை. அமாவாகிறது அஹதிய்யத்துக்கு எடுத்துக் காட்டாய் உள்ளது.
நூல்: தர்ஜூமதுல் குர்ஆன் மஅத்
தஃப்ஸீரி வத் தப்ஸீர்.
சங்கைமிகு குத்புஸ்ஸமான், ஷம்ஸூல் வுஜூத் ஜமாலிய்யா அஸ்ஸய்யித் கலீல் அவ்ன் அல்ஹஸனிய்யுல் ஹாஷிமிய் மௌலானா நாயகம் அவர்கள் Vaitiyar Malick பதிவிலிருந்து ர.ரா

## இருள் 7

(இருளிலிருந்து வெளியான ஒளி)
அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவதாக என்னுடைய பேரொளியாகும்
அப்பேரொளியிலிருந்துதான் இறைவன் தன் படைப்புகள் அத்தனையும் படைத்தான்

எனவேதான் "லவ்லாக லமா ஹலக்துல் அஃப்லாக்
நீர் இல்லையாயின் வானங்களைப் படைத்திருக்கமாட்டேன்"
"நான் இறைவனுடைய ஒரு தனிப்பட்ட நேரத்தில் இருந்தேன். அப்பொழுது எந்த ஒருவரும் வானவரும், உலகில் அனுப்பட்ட எந்த ஒரு நபியும் படைக்கப்பட்டிருக்கவில்லை - ஹதீஸ் குத்ஸி
பைபிள் -யோவான் (1 முதல்10 ) வரை உள்ள வசனங்கள்
ஆதியிலே வார்த்தை இருந்தது.
அந்த வார்த்தை தேவனிடத்தில இருந்தது.
அந்த வார்த்தை தேவனாயிருந்தது.
அவர் ஆதியிலே தேவனோடு இருந்தார்.
சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று.
உண்டானதொன்றும் அவரேலேயல்லாமல் உண்டாகவில்லை.
அவருக்குள் ஜீவன் இருந்தது.
அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாய் இருந்தது .
அந்த ஒளி இருளிலே பிரகாசிக்கிறது
இருளானது அதைப்பற்றிக் கொள்ளவில்லை .
உலகத்திலே வந்த எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளி.
அவர் உலகத்தில் இருந்தார்
உலகம் அவர் மூலமாய் உண்டாயிற்று.
உலகமோ அவரை அறியவில்லை.

## இருள் 8

( ஒளி )
Mohamed Farook : "அல்லாஹு நூருஸ்ஸமாவாத்தி வல் அர்ளு அல்லாஹ் வானங்கள் பூமியின் ஒளியாக இருக்கின்றான் என்று சூரா அல்நூரின் விளக்கத்தை விளக்குங்களேன்...
“அல்லாஹ்வும் நூர். அண்ணலாரும் நூர்.”
அல்லாஹ் வானங்கள் பூமிகளின் நூர் ஆகும். (சூரத்துன் நூர் 35ம் வசனம்.)
பூமி அதன் ரப்பின் நூரினால் பிரகாசிக்கும். (சூரத்துஸ் ஸுமர் வசனம் 69 (39:69 )
நீ வானம் பூமிகளின் நூராக இருக்கின்றாய். (புகாரி)
“நூருன்” என்ற அரப் வார்த்தைக்கு பிரகாசம், ஒளி, வெளிச்சம் என அதற்குப் பொருள்கள் கூறப்படுவதுபோன்று படைத்தல், பராமரித்தல், நீதி செலுத்துதல், நேர்வழி காட்டுதல் போன்ற கருத்துக்களும் “நூருன்” என்ற வார்த்தைக்கு விரிவுரையாக சொல்லப்படுகிறது.
வெளிச்சமானது புற வெளிச்சம் அக வெளிச்சம் என இரு வகை வெளிச்சங்கள் உண்டு. புற வெளிச்சம் இல்லாமல் மனிதன் எவ்வாறு அவனது சடவுலக வாழ்கையில் வெற்றியினை அடைந்துகொள்ள முடியாதிருக்கிறதோ அவ்வாறே அக வெளிச்சம் பெறாமல் ஆத்மீக வெற்றியினை அவனால் அடைந்துகொள்ள முடியாதுல்லது.
இவ்விரு வெளிச்சங்களினையும் அல்லாஹ்தான் வெளிப்படுத்தி வைக்கின்றான். என்றாலும்கூட அவற்றினை வஸீலாவின் ஊடாக வெளிப்படுத்தி வைத்தானே தவிர நேரடியாக அவன் அவற்றினை வெளிப்படுத்தி வைக்கவில்லை.

மனித சடவுலக வாழ்கையின் வெற்றிக்குத் தேவையான புற வெளிச்சங்களை பெற்றுக்கொள்வதற்கு சூரியன், சந்திரன், நட்சத்திரங்களை அதற்கான வஸீலாவாக அல்லாஹ் மனிதனுக்காகப் படைத்திருப்பதுபோன்று மனித ஆத்மீக வாழ்க்கையின் வெற்றிக்குத் தேவையான அக பிரகாசங்களைப் பெற்றுக்கொள்வதற்காக அல்குர்ஆனையும் அஸ்சுன்னாவினையும் அல்லாஹ் வஸீலாவாக ஏற்படுத்தித் தந்துள்ளான்.
சூரியனும் சந்திரனும் நட்சத்திரங்களும் புலனுக்குப் புலப்படுகின்ற வெளிச்சங்களை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாலும், ஒவ்வொன்றும் வெவ்வேறுபட்ட தன்மைகளைக் கொண்டிருக்கிறதே தவிர மூன்றினதும் யதார்த்தம் ஒன்றென்று எண்ணிவிடக்கூடாது.
சந்திரனும் நட்சத்திரங்களும் சூரியனின் ஒளியினை உள்வாங்கிக்கொண்ட பின்னரே அவ்விரண்டும் ஒளியினை வெளிப்படுத்துகிறது. இவ்வாறே அக வெளிச்சத்தினை வெளிப்படுத்தி வைக்கும் சாதனங்களான அல்குர்ஆனும் அல் ஹதீதும் அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களினூடாக வெளிப்படும் பிரகாசங்களாக இருந்துகொண்டிருக்கிறது.
சூரியன் ஊடாக சந்திரனும் நச்சத்திரங்களும் ஒளியினைப் பெற்றுக்கொண்டாலும் சூரியனுக்குப் பிரகாசம் வழங்கியவன் அல்லாஹ்வாகும். அவ்வாறே ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களின் ஊடாக அல்குர்ஆனும் அல்ஹதீதும் ஒளியினை வெளிப்படுத்திக்கொண்டிருந்தாலும் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களுக்கு பிரகாசம் வழங்குபவன் அல்லாஹ் ஒருவனாகும்.
மனிதனுக்குத் தேவையான புற வெளிச்சங்களை அல்லாஹ் சூரிய சந்திரனூடாக வெளிப்படுத்தி வைத்த பிறகும் அவ்விரு பொருட்களையும் பிரகாசமிக்கவைகளென்று சொல்லமுடியுமாக இருந்தால் அம்மனிதனுக்குத் தேவையான அக வெளிச்சங்களை வெளிப்படுத்தி வைப்பதற்கு அல்லாஹ்வினால் தெரிவு செய்யப்பட்ட

செம்மல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களை பிரகாசமிக்கவர்கள் என்று பிரச்சாரம் பண்ணுவதில் என்ன பிரச்சினை இருக்கிறது?
எனவே அல்லாஹ்வும் நூர். சந்திரனும் நூர். அல்லாஹ்வும் நூர். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களும் நூராகும். அல்லாஹ்வுக்கு உபயோகிக்கப்படுகின்ற நூர் என்ற வார்த்தையினை சந்திரனுக்கு உபயோகிக்கின்றபோது சங்கடமும் சந்தேகமும் எவ்வாறு உருவாகவில்லையோ அவ்வாறே அல்லாஹ்வுக்கு உபயோகம் செய்யப்படுகின்ற "நூர்" என்ற வார்த்தையினை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வசல்லம் அவர்களுக்கு உபயோகிப்பதிலும் எவ்விதப் பிரச்சினையும் ஏற்பட்டுவிடப்போவதில்லை.
நூருன் என்பது அல்லாஹ்வின் திரு நாமங்களில் ஒன்றாக இருக்கிறது. அவ்வாறே அவனது ஸிஃபத்தாகவும் இருந்துகொண்டிருக்கிறது. எனவே அவனது மார்க்கமும் நூர். அவனது தூதரும் நூர். அவனது இல்லமும் நூர். அந்த நூரினால் விசுவாசிகளின் உள்ளங்கள் பிரகாசம் பெறுகிறது. அந்தப் பிரகாசம் விசுவாசிகளின் நாவுகளிலும் முகங்களிலும் வெளிப்பட்டுக்கொண்டிருக்கும் என இப்னுல் கையின் என்ற அறிஞர் "ஷிபாஉல் அலீல்" என்ற நூலில் பதிவு செய்துள்ளார்.
_ Vaitiyar Malick

## இருள் 9

குண் ஹூ தாத்-திலே ரகசியப் பொருளே - லைஸ க மித்லிஹி ஷை-ஆனவனே
கமாலுல் ஆலம் ஸிற்-றாணதிலே - அல்லாஹூ - ஹூவே நீ அல்லாஹ் -
----அல்லாஹ் தாத்-தே ஹூ அல்லாஹ்
அல்லஹூ - ஹூ - ஹூ - ஹூவே நீ அல்லாஹ் - அல்லாஹ் தாத்-தே ஹூ அல்லாஹ்
மர்த்தபதான அமா-வெணும் இருளில் - கர்த்தன் தனை வெளியாக்கிட நினைத்து
ஒருத்தனாய் இருந்தொரு ஒளிவினை படைத்து - நூறு முஹம்மது என்றதை அழைத்து
அஹ்மது என் மள்ஹரு என்றுரைத்து - மீமினை வைத்தான் அஹதுக்கிடையிலே
தன்னை வெளியிட தநzzஅலுல் தங்கி - குண் என்ற வாக்கியம் கடல் அலை பொங்கி
மண்ணையும் விண்ணையும் மழைக்கடல் முழுவதும்
சந்திரன் சூரியன் ஆலங்கள் அனைத்தும்
குள்ளு ஷையின் மின் நூரீ எனவே - சொல்ல வைத்தான் நபி நாதரின் நாவிலே
நூறு முஹம்மதை இறையவன் பார்த்து - நான் யார் என்றொரு கேள்வி உண்டாக்க
நூரது வெட்கமாய் ஸஜ்தா செய்து - கூறிடும் ரப்பே அஹதோண் நீயே
ஈடில்லாண் மகிழ்ந்துரைத்தான் இதை பார்த்து - அஜ்மல் உஜுதாய் இருப்பாய் புவியில்
அப்தென்ற நூறுக்கு தொழுகையை விதித்து - தொழுகையின் ரூபத்தில் அஹ்மதை படைத்தான்
அலிஃப் அது நிலை என்றும் - ஹே ருகூ வென்றும் - மீம் ஸஜ்தா வென - (D)தால் இருப்பென்-ட்றும்
ஆலத்தின் அற்புத ரகசியம் எல்லாம் - அமைத்தான் அஹ்ம-தின் தப்ஸீர் அதிலே
லவ்லாக லமா கலக்துள் அப்லாக் - அவ்வல் ஆதம் ஓதின வாக்கு
செவ்வையாய் அஹ்மதில் மீம் அதை நீக்கு - பிந்தின ரகசியம் தன்னையே நோக்கு
இவ்வித ஆஆழம் படைத்தான் ரப்பு - ஏக பராபரன் குத்ரத்ததிலே
லாஹூதில் இருந்து ஜபரூ-தின் ஆலம் - ஜப்ரூதில் சமைந்த மல-கூத்தின் ஆலம்
ஜம்ஹூதில் இருந்தால் லம் அருவாஹாய் - ஆழம் மிதாலால் லம் அஜ்ஸாமை
ஆதத்தை படைத்தான் - ஆலம் இன்ஸானாய்- நூறு முஹம்மதை வைத்தான் அதிலே

## இருள் 10

[24/02, 11:36 am] Vaithiyar Malik: அமாவுடைய நிலை !!!
இருட்டு நிலை...
குருட்டு நிலை...
ஏதும் இல்லாத நிலை...
ஏகாந்த மான நிலை...
இரவு பகல் என்று ஒரு நிலையும் இல்லாத நிலை...
இருளும் இல்லாத நிலை...
ஒலியும்
இல்லாத நிலை...
வானம் இல்லாத நிலை...
இந்த வையம் இல்லாத நிலை...
அண்டசராசரங்கள் அணைத்தும் இல்லாத நிலை....
அர்ஷ் குருஷ்ஷோடு
அந்த அமரர்கள் இல்லாத நிலை...
பஞ்சபூதங்களும் ரூஹூம் இல்லாத நிலை....

ஹூ வான ஹூ...
ஹூ வுடனே மீம்
மீமுடனே தால்...
காப்போடு நூன்...
அதுதான்
குன் ஹூ தாத் எனும்
அமாவுடைய நிலை !!!

## இருள் 11



அமாவில் உள்ள ஹூ வைப் பற்றி தர்க்கலை தவ ஞானி தமிழ் மொழியின் ஞான குழந்தை பீர்முகம்மது அப்பா வலியுல்லாஹ் அவர்களின் ஆக்கத்தில் இருந்து...
ஹூ ஹூ ஹூ அல்லாஹூ
"எட்டு எழுத்தாக ......
மட்டில் அடங்காத ஓம் எனும் ஓங்கார வட்டமாம் சிங்கா "
:-தக்கலை பீர் முஹம்மது வலியுல்லாஹ்
பீர் முஹம்மது அப்பாவின் ஞானப் புகழ்ச்சியில் எழுத்து என்னும் சொல் பத்து பாடல்களில் பகரப்படக் காண்கிறோம்.
தேடும் பொருளைஎன் சிந்தையுள் காட்ட நற்றேசிகனை
ஏடும் எழுத்தும் அறியாதுகாண் எழுத்தாணிக் குள்ளோர்
வீடும் விளக்கும் நல் வேந்தனும் உண்டதைக் காண்பதற்குன்
ஆடும் கண்ணாடிப் படலத்தை நீக்கிவி டாண்டவனே
(ஞா.பு:318)
என்பது அப்பத்திலொரு பாடல்வரிகள்.
இங்கு நற்றேசிகனாம் இறைவனிடம் தான் தேடும் பொருளை, தன் சிந்தையுள் நின்றிடும் அவனது நீர்மையை ஏட்டிலும் எழுத்திலும் பகர்ந்திட இயலாது.
எழுத்தாணிக்குள் சுடரொளியாய் இலங்கிடும் அவ்வல்லோனைக் கண்டுணர்ந்து ஏட்டில் எழுதிப் பகர்ந்திட இயலாமல் தம் விழித்திரைகள் மாய வலையால் மறைபடுகின்றன.
அந்த மாயத்திரையை மறைய வைத்து இறைவா உன்னைக் கண்டுணர்ந்து பகர்ந்திட திருவருள் புரிந்திட வேண்டும் என்று வேண்டுகிறார் அருள் ஞானி தக்கலை தவஞானி பீர்முகம்மது வலியுல்லாஹ் அவர்கள்.
பலவும் பல விபரமொடுனதடி
பரவும்திரு உளமுறு முயரொளி
பழகும்மிரு தயமதி லுறுதி தரும்
நலவுங் கதி நெறி மறை நீதியும்
நடுவும் அருள் பெருகும்ஈ மானோடு
நாளும் நழுவாதெமை யாழ்பவனே
இலௌஹின்பல கையில் உந்துதவிகோ
டெழுதும்கலமுற் றெழுத்திலோ ரெழுத்தென்
னளவிரங்க நீ விடையருளென்
றுலகிலுழன்றடியேன் நின்னோடிரந்
தோதும் புகழ்ச்சியையுமீ டேற்றொரு
காலந்துயி லாதவனே கனியே (ஞா.பு: 320)

என்று ஞானப்புகழ்ச்சியின் மற்றொரு பாடலில் எழுத்து முன்வைக்கப்படுகிறது
இலௌஹுல் மஹ்பூல் எனப்படும் பாதுகாக்கப்பட்ட இறை பட்டாங்கில்
'அல் கலம் ,அல் அஹ் லா' என்னும் மகோன்னதமான ஏற்றமிகு எழுத்தாணியால் படைப்பினங்களின் இரகசியங்கள் ஆதியில் இறை பொருத்தத்தால் பதிவுசெய்யப்பட்டுள்ளன.
இப்பதிவு படைப்பையும் படைத்தவனையும் பகுத்தறியும் பதிவு. ஞானத்தின் ஊற்றுக்கண்ணாகிய அவெழுத்தாணியின் பதிவில் ஒரேழுத்தேனையும் முற்றாய் உற்றுணரும் பெற்றியினைத் தமக்குத் தந்தருள வேண்டுகின்ற எழுத்தினை இவ்வரிகளில் காணலாம்.
எழுத்தினைப் பகரும் ஞானப்புகழ்ச்சியின் இன்னொரு பாடல்,
எவர்க்கும் மனத்தில் அடங்காத எழுத்தின் நிறம் காரிருளின் முன்
சிவக்கும் கருக்கும் பசிந்துனக்குட் சேர்ந்து வெளுத்து மஞ்சணித்து
அவணில் அஹதென் றவ்வலில்நின் றாகி ரஹ்மதான வுன்னை
இவணில் அறியக் கிருபை செய்வாய் வேந்தே மேலோர் சிகா மணியே. (ஞா.பு: 365)
ஆதியில் இறைவன் அலிபென்னும் ஓரெழுத்தை உருவாக்கி அந்தமும் முடிவுமில்லா அலகிலாச் சோதியாய் இலங்கி அண்ட சராசரங்களைப் படைத்துவக்கும் தெய்வீக ஆனந்த இரகசியம் இவ்வரிகளில் எழுதப்படுகின்றது.
எவர்க்கும் தீனென அலிபு மூன்றிலங் கோரேழுத்தி லெவையுமாய்விண்
ணவர்ககுந்தா னறியாமல் ஒளித்தஹுமதோ டருளும் அருமையோனே
துவக்கந்தா னில்லையென உற்றடியேன் மண்ணில் தொழுதுனைக் கேட்பேனத்
தவக்கந்தா னகற்றியுயர் பதவிதரு வாயெவர்க்கும் தலீலுள்ளோனே
(ஞா.பு: 373)
இவ்வரிகளில் ஆதி எழுத்தாகிய அலிபின் தத்துவம் விரிக்கப்படுகிறது. ஞானிகள் இவ்வெழுத்துக்கு ஏராளமாய்ப் பொருள் விளக்கங்கள் தந்துள்ளனர்.
ஏகத்துவக் குறியீடு, இறை இருப்பின் தொடர்பெழுத்து, தொடக்கத்தின் குறியீடு, ஓர்மையின் அரியணை என்று பற்பல சூக்கும இரகசியங்கள் நிறைந்த எழுத்து அலிபு.
இவ்வெழுத்து துவக்கத்தின் இரகசியங்களை உள்ளடக்கியது. அவ்விரகசியப் பொருளினைச் சற்றேனும் அறியத் தாகமுற்றிருக்கும் தமக்கு தயவு செய்தருள்க என்பதாக இவ்வரிகளில் பகரப்படுகிறது.
எழுத்தினைக் குறிக்கும் ஞானப்புகழ்ச்சியின் இன்னொரு பாடல்,
அல்லா வெனுமெழுத் தெங்குதித்தேதில் அடைந்ததெனும்
சொல்லா மறைபடித் தென்பயனாம் சூலருஷைச் சுற்றியே
வல்லான் மணி மந்திர மீன்றுவந்த மலுகரெனும்
நல்லா தரவீந்த் தருள்வாய் எமக்கென்றும் நாயகனே (ஞா.பு:388)
மறைகளிலெல்லாம் மறைத்து நிற்கும் மணிமந்திரம் அல்லாஹ் .
மாமறைக்குள் தேடி அம்மணி மந்திரத்தின் மாட்சிமையைத் தெரிந்துணர்ந்திடவும் மலுஹர் என்னும் அல்லாஹ்வின் வெளிரங்கமான மாண்பினை அறிந்திடும் ஆற்றலைத் தந்தருள் புரியவும் வேண்டுகின்ற வரிகள் இவை.
நாளும் வன்னி ஞானம் நல்கி நவின்றவர்க் கைம்புலனுமாய்
மீளும்மூலக் குகையிலே முக்கோணுக்குள்ள அறிவு நீர்
கூழும் நெய்யும் கரைத்துக் காய்ச்சிக் குறுக்கி வார்த்தோர் எழுத்தையீந் தாளும் நந்தியருளல்லாமல்
ஆருண்டெனக்குன் தலீலல்லால் (ஞா.பு:430)
இவை எழுத்தினைப் பதிவு செய்யும் ஞானப் புகழ்ச்சியின் இன்னொரு பாடல் வரிகள்.
ஞான மெய்யறிவு பெற்று புலனொடுக்கி மூலக் குகை இதயமாம் கல்பின் முக்கோணில் அறிவு நீரினை நிரப்பி இறை சிந்தனையென்னும் கூழை நாட்டமெனும் நெய்யில்கரைத்துக் காய்ச்சி அதனை ஒரெழுத்தாய் குறுக்கி அருள்புரிவோன் உனையன்றி வேறு எவர் என்று வினவும் எழுத்து இவ்வரிகளில் தோய்ந்து நிற்கக் காண்கிறோம்.
பேயோடொளி சீனு முயர் மீமோடு லாமலிபும்
ஹேயோடோளி றேநூனுயர் ஹேயொன்ப தெழுத்தும்
ஓயாதிசுமுல் அஃலமென் றுனதன்புறு நாமத்
தாயும் பொருளே நீயெமை ஆட்கொண் டருள்வாயே (ஞா.பு. 435)
இவ்வரிகளில் இஸ்முல் அஃ லமென்னும் மந்திரச் சொல்லால் இனங்கண்டு ' பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா நிர்ரஹீம்' என்னும் அவ்வரிகளை எழுதி அதன் சிறப்பினைப் பேசுகிறார் அருளாளர் பீர் முஹம்மது அப்பா வலியுல்லாஹ் அவர்கள்.
அவ்வெழுத்தாய் அவ்விலடங்கா துடந்தையுமாய்
உவ்வெழுத்தில் ஓங்கிநின்ற உத்தமனே (ஞா.பு: 503)
இவ்வரிகளில் அவ்வெழுத்து,
உவ்வெழுத்து எனப் பீர் முஹம்மது அப்பா மொழிவது அறபெழுத்தாகிய அகமியப் பொருள் செறிந்த அலிபையும் , ஹூவையும் எனக் கொள்ளலாம்.
ஹூ என்ற எழுத்து அல்லாஹ்வைக் குறிப்பது. சூபி ஞானப் பெரியார்கள் ஹூ என மொழிந்து தியானிப்பதை விதந்து பேசியுள்ளார்கள். பீர் முஹம்மது அப்பாவின் பிஸ்மில் குறம் :
ஹூவாகும் ஹூவும் நினைவாகும்

ஹூவாகும் மூச்சதுவும் ஹூவே குத்தூசு
ஹூவே குத்தூசியது ஹூவுமது அல்லா
ஹூவுக்குள்ளே குடிகொண்டு தாமிருப்ப தாமே.
(பிஸ்மில் குறம்: கலிமா விவரம் :18)
என்று ஹூவின் ரகசியத்தைப் பேசக் காண்கிறோம்.
எண்ணும் எழுத்தில் ஒளியுருவாய் எவ்வுயிர்க்கும்
மன்னன் சிவமயமென் றாள்பவனே
(ஞா.பு: 587)
என்னும் வரிகளில் எழுத்தில் இறைவன் இலங்குகின்ற சூக்குமம் பேசப்படக் காண்கிறோம்.
இவ்வாறாய் எழுத்து ஞானப்புகழ்ச்சியின் பல பாடல் வரிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளமை காண்கிறோம்.
சங்கையான சையதுனா அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் அப்படிதான் நுக்கத்தாவை அறியவேண்டும் என்பதை சொல்கிறார்கள் .
இன்னும் குதுபே அக்தாபுகளும் ,இப்படிதான் சொல்லி இருக்கிறார்கள் , இந்த நோக்தாவை இதோ மகான்கள் சொல்லுவதை கேளுங்கள்
:- காபகவ்சைனீ , மகாமம் மஹ்மூத , நடுநிலை , ஓங்கார வட்டம் , கரு , சுழிமுனை , இப்படியாக பல பெயர்கள் இந்த நோக்தாவிக்கு பெயர் உண்டு .
கண்மணி நாயகம் சல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள் இன்சானுக்குள்ளே எங்கு எங்கு இரத்தம் ஓடுகிறதோ அங்கு எல்லாம் ஷைத்தான் இருக்கிறான் , ஆனால் இன்சானுகுள்ளே நோக்தாவில் மட்டும் ரத்தம் ஓடவில்லை !!!
இதைத்தான் அல்லாஹுவும் சூரா நூரில் சைகனையாக கூறி உள்ளான்
[ 24;35 ]
இதைதான் ஒரு மகான் :- " சுத்த திருவடியில் சொக்கி இருந்து அருள் பெறுமுன் செத்து இறந்து போனால் என் செய்வேன் நிராமயமே "!!!
என்று கூறி உள்ளார்கள்
ஓங்காரம் வட்டம்
முக்கோணம் சக்கோணம்
அரு கோணம் உள்ளே......
ஆங்காரம் கொண்டெழுந்த
அலிபான அச்சறம் நுக்கத்து முண்டாம்......
மங்காத தீபம் மனோன்மணியே......
என் மனதில் கண்ணே......
நீங்காதிருப்பாய் நிணைவோடு என் தவநிலையில்......
தூங்காமல் தூங்கி சுகம் அகம் பெற்றிருக்க
துய்யோன் சமுகத்திற்க்கு துணையாய் எழுத்து வருவீர்......
முஹையத்தீன் ஆண்டவர்களே
என்று
புலவர் அறங்குடி A.முஹம்மது காசிம்
மேற்கண்ட ஞானக் கவிதையின் பொருள் விளங்குவதற்கு செய்கு- முரீது ஞானப்பயிற்சி வேண்டும்
தகவல் :- இறை அருள் வைத்தியர் மாலிக்

## இருள் 12

அமா இருளில் இருந்து அல்லாஹ்....



# இறைவன் என்பவன் தனக்கு தானாய் தன்னைக் கொண்டே ( வேறொன்றைக் கொண்டு உண்டாகாமல்) உண்டாகி நிலைத்திருப்பவன் !!!
சிருஷ்டி என்பது (தன்னை கொண்டு உண்டாகாமல் ) அல்லாஹ்வைக் கொண்டு உண்டானவை....
அல்லாஹ்வுக்கு சிருஷ்டிகள் வேறு என்று கருதும்போது சிருஷ்டி ஒவ்வொன்றும் தனித்தனி சுயமான வுஜூதை உடையதென்றும், அல்லாஹ்வைப் போன்ற எத்தனையோ வுஜூதுகளும், தாத்துகளும் உண்டு என்ற அபத்தமான, தௌஹீதுக்கு முரணான கருத்தை இவன் அறியாமலேயே ஏற்க வேண்டி ஏற்படுவதோடு இணைவைத்தவனாகவும் ஆகின்றான்.
யதார்த்தில், இணை என்பதற்கே இடமில்லை!
# தனது (தாத், வுஜூத்) பரிசுத்த நிலை அழியாமலும், விகாரப் பட்டு மாறுபடாமலும் முஹம்மத் நபியாகவும் ஏனைய சிருஷ்டிகளாகவும் வெளியாகியிருக்கின்றான் என்பது தவ்ஹீத் கூறும் உண்மை ஞானமாகும்!
# அவனே இவ்வுலமாகவும், எல்லாப் பொருட்களாகவும், மனதில் ஊசலாடும் எண்ணமாகவும், ஒலியாகவும், ஒளியாகவும், எல்லாமாய் காட்சிளிக்கின்றான் என்பது தெள்ளதிற பலனாக, உள்ளங்கை நெல்லிக் கனிபோன்று தெளிவாகின்றது.
அல்லாஹ் சிருஷ்டியைப் படைத்தான் என்றால் சிருஷ்டியாக வெளிவந்தவன்!!
# தாத், வுஜூதாகிறது அதாவது அல்லாஹ் என்ற வுஜூதுக்கு உருவம் இல்லை !!!
எல்லையில்லை....
கட்டுபாடில்லை.....
ஆயினும் அவன்
இவ்வாறிருப்பதுடன் உருவத்திலும், எல்லையிலும் வெளியாகிருக்கின்றான்.
இவ்வாறவன் வெளியானாலும் கூட, அவன் முன்பிருந்த நிலையிலிருந்து அழியவோ, மாறுபடவோ, விகாரப்படவோ இல்லை.
அவன் மாறுபடப் போவதுமில்லை....
அவன் முன்பு எவ்வாறிருந்தானோ அவ்வாறே இப்போதுமிருகின்றான் !!!
# இறைவன் எங்கும் நிறைந்தவன் என்று சொல்வதைவிட, “எல்லாமாய் இருப்பவன் அவனே” என்று சொல்வது மிகப் பொருத்தமாகும்.
எங்கும் என்று சொல்லும்போது அவனை விட்டும் இடத்தை வேறாக்க வேண்டியதாகிவிடும்....
எனவே... சொல் அளவில்
எங்கும் நிறைந்தவன் என்று சொன்னாலும்
“இஃதிகாத்”
கொள்கை எப்படியிருக்க வேண்டுமெனில்
“எங்கும்”
என்பதும் அவனே என்ற நம்பிக்கை நெஞ்சிலிருக்க வேண்டும்!!
# அல்லாஹ் என்பவன் சிருஷ்டிகளை சிருஷ்டிப்பதற்கு முன் எவ்வாறிருந்தானோ, அதே நிலை அழியாமலும் மாறுபடாமலும், விகாரப்படாமலும் அவன் இருந்தவாறேயிருக்க....
சர்வ பிரபஞ்சம் களமாகவும், சிருஷ்டிகளாகவும் அவனே வெளியாகியிருக்கிறான் !!!
ஒவ்வொரு வினாடியும் கோடிக்கணக்கான வெளிப்பாடுகளாக அவனே தஜல்லியாகிறான்....
அவனுக்கு வேறான எந்தப் படைப்புமில்லை.....
அவன் ஒருவனே !!!

பலரல்ல என்பதுதான் "கலிமா தய்யிபா" கூறும் உண்மையான தௌஹீத்!!
# தனியான சுயமான மூலப் பொருள் ஹக்குடைய வுஜூத் (தாத்) மாத்திரமே இருக்க வேறு எப்பொருளும் தனியான மூலம் பொருளாக இல்லை என்பது பரிசுத்த இஸ்லாமிய கொள்கை!
# ஹதீஸ் குத்ஸியில் "குன்து கன்ஸன் மஹ்பிய்யன் பஅஹ்பப்து அன் உஃறப, பஹலக்துல் ஹல்க, பபீ அறபூனீ"
நான் யாராலும் அறியப்படாத, புரியப்படாத பொக்கிஷமாக இருந்தேன்.
இப்படி இருந்த நான் என்னுள்ளிருந்த அற்புத மிகுந்த எல்லா ஆற்றல்களையும் வெளிப்படுத்த விரும்பி சிருஷ்டிகளைச் சிருஷ்டித்தேன்.
என்னைக் கொண்டே என்னைத் தெரிந்து கொண்டனர். என்று கூறுகின்றான் !!!
# ஒரு மனிதன் முஃமினாக வேண்டுமானால் இறைவனுக்குரிய இரு நிலைகளையும் (அரூபி, ரூபி) கொண்டு நம்ப வேண்டும்.
ஒரு மனிதன் இறைவன் அரூபி என்று மாத்திரம் நம்பினாலும், மாறாக அவன் ரூபி என்று மாத்திரம் நம்பினாலும் ஈமான் கொண்ட விசுவாசியாக முடியாது !!!
அவனது அரூப – ரூப இரு நிலைகளைக் கொண்டும் நம்பும் போதுதான் அவன் உண்மை முஃமீனாக முடியும்.
இது சுத்த சத்திய அல்குர்ஆன், புனித ஹதீஸ் கூறும் உண்மை விளக்கமாகும்!!!
# சிருஷ்டிகள் எனப்படும் ஒவ்வொறு பொருளுக்கும் இரு நிலைகள் உண்டு....
1. வெளியரங்க நிலை
2. உள்ளரங்க நிலை
இதேபோன்று இறைவனுடைய தாத்திற்கும் இரு நிலைகள் உண்டு...
1. அரூப நிலை
2. ரூப நிலை
அரூப நிலை என்றால்- எந்தச் சிருஷ்டிகளையும் படைப்பதற்கு முன்னிருந்த நிலை !!!
முதற்படைப்பு நாயகம் (ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம்) அவர்களின் பேரோளியேயாகும் !!!
அவர்களது புனித மிக்க ஒளியை அல்லாஹ் தன்னொளியிலிருந்து முதலாவதாக படைத்தான் (வெளியாக்கி தான்). என்பது சத்திய அல்குர்ஆன் குர்ஆன், புனித ஹதீஸிலிருந்து நிரூபிக்கப்பட்ட உண்மையாகும்.
அரூப நிலை என்று சொல்லும் போது றசூலுல்லாஹ்வுடைய ஒளியையும் படைப்பதற்கு முன்னிருந்த நிலையாகும்.
இது தான் அமாவுடைய நிலை
சுருக்கமாகச் சொல்லப்போனால் இறைவன் எந்தப் படைப்பையும் சிருஷ்டிப்பதற்கு முன்னிருந்த நிலை.
இந் நிலைக்கு தாத்துல் மஹ்ழ் என்றும், கன்ஸுல் மஹ்பிய்யஹ் என்றும், மஸ்ஹூத், கதீம், அமா, அஹதிய்யத்து, தாத்து, வுஜூது என்றும் பல பெயர்கள் உள்ளன....
இறைவனின் இந்நிலையை எந்தச் சிருஷ்டியாலும் புரிய முடியாது !!!
# முஹம்மது நபியுடைய ஒளியாகவும் இவ்வுலகமாகவும் இவ்வுலகத்தின் எல்லாப் பொருட்களாகவும் அவனே வெளியானான் என்பதுதான் கலிமா கூறும் உண்மையான தௌஹித்
விளக்கமாகும்.....
அல்லாஹ் என்பவன் தான் சிருஷ்டிகளைப் படைப்பதற்கு முன் எவ்வாறிருந்தானோ அதே நிலையில் எவ்வித குறைபாடுகளும் ஏற்படாமலும் அவன் இருந்தவாறேயிருக்க, முஹம்மதாயும், சர்வ பிரபஞ்சமாயும், வெளியானவன் அவனேதான்
!!!!
இதுவே தவ்ஹீத் என்பதன் அசைக்க முடியாத உயர்ந்த சுத்த சத்திய முடிவாகும்!
# நபிகள் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்
"அல்லாஹ் ஆதம் நபியை தன் உருவத்தில் படைத்தான் என்றும்....
நான் அல்லாஹ்வினுடைய ஒளியாக இருக்கின்றேன்
சகலமும் என்னுடைய ஒளியாக இருக்கின்றது என்றும் கூறிய இதுபோன்ற நபி
மொழிகள் உருவமற்றவன், ஜடமற்றவன், இவ்வாறான வெளியாகுதலைகொண்டு உருவ முடையவனாக ஆகினான் !!!

உருவம் உள்ளவன், உருவமற்றவன் என்ற இரு கருத்தும் இறைவனுடைய விசயத்தில் அவசியம்!!
# தன்ஸீஹுடைய நிலையில் உருவமற்றவன் எப்பொழுது தான் அறியப்படவேண்டுமென படைப்பை சிருட்டித்தானோ அப்பொழுதிருந்தே அவன் உருவத்தில் வெளியானான்....
இதனையே மகாமுத்தஷ்பீஹ் (தஷ்பீஹுடைய நிலை) !!
# 1. அலா இன்னஹும் பீமிர்யத்தின் மின்லிகாயி றப்பிஹிம்
"அவர்கள் அல்லாஹ்வைக் காண்பதில் சந்தேகமுள்ளவர்களாயிருக்கின்றார்கள்.
2. அலா இன்னஹு பிகுல்லி ஷையின் முஹீத்
"நிச்சயமாக அல்லாஹ்வானவன் ஒவ்வொரு வஸ்துவையும் சூழ்ந்தவாயிருக்கிறான்"
# நபி ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் அவர்கள்....
ஒரு சமயம் لستكأحدمنكم
நான் உங்களில் நின்றும் எவர் போன்றவனுமல்லன் என்றும்...

இன்னொரு சமயம் لستمثلكم நான் உங்கள் போன்றவனல்லன் என்றும்...
பிறிதொரு சமயம் لستكهيتكم
நான் உங்கள் அமைப்பில் உள்ளவனல்லன் என்றும் சொல்லியிருப்பதை உனது கவனத்திற் கொண்டு சிந்தனை செய்து பார் !!!
இவ்வசனங்கள் யாவும் நபி ஸல்லல்லாஹுஅலைஹிவஸல்லம் அவர்கள் நம் போன்ற மனிதரல்லர் என்பதை வலியுறுத்தி நிற்பது உனக்கு புரியவில்லையா?
# பிரபஞ்சமெனப்படும் சர்வ சிருஷ்டிகள் அனைத்தும் ஹக்கு தஃலா ஆலாவின் வுஜூதுக்கு வேறுபடாதவைகளும், அவனுடைய பரிசுத்த 'தாத்தை' உள்ளமையை விட்டும் பிரிக்க முடியாதவைகளுமாகும்!!
# தாத் அல்லது வுஜூது உள்ளமை ஒன்றேயல்லாமல் அது பலதல்ல அந்த தாத்துக்கு இரண்டு நிலைகள் உள்ளன....
ஒன்று 'தன்ஸீஹ்' ஒப்புவமையற்ற நிலை...
அது அரூபநிலை என்றும் சொல்லப்படும் மற்றநிலை
'தஷ்பீஹ்' ஒப்புவமை உள்ள நிலை..
அது ரூபநிலையென்றும் அழைக்கப்படும்.
'தன்ஸீஹ்' ஒப்புவமை அற்ற நிலை, அருப நிலை என்று அழைக்கப்டும் நிலை சிருஷ்டிகளின் சிந்தனைக்கும் அறிவுக்கும் எட்டாத கருப்பு வெள்ளை என்ற கட்டுப்பாடும்..
கட்டை நெட்டை என்ற கட்டுப்பாடும் மில்லாத எந்த அறிஞனாலும் அந்த வகையிலும் கட்டுப்படுத்தமுடியாத நிலையாகும்.
இறைவனுக்குரிய இந்த நிலை பற்றி சிந்திக்க முடியாது.
'அல்லாஹ்வின் படைப்பைப் பற்றி சிந்தியுங்கள் ஆனால் அவனுடைய தாத்தை பற்றி சிந்திக்காதீர்கள்' என்று நபி (ஸல்லல்லாஹுஅலைஹிவஸல்லம்) அவர்கள் அந்த தாத்துடைய இந்த நிலை (தன்ஸீக்) பற்றித்தான் கூறினார்களேயல்லாமல் அவனுடைய ஸிபத் தன்மையைப்பற்றி சிந்திப்பதை தடுக்கவில்லை....
படைப்புக்கள் யாவும் அவனுடைய ஸிபாத் தன்மைகளேயாகும்!!
# பிரபஞ்சமெனப்படும் சர்வ சிருஷ்டிகள் அனைத்தும் ஹக்கு தஃலா ஆலாவின் வுஜூதுக்கு வேறுபடாதவைகளும், அவனுடைய பரிசுத்த 'தாத்தை' உள்ளமையை விட்டும் பிரிக்க முடியாதவைகளுமாகும்!!
# அல்லாஹ்வுக்கு நிகராக எந்தவொரு வஸ்துவும் இல்லை என்று குர்ஆன் கூறுகிறது....
ஆயினும் ஒருவரின் எண்ணத்தைப் பொறுத்து
தான்
'ஷிர்க்' இணை ஏற்படுகிறதேயல்லாமல் 'ஹகீகத்' எதார்த்தத்தில் 'ஷிர்க்' என்பதே கிடையாது !!!
அல்லாஹ்வுக்கு உதாரணம் உண்டு,ஆனால் அவனுக்கு நிகரில்லை என்பதற்கு குர்ஆன் ஷரீபில் தெளிவான ஆதாரங்கள் உள்ளன....
'வலில்லாஹில் மதலுல் அஹ்லா' அல்லாஹ்வுக்கு உயர்ந்த உதாரணம் உண்டு.
என்று குர்ஆனில் ஒர் இடத்திலும்...
'வலஹூல் மதலுல் அஹ்லா' அவனுக்கு உயர்ந்த உதாரணம் உண்டு என்று குர்ஆனில் மற்றோர் இடத்திலும் ஹக்தஆலா கூறியுள்ளான்!!
# இறைவா! கல்கு எனும் பிரபஞ்சம் நீரின்மேல் எழுந்து நிற்கும் குமுழிபோன்றது.
குமுழி என்பது உண்மையிலேயே அது குமிழியாயிருக்கும்போதும் தண்ணீர்தான்.
அது அழிந்து உடைந்த பின்னும் தண்ணீர்தான்.
இறைவா! என்னுடைய தாத்திலே (என்னிலே) நீ நிலைபெற்றிருக்கின்றபொழுது
'அன' நான் என்பது எங்கே?
எனவே நான் உன்னைப் பிரியவுமில்லை, நீ என்னைப் பிரியவுமில்லை.
இறைவா! எமக்கிடையில் 'தே' என்பதே இல்லை!!
# அல்லாஹ் "அர்ஷ்" என்ற சிம்மாசனத்தில் இருக்கின்றான் என்று வைத்துக்கொண்டால் திருக்குர்ஆனில் وَيَحْمِلُ عَرْشَ رَبِّكَ فَوْقَهُمْ يَوْمَئِذٍ ثَمَانِيَةٌ "அந்நாளில் உமது இறைவனின் 'அர்ஷ்' சிம்மாசனத்தை எண்மர் தமது தலைமேல் சுமப்பர்." திருக்குர்ஆன் : 69:17
என்று வந்துள்ளதே அப்படியானால் எட்டு மலக்குகளால் அல்லாஹ்வைச் சுமக்க முடியுமா?
அவன்
مَحْمُوْلْ (மஹ்மூல்) சுமக்கப்பட்டவனாகவும், அமரர்கள் حَامِل (ஹாமில்) சுமந்தவர்களாகவும் ஆகிவிடுவார்களே
#
1." إن الله قال: من عادى لي ولياً فقد آذنته بالحرب، وما تقرب إلي عبدي بشيء أحب إلي مما افترضت عليه، وما يزال عبدي يتقرب إلي بالنوافل حتى أحبه، فإذا أحببته كنت سمعه الذي يسمع به، وبصره الذي يبصر به، ويده التي يبطش بها، ورجله التي يمشي بها، وإن سألني لأعطينه، ولئن استعاذني لأعيذنه " رواه البخاري.
2. لاَ يَزَالُ العَبْدُ يَتَقَرَّبُ إلَى بِالنَّوَافِلِ حَتَّي أُحِبَّهُ، فَإذَا أَحْبَبْتُهُ كُنْتُ سَمْعَهُ وَبَصَرَهُ وَلِسَانَهُ وَيَدَهُ وَرِجْلَهَ. فَبِي يَسْمَعُ وَبِي يُبْصِرُ وَبِي يَنْطِقُ وَبِي يَبْطِشُ وَبِي يَسْعَي. وفي رواية: وَبِي يَمْشِي.
இரண்டு ஆயத்துக்கலின் கருத்தாகிரது...
நபிலான வனக்கங்களை கொண்டு ஒரு அடியான் தனது இறைவனை நெருங்கும் போது அந்த அடியானை அல்லாஹ் விரும்புவானேயானால்... அந்த அடியானின் கேள்வி புலனானது எனது
(அல்லாஹ்வின்) கேள்வி போலாகும்...
அந்த அடியானின் பார்வையானது எனது
(அல்லாஹ்வின்) பார்வை போல் ஆகும்...

அந்த அடியானின் பிடிக்கும் கைகள் எனது
(அல்லாஹ்வின்)கையை கொன்டு ஆகும்....
அந்த அடியானின் நடக்கும் கால்கள்
(அல்லாஹ்வின்)கால்களை கொன்டு ஆகும்.
அதாவது ஒரு அடியான் வனக்கங்கலின் மூலம் நான் என்ற கைரிய்யத் நீங்கி சிருஸ்டிகல் எல்லாம் அல்லாஹ்வின் தாத்துக்கு வேரானது இல்லை என்ற நிலையை (மஹ்ரிபாவை)அடையும் போது (ﷺ)இந்த சொல் வலுப்படுத்துகிரது அவனுலைய உருவில் அங்கு அல்லாஹ்தான் இருக்கிறான்.
அல்லாஹ்வால் எழுமான அனைத்து சக்தியும் அவனில் வெளியாகும்.
# அவனே முந்தியவன். அவனே பிந்தியவன். அவனே வெளியானவன். அவனே உள்ளானவன். அவன் அனைத்தையும் அறிந்தவனாக இருக்கின்றான்.(சூரதுல் ஹதீத்) அல்குர்ஆன்
# இறைவன் என்பவன் தனக்கு தானாய் தன்னைக் கொண்டே ( வேறொன்றைக் கொண்டு உண்டாகாமல்) உண்டாகி நிலைத்திருப்பவன்.
சிருஷ்டி என்பது (தன்னை கொண்டு உண்டாகாமல் ) அல்லாஹ்வைக் கொண்டு உண்டானவை. அல்லாவுக்கு சிருஷ்டிகள் வேறு என்று கருதும்போது சிருஷ்டி ஒவ்வொன்றும் தனித்தனி சுயமான வுஜூதை உடையதென்றும், அல்லாஹ்வைப் போன்ற எத்தனையோ வுஜூதுகளும், தாத்துகளும் உண்டு என்ற அபத்தமான, தௌஹீதுக்கு முரணான கருத்தை இவன் அறியாமலேயே ஏற்க வேண்டி ஏற்படுவதோடு இணைவைத்தவனாகவும் ஆகின்றான்!!
தகவல் இறை அருள் வைத்தியர் மாலிக்
8220320197

## இருள் 13

(மெஞ்ஞான ரீதியில் ஆழ்கடல் இருள் )
....அல்லது (அவர்களின் நிலை) ஆழ்கடலில் (ஏற்படும்) பல இருள்களைப் போன்றதாகும். அதனை ஓர் அலை மூடுகிறது. அதற்கு மேல் மற்றோர் அலை. அதற்கு மேல் மேகம். (இப்படி) பல இருள்கள். சில சிலவற்றுக்கு மேல் இருக்கின்றன. (அப்பொழுது) அவன் தன் கையை வெளியே நீட்டினால், அவனால் அதைப் பார்க்க முடியாது. எவனுக்கு அல்லாஹ் ஒளியை ஏற்படுத்தவில்லையோ அவனுக்கு எந்த ஒளியுமில்லை” (அல்குர்ஆன்: 24:40)
மன ஓர்மை இல்லாமலும் அந்தரங்க சுத்தி இல்லாமலும் அலட்சியமாக செய்யப்படும் அமல்கள் இவ்வாலயத்தில் இருளுக்கு ஒப்பிடப்படுகின்றன.
ஆழ்கடல் என்பது உலகப் பற்று அதனை மூடிக்கொண்டது. அதாவது உலகப் பற்றின் மீது பிறரை மெய்க்கச் செய்யும் முகஸ்துதி, புகழ் முதலில் சுயநலம் மூடிக்கொள்கிறது.
அதற்கு மேலும் அலை என்பது பெருமை, அதிகாரம், செல்வாக்கு ஆகியவை இவற்றிக்கு மேலிடுகின்றன.
இதற்கு மேல் மேகம் என்பது ஷிர்க் என்னும் இணைவைத்தலைக் குறிக்கிறது. "இருள்கள் அவற்றில் சிலவற்றிற்கு மேல் சில "என்பது இயற்கையான அலட்சியம் என்ற இருள், உலகப்பற்று என்ற இருள்,பெருமையில் ஆர்வம் கொள்ளல் என்ற இருள் , இணை வைத்தல் என்ற இருள் ஆகிய இருள்கள் ஒன்றுக்கு மேல் ஒன்றாக அடுக்கடுக்காக மூடிக் கொள்வதை குறிக்கிறது.
" தன் கையை வெளியே நீட்டினால் " என்பது இவ்வுலகில் இருந்து விடுபட்டு, தன் நிலையை திருத்திக் கொள்ளவும், தனது மறுமையே ஒழுங்கு படுத்திக்கொள்ளவும் முயற்சி. நாட்டம், பிரயத்தனம் என்ற கையை நீட்டினால், இவ்விருள்களிலிருந்து அவன் விடுபடுவதற்குரிய மார்க்கத்தை இறைவன் அளிப்பான்.தனது அறிவால் அவன் பார்க்க முடியாது.
இறை அருளின் ஒளியில் உள்ள கிரணங்களை அடையாதவனுக்கு அவ்விருள்களை விட்டும் வெளியேறி விடுவதற்கான ஒளி இல்லை. அறிவு என்ற ஒளிக்கு இவ்விருள்களை அகற்றத்தக்க சக்தி இல்லை. இவ்விருள்களை அகற்றும் சக்தி இறைவனுடைய ஒளிக்கத்தான் இருக்கிறது.

## இருள் 14

(விஞ்ஞான ரீதியில் ஆழ்கடல் இருள் )



....அல்லது (அவர்களின் நிலை) ஆழ்கடலில் (ஏற்படும்) பல இருள்களைப் போன்றதாகும். அதனை ஓர் அலை மூடுகிறது. அதற்கு மேல் மற்றோர் அலை. அதற்கு மேல் மேகம். (இப்படி) பல இருள்கள். சில சிலவற்றுக்கு மேல் இருக்கின்றன. (அப்பொழுது) அவன் தன் கையை வெளியே நீட்டினால், அவனால் அதைப் பார்க்க முடியாது. எவனுக்கு அல்லாஹ் ஒளியை ஏற்படுத்தவில்லையோ அவனுக்கு எந்த ஒளியுமில்லை" (அல்குர்ஆன்: 24:40)
இன்றைய நவீன கருவிகளின் உதவியோடு கடலில் ஆராய்ச்சி செய்வது போன்று கடல் ஆய்வு செய்திராத அந்த நாட்களில், "கடலின் அதிக ஆழத்தில் ஒரே இருள்மயமாக இருக்கும்" என்றும் கடலில் உள் அலைகள் இருக்கின்றது என்றும் கூறப்பட்டிருக்கிறது என்றால் வியப்பாக இருக்கின்றதல்லவா?

ஆம் மனிதர்களை நேர்வழி காட்டி அவர்களைப் புனிதர்களாக மாற்றுவதற்காக அவர்களையும் அந்த ஆழ்கடல்கடல்களையும் படைத்த இறைவன் இறக்கியருளிய அருள் மறையாம் திருமறையில் இன்றைய அறிவியல் ஆராய்ச்சியாளார்களால் கண்டுபிடிக்கப்பட்ட இந்த விஞ்ஞான அதிசயத்தை அல்லாஹ் 1400 ஆண்டுகளுக்கு முன்பே குறிப்பிட்டிருக்கின்றான்.

கடலியல் (Marine Geology) துரையில் வல்லுனராக இருக்கும் பேராசிரியர் துர்காரோ என்பவர் ஜித்தாவிலுள்ள மன்னர் அப்துல் அஜீஸ் பல்கலைகழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றுகிறார்.
அவரிடம் அல்குர்ஆன் 24:40 வசனத்தைக் கொடுத்து அவரின் கருத்துக்களைக் கூறுமாறு கேட்டதற்கு பின்வருமாறு விளக்கம் கூறினார்.
குர்ஆனின் இந்த வசனம் சாதாரணக் கடலைப்பற்றி குறிப்பிடவில்லை. இது பெருங்கடலின் ஆழ்கடலைப் பற்றி குறிப்பிடுகின்றது. இன்று நீர்மூழ்கிக் கப்பல்கள் மூலம் பெருங்கடல்களின் அதிக ஆழத்திற்கு சென்ற நம்மால் அங்கே கும்மிருட்டாக இருப்பதைக்காண முடிகிறது. ஏனென்றால் அவ்வளவு ஆழத்திற்கு மனிதனால் நீர்மூழ்கிக் கப்பல் போன்ற சாதனங்களின் துணையில்லாமல் செல்ல முடியாமல் இருந்தது.
எவ்வித உபகரணமும் இல்லாமல் மனிதனால் 20 அல்லது 30 மீட்டர் ஆழத்திற்கு கீழ் செல்ல முடியாது. அதற்கும் கீழே சென்றால் அவன் இறந்து விடுவான். அப்படியிருக்க ஆழ்கடல் என்று சொல்லப்படக்கூடிய 200 அடி ஆழத்திற்கும் கீழே மனிதன் நீர்மூழ்கிக் கப்பல் போன்ற அதிநவீன சாதனங்களின் துணையில்லாமல் செல்ல முடியாது.

இன்றுள்ள நவீன கருவிகளின் துணையுடன் ஆழ்கடலை ஆராய்ந்தபோது அவைகள் இருட்டாக இருப்பதற்கு இரு காரணங்களைக் கூறுகின்றனர்.
முதலாவது காரணம் என்னவெனில், சூரிய ஒளியில் உள்ள நிறங்கள் ஒன்றன்பின் ஒன்றாக கடல் நீரில் உட்கிரகித்துக் (Absorbed) கொள்ளப்படுவதுதான். சூரிய ஒளியில் வயலட், இன்டிகோ, நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு மற்றும் சிவப்பு போன்ற ஏழு நிறங்கள் இருப்பதை நாம் படித்திருக்கிறோம். இதை ஆங்கிலத்தில் Vibgyor என்று கூறுவர்.
பேராசிரியர் துர்காரோ கூறுகையில், சூரிய ஒளி பெருங்கடலின் மேற்பரப்பிலிருந்து 15 முதல் 20 மீட்டர் ஆழத்திற்கு கடந்து வருகையில் அந்த ஒளியில் இருக்கும் சிவப்பு நிறம் தண்ணீரில் உட்கொள்ளப்படுகின்றது. ஒரு மனிதன் கடல் மட்டத்திலிருந்து 30 மீட்டர் ஆழத்திற்குச் சென்றபின் அவனுடைய காயங்களிலிருந்து சிவப்பு நிற இரத்தம் வழிந்தால் அதை அவனால் பார்க்கக்கூட முடியாது. ஏனென்றால் சிவப்பு நிறம் 30 மீட்டர் ஆழத்திற்கு வருவது கிடையாது.

மேலும் அந்த சூரிய ஒளி கடலின் ஆழத்திற்குச் செல்ல செல்ல 30 முதல் 50 மீட்டர் ஆழத்தில் சூரிய ஒளியிலுள்ள ஆரஞ்சு நிறம் உட்கிரகித்துக் கொள்ளப்படுகின்றது.
சூரிய ஒளி மேலும் கடலின் ஆழத்திற்குச் செல்லும்போது 50 முதல் 100 மீட்டர் ஆழத்தில் மஞ்சள் நிறமும், 100 முதல் 200 மீட்டர் ஆழத்தில் பச்சை நிறமும், 200 மீட்டருக்கும் கீழுள்ள கடலின் ஆழத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நீலம், இன்டிகோ மற்றும் வயலட் போன்ற நிறங்களும் உட்கிரகித்துக் கொள்ளப்படுகின்றன.
எனவே கடலில் அடுக்கு அடுக்குகளாக காணப்படும் இருள்கள் சூரிய ஒளியின் நிறங்கள் அந்த அடுக்குகளில் உட்கிரகித்துக் கொள்ளப்படுவதாலேயாகும்.
ஆழ்கடல் இருட்டாக இருப்பதற்கு மற்றொரு காரணம் சூரிய ஒளி கடலின் ஆழத்திற்குச் செல்லாமல் தடுக்கும் தடுப்புகளாகும்.

சூரிய ஒளி மேகத்தின் மீது படும்போது அம்மேகத்தினால் அவ்வொளி தடுக்கப்பட்டு சிதறடிக்கப்படுகின்றது. இதனால் மேகத்திற்கு கீழே இலேசான இருள் ஏற்படுகின்றது. இது முதல் தடுப்பாகும் .
பின்னர் சிதறடிக்கப்பட்ட அந்த சூரியஒளி, கடலின் மேற்புறமுள்ள அலைகளில் மோதுகின்றது. இது இரண்டாவது தடுப்பாகும்.
இந்த அலைகளிலிருந்து பிரதிபலிக்கப்படாத ஒளியானது கடலின் உள்ளே செல்கின்றது. அங்கேயும் ஆழ்கடல் அலைகள் இருப்பதால் அவைகளும் தடுப்பாகச் செயல்படுகின்றன. இது மூன்றாவது தடுப்பாகும் .
கடலின் உட்புறம் காணப்படும் இந்த Internal Waves எனப்படும் உள் அலைகளைப்பற்றி தகவல் கி.பி. 1900-க்குப் பின்னரே நமக்குத் தெரிய வந்தது. ஆனால், குர்ஆன் இந்த உள் அலைகளைப்பற்றி 1400 ஆண்டுகளுக்கு முன்னரே கூறி விட்டது.

இந்த ஆழ்கடலின் இருட்டில் ஒருவன் தன் கையை நீட்டினால் அதைக்கூட அவன் பார்க்க முடியாது என்று திருமறை கூறிய அதே விளக்கத்தையே இன்றைய விஞ்ஞானிகளும் கூறுவது மிகவும் ஆச்சரியமளிப்பதாக இருக்கிறது. ஸுப்ஹானல்லாஹ் -அல்லாஹ் மிகத் தூய்மையானவன். அல்லாஹ்வே முற்றிலும் அறிந்தவன்.

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 1

(விஞ்ஞானத்தின் விளிம்பும், மெஞ்ஞானத்தின் விரிபும் )




நாம் வாழும் உலகத்தைப் பற்றிய உண்மைகளை விளக்குவதே விஞ்ஞானத்தின் குறிக்கோளாகும் .
" விளக்கம் " என்ற சொல் உண்மைப் பொருளைக் கண்டறிய முன்னேறும் ஒவ்வொரு படியிலும் சுருங்கிக் கொண்டே வருகிறது .அதாவது , உண்மையை அதிகமாக அறிய, அறிய அதை விளக்கிச் சொல்வது கடினமாகிக் கொண்டே போகிறது .

மின்சாரம் , காந்தம் , ஈர்ப்பு சக்தி போன்ற பதங்களை விஞ்ஞானம் உண்மையில் விளக்க முடியாது . அந்த இயற்கைச் சக்திகளை முன்கூட்டியறியவோ , அச்சக்திகளின் இயக்கங்களை அளந்து சொல்லவோதான் விஞ்ஞான அறிவு பயன்படுகிறதே தவிர , அச்சக்திகளின் ஆரம்பம் என்ன என்பதைப் பற்றியோ , அவற்றின் கடைசி நிலை என்ன என்பதைப் பற்றியோ விஞ்ஞான அறிவால் ஒன்றும் கூறமுடியவில்லை .
தற்கால விஞ்ஞான ஆய்வாளர்களின் பெரும்பாலோர் அந்த மாயாஜால இயற்கைச் சக்திகள் ' உண்மையில் என்ன ' என்பதைக் கண்டு பிடிக்கவே முடியாது என்று அவ்வாராய்ச்சி எண்ணத்தையே ஒதுக்கி தள்ளிவிட்டார்கள் பெர்ட்ரண்டு ரஸ்ஸல் என்னும் அறிஞர், மின்சாரம் என்றால் என்ன என்பதற்கு , "மின்சாரம் என்பது ஸெயிண்ட் பால்ஸ் கதீட்ரல் மாதா கோயிலைப் போல் ஒரு பொருள் அன்று .

மின்சாரத்தில் பொருள்கள் இவ்வாறு இயங்கும். பொருள்களில் மின்சக்தியைச் செலுத்தினால் அவை இம்மாதிரியான மாறுதலையடையும் , இந்த இந்த சந்தர்ப்பங்களில் பொருள்களில் மின்சக்தியைப் பாயவிட முடியும் , என்பது போன்ற விஷயங்களை நாம் பிறருக்குச் சொல்லத்தான் முடியுமே தவிர , ' மின்சாரம் ' என்பது என்ன என்பதைத் திட்டவட்டமாகச் சொல்லவே முடியாது " .
இவ்வாறு, விஞ்ஞான அறிவு " எப்படி ? " என்ற கேள்விக்கே பதில் கொடுத்தது ; ஆனால் " ஏன் ? " என்ற கேள்விக்கு அது பதில் கொடுக்க முடியவில்லை.

அரிஸ்டாடில் என்ற கிரேக்க தத்துவஞானி , இயற்கைச் சக்திகளால் ஏற்படும் பிரச்சனைகளில் " எப்படி " என்ற கேள்விக்கு மாத்திரம் பதில் கொடுக்க முற்பட்டார் . ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் துவங்கிய அவருடைய முயற்சியின் லட்சியம் இயற்கைப் பிரச்னைகளின் "ஏன்" என்ற கேள்விக்குப் இன்னும் பதில் யாராலும் கொடுக்க முடியவில்லை .
விஞ்ஞானம் என்பது முழுமையான ஞானம் அல்ல... அது ஒரு விதமான சிந்திக்கும் முறை. மேகங்களைப் பற்றி , மழை பொழிவதைப் பற்றி, குழந்தைப் பிறப்பதைப் பற்றி , நேற்று சாப்பிட்ட சோறு , இன்று எப்படித் தண்ணீர் குழாய் பைப் அடிக்கத் தெம்பாக மாறுகிறது என்பது பற்றியெல்லாம் சிந்திக்க வைத்து, பரிசோதனைகள் மூலம் பதில் கண்டுபிடிப்பதுதான் அதன் குறிக்கோள்.
விஞ்ஞானம் சில ' ஏன் 'களுக்கு பதில் சொன்னாலும் , பல ' ஏன் ' களுக்கு அதனிடம் பதில் இல்லை. உதாரணமாக.. சூரியன் ஏன் வட்ட வடிவில் இருக்கிறது ஏன் முக்கோண வடிவத்தில் இருக்கக் கூடாது ? பதில் சொல்ல முடியாது . 'எப்படி' என்று கண்டுபிடிப்பதில்தான் விஞ்ஞானத்துக்கு ஆதாரமான பூரிப்பு ஏற்படுகிறது !
ஆகவே , நம்மால் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளவே முடியாது.பால் வீதி (Milky Way ) என்றழைக்கப்படும் நம்முடைய கேலக்ஸியில் மட்டுமே கோடிக்கணக்கில் நட்சத்திரங்களும் , கிரகங்களும் இருக்கின்றன. இப்படிக் கோடிக்கணக்கான கேலக்ஸிகள் இருக்கின்றன ! இவையெல்லாம் அறிவது மனிதனின் நேற்றைய _ இன்றைய _ நாளைய ஏன் , மனிதனின் ஒட்டு மொத்தமான சரித்திர காலத்தில் கூடச் சாத்தியமில்லை.
" வானங்களையும், பூமியையும், இவைகளுக்கு மத்தியில் உள்ளவைகளையும் வீணுக்காக நாம் படைக்கவில்லை" குர்ஆன் : 38:27

ஆனால் மெஞ்ஞானிகள் படைப்புகளைப் பற்றிய சிந்தனையில் மிக எளிதாக கடந்து செல்கிறார்கள் "மவ்ஜூதாத்" என்ற சொல் சிருஷ்டிகள் அனைத்தையும் உள்வாங்கிய ஒரு சொல்லாகும்.
இவையாவும் “வுஜூத்” உள்ளமையின் புறத்தால் அல்லாஹ் தானானவைகளேயாகும். (அவனுக்கு வேறானவை அல்ல) எனினும் தனித்தனியாகக் குறிப்பிடும் போது அல்லாஹ் அல்லாதது சிருஷ்டி எனப்படும். அவைகள் கூட அவனின் வெளிப்படையாகும்.
“ஙெய்ரிய்யத்” வேறு என்பது கூட வெளிப்படையான கவனிப்பைக் கொண்டதேயாகும். எனினும் எதார்த்தத்தில் சிருஷ்டிகள் யாவும் அல்லாஹ்தானானவையாகும்.
குமிழி, அலை, பனிக்கட்டி (ஐஸ்), என்பன போன்று. இவை மூன்றும் எதார்த்தத்தில் நீரையன்றி அதற்கு வேறானதல்ல. எனினும் தனித்தனி குறிப்பை கவனித்து நீருக்கு வேறானவைதான்.
“ஸறாப்” கானல் நீர் போன்றுமாகும். கானல் நீர் எதார்த்தத்தில் ஆகாயம் தானானதேயன்றி அதற்கு வேறானதல்ல. எனினும் வெளிப்படைக் குறிப்பு என்ற வகையில் அது ஆகாயத்திற்கு வேறானதே. கானல் நீர் என்பது எதார்த்தத்தில் ஆகாயத்தின் வெளிப்பாடுதான்.
இதன் சுருக்கம் என்னவெனில் படைப்புகளும் – பிரபஞ்சம் யாவும் – “வுஜூத்” உடைய புறத்தால் அதாவது உள்ளமை என்ற அடிப்படையில் “அல்லாஹ்”தான். ஆயினும் “தஅய்யுன்” குறிப்பு என்ற வகையில் அது வேறானதேயாகும். வேறு என்பது கூட கணிப்பின் படியேதான். எதார்த்தம் என்னவெனில் பிரபஞ்சம் எல்லாம் அல்லாஹ்தான். குமுழி, அலை, ஐஸ் என்பன போன்று. இவையாவும் நீரேயன்றி வேறல்ல. இவ்வாறுதான் கானல் என்பதுமாகும்.
மேற்கண்ட கருத்தின்படி சிருஷ்டி என்று சொல்லப்படுகின்ற எதுவாயினும் அது அல்லாஹ்வின் “வுஜூத்” உள்ளமைக்கு வேறானதே இல்லை.

அலை என்பது நீர்தானேயன்றி அதற்கு வேறானதல்ல. குமிழி என்பதும் இவ்வாறுதான். அது நீருக்கு வேறானதல்ல. ஐஸ்கட்டி என்பதும் இவ்வாறுதான். அது நீருக்கு வேறானதல்ல. “ஸறாப்” எனும் கானல் நீரும் இவ்வாறுதான். அது ஆகாயத்திற்கு வேறானதல்ல.
சகல படைப்புகளுக்கும் மூலம் – கரு – என்பது அல்லாஹ்வின் “வுஜூத்” என்ற உள்ளமைதான் வேறொன்றல்ல. மோதிரத்துக்கு தங்கம் மூலம் என்றால் மோதிரம் என்பது தங்கம் தானானதேயன்றி அதற்கு வேறானதல்ல. அலைக்கு நீர் மூலம் என்றால் அலை என்பது நீர் தானானதேயன்றி அதற்கு வேறானதல்ல. நூலுக்கு பஞ்சு மூலம் என்றால் நூல் என்பது பஞ்சு தானானதேயன்றி அதற்கு வேறானதல்ல.
இந்த “வஹ்தத்துல் வுஜூத்” ஞானம் பற்றிக் கூறிய தற்கலைவாழ் அற்புத வலிய்யுல்லாஹ் பீர் முஹம்மது றஹ்மதுல்லாஹ் அவர்கள் பாடியுள்ளார்கள்.
மண்ணால ஆனதெல்லாம் மண் எடுத்த கோலமது
மண்ணையன்றி வேறுள்ளதோ யா ஹய்யு யாகையூமே!
பொன்னால ஆனதெல்லாம் பொன் எடுத்த கோலமது

பொன்னையன்றி வேறுள்ளதோ யா ஹய்யு யாகையூமே!
பஞ்சால ஆனதெல்லாம் பஞ்செடுத்த கோலமது
பஞ்சையன்றி வேறுள்ளதோ யா ஹய்யு யாகையூமே!

**விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 2**
( ஒளியும், நிழலும்)



ஒளி என்பது ஓர் இயற்கைச் சக்தி. பிரபஞ்ச வெளியெங்கும் இச்சக்தி சஞ்சாரம் செய்கின்றது. மற்ற இயற்கை சக்திகளைப் போல இதுவும் அலை வடிவங்களாகவே சஞ்சரிக்கின்றது என்ற கொள்கை இன்னும் இருந்து வருகிறது
இக்கொள்கைக்கு தக்க முகாந்திரங்களும் கண்கூடாகக் காட்டப்படுகின்றன. ஒளிக்கதிர்கள் ஒளிப்புகாத ஏதேனும் ஒரு பொருளின் மேல் விழுந்தால் , அப்பொருளின் பின்புறத்தில் அதன் நிழல் ஏற்படுகின்றது.
ஒளி அலைகள் அப்பொருளை ஊடுருவிச் செல்ல முடியாதாகையால் அப்பொருளின் பின்புறத்தில் ஒளிக்கதிர்கள் படாத இருண்ட இடம் உண்டாகிறது. இதே நிழல் என்று கூறுகிறோம்.
இதே ஒளிக்கதிர்களின் மத்தியில் ஒரு மெல்லிய கம்பியை வைத்தால் , அந்தக் கம்பியில் நிழல் ஏற்படுவதில்லை . ஏன் ?
ஒரு பெரிய ஆறு ஓடி வருகிறது. அது ஓடிவரும் இடத்தில் மேடான ஒரு பிரதேசம் குறுக்கிடுகின்றது. ஆறு அவ்விடத்தில் பிரிந்து இரண்டாகச் சென்று விடுகின்றது. அதே ஆற்றின் மத்தியில் ஒரு சிறிய திட்டு குறுக்கிடுகின்றது. ஆற்றின் நீர் அலைகள் அத்திட்டில் விலகி மறுபடியும் ஒன்று சேர்ந்து விடுகின்றன !
இதேபோல் ஒளி அலைகள் குறுக்கிடும் மிகச்சிறிய பொருள்களை அவ்வலைகள் தாண்டி மறுபடியும் ஒன்றுகூடி விடுகின்றன. ஆகையால் அச்சிறு பொருளின் நிழல் ஏற்படவில்லை !
பெரிய வட்ட வடிவமான தகட்டின் மேல் ஒளிக்கதிர்கள் படும்போது அத்தகட்டின் நிழல் தகட்டின் பின்புறத்தில் ஏற்படுகின்றது. அதே தகட்டை கொஞ்சம் கொஞ்சமாக சிறிதாக்கிக் கொண்டே வந்தால் அச்சிறிய தகட்டின் நிழல் நல்ல கரிய நிழலாய் இல்லாமல் ஒளியும், இருளும் கலந்த கலப்பாகத் தென்படும் !
இதிலிருந்து ஒளிக்கதிர்கள் அலைகளாகத்தான் சஞ்சரிக்கின்றன என்ற முடிவுக்கு வந்து விடலாம்.
"அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவது என்னுடைய பேரொளியாகும் அப் பேரொளி யில் இருந்தே இறைவன் தன் படைப்புகள் அத்தனையும் படைத்தான் எனவே தான் " லவ்லாகலமா ஹலக துல் அஃ ப்லாக " (நீர் இல்லையானின் வானங்களைப் படைத் திருக்க மாட்டேன் ) என்ற திரு வசனமும் வழங்கி வருகிறது " என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் - ஹதீது குத்ஸு

நபி ஸல்ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எம்மைப் போன்ற சாதாரண மனிதர் கிடையாது மாறாக மனித புனிதர் அதாவது பஷராகவும் (மனிதராகவும்) யதார்தத்தில் நூராகவும் (ஒளியாகவும்) திகழ்கிறார்கள். அதிலும் பஷரை விட நூர் மிகைத்து விட்ட காரணத்தினால் அவர்களின் திருமேனிக்கு நிழலில்லை என்பது உலக அறிஞர்கள் அனைவரும் ஏற்றுக் கொண்ட குறிப்பாக சத்திய கொள்கை அஹ்லுஸ் ஸுன்னாஹ் வல் ஜமாஅத் அகீதாவின் அடிப்படையில் ஓர் உண்மையாகும்.
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தோற்றம் ஒளியாக இருப்பதாக அல்லாஹுத்தஆலா திருக்குர்ஆனில் கூறியுள்ளான்.
இதனை “அல்லாஹுத்தஆலா முதன் முதலில் எனது ஒளியைத்தான் படைத்தான்“ என்று கூறி தனது அகமியத்தை வெளிப்படுத்திக் காட்டினார்கள்.

நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஹகீகத் ஒளியாய் இருப்பதனால் அவர்களின் திரு உடலுக்கு நிழல் விழுவதில்லை. இதனைப் பல்வேறு ஹதீதுகள், இமாம்களின் கருத்துக்கள் மூலம் கீழே தெரியவருகின்றன.

அன்னை ஆயிஷா ஸித்தீகா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் மீது முனாபிக்குகள் படுதூறு கட்டிப்பேசினர். அப்போது முக்கிய ஸஹாபாக்களிடம் அம்மணி ஆயிஷா நாயகியைப் பற்றி கருத்துக் கேட்டார்கள். அன்னையரின் பரிசுத்தத்தை அவர்கள் அனைவரும் பறைசாற்றினர். இச்சந்தர்ப்பத்தில் ஹஜரத் உதுமான் ஙனி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.
" மற்றவர் பாதம் உங்கள் நிழலிலும் படக்கூடாது என்பதற்காக உங்கள் நிழலை பூமியில் விழுவதை அல்லாஹுத்தஆலா தடுத்தான். அப்படியிருக்க அசிங்கத்தை உங்களுடன் சேர்ப்பானா? " என்று கேட்டார்கள்.
நூல்: தப்ஸீர் மதாரிக், பாகம் - 01, பக்கம் - 10304
ஆனால் இறைநேசர்களாகிய அவுலியாக்களை நிழல் என்றே இறைவன் குறிப்பிடுகின்றான்
நபிகள் நாயகம் ﷺ அவர்களின் தீனை உலகெங்கும் கொண்டு சென்றவர்கள் அவுலியா என்ற இவர்களே .இவர்களே
நபிகள் நாயகம் ﷺ அவர்களின் உண்மை வாரிசுகள்.பிரதிநிதிகள்.
" உமது இறைவன் புவியில் நிழலை எவ்வாறு பரப்பியிருக்கின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா"
- குர்ஆன் (25 : 45) எனவும் ,
" பூமியை நாம் விரிப்பாக்கி அதில் மலைகளை முளைகளாய் ஆக்கவில்லையா ? - குர்ஆன் ( 78 : 6, 7 ) இதில் நிழல் (ளில்லு ) எனவும் மலை (ஜிபால் ) எனவும் குர்ஆனில் கூறுவது இந்த அவுலியாக்களைப் பற்றிய குறிப்பே ஆகும் .
(ரூஹுல் பயான் 4 வது பாகம் 199 பக், 10-வது பாகம் பக் 293 )
இப்போது ஒளியையும், நிழலையும் பற்றிய கருத்துக்களை உள்வாங்கிக் கொண்டு இக்கட்டுரையின் ஆரம்ப தளத்தை மீண்டும் படித்துப் பாருங்கள் .ஒரு புத்தொளியை நீங்கள் பெறுவீர்கள் .

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 3

( கடவுளா.. ? கணித விதிகளா.. ? )

ஒவ்வொரு மனிதனின் மன உணர்விலும் நுட்பமானதோர் ஒழுங்கு காணப்படுகின்றது. மன உணர்வுகளில் ஏற்படும் அந்த ஒழுங்கின் அர்த்தம் என்ன ?
பிரபஞ்சத்தைப் பற்றிய அடிப்படை உண்மை ஒன்று உண்டு என்பதை தெரிவிக்கும் நுட்ப உணர்ச்சியாக அது இருக்குமோ ?
புலன்களால் பொருள்களை உணரும்போது ஏற்படும் அபிப்பிராயப் பேதங்கனைத்தும் மேல்தளத்தில் உண்டாகின்றன. அவ்வுணவுகளின் அடித்தளத்தில் பொருள்களுடைய உண்மைத்தன்மையின் தெளிவற்ற உருவத்தையாவது ஆராயும் மனம் அறியாமல் இருக்க முடியாது.
பெர்க்கலே, டெகார்ட்டே, ஸ்பைனோஸா போன்ற தத்துவ ஞானிகள் இயற்கையின் இயக்க ஒழுங்கிற்கு காரணம் கடவுளை சார்ந்தது என்கிறார்கள்.
பௌதிக தத்துவ நிபுணர்கள் (விஞ்ஞானிகள்) இயற்கைப் பிரச்சினைகளைத் தீர்க்க கடவுளைக் காரணம் காட்ட முற்படாமல் கணித விதிகளை நம்பியிருக்கிறார்கள்.
கணித விதிகளின்படிதான் இந்த மாய பிரபஞ்சத்தின் மர்ம இயக்கங்கள் நடைபெறுவதாகத் திருந்தக் கூறினாலும், எல்லாக் காலங்களிலும், எல்லா சந்தர்ப்ப சூழ்நிலைகளிலும் பிரபஞ்ச இயக்கங்கள் விதிகளுக்கும் அப்பாற்பட்ட ஒரு தெய்வீக சக்தியால்தான் நடைபெறுகின்றன என்ற முடிவுக்கு வரவேண்டிய நிர்பந்தம் தற்கால விஞ்ஞானிகளுக்கும் ஏற்பட்டுள்ளது.

ஐன்ஸ்டீன் போன்ற தத்துவ அறிஞர்கள் கணித சுத்தமான சாம்யங்களின் மூலம் இயற்கை விதிகளைக் கண்டறிய முடிவதற்குக் காரணம், இப்பிரபஞ்சம் சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட ஓர் ஒழுங்கின் அடிப்படையில் இயங்கிக் கொண்டு இருப்பதே ஆகும்.
ஆனால் இயற்கையே ஊடுருவிப் பார்க்கும் கணித முறைகள் அதிகரிக்க அதிகரிக்க, பிரபஞ்சத்தை ஆராயும் மனிதனின் பிரமிப்பு அதிகரித்துக்கொண்டே போகிறது. இந்த பிரமிப்பு படைத்த பிரம்மனின் சக்தியை இவர்களுக்கு அறிவுறுத்துகிறது.

وَلَئِنْ سَأَلْتَهُمْ مَّنْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَسَخَّرَ الشَّمْسَ وَالْقَمَرَ لَيَقُوْلُنَّ اللّٰهُ فَاَنّٰى يُؤْفَكُوْنَ

மேலும், (நபியே!) “நீர் இவர்களிடத்தில் வானங்களையும், பூமியையும் படைத்துச் சூரியனையும் சந்திரனையும் (தன் அதிகாரத்தில்) வசப்படுத்திருப்பவன் யார்?” என்று கேட்டால், “அல்லாஹ்” என்றே இவர்கள் திட்டமாக கூறுவார்கள்; அவ்வாறாயின் அவர்கள் (உண்மையை விட்டு) எங்கே திருப்பப்படுகிறார்கள்? (குர்ஆன் : 29:61)
பிரம்மாண்டத்திருக்கும் பரமாணுக்கும் இடையில் இருப்பவன் மனிதன் என்பது தெளிவு.
பிரபஞ்ச சிருஷ்டியில் மிகப்பெரியதாக தோற்றமளிப்பது சிவப்பு நிறமாக காட்சியளிக்கும் ராட்சத நட்சத்திரங்கள், மிக மிகச் சிறியதாக காணப்படுவது மின் அணுக்கள்.
பிரபஞ்சத்தின் மிகப்பெரிய ராட்சத நட்சத்திரத்திற்கும் மிகச்சிறிய மின் அணுவுக்கும் ஏறக்குறைய நடு மையத்தில் பிரபஞ்சத்தின் பிரிதொரு சிருஷ்டியான மனிதன் இருக்கிறான்.
தன்னுடைய புலன்களால் சிறைப்படுத்தப்பட்டிருக்கும் இம்மனிதனுக்கு இயற்கையின் முக்கியமான மர்மங்கள் பிரபஞ்சத்தின் மிகப்பெரிய சிருஷ்டிலும் மிகச் சிறிய சிருஷ்டியிலும் மறைந்து கிடப்பதில் ஆச்சரியமில்லை.
உண்மைத் தத்துவத்தின் எல்லைக் கோடுகளாக அமைந்திருக்கும் பிரம்மாண்டத்தையும், பரமாணுயும் விவரிக்க இயலாத நிலையில் வெறும் கணித ரீதியான சாம்ய சம்பந்தங்களைக் கொண்டு மாத்திரம் விஞ்ஞானிகளால் தர்க்கம் செய்து திருப்தி அடைந்து விட முடியாது.

وَلَٮِٕنۡ سَاَلۡتَهُمۡ مَّنۡ خَلَقَ السَّمٰوٰتِ وَالۡاَرۡضَ لَيَقُوۡلُنَّ اللّٰهُ‌ قُلِ الۡحَمۡدُ لِلّٰهِ‌ بَلۡ اَكۡثَرُهُمۡ لَا يَعۡلَمُوۡنَ
“வானங்களையும், பூமியையும் படைத்தவன் யார்? என்று அவர்களிடம் நீர் கேட்பீராயின் அவர்கள், “அல்லாஹ்” என்றே நிச்சயமாக சொல்லுவார்கள்; அல்ஹம்து லில்லாஹ் - எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே” என்று நீர் கூறுவீராக; எனினும், அவர்களில் பெரும்பாலோர் அறியமாட்டார்கள்.
(குர்ஆன் : 31:25)

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 4
( அனந்த கோடி உண்மைகள் )

சூரியனின் ஒளி வெள்ளொளி என்று நம்புகிறோம் முப்பட்டை கண்ணாடி வழியே சூரிய கதிரை செலுத்தும் போது அது வெவ்வேறு கலராக பிரிந்ததும் சூரிய ஒளியில் 7 கதிர்கள் இருக்கின்றன என்கிறோம்
உண்மையில் சூரிய ஒளியில் அல்ட்ரா ரெட் அல்ட்ரா புளு மற்றும் X ரே கதிர் போன்றவை இருக்கின்றன
நம் கண்கள் 0. 00004 cm இலிருந்து 0.00007 cm வரை உள்ள அலை நீளத்தைதான் காணமுடியும் இதற்கு மேலுள்ள கீழுள்ள அலைகளை நம் காணமுடியாது
ஆனால் பூச்சிகளின் கண்களுக்கு அல்ட்ரா கதிர்கள் தெரியும்
இதனால் நாமும் பூச்சியும் ஒரே பொருளைக் காணும் போது வேறுபட்ட உண்மைகளை காண்கிறோம் ஆனால் இரண்டும் இரண்டு உண்மைகள்
அப்படியெனில் பார்க்கப்பட்ட பொருளின் உண்மை என்ன என்பது அந்தப் பொருளைப் படைத்த இறைவனுக்குத்தான் தெரியும்
சேவலின் கண்களுக்கு மலக்குமார்கள் தெரிந்து அது கூவதும்
ககழுதையின் கண்களுக்கு சைத்தான்கள் தெரிந்து அவைகள் கத்துவதும்
இரண்டும் பார்வைகள் இரண்டும் உண்மைகள்
சப்தங்களில் மிக மோசமான சப்தம் கழுதையின் சப்தம் . . குர்ஆன் 31 : 19
மோசமான சப்தத்திற்கு காரணம் யார் காரணம் ?
சிம்பன்சி குரங்கை தவிர மற்ற விலங்குகளுக்கு நிறக் குருடு உண்டு விலங்குகள் எல்லாம் இந்த உலகத்தை பிளாக் அன்ட் வொயிட்தான் பாக்கிறது
நாம் காணும் கலர்கள் அவைகளுக்கு தடை செய்யப்படடிருக்கிறது
ஒரு பொருளைப் பற்றி எண்ணங்கள் ஜீவராசிகளுக்கிடையில் பற்பல உண்மைகளை தெரிவிக்கிறது
உண்மையில் அந்த பொருளைப் படைத்த இறைவனைத் தவிர யாராலும் சொல்ல முடியாது
மூஸா உம் கையில் இருப்பது என்ன ?
கம்பு இதை வைத்து ஆடுகளுக்கு இலைகளைப் பறிப்பேன் இந்தக் கம்பில் சாய்ந்து இளைப்பாறுவேன்
கீழே எறியும் என்று இறைவன் சொன்னதும் அது பெரிய பாம்பாக மாறியது . . . . குர்ஆன் 20 : 18
முஸாவின் அஸா உண்மையில் கம்பா . ? பாம்பா . . ?
ஆக நாம் இந்த உலகத்தை யானையை குருடர்கள் பார்த்த மாதிரிதான் பார்க்கிறோம்
இதில் ஜீவராசிகளுக்கு ஒரு உண்மை நமக்கு வேறு ஒரு உண்மை
இப்படி இந்தப் பிரபஞ்சத்தில் அனந்த கோடி உண்மைகள் இருக்கிறது
விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 5
(ஒப்புமை விளக்கம் )

ஒரு கப்பல் கடலில் மிதந்து கொண்டிருக்கிறது கப்பலின் ஓர் அறையில் சிலர் சதுரங்கம் ஆடிக் கொண்டிருக்கிறார்கள் சதுரங்கக் காய்கள் சதுரங்கப் பலகையின்மேல் வைக்கப்பட்டிருக்கின்றன.
காய்களை நகர்த்தாமல்,சதுரங்கப் பலகையை அப்படியே எடுத்து வேறு ஒரு அறையில் கொண்டு போய் வைத்து விடுகிறார்கள்.

இப்போது சதுரங்கப் பலகையைப் பொறுத்தவரை காய்கள் இருந்த இடத்தில்தான் இருக்கின்றன. ஆனால் உண்மையில் அவை ஓர் அறையில் இருந்து மற்றொரு அறைக்கு நகர்ந்து சென்றிருக்கின்றன.
சதுரங்கப் பலகை அதே அறையில் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்த அறையைப் பொருத்தவரையில் , சதுரங்க பலகை இருந்த இடத்தில்தான் இருக்கிறது. ஆனால் கப்பலோ நகர்ந்து கொண்டு இருக்கிறதே ! அப்போது கப்பலுக்குள் இருக்கும் சதுரங்கப் பலகையும் நகர்ந்து சென்று கொண்டுதானே இருக்க வேண்டும்!
கப்பல் ஒரு துறைமுகத்தில் நின்று கொண்டிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். கடலைப் பொருத்தவரை பூமியைப் பொருத்தவரை அந்தக் கப்பல் இருந்த இடத்தில்தான் உள்ளது. ஆனால் பூமியே நகர்ந்து கொண்டிருக்கிறதே ! அப்போது அந்த பூமியின் மேலுள்ள கப்பலும் நகர்ந்து கொண்டுதானே இருக்க வேண்டும் !
சதுரங்கப் பலகையைப் பொறுத்தவரை நகர்ந்தவையே
கப்பலைப் பொறுத்தவரை நகராத சதுரங்கப் பலகை , கடலையும் , பூமியையும் பொறுத்தவரை நகர்ந்து கொண்டுதானிருக்கிறது.

கடலைப் பொறுத்தவரை நகராத கப்பல் வான வீதிகளில் திரியும் பிரபஞ்சப் பொருள்களைப் பொறுத்தவரை நகர்ந்து கொண்டிருப்பதாகத்தான் கருத வேண்டும்.
இந்த சுவாரசியமான சிந்தனையை ஜான் லாக் என்னும் தத்துவ ஞானி 300 ஆண்டுகளுக்கு முன் தமது புத்தகத்தில் எழுதியுள்ளார். (மீள் )

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 6

( புலன்களின் அறிவால் கட்டுப்பட்ட மனிதன் )




நம் கண்கள் வீசும் ஒளியை முழுமையாக பார்த்து விட முடியாது. 0.00004 cm லிருந்து 0.00007 cm வரைதான் பார்க்க முடியும். இந்த அளவுகோலுக்கு மேலும்,கீழும் உள்ள ஒளி கிரணங்கள் வீசும் உண்மை மனிதனுக்குத் தெரியவே தெரியாது . ஆகவே நம் பார்வை குறைபாடுள்ளது .
அதைப்போலவே நம் காது 20 Hz லிருந்து 20 கிலோ Hz வரைதான் கேட்க முடியும். இந்த அளவீட்டிற்கு மேலும் கீழும் உள்ள சப்தங்களில் உள்ள உண்மை மனிதனுக்கு தெரியாது.
இது மாதிரி நம் ஒவ்வொரு புலன்களும் ஒரு எல்லைக்குள் கட்டுப்பட்டு இருக்கும்போது, இந்த பிரபஞ்ச வெளியில் வெளிப்படும் முழு உண்மை அது பற்றிய ஞானம் நமக்கு தெரியவே தெரியாது .
அணுக் கதிரியக்கத்தால் ஏற்படும் ஒளியும், அக்கதிரியக்கம் காரணமாக ஆகாச வெளியில் ஏற்படும் ஒளியின் சஞ்சாரமும் அவைகள் படைக்கப்பட்ட பொழுதிலிருந்து இன்னும் வரை இயற்கையின் மர்மமாக மனிதனுக்கு இருக்கிறது.

அடிப்படையில் மூக்கு ஏழு வகையான வாசனைகளை நுகரக் கூடியதாக மூக்கின் நரம்புகள் வடிவமைக்கப்பட்டுள்ளது
கற்பூர வாசனை, பெப்பர் மிண்ட் வாசனை, மலர்களின் வாசனை, மஸ்க் என்னும் அரபு நாட்டு அத்தர் வாசனை, ஈதர் அல்லது பெட்ரோல் வாசனை, அழுகிய முட்டை வாசனை, காட்டமான அமில வாசனை.. இந்த ஏழு வாகனைகளின் கலப்புகளால் நம்மால் .பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட வாசனைகளை உணர முடிகிறது
இந்த பத்தாயிரம் வாசனைகளில் .......

மரம் எரிவது, இலை எரிவது, முடி எரிவது
கூவம் என்னும் சாக்கடை , மீன் நாற்றம், வாய் துர்நாற்றம் , சேவிங் சோப், கருவாடு, வியர்வை, மல்லிகை
ஆனால் ஒரு லட்சத்திற்கும் அதிகமான வாசனைகள் இருக்கிறது . நாய் , பூனை போன்றவை மனிதர்களை விட அதிகமான வாசனைகளை மோப்பம் பிடிக்கக் கூடியது.
புலன்களின் கட்டுப்பட்ட தன்மையில் உள்ள மனிதனால் இனிப்பும் கசப்பும், குளிர்ச்சியும் உஷ்ணமும் , பச்சையும் சிவப்பும் ஒருவனுடைய அபிப்பிராயங்களே தவிர உண்மையானவை அல்ல .
புலன்களால் அறிய முற்படும் மனிதனுக்குத்தான் நிறம், ருசி , வாசனை , சப்தம் என்ற பேதங்கள் ஏற்படுகின்றனவே தவிர அறியப்படும் பொருளுக்கு இப்பேதங்கள் எவையும் இல்லை.
இத்தனையும் உள்ள உண்மையினை அதைப் படைத்தவனைத் தவிர யாரும் அறிந்து கொள்ள முடியாது.
இதைதான் மலக்குகள் " நீ எங்களுக்கு அறிவித்ததைத் தவிர வேறொன்றையும் நாங்கள் அறியமாட்டோம். நீ மிக்க அறிந்தவனும், ஞானம் உடையவனாகவும் இருக்கின்றாய் ". எனக் கூறினார்கள். திருக்குர்ஆன் 2 : 32

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 7

( சீரற்ற இயக்கத்திலிருந்தும் படிப்பினை )



அமைதியாக ஒரே வேகத்தில் சீராக சென்று கொண்டிருக்கும் ஒரு ரெயில் வண்டியினுள் கதவுகளையெல்லாம் அடைத்துக் கொண்டு உட்கார்ந்து இருக்கும் ஒருவனுக்கு அந்த ரெயில் வண்டி ஓடிக் கொண்டிருக்கிறதா அல்லது நின்று கொண்டு இருக்கிறதா என்பது தெரிய நியாயமில்லை.
உள்ளே உட்கார்ந்து கொண்டு என்ன பதில் சோதனைகள் செய்தாலும் அந்த ரெயில் வண்டியின் வேகத்தை அவனால் கண்டுபிடிக்க முடியாது.
அதே சமயத்தில் சீரான வேகத்தில் சென்று கொண்டிருக்கும் இந்த ரெயில் வண்டியின் டிரைவர் திடீரென்று பிரேக் போட்டார் என்றால், உள்ளே உட்கார்ந்து கொண்டு இருப்பவன் பின்னோக்கி குப்புற விழுவான்.
அப்பொழுது அவன் அந்த ரெயில் வண்டி அந்த நேரம் வரையில் இயங்கிக் கொண்டிருந்ததையும் உணர்ந்து விடுவான்.
அல்லது அந்த ரெயில் வண்டி நேராகச் சென்று கொண்டிருப்பதை விட்டு ஒரு வளைவில் வேகமாக திரும்புமானால், ரெயில் வண்டி வெளிப்பக்கம் நோக்கிச் சாய்வதிலிருந்து உள்ளே இருக்கும் மனிதன் அதன் இயக்கத்தை உணர்ந்து கொள்ள முடியும்.
எனவே, பிரபஞ்சத்தில் உதாரணமாக நமது பூமி மாத்திரம் சீராக இயங்கிக் கொண்டிருப்பதாக வைத்துக்கொண்டால், பூமியில் வாழும் நமக்கு அதன் இயக்கம் தெரியாது;
அதேசமயத்தில், பூமியின் இயக்கத்தில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்படுமாயின், உடனே நமக்கு அதன் இயக்கம் புலனாகிவிடும்.
இதிலிருந்து, நாம் ஒரு பொருளின் இயக்கத்தை அதிலிருந்து கொண்டே அறிய வேண்டுமானால், அப்பொருளின் இயக்கத்தில் ஒரு திடீர் மாறுதல் ஏற்பட வேண்டும் என்பது புலனாகிறது.
ஆகையால் ஒரு சீரான இயக்கத்தை நிர்ணயிக்க அதில் ஏற்படும் சீரற்ற திடீர் மாறுதல் தேவைப்படுகின்றது.
இந்தச் சீரற்ற மாறுதலைக் கொண்டு சீரற்ற இயக்கத்தை நிர்ணயம் செய்யமுடிந்தால், அந்த சீரற்ற இயக்கம் ஒரு தனிப்பட்ட அளவுக் கொள்கை நிலையை அடைந்துவிடுகிறது.
இவ்வாறு தனித்து இயங்கும் ஒரு பொருளின் தனிப்பட்டதோர் இயக்கத்தைச் சூன்யமாக உள்ள பரந்த வெளியின் மூலம் பிரித்து அறியலாம் என்பதும் புலனாகிறது.

பிரபஞ்ச வெளி என்பது ஒன்றுமில்லாத சூன்யம் என்றும், இயக்கம் என்பது எப்போதும் சார்புள்ளதோர் கொள்கை என்றும் நிலைநாட்டிய ஐன்ஸ்டீனுக்கு இந்தச் சீரற்ற இயக்கத்தில் காணப்படும் ஒருமைப்பாடு, மிகுந்த குழப்பத்தை உண்டாக்கியது.

தமது விசேஷ ஒப்புமை தத்துவத்தில், சீராக இயங்கும் பிரபஞ்ச பொருள்களில் இயற்கை விதிகள் எல்லாம் ஒரே மாதிரியானவை என்ற கொள்கை அடிப்படையாக நிற்கின்றது.
மேலும் ஐன்ஸ்டைனின் பிரபஞ்ச இயக்கத்தில் உள்ள ஒருமைப்பாட்டில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவர். சீரற்ற இயக்கத்தை உடைய நிலையில் எந்த அமைப்பின் இயற்கை விதிகளும் ஏனைய சீரான இயக்கங்களுடைய அமைப்புகளின் இயற்கை விதிகளுக்குப் புறம்பாகத்தானே இருக்கும் ?
ஐன்ஸ்டின் இக்கூற்றை ஒத்துக்கொள்ள தயாராக இல்லை. தமது பொது ஒப்புமை தத்துவத்திற்கு அடிப்படையாக அவர் பின்வரும் கொள்கையை வெளியிட்டார்.

"பிரபஞ்சத்தில் இயங்கும் எந்த அமைப்புகளின் இயக்க நிலைகள் எவ்வாறு மாறுபட்டிருப்பினும்,அவற்றின் இயக்க விதிகள் எல்லாவற்றுக்கும் ஒன்றே "
உதாரணமாக, கடல் என்றால் அலை அடிக்கும். கடலில் புயல் கூட மையங்கொண்டு சுனாமி அலை கூட வரலாம். இதெல்லாம் சீரான இயக்கம்தான்.
ஆனால் அதேக் கடல் இரண்டாக பிளந்தால், சீரான இயக்கத்திற்கு மாற்றமான சீரற்ற இயக்கம்தானே ? இது பற்றி குர்ஆனில் இறைவன்...
பிறகு, சூரியன் உதிக்கும் நேரத்தில் (ஃபிர்அவ்னின் கூட்டத்தார்) இவர்களைப் பின் தொடர்ந்தார்கள்.
இவ்விரு கூட்டத்தினரும் ஒருவரையொருவர் கண்டபோது: “நிச்சயமாக நாம் பிடிபட்டோம்” என்று மூஸாவின் தோழர்கள் கூறினர்.
அதற்கு (மூஸா), “ஒருக்காலும் இல்லை! நிச்சயமாக என் இறைவன் என்னுடன் இருக்கிறான். எனக்கு சீக்கிரமே அவன் வழி காட்டுவான்” என்று கூறினார்;.
"உம் கைத்தடியினால் இந்தக் கடலை நீர் அடியும்” என்று மூஸாவுக்கு வஹீ அறிவித்தோம். (அவ்வாறு அடித்ததும் கடல்) பிளந்தது; (பிளவுண்ட) ஒவ்வொரு பகுதியும் பெரும் மலை போன்று ஆகிவிட்டது.
(பின் தொடர்ந்து வந்த) மற்றவர்களையும் நாம்தான் நெருங்கச் செய்தோம்.
மேலும், நாம் மூஸாவையும், அவருடன் இருந்த அனைவரையும் காப்பற்றினோம்.
பிறகு, மற்றவர்களை (ஃபிர்அவ்னின் கூட்டத்தாரை) நாம் மூழ்கடித்து விட்டோம்.
நிச்சயமாக இதிலே அத்தாட்சி இருக்கிறது; எனினும் அவர்களில் பெரும் பாலோர் நம்பிக்கை கொள்பவர்களாக இல்லை. (குர்ஆன் : 26: 60-67)
"பிரபஞ்சத்தில் இயங்கும் எந்த அமைப்புகளின் இயக்க நிலைகள் எவ்வாறு மாறுபட்டிருப்பினும் அவற்றின் இயக்க விதிகள் எல்லாவற்றுக்கும் ஒன்றே "
சீரற்ற இயக்க விதிகளும் கூட இறைவன் விதித்த விதியாகும்

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 8

( மனமும், புலனறிவும் )




லீப்னிட்ஸ் என்பவர் ஜெர்மானிய தேசத்து விஞ்ஞானி , வெளிச்சம் , நிறம், வெப்பம் முதலிய குணங்கள் மாத்திரமின்றிப் பொருளின் உருவம் , இயக்கம் முதலியவை வெறும் தோற்றமே என்பது இவருடைய கொள்கை. ஏனெனில் வெளிச்சம், வெப்பம், நிறம், வெப்பம் , நிறம், உருவம் , இயக்கம் இன்னும் பொருளின் மற்றெல்லாக் குணங்களும் மனிதனுடைய புலன்களின் அறிவாலேயே ஏற்படுகின்றன; மனிதப் புலன் அறிவுக்கும் அப்பால் அப்பொருள் பொருளே அல்ல !

ஒரு "பொருள் " என்று நாம் குறிப்பிடுவது அப்பொருளினுடைய குணங்களின் கூட்டுத்தொகை . அக்குணங்களை உணருவது நம்புலன்கள். நம் புலன்களை இயக்குவது நம் மனம். ஆகவே நம் மனம்தான் வெளிப் பொருளைப் பற்றிய குணங்களின் இருப்பிடம் .
சக்தியும், பொருளும் , அணுவும் , அண்டமும் நிறைந்து காணப்படும் இப்பரந்த பிரபஞ்சம் முழுவதும் நம் மனத்தால் உண்டாக்கிய சிருஷ்டி ! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள் மனோ விகாரத்தைக் களைந்து விட்டு நோக்கினால் , இப்பிரபஞ்சம் இல்லை - அது ஒன்றுமில்லாத ஒரு சூன்ய வெளி !
பெர்க்கலே என்கிற விஞ்ஞானி, "மண்ணுலகிலும், விண்ணுலகிலும் நிறைந்து கிடப்பதாகத் தோன்றும் அத்தனைப் பொருள்களுக்கும் , என்னுடைய மனமே,உருவம் கொடுக்கிறது .என்னால் , என் மனத்தால் அவை உணரப்படாத வரையில் அவற்றின் உருவங்கள் அனைத்தும் அருவமே " என்கிறார்

**ஆல்பர்ட் ஐன்ஸ்டின்** , " பொருள்களின் நிறத்தையும் , உருவத்தையும் எவ்வாறு மனத்தின் உணர்வாக நாம் கருதுகிறோமோ அதே மாதிரியான மன உணர்வுதான் காலமும் , இந்த பரந்த வெளியும்.
இந்த பரந்தவெளியை நாம் உணர்வது எப்போது ...? இப் பரந்த வெளியில் உள்ள பொருள்களின் அமைப்பை நாம் உணரும் போதுதானே இப் பரந்த வெளியையும் உணருகிறோம் ? அதே வகையில் பொருள்களில் ஏற்படும் நிகழ்ச்சிகளை வரிசைப் பிரகாரம் அளக்க முற்படும்போதுதானே காலத்தை உணருகிறோம் .
"காலம் " என்பதும் நம் மனத்தின் உணர்வே. சுதந்திரமான , தனிப்பட்டதோர் நிலை பரந்த வெளிக்கும் இல்லை, காலத்திற்கும் இல்லை .
பொருள்கள் அடங்கியுள்ள அண்டமே இப் பரந்த வெளி . பொருள்களில் ஏற்படும் நிகழ்ச்சிக் குறிப்புகள் காலப் பிரமாணத்தால் கணக்கிடப்படுகின்றன . ஆகையால் பரந்தர வெளியும், காலமும் பொருளின் அடிப்படையில் எழுந்தவை.
பொருளைப் பற்றிய உணர்வு நம் மனத்தால் உண்டாகிறது .ஆகவே பொருளின் அடிப்படையில் எழுந்த பரந்த வெளியும், காலமும் மனத்தின் உணர்வால் உண்டாகின்றன என்று நான் சொல்வதில் உங்களுக்கு அபிப்பிராயபேதம் இருக்க நியாயமில்லையே !
அணுவும், அண்டமும், பொருளும், பிரபஞ்சமும் , காலமும் வெளியும் நம் மனத்தின் உணர்வால் எழுந்த மகத்தானதொரு மாய மாளிகை !
நம் புலன்களின் அறிவால் கட்டுப்படுத்தப்பட்ட நமது மனத்தின் உணர்வுக்கும் அப்பால் சென்று விட்டால்.., அணுவும் இல்லை அண்டமும் இல்லை , பொருளும் இல்லை இப் பிரபஞ்சமும் இல்லை. காலமும் இல்லை இப் பரந்த வெளியும் இல்லை.
" இறைவனே ! நீ எதற்காக படைப்பினங்களைப் படைத்தாய் ?" என்று தாவூத் (அலை) அவர்கள் இறைவனிடம் கேட்டதற்கு ,
" நீ இருப்பது என்னால் வெளிப்பட்டது .
நான் இருப்பது உன்னால் உண்டாக்கப்பட்டது .
என்னாலேயன்றி நீ வெளியாக்கப்பட்டிருக்க மாட்டாய்.
உன்னாலேயன்றி நான் உண்டாக்கப்பட்டிருக்க மாட்டேன் "
(மீள் பதிவு)

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 9

( பிரபஞ்ச மனம் )

இயற்கை எதை எல்லாம் உணர்ந்ததோ; அதுவே இன்றைய இப்போதைய பிரபஞ்சம். இயற்கை உணர்ந்த அனைத்தும் பிரபஞ்ச அணுவில் புதைந்து கிடக்கிறது. அதுவே பிரபஞ்ச மனது.
பிரபஞ்சம் இயங்கும் விதம் அந்த பதிவுகளை பொருத்ததே ஆகும். பிரபஞ்ச மனதின் மேம்பட்ட பரிணாம வளர்ச்சியே மனித மனம். இயற்கை எதை உணர்கிறதோ அதை நம் மனது வடிவமைக்கிறது.
நம் உடல் பஞ்ச பூதங்களால் கட்டமைக்கப்பட்டது. எனவே நாமும் இயற்கைதான். நாம் எதை உணர்கிறோமோ அது மனதால் வடிவமைக்கப்படுகிறது.

மனிதன் ஒரு சிறிய பிரபஞ்சம்; அண்டத்தில் உள்ளதே பிண்டத்தில்...பிரபஞ்ச மனம் இயற்கையை கட்டுப்படுத்த மனித மனமாக, பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளது. அவ்வளவுதான்.
மனித மனம் இப்படி பல்வேறு மாயையில் சிக்குண்டு சுயநலம் கொள்ளும் என்று தெரிந்திருந்தால், பிரபஞ்ச மனம் பரிணாம வளர்ச்சியே அடைந்திருக்காது.
கவனம் குவியும் இடத்தில் சக்தி பாயும், எதை பாவிக்கிறாயோ அது அப்படியே ஆகும்.
நாளை நடக்கப்போகும் விபத்து, என்றோ ஏற்பட்ட நிகழ்ச்சியின் தாக்கமே.
மனது எண்ணங்களை உருவாக்கி, உடல் அணுக்களை குறிப்பிட்ட அலைவரிசையில் அதிரச் செய்து, பிரபஞ்ச அணுக்களின் தன்மையை மாற்றி தனக்கு தேவையானதை வடிவமைத்துக் கொள்கிறது.

இதிலிருந்து மனிதன் தான் இயற்கையால் கட்சிதமாக வடிவமைக்கப்பட்ட மேம்பட்ட சக்தி என்பதை உணர்ந்துகொள்ளலாம்.

மனக் கட்டுப்பாடு பற்றி நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தந்த பின்வரும் பிரார்த்தனை
“அல்லாஹ்வே! உன் அருளை நான் வேண்டுகிறேன். கண்சிமிட்டும் நேரம்கூட என்னை என் மனதில் கட்டுப்பாட்டில் விட்டுவிடாதே. என் விவகாரங்கள் அனைத்தையும் சீர்படுத்துவாயாக. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை”
“உள்ளங்களைப் புரட்டக்கூடியவனே ! என் உள்ளத்தை உன் மார்க்கத்தின் மீது நிலைபெறச் செய்வாயாக”
இதுவும் நபியவர்கள் அடிக்கடி கேட்ட பிரார்த்தனைகளுள் ஒன்று.
மனித மனம் தடுமாறக்கூடியது. அது எந்தவொன்றுக்கும் மிக இலகுவாக அடிமையாகிவிடும். அறிவு ஆலோசனை மட்டுமே அளிக்கக்கூடியது. கட்டுப்படுத்தும் ஆற்றல் அதற்கு இல்லை.
மனம் அந்த ஆலோசனையை ஏற்கலாம். ஏற்காமல் நிராகரிக்கவும் செய்யலாம். அந்த அறிவைக் கொண்டே தன் நிலைக்கு ஆதரவாக வாதாடவும் செய்யலாம்.

மனதின் நிலையற்ற தன்மையை மனிதன் உணர வேண்டும். அது எப்போது வேண்டுமானாலும் காதலில் வீழ்ந்துவிடலாம், சிற்றின்பப் பாவத்தில் மூழ்கிவிடலாம். ஒன்றில் அது நிலைபெற்றுவிட்டால் எதிர்ப்புகளையோ வசைகளையோ இழிவுபடுத்தல்களையோ அது கொஞ்சம் கூட பொருட்படுத்தாது .
அவற்றை தன் நோக்கத்தை நிறைவேற்றுவதன் பாதையில் கிடக்கும் தடைக்கற்களாகக் கருதி, அது முன்னேறிக் கொண்டே செல்லும். அதன் பாதையில் தன் உயிரையே இழக்கும் சூழ்நிலை ஏற்பட்டாலும் கூட மனமது பின்வாங்காது.

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 10

( ஆதிமூல சக்தி )



பழம்பெரும் கிரேக்கர்கள் காலத்தில் இருந்து நூறு ஆண்டுகளுக்கு முன்பு வரையில் மின்சாரமும், காந்தமும் தனித்தனியானவை என்று கருதப்பட்டு வந்தன.
19- வது நூற்றாண்டில் ஆர்ஸ்டெட் , ஃபாரடே போன்ற விஞ்ஞான மேதைகளின் பரிசோதனைகள் மூலம் ஒரு மின்னோட்டத்தைச் சுற்றி எப்போதும் ஒரு காந்த பிரதேசம் வியாபித்துக் கொண்டே இருக்கும் என்ற உண்மையும், குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஒரு காந்த பிரதேசத்திலிருக்கும் சக்தியின் மூலம் மின்சக்தியைத் தூண்டி ஒரு மின்னோட்டத்தை உண்டுபண்ண முடியும் என்கிற உண்மையும் வெளிப்பட்டன.
அப்போதிலிருந்து மின்சக்திக்கும், காந்த சக்திக்கும் உள்ள ஒற்றுமையும், ஒருமைப்பாடும் புலப்பட ஆரம்பித்தன.
அந்த உண்மைகளிலிருந்து மின்காந்தப் பிரதேசம் என்பது என்ன என்ற விஷயம் புலனாயிற்று.
மின்காந்த பிரதேசத்தின் மூலம் ஒளி அலைகளும், (ஒலி ) ரேடியோ அலைகளும் , மின்காந்த அதிர்ச்சிகளும் அகண்ட வெளியில் பரவுகின்றன என்ற உண்மையும் வெளிப்பட்டது. ஆக மின்சக்தியும், காந்த சக்தியும் ஒரே சக்தியாக கருதலாம்.

ஆகர்ஷண சக்தி **( Gravitational Force )** , மூலக்கூறுகளில் **( Molecules )** அணுக்களைச் சேர்த்து இணைத்து வைக்கும் ரசாயன சக்தி, பொருள்களில் பெரிய துகள்களைக் கவர்ந்து கட்டிப்பிடிக்கும் சக்தி **(Cohesive Force ),** பொருள்கள் தங்களுடைய உருவங்களைப் பாதுகாக்க பயன்படும் சுருங்கி விரியும் தன்மை, இவையெல்லாம் மின்காந்த சக்தியின் அடிப்படையில் ஏற்பட்டவை.
ஆகர்ஷண சக்தி **( Gravitational Force ) ,** ஒன்றே இந்த மின் காந்த சக்திக்கு அப்பாற்பட்டதாகக் காணப்படுகிறது. ஆகர்ஷண சக்தியைத் தவிர மேலே குறிப்பிட்ட சக்திகள் அனைத்தும் மின் காந்த சக்தியின் அடிப்படையில் எழுந்தவை.
பொருள்கள் அணுக்களால் ஆனவை. அணுக்களில் மின்சக்தி வாய்ந்த துகள்கள் உள்ளன. பொருட்கள் ஒன்றுக்கொன்று உறவாடும் போது ஏற்படும் சக்திகளே மேலே குறிப்பிட்ட சக்திகள். மின்துகள்களால் ஆன அணுக்களைக் கொண்ட பொருள்கள் உறவாடும் போது ஏற்படும் அச்சக்தின் மின் காந்த சக்தியின் அடிப்படையில் தானே உண்டாயிருக்க வேண்டும் ?
இது ஒருபுறமிருக்க, இதுநாள்வரையில் சம்பந்தமற்றதாகக் கருதப்பட்டு வந்த மின்காந்த சக்திக்கும், ஆகர்ஷண சக்திக்கும் உள்ள ஒற்றுமைகள் பிரமிக்கத் தக்கவை. பூமியும் மற்ற கிரகங்களும் சூரியனுடைய ஆகர்ஷண சக்திப் பிரதேசத்தில் சுற்றிச்சுழன்று வருகின்றன.
அணுவில் இருக்கும் எலக்ட்ரான்கள் என்று சொல்லப்படும் மின்துகள்கள் மின்காந்தப் பிரதேசத்தில் அணுவின் உட்கருவைச் சுற்றி வட்டமிடுகின்றன. அணுவில் அண்டம் !

ஆகர்ஷண சக்திப் பிரதேசத்தில் அண்டத்தின் இயக்கம், மின்காந்த பிரதேசத்தில் அணுவின் இயக்கம் !
1949-ல் ஐன்ஸ்டீன் ஐக்கிய வெளித்தத்துவத்தை வெளியிட்டார். அதன் விளைவாக எண்ணிலடங்காத நட்சத்திர மண்டலங்கள் பவனிவரும் எல்லையற்ற ஆகாச வெளியில் உணரப்படும் ஆகர்ஷண சக்தியையும், கண்ணுக்கு புலப்படாத நுண்ணிய அளவில் உணரப்படும் பயங்கர மின்காந்த சக்தியையும் ஒரே தத்துவத்தில் அடக்க முடிந்துவிட்டது !
இடையூறாத கணித ஆராய்ச்சிகளின் மூலமும் பரிசோதனைகளின் மூலமும் இந்த ஐக்கிய வெளிதத்துவத்தின் மகத்தான லட்சியத்தை அறிந்துகொள்ளப் பல ஆண்டுகள் ஆகலாம். அத்தத்துவம் நமக்கு காட்டும் அகண்டமான பிரபஞ்சப் படத்தில், பிரம்மாண்டத்திற்கும் பரமாணுக்கும் இடையில் உள்ள ஆழங்காண முடியாத இடைவெளியை இணைத்து விடும் பாலத்தை நாம் இப்போது காண்கிறோம்.
சிக்கலான இப்பிரபஞ்சத்தை வேற்றுமையற்ற, கலப்பில்லாத ஒரே சக்தியின் அல்லது பொருளின் அற்புத உருவமாக பார்க்கிறோம்.

பரந்த வானவெளியில் ஊர்ந்து செல்லும் பிரபஞ்சத் தீவுகள் என்று சொல்லப்படும் நட்சத்திரக் கூட்டங்களின் இயக்கமும், பிரமிக்கத்தக்க வேகத்துடன் பறந்து கொண்டிருக்கும் மின் அணுக்கள் உடைய அணுவில் காணப்படும் பயங்கர
இயக்கமும், ஆதிமூல சக்தியின் வெவ்வேறு அமைப்புகளின் மாறுபட்ட தோற்றங்களே என்னும் உண்மை இப்போதுதான் விஞ்ஞானத்திற்கு புலப்பட்டிருக்கிறது.
இந்த ஆதிமூல சக்தியின் கட்டுப்பாட்டில்தான் பிரபஞ்சத்தின் ஒவ்வொரு அணுவும் இயங்கிக் கொண்டிருப்பதை ஐக்கிய வெளித் தத்துவத்தின் நிருபணத்தின் மூலம் விஞ்ஞான உலகம் கண்டுகொண்டது .
ثُمَّ اسْتَوٰٓى اِلَى السَّمَآءِ وَهِىَ دُخَانٌ فَقَالَ لَهَا وَلِلْاَرْضِ ائْتِيَا طَوْعًا اَوْ كَرْهًا قَالَتَآ اَتَيْنَا طَآٮِٕعِيْنَ
பின்னர், வானத்தைப் படைக்கக் கருதினான். அது ஒருவகை புகைதான். அதனையும் பூமியையும் அவன் நோக்கி "நீங்கள் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி (வழிபட்டு) என்னிடம் வாருங்கள்" என்று கூறினான். அதற்கு அவைகள், "இதோ நாங்கள் விருப்பத்துடனேயே வந்தோம்" என்று கூறின. (குர்ஆன் : 41:11)

**விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 11**

( வானமும் , தராசும் )



"அவனை வானத்தை உயர்த்தினான்; மேலும் தராசை அமைத்தான். ஆகவே நீங்கள் நிறுவையில் கூட்டியோ குறைத்தோ வரம்புமீறாதீர்கள் . நீங்கள் நீதமாக நிறுங்கள் . எடையைக் குறைத்து விடாதீர்கள் . படைப்புகள் வசித்திருக்க வசதியாகத்தான் பூமியை அமைத்தான். குர்ஆன் (55 : 7- 10 )
வானத்திற்கும் தராசிற்கும் அப்படி என்ன தொடர்பு ?
ஐசக் நியூட்டன் அவர்களின் புகழ் வாய்ந்த கண்டுபிடிப்பாகிய அகிலத்தின் ஈர்ப்பாற்றல்
**(The law of Universal Gravitation)** விதி
"பேரண்டத்திலுள்ள பொருட்களின் துகள்கள் ஒவ்வொன்றும் மற்ற பொருட்களின் துகள்கள் ஒவ்வொன்றையும் அவைகளின் பொருண்மையின் மதிப்பிற்கு நேர் விகிதத்திலும் அப்பொருட்களின் மையங்களுக்கு இடையிலுள்ள தூரங்களுக்கு எதிரிடையான வர்க்க விகிதத்திலும் ஈர்க்கின்றன.
இதைச் சற்று எளிதாகக் கூறினால் பொருட்களுக்கு இடையிலுள்ள தூரம் கூடும்போது, அவைகளுக்கு இடையிலுள்ள ஈர்ப்பாற்றல் குறைந்து கொண்டே வரும் என்பது ஈர்ப்பாற்றலின் விதியாகும்.
எனவே பூமியிலிருந்து ஒரு பொருள் தூரமாக (அல்லது உயரமாக) எடுத்துச் செல்லும்போது பூமியின் ஈர்ப்பு விசையின் செயற்பாடு அப்பொருளின் மீது குறைந்து கொண்டே வந்து முடிவில் அடையாளம் தெரியாத அளவிற்கு குறைந்துவிடும்.
பூமியிலிருந்து மேலே செல்லச் செல்ல புவியின் பூமியின் ஈர்ப்பு குறைகிறது. ஒரு கிலோகிராம் (1000 கிராம் ) எடையுள்ள ஒரு பொருள், 6400 கிலோமீட்டர் உயரத்திற்கு அதாவது பூமியின் மையத்தில் இருந்து பூமியின் ஆரத்தை (3200 கிலோமீட்டர் ) போல் இரண்டு மடங்கு அளவு உயரத்துக்கு தூக்க முடியுமானால், அந்த இடத்தில் ஈர்ப்பு சக்தி இரண்டு ஸ்கொயர் = 4 ; நான்கு மடங்கு பலவீனமாகி விடுகிறது. 1000/4 = 250 கிராம் .அப்போது 1000 கிராம் எடையுள்ள பொருள் வெறும் 250 கிராம்தான் காண்பிக்கும் .

அதே பொருளை பூமியின் மேற்பரப்பிலிருந்து அதாவது பூமியின் ஆரத்தைப் போல் மூன்று மடங்கு ( 3200 x 3 ) = 9600 கிலோ மீட்டர் உயரத்தில் வைத்து நிறுத்தால், 3 ஸ்கொயர் = 9
1000 / 9 = 111 கிராம்தான் இருக்கும்.
பூமியின் ஆரத்தைப் போல் நான்கு மடங்கு 3200 x 4 = அதாவது 12.800 கிலோ மீட்டர் உயரத்தில் வைத்து நிறுத்தால், 1000 கிராம் எடையை நிறுத்தால் 4 ஸ்கொயர் = 16 அதாவது1000 / 16 = 6 2.5 கிராம்தான் இருக்கும் .
அடுத்து பூமியில் இருந்து 36 ஆயிரத்து 290 கிலோ மீட்டர் உயரத்தில் பூமத்திய ரேகைக்கு மேலே பூமியோடு உடன் சுற்றும் பாதையில் சர்வதேச விண்வெளி ஆராய்ச்சி நிலையம் உள்ளது அதில் சுனிதா வில்லியம்ஸ் என்கிற இந்திய வம்சாவளி பெண் இரண்டாவது முறையாக அங்கு சென்றுள்ளார். விண்வெளி ஆராய்ச்சி நிலையத்தை ஒட்டி விண்வெளி காலணிகளை அமைக்கலாம் என்ற ஆய்வு நடைபெறுகிறது .
சர்வதேச விண்வெளி மையம் பூமியில் இருந்து 36,290 கிலோமீட்டர் அதாவது 36,290 / 3200 = 11 மடங்கு 36,290 கி.மீ உயரத்தில் பூமியின் ஆரத்தை போல் 11 மடங்கு அதிகமான உயரத்தில் அங்கு நிறுவப்பட்டுள்ளது . அங்கு உள்ள ஈர்ப்பு சக்தி 11 ஸ்கொயர் 121 ஒரு மடங்கு பலவீனமாக இருக்கும் அதாவது ஒரு கிலோ 1000 கிராம் வகுத்தல் 121 = 8 கிராம்தான் இருக்கும் .
காரணம் ஈர்ப்பு விதியின்படி பூமி தனது முழு நிறையும் (எடை) தன் மையத்தில் குவிந்து இருப்பது போன்று பொருள்களைக் கவர்ந்து இருக்கிறது. இக் கவர்ச்சியை சக்தி தொலைவின் வர்க்கத்திற்கு எதிர் விகிதத்தில் குறைகிறது என்பது உண்மை

இதனால்தான் குர்ஆனில் வானத்தை உயர்த்தினான், தராசை அமைத்தான் என்கிற வசனம் புவியீர்ப்பு விசையின் தன்மையை விளக்க வந்த வசனமாக நவீன விஞ்ஞானத்திற்கு தெரியவருகிறது.
இருப்பினும் அப்பொருட்களுக்கு எந்த இடத்தில் எடை இழப்பு ஏற்பட்டதோ அந்த இடத்தில் ஈர்ப்பாற்றலே இல்லை என்பது அதன் பொருளன்று. அதே இடத்தில் அதைவிட அதிகப் பொருண்மையுள்ள மற்றொரு பொருள் கொண்டு செல்லப்பட்டால், அப்பொருள் பூமியால் ஈர்க்கப்படுவதால் அதற்கு எடை இருக்கவே செய்யும்.
ஏனெனில் ஈர்ப்பாற்றலின் விதிப்படி பொருட்களின் பொருண்மை கூடும்போது, அவைகளுக்கிடையிலுள்ள ஈர்ப்பாற்றலும் கூடும் என்பதாகும்.
இப்போது நமது எடுத்துக்காட்டில் கூறப்பட்ட பொருட்களுக்கு எடை இழப்பு ஏற்பட்டது. திருக்குர்ஆனுடைய அறிவியலுக்கு முரண்படவில்லை என்பதைத் தெளிவாக விளங்கிக் கொண்டோம்.
மேலும் நமது நிலவும் இதற்கு ஒரு எடுத்துக்காட்டாகும். நிலவின் பொருண்மை பூமியின் பொருண்மையில் 1/81 பங்கு இருப்பதால், அது பூமியிலிருந்து ஏறத்தாழ 3,84,000 கிலோ மீட்டருக்கு அப்பால் இருந்தபோதிலும், நமது பூமியின் ஈர்ப்பாற்றல் அதன்மீது செயல்படுகிறது.

(சந்திரன் பூமிக்கு மிக அருகாமையில் இருக்கும்போது சந்திரனுக்கு உள்ள தொலைவு 3,56,509 கிலோ மீட்டர். மிகத் தொலைவில் இருக்கும்போது சந்திரனுக்கு உள்ள தூரம் 4,06,662 கிலோ மீட்டர்)
எனவே அது பூமியின் துணைக் கோளாக கோடிக்கணக்கான வருடங்களாக இயங்கிக்கொண்டிருக்கிறது. நமது அன்றாட வாழ்க்கையிலிருந்தும் இதற்குரிய சான்றுகளைக் காணலாம்.

ஒருவர் பத்து கிராம் எடையுள்ள ஒரு தங்க மோதிரத்தை வாங்கும் போது அதை எடை போட்டே வாங்குகிறார். அந்த மோதிரத்தைக் கொண்டுபோய் பார ஊர்திகளை எடைபோடும் எடை மேடையில் (Weigh bridge) எடைபோட முயன்றால் அந்த எடைமேடை மோதிரத்தின் எடையைக் காட்டாது. இதற்காக எடைமேடையை, எடை காட்டும் கருவி இல்லை என்றோ அல்லது மோதிரத்திற்கு எடை இல்லையென்றோ நாம் கூறுவது இல்லை.
இதைப் போன்றே நமது எடுத்துக்காட்டில் கூறப்பட்ட பொருட்களுக்கு விண்வெளியில் எடை இழப்பு நேர்ந்த போதும் விண்வெளியில் ஈர்ப்பாற்றல் இல்லை என்று நாம் கூறுவதில்லை.
இந்த அத்தியாயத்தில் இதுவரை நாம் விவாதித்த விபரங்களைச் சரியாகக் கவனம் செலுத்தி, அதன் பிறகு இங்கு ஆய்வு செய்த திருக்குர்ஆன் வசனங்களை (55:7-9) மீண்டும் பார்வையிட்டால், அத்திருமறை வசனங்கள் எவ்வளவு அற்புதமான அறிவியல் உண்மைகளைத் தாங்கி நிற்கிறது என்பதை எளிதாக விளங்கிக் கொள்ளலாம்.
திருக்குர்ஆன் இந்த அறிவியல் உண்மையை ஏழாம் நூற்றாண்டில் கூறி இருந்தும்கூட அறிவியல் உலகம் இதைக் கண்டுபிடிக்க பதினெட்டாம் நுற்றாண்டில் தோன்ற வேண்டிய உலகின் மிகச் சிறந்த அறிவியலாளராம் ஐசக் நியூட்டனுக்காகக் காத்திருக்க வேண்டி இருந்ததெனில் இம்மாமறையின் இறைஞானத்திற்கு இது ஒரு வலுவான அறிவியல் ஆதாரமல்லவா?
இப்போது சொல்லுங்கள் வானத்திற்கும், தராசிற்கும் தொடர்பு என்பது அகிலத்தின் ஈர்ப்பாற்றல் குறித்த குறியீடுதானே !

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 12

( அந்த நிலா )




நிலவில் மனிதன் முதன்முதலாக கால்பதித்து 50 ஆண்டுகள் நிறைவடைந்துள்ளது. நிலவை ஆய்வு செய்யும் இந்தியாவின் சந்திராயன்-2 விண்ணில் ஏவப்பட்டது.
ஒட்டுமொத்த அண்டவெளியில் நமது பூமிக்கு மிக அருகில் இருக்கும் விண்பொருள் நிலாதான். ஆனால் நிலவைப் பற்றி நாம் அறிந்துள்ளவை மிகக் குறைவே. வேண்டுமானால், உங்கள் சுற்றத்தில் இந்த உரையாடலை நிகழ்த்திப் பாருங்கள்:
“தரை தளத்திலிருந்து மொட்டை மாடியை எப்படிப் பார்ப்பீர்கள்?”
“அண்ணாந்து பார்ப்போம்”
“மொட்டை மாடியிலிருந்து தரைத் தளத்தை பார்க்கும் போது?”
“குனிந்து பார்ப்போம்”
“இங்கிருந்து நிலவை எப்படிப் பார்ப்பீர்கள்?”
“அண்ணாந்து பார்ப்போம்”
“நிலவிலிருந்து பூமியை எப்படிப் பார்ப்பீர்கள்?”
இந்தக் கேள்விக்கு “குனிந்து” என்று நம்மில் பெரும்பாலானோர் தவறாக பதிலளிப்போம்.
அப்படியானால், இந்த பூமி உருண்டையில் இந்தியாவில் நாம் நேராக நிற்கும் போது , அமெரிக்கர்கள் தலைகீழாகவா நடக்கிறார்கள் ? இல்லையே. அங்குள்ள அட்லாண்டிக் கடல் தலை குப்புறவா கவிழ்ந்து விட்டது ? இல்லையே இது எப்படி ?

விண்வெளியில் மேல்-கீழ் என்ற பாகுபாடு இல்லைவே இல்லை. உள்ளபடியே " செங்குத்து " ( Vertical ) சித்தாந்தம் அண்ட வெளிக்கு அறவே பொருந்தாது. அங்கே ஒவ்வொரு கோளகத்தில் ஒவ்வொரு எதிரெதிர் விட்டப்புள்ளிகளும் ஒன்றுக்கொன்று செங்குத்தானவை.
பூமியில் நம் தலை உச்சிக்கு நேர்மேலே தெரியும் சந்திரன் .சந்திரனில் நீங்கள் நின்று அண்ணாந்து நோக்கினால்தான் பூமி தெரியும்.
பூமியும் சந்திரனும் மற்ற கோள்களும் மேசை மாதிரியோ அல்லது தோசை மாதிரியோ தட்டையான பரப்பு உடையவை அல்ல. மேல் பாகம் , கீழ் பாகம் என்ற பாகு பேதம் அவற்றுக்குக் கிடையவே கிடையாது
நிலா கோள வடிவிலானது என்று அறிந்திருந்தும் கூட நமது பார்வைக் கோணத்தில் வட்ட வடிவிலான தட்டாக மூளையில் பதிவுபெற்றிருப்பதே இதற்கு காரணம்.
நிலவானது பூமியை வட்டப்பாதையில் சுற்றவில்லை; நீள்வட்ட பாதையில் சுற்றிவருகிறது. ஒருமுறை நமக்கு அருகிலும் மற்றொரு முறை தொலைவிலுமாக பூமியிலிருந்து அதன் தொலைவு மாறிக்கொண்டே இருக்கிறது. அதனாலேயே சில முழுநிலவு நாட்களில் நிலா பெரிதாகவும் சில நாட்களில் சிறிதாகவும் தெரிகிறது.
நிலா பூமிக்கு மிக அருகில் இருக்கும் போது அதன் தொலைவு 3 இலட்சத்து 56 ஆயிரம் கிலோமீட்டராகவும் , தொலைவிலிருக்கும் போது 4 இலட்சத்து 6 ஆயிரம் கிலோமீட்டராகவும், சராசரியாக 3 இலட்சத்து 84 ஆயிரம் கிலோமீட்டராகவும் உள்ளது.

கன்னியாகுமரிலிருந்து காஷ்மீர்-கார்கிலுக்கு கழுகு பறப்பதைப் போல் நேர்கோட்டுப் பாதையில் மணிக்கு 100 கிலோமீட்டர் வேகத்தில் சென்றால் சுமார் 30 மணிநேரம் பிடிக்கும்.

இதே100 கிலோமீட்டர் வேகத்தில் நிலவிற்கு சென்றால் 3840 மணிநேரம் அதாவது 160 நாட்கள் பிடிக்கும். அதாவது கன்னியாகுமரிலிருந்து காஷ்மீர் கார்கிலுக்கு 64 முறை போய் வரும் நேரம்.
ஆனால் அப்பல்லோ-11 விண்கலத்தில் சென்ற நீல் ஆம்ஸ்ட்ராங்கும், பஸ் ஆல்ட்ரினும் 3 நாட்கள் 4 மணிநேரத்தில் சென்றடைந்தனர். இதுவரை 12 மனிதர்கள் மட்டுமே நிலவில் கால் பதித்துள்ளனர்.
சோவியத் ரஷ்யா, அமெரிக்கா, சீனா, இந்தியா ஆகிய 4 நாடுகள் மட்டுமே நிலவில் ஆய்வுக்கலத்தை இறக்கியுள்ளன.
இந்தியாவின் சந்திராயன்-2, நிலவை ஆராய்கிறது.
நிலா ஒரு முறை பூமியை சுற்றி வருவதற்குள் பூமி தோராயமாக 28 முறை தன்னைத் தானே சுழன்றிருக்கும். அதாவது, 28 நாட்கள்.
நிலா சூரியனின் திசையில் இருக்கும் போது அது இரவில் தெரிவதில்லை. சூரியனுக்கு எதிர்த்திசையில் இருக்கும்போது இரவில் தெரிகிறது. இந்த சுழற்சியின் நிகழ்வுகளே புதுநிலவு (அமாவாசை), முழுநிலவு (பௌர்ணமி).
நீல் ஆம்ஸ்ட்ராங்கும், பஸ் ஆல்ட்ரினும் நிலவில் காலடித் தடத்தை மட்டும் விட்டுவிட்டு வரவில்லை. எதிரொளிப்பான் ஒன்றையும் நிலவில் விட்டுவிட்டு வந்துள்ளனர்.
அந்த பிரதிபலிப்பானை குறிவைத்து ஒரு லேசர் ஒளிக்கற்றை அனுப்பப்படுகிறது. ஒளி கற்றை பிரதிபலிப்பானில் பட்டு திரும்பிவர எடுக்கும் நேரத்தைக் கொண்டு பூமி நிலவிற்கிடையிலான தொலைவு அளக்கப்பட்டு வருகிறது.
ஒவ்வொரு ஆண்டும் நிலா, பூமியை விட்டு 4 மில்லி மீட்டர் – அதாவது நம் நகக்கண் அளவு விலகிச் செல்கிறது. ஆயிரம் ஆண்டுகளுக்கு 4 மீட்டர். பத்து லட்சம் ஆண்டுகளுக்கு 4 கிலோ மீட்டர் நகரும்.
இதற்கு காரணம் நியூட்டனின் மூன்றாம் விதி. நிலவின் ஈர்ப்பு விசை பூமியிலுள்ள கடல் மற்றும் நீர்பரப்புகளில் அலைகள் ஏற்பட காரணமாக உள்ளது. இவ்வலைகள் நிலவின் மீது எதிர்விசையை – விலக்கு விசையை உண்டாக்குகின்றன.
இந்த விகிதத்தில் நிலா விலகிச் சென்றால், அது முழு நிறைவாக சூரியனை மறைத்து – முழு நிறைவான சூரிய கிரகணம் ஏற்படாது; நமது கடல்கள் அலைகளின்றியும் போகலாம்; இது பூமியின் பல்லுயிர் சூழலை பாதிக்கும். ஆனால் இது ஏற்படுவதற்கு சுமார் 50 கோடி ஆண்டுகள் பிடிக்கும். அன்று நிலா சுமார் இரண்டாயிரம் கி.மீட்டர்கள் நகர்ந்திருக்கக் கூடும். அன்று நமது புதுநிலவு – முழுநிலவு (அமாவாசை-பௌணர்மி) இடையினான நாட்கள் அதிகரித்திருக்கவும் கூடும் என்பதாக விஞ்ஞானம் கூறுகிறது
...ஆனால் நபி (ஸல்) அவர்கள் அந்த நிலவையே இரண்டு துண்டாகப் பிளந்து , பின் இரண்டு துண்டடையும் சேர்த்தார்கள். இதனால் பூமியில் எவ்வித மாற்றமும், எந்த ஆபத்துக்களும் நிகழவில்லை .
நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்வதற்கு 5 ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் அபுஜஹில் , அல் ஆசிப், வலீது இப்னு முஹைரா, அஸ்வத் இப்னு முத்தாப், நழ்ர் இப்னு ஹாரிஸ் இவர்கள் அத்தனை பேரும் நபி (ஸல்) அவர்களின் அற்புதங்களைப் பற்றி, வேதங்கள் தெரிந்த ஒரு யூதனிடம் வினவுகின்றனர்.
அவன் , "முஹம்மதுடைய மாயங்கள், சித்து விளையாட்டுகள் மண்ணில்தான் பலிக்கும் . விண்ணில் முடியாது. உடனே அபுஜஹில் தலைமையில் இக்கூட்டம் " மினா " என்ற இடத்தில் நபி (ஸல்) அவர்களை சந்தித்து . "இன்று முழு பௌர்ணமி நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்றால், இந்த முழு நிலவை இரண்டாக பிளக்க வேண்டும்.
நபி (ஸல்) அவர்கள் தங்கள் ஆள்காட்டி விரலினால் சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தார்கள்
அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. (பிளவுண்ட சந்திரனின்) ஒரு துண்டு மலைக்கு மேலேயும் மற்றொரு துண்டு மலைக்குக் கீழேயும் சென்றது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நீங்கள் சாட்சியாக இருங்கள். என்று கூறினார்கள்.
ஸஹீஹ் புகாரி : 4864.
சந்திரன் இரண்டாக பிளந்தது .பின் நபி (ஸல்) அவர்கள் அதே ஆள்காட்டி விரலாலேயே பிளந்த சந்திரனையும் சேர்த்தும் வைத்தார்கள். நிலா பிளந்து பின் சேர்த்திருப்பதையும் அதே விஞ்ஞானம்தான் கண்டு பிடித்திருக்கிறது.
சேரமான் பெருமாள் பாஸ்கர ரவி வர்மா என்ற சேர நாட்டு மன்னர் கி.பி ஆறாம் நூற்றாண்டில் சேர நாட்டை ஆண்டு வந்தார்.
அவர் ஒரு நாள் இரவு வானில் நிலவு இரண்டாக பிளந்து மறுபடியும் ஒன்று சேர்வதை கண்டார். இதை பற்றி விசாரிக்கும் பொழுது அங்கு வியாபார நோக்கமாக வந்த அராபியர் கூட்டம் மூலம் நபி (ஸல்) அவர்களைப் பற்றியும், இஸ்லாம் மதத்தை பற்றியும் கேள்விப்பட்டனர்.
மேலும் அவர்கள் கூறிய செய்திகளிலால் ஈர்க்கப்பட்ட சேரமான் பெருமாள், அந்த அரபியார் கூட்டத்துடனேயே மெக்காவிற்கு சென்று நபி (ஸல்) அவர்களைச் சந்தித்தார். அதன் பிறகு இஸ்லாம் மதத்தை ஏற்ற சேரமான் பெருமாள் தாஜுதீன் எனவும் பெயர் மாற்றம் பெற்றார் என்பதாக இந்திய மாநிலமான கேரள முசுலிம்கள் வரலாற்றில் பதிவு செய்யப்பட்டுள்ளது .
1969 -ல் அப்பல்லோ 10 செயற்கைக் கோள் அனுப்பிய நிலவின் மேற்பரப்பு புகைப்படத்தில் நிலவு பிளந்ததற்கான அடையாளம் கண்டறியப்பட்டது.

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 13

(ஷிஃரா நட்சத்திரம் )




எங்கோ இருக்கக் கூடிய நட்சத்திரங்கள் பூமியில் வாழும் மனிதர்களின் வாழ்வாதரத்தை மாற்றியமைக்கும் என்கிறார்கள் ஜோதிடர்கள் .
இன்னும் ஒரு படி மேலே போய் அந்த நட்சத்திரங்களே தம்முடைய வணக்கத்திற்குரிய கடவுளாக மதிக்கப்பட்டு அதனை 4500 வருடங்களுக்கு முன்பே ஆது சமுதாயத்தனர் வணங்கவும் செய்திருக்கிறார்கள் என்றால் உங்களால் நம்ப முடிகிறதா ?
இன்று தென் ஆப்பிரிக்க மாலியில் "டோகான்" என்னும் பழங்குடி மக்கள் சிரியஸ் பி ( ஷிஃரா ) என்னும் சிரியஸ் பி நட்சத்திரத்தைப் பற்றி நிறைய சொல்கிறார்கள் நாட்டுப்புற பாடல்களில் நிறைய விஞ்ஞானக் குறிப்புகளோடு காலம் காலமாக பாடி வருகிறார்கள் .
டோகான் பழங்குடி மக்கள் பிரபஞ்சத்தை ஒரு தாளில் வரைந்து ஷிஃரா என்கிற சிரியஸ் நட்சத்திரத்தின் போக்குப் பற்றி நவீன வான இயல் சொல்வதை அப்படியே அதில் தெளிவாக குறிப்பிடுகின்றனர் . வியப்பாக இருக்கிறதல்லவா ? இது எப்படி முடியும் ?
இதில் விந்தை இந்த நட்சத்திரம் இரவில் நம் கண்ணுக்குத் தெரியாது. வான இயலின் நவீன நாட்களில்தான் மிகவும் சக்தி வாய்ந்த டெலஸ்கோப்புகள் மூலம் அது கண்டு பிடிக்கப்பட்டது.
மேற்கத்திய வான இயலின் அறிவு இல்லாமல் அந்த டோகான் பழங்குடியினருக்கு எப்படி தெரிந்திருக்க முடியும் என்று ஒரு சாரார் கேட்கின்றனர்.
இவர்களுக்கு ஷிஃரா நட்சத்திரத்தைப் பற்றிய விபரம் விண்வெளி மனிதர்களிடமிருந்து ஆது மக்களுக்கு வந்திருக்க வேண்டும் என்று இன்னோர் சாரார் சொல்கின்றனர் .

وَاَنَّهٗ هُوَ رَبُّ الشِّعْرٰىۙ
(இணைவைப்பவர்களே! நீங்கள் வணங்கும்) "ஷிஃரா" என்னும் நட்சத்திரத்தின் இறைவனும் நிச்சயமாக அவன்தான்.
(அல்குர்ஆன் : 53:49)
وَاَنَّهٗۤ اَهْلَكَ عَادَا۟ ۨالْاُوْلٰىۙ
(அந்த நட்சத்திரத்தை வணங்கிக் கொண்டிருந்த) முந்திய ஆது என்னும் மக்களை அழித்தவனும் நிச்சயமாக அவன்தான்.
(அல்குர்ஆன் : 53:50)
ஆதுக் கூட்டம் அழியும் போதே கூடவே ஷிஃரா நட்சத்திரத்தைப் பற்றி அறிவும் அவர்களுடன் அழிந்திருக்க வேண்டும் அவர்களில் தப்பிப் பிழைத்திருப்பவர்களை நீங்கள் காண்கின்றீர்களா ? என்று இறைவனே கேட்கிறான்

ஆனால் நபிஸல் அவர்கள் காலத்தில் வாழ்ந்த அரபிய குஸாஆ கோத்திரத்தார் அதன் போக்குப் பற்றி அறிந்து இருக்கிறார்கள். ஷிஃரா நட்சத்திரத்திற்கும் நபி (ஸல்) அவர்களின் முன்னோர்களின் வணக்க வழிபாட்டிலிலும் ஷிஃரா குறுக்கிட்டுள்ளது . இது பெரிய சேதி இருந்தாலும் சுருக்கிச் சொல்றேன் .
ஷிஃரா நட்த்திரம் செவ்வாய் கிரகத்திற்கு பின்னால் தோன்றும். அரபியர்கள் இது மூன்று நட்சத்திரங்கள் சேர்ந்தது , சுஹைல் , அபூர் , குமைஸாஉ என்று 3 சகோதரிகள் .
இதில் சுஹைல் யமன் பக்கமாக நழுவி அங்குள்ள மக்களுக்கு அருள்பாலிக்கப் போய்விட்டது . அதனைத் தேடிக்கொண்டு போன அபூர் நட்சத்திரம் அதனை கண்டு கொண்டது .ஆனால் பாருங்கள் , குமைஸாஉ நட்சத்திரம் இருந்த இடத்திலேயே இருந்து அபூரைக் காணாமல் அழுது குருடாகி விட்டது .இதனால் அது பிரகாசம் குன்றி மங்கிவிட்டது . மூன்று நடசத்திரத்தை ஷிஃரா என்றே அழைக்கின்றனர் .
அபூர் நட்சத்திரத்தை " ஷிஃரா யமானிய்யா " (அதாவது யமன் நாட்டைச் சார்ந்த ஷிஃரா ) குமைஸாஉ நட்சத்திரத்தை "ஷிஃரா ஷாமிய்யா" (அதாவது ஷாம் நாட்டைச் சார்ந்த ஷிஃரா )
தென் ஆப்பிரிக்க மாலியில் "டோகான்" என்னும் பழங்குடி மக்கள் நாட்டுப்புற பாடல்களாக பாடக் கூடிய ஷிஃரா நட்சத்திரத்தை , குஜாஆ கோத்திரத்திரர் கதைகளாக கதைக்கிறார்கள் .
குஜாஆ கோத்திரத்திலுள்ள "அபூ கப்ஸா "என்ற தலைவர்தான் இதனை வணங்கும் வழக்கத்தை ஏற்படுத்தினார் . குறைஷியர் சிலைகளை வணங்கக் கூடியவர்கள் .அபூகப்ஸா , சிலைகளை வணங்காமல் நட்சத்திரத்தை வணங்கியதால் அபூகப்ஸா மீது குறைஷியர்களுக்கு வருத்தம் .

நபி (ஸல்) அவர்கள் குறைஷியரின் சிலை வணக்கத்தை எதிர்த்ததால் , நபியவர்களையும் "அபூகப்ஸா "என்றே அழைக்கலாயினர் . பின் யார் சிலை வணக்கத்தை எதிர்த்தாலும் அவர்களுக்கு "அபூகப்ஸா "என்றே அழைக்கலாயினர் .
உண்மையில் இதே அபூகப்ஸாவின் வமிசத்தைச் சேர்ந்தவர்தான் அப்துல் முத்தலிபு. இவரின் தாயார் அபூகப்ஸாவின் வம்சத்தில் பிறந்தவர் .
ஆனால் நபி (ஸல்) சிலை வணக்கக் காரர்களான குறைஷியர்களை எதிர்ப்பது போன்ற தாய் வழி வம்சத்தார்களான ஷிஃரா நட்சத்திரத்தை வணங்குபவர்களையும் எதிர்த்தார்கள். இது இருக்கட்டும்.
காரல் சாகன் கார்னெல் பல்கலைக்கழகத்தின் வான இயல் நிபுணர் அவர் கூறும் போது, " ஷிஃரா நம் சூரியனை விட ஒன்னறை மடங்கு பெரியது . இந்த ஷிஃரா சூரியனை சுற்றி வரக்கூடிய கிரகங்களில் ஒன்றில் வேற்று கிரக மனிதர்கள் வாழலாம் அவர்கள் விண்வெளிப் பற்றி நிரம்ப அறிவு நம்மை விட அதிகம் பெற்று இருக்கலாம். அவர்கள் ஒவ்வொரு கால கட்டத்தில் அதாவது ஆது வாழும் காலம் முதல் அரபியர்களான குஸாஆ கோத்திரத்தார்கள் வாழும் காலம் வரை ஏன் இன்று வரை கூட நம் மக்களோடு மக்களாக கலந்து ஷிஃரா பற்றிய சேதியை சொல்லி வரலாம்" என்கிறார் .
இது பற்றி "காஸ்மிக் கனெக்ஷன் " என்ற ஆய்வு நூலில் குறிப்பிட்டுள்ளார்

மக்ரியா என்னும் பிரிட்டிஷ் விண்வெளி விஞ்ஞானி "டோகான் பழங்குடி மக்கள் பாலைவனத்தில் ஏற்படும் கானல் நீர் பிம்பத்தில் மிராஜ் ரூபத்தில் ஷிஃராவை பார்க்கிறார்கள் என்றும்,அதிலும் ஷிஃரா நட்சத்திர கிரக மக்கள் பற்றி தன் ஆய்வில் குறிப்பிட்டுள்ளார் .
செவ்வாய் கிரகத்தை வெறுங் கண்ணால் பார்க்க முடியும் .அப்படி பார்க்கும் போது வெளிச்சம் குறைவாக அதன் பக்கத்தில் 2 நட்சத்திரங்கள் தெரியுமாம் . அந்த நட்சத்திரத்தில் உள்ள ஏதோ ஒரு கிரகத்தில் மனிதர்கள் வாழ்கிறார்களாம் . அவர்கள் ஆது மாதிரி உயரமான பலசாலிகளாக இருந்து , நம்மை விட அதிகமாக மின்காந்த அலைவரிசைப் பயன் படுத்தி , உங்க செல்போனுக்கு message கூட அனுப்பலாம்.
(மீள் பதிவு)

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 14

குர்ஆன் கூறும் பெருவெடிப்புக் கோட்பாடும், ]




பேரழிவுக் கோட்பாடும் - BIG BANG TO BIG RIP
அகில உலகத்தாரின் இறுதி வேதமான அல்குர்ஆனில் ஒரே அத்தியாயத்தில் -அல் அன்பியா 21வது அத்தியாயத்தில்.. இருவேறு வசனங்களில் பல கோடி ஆண்டுகளுக்கு முன்னால் நடந்து முடிந்த, நாம் காணும் இப்பிரபஞ்சம் அமைவதற்கு காரணமாய் அமைந்த பெரு வெடிப்பு நிகழ்வையும், எதிர்காலத்தில் இதே பிரபஞ்சத்துக்கு நேரவுள்ள பேரழிவு நிகழ்வையும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.
பெருவெடிப்புக் கோட்பாட்டைப் பற்றி திருக்குர்ஆன் :
--------------------------------------------------------------------------------

"வானங்களும், பூமியும் இணைந்திருந்தன என்பதையும், அவ்விரண்டையும் நாமே பிரித்தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொரு பொருளையும் தண்ணீரிலிருந்து அமைத்தோம் என்பதையும், (நம்மை) மறுப்போர் சிந்திக்க வேண்டாமா? அவர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாமா?" (குர்ஆன் 21:30)
பேரழிவுக் கோட்பாட்டைப் பற்றி திருக்குர்ஆன் :
-------------------------------------------------------------------

"எழுதப்பட்ட ஏடுகளைச் சுருட்டுவது போல் வானத்தை நாம் சுருட்டும் நாளில் முதல் படைப்பை நாம் துவக்கியது போல் அதை மீண்டும் நிறுவுவோம். இது நமது வாக்குறுதி. நாம் (எதையும்) செய்வோராவோம் " குர்ஆன் (21: 104)
நாம் வாழும் பூமி உட்பட இப்பிரபஞ்சம் முழுவதற்கும் நிகழவிருக்கும் பேரழிவையும், பின் பெருவெடிப்புக்கு முன்பு இருந்த இயல்பு நிலையில் பிரபஞ்சம் மீட்டப்படும் என்பதையும் பின் வரும் வசனம் தெளிவாக எச்சரிப்பதானது, விஞ்ஞான உலகை ஆச்சரியத்தில் ஆழ்த்தியுள்ளது.
மானிடம் படைக்கப்படுவதற்கு 13 பில்லியன் வருடங்களுக்கு முன் நிகழ்ந்ததாகக் கருதப்படும் பெருவெடிப்பு நிகழ்வை இறுதி வேதம் அல்குர்ஆன், படிப்பினைதரும் ஒரு தகவலாக மாத்திரமாகவும், இறைவனின் தூது செய்தியை நிராகரிப்பவர்களுக்கு ஒரு அத்தாட்சியாகவும் ஒரு வசனத்தில் கூறிக் காட்டுகின்றான்.
அதேவேளை பேரழிவு தரும் யுக அழிவு தின நிகழ்வுடன் மனித குலம் நேரடியாக தொடர்பு கொள்ளப்படுவதாலும், அதன் பின் குர்ஆன் கூறும் மறு உலக வாழ்வின் துவக்கமான நீதி விசாரணைகள், நீதமான தீர்ப்புக்கள், பெருபேறுகள் வழங்கப்படல், சொர்க்கம், நரகம் எனும் மாபெறும் இறுதி தங்குமிடங்கள் வழங்கப்படுதல் என மனிதனின் இறுதி முடிவை தீர்மானிக்கும் மாபெரும் நிகழ்வு என்பதாலும், பெருவெடிப்புக் கோட்பாட்டிற்குக் கொடுக்கப்படாத முக்கியத்துவத்தை அல்குர்ஆனில் பேரழிவுக் கோட்பாட்டிற்குக் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

யுக முடிவு நாளின் அனர்த்தங்களையும், அகோரங்களையும் எச்சரிக்காத இறை வேதங்களும், இறை தூதர்களும் சொல்லாமல் இருந்ததில்லை. யுக அழிவு நாளின் திடுக்கிடும் அகோரக் காட்சிகளை கண்முன் நடப்பது போல் காட்சிப்படுத்துவதில் திருக்குர்ஆனுக்கு நிகர் அது மாத்திரம்தான்.
வானம், பூமி, சூரியன், விண்கோள்கள், கடல்கள், மலைகள்,பூமியில் வாழும் மனிதர்கள் மற்றும் உயிரினங்கள், தாவரங்கள் உட்பட பிரபஞ்சம் அனைத்தும் ஒரு நாள் அழிக்கப்படும். அந்நாளில் இறைவன் மட்டுமே நிலைத்திருப்பான் என்றும்,
இப்பேரழிவுத் தக்க தருணத்தில் நடந்தே தீரும் என்பதும் அல்குர்ஆனின் முதல் தர எச்சரிக்கையாக உள்ளதை அதன் வசனங்கள் உறுதிப்படுத்துகிறது. இப்பேரழிவுக் கோட்பாடு பற்றிய எச்சரிக்கையானது, அல்குர்ஆனின் உயிர் மூச்சு என்றுதான் கூற வேண்டும்.

இந்த இரு கோட்பாடுகளைப் பற்றி விஞ்ஞான உலகம்
------------------------------------------------------------------
பெருவெடிப்புக் கோட்பாட்டை விஞ்ஞான உலகம் பல ஆண்டுகளுக்கு முன்பே நிரூபித்திருப்பதை நாம் அறிந்துள்ளோம். ஆனால் சமீப காலங்களில் நடந்த ஆய்வுகளின் அடிப்படையில்தான் பேரழிவுக் கோட்பாட்டையும் நிரூபித்துள்ளது.
அமெரிக்காவின் தினீஷி மாநிலத்தில் அமைந்துள்ள பென்தர்பிலீத் பல்கலைக் கழகத்தின் ஆய்வுக் குழு ஒன்று பேரழிவுக் கோட்பாடு நடக்கவிருக்கும் சாத்தியங்களை உறுதிப்படுத்தியுள்ளது.
சுமார் 13 பில்லியன் வருடங்களுக்கு முன் நிகழ்ந்ததாகக் கருதப்படும் பெருவெடிப்புச் சம்பவம் தொட்டு, இன்று வரை விரிவடைந்து கொண்டே செல்லும் பிரபஞ்சமானது, இறுதியில் மாபெரும் பேரழிவை ஒரு நாள் சந்திக்கும். கற்பனை செய்ய முடியாத இப்பேரழிவின் விளைவாக பிரபஞ்சம் யாவும் துகள் துகளாக மாறி,அனைத்து உயிரினங்களும் அழிந்து, உயிரற்ற சமாதியாக பிரபஞ்சம் மாறிவிடும் என்றும், பெருவெடிப்புக்கு முன்பிருந்த நிலைக்கே மீண்டும் இப்பிரபஞ்சம்யாவும் திரும்பிவிடும் என்றும் அந்த ஆய்வு கூறுகிறது.
மேற்படி ஆய்வுக் குழுவின் தலைவர் பேராசிரியர் மெர்ஸிலோ கூறுகையில் "நாம் வசிக்கும் உலகம் உட்பட பிரபஞ்சம்யாவும் ஒன்றிணைந்த ஒரு மாபெரும் விண்கோள்களின் சங்கமமாகவும், குழுமமாகவும் இருந்தது. பின் கதிர்வீச்சுக்களின் அதிர்வு காரணமாகவும், எரி வாயுக்களின் அழுத்தம் காரணமாகவும் பெரு வெடிப்பு ஏற்பட்டது. பின் கோள் மண்டலங்களாகவும், நட்சத்திரங்களாகவும்,சூரிய குடும்பங்களாகவும் இன்று வரை பால் வெளியில் விரிவடைந்து கொண்டுதான் இருக்கிறது.

وَ السَّمَآءَ بَنَيۡنٰهَا بِاَيۡٮدٍ وَّاِنَّا لَمُوۡسِعُوۡنَ
(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம். (அல்குர்ஆன் : 51:47)
பின் ஒரு நாள் கோள் மண்டலங்களுக்கிடையில் மாபெரும் மோதல் உருவெடுத்து, அதன் விளைவாக கோள் மணடலங்கள் சுருங்கும் நிலையை அடையும்.
பின் அதன் இயல்பு நிலையை நோக்கி நகர ஆரம்பித்து இறுதியில் மாபெரும் பிரபஞ்ச சிதைவு ஏற்படுவதோடு, புவியில் உள்ள அனைத்து உயிரினங்களும் மறிப்பதோடு, பிபஞ்சத்தில் வெறும் ஃபோட்டான் (photon) எனப்படும் துகள்களாகவும், மறித்துப் போன நியூட்ரான்கள், எலக்ட்ரான்கள் எனப்படும் ஒளித் துகள்களாகவுமே பிரபஞ்சம் காணப்படும்.
பின் அந்த துகள்களால் மீண்டும் புதியதோர் யுகம் உருவெடுக்குமா? இல்லையா? என்பதை யாரும் அறிந்திட முடியாது என்று அவரது ஊகத்தையும் ஆய்வறிக்கையில் கூறுகிறார்.
பேரழிவுச் சம்பவம் எப்போது நடக்கும்?
----------------------------------------------------
பிரபஞ்சம் எதிர் நோக்கும் மாபெரும் யுக முடிவு எப்போது நடக்கும் என்பது பற்றிய ஞானம் பிரபஞ்சத்தைப் படைத்த மாபெரும் சக்தியான ஏக இறைவனிடம் மாத்திரமே உள்ளது என்பதை திருக்குர்ஆன் உருதிப்படுத்துகிறது. முஸ்லிம்களின் உறுதியான நம்பிக்கையும் அதுதான்.
உலகையே அதிர வைக்கும் பேரழிவு நாளை மனித குலத்தின் நண்மைக்காக ஏக இறைவன் குறித்த நேரம் வரைக்கும் மறைத்து வைத்திருப்பதும், பின் தவணை வரும்போது பேரழிவு நடந்தே தீரும் என்பதுதான் உண்மை.
"யுகமுடிவு நேரம் எப்போது வரும்?'' என்று (முஹம்மதே!) உம்மிடம் அவர்கள் கேட்கின்றனர். "இது பற்றிய ஞானம் என் இறைவனிடமே உள்ளது. அதற்குரிய நேரத்தில் அவனைத் தவிர யாரும் அதை வெளிப்படுத்த முடியாது. வானங்களிலும், பூமியிலும் அது மகத்தானதாக அமையும். அது உங்களிடம் திடீரென்று தான் வரும்'' என்று கூறுவீராக! இது பற்றி நீர் நன்கு அறிந்தவர் போல் அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். "இது பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது'' என்று கூறுவீராக! எனினும் மனிதர்களில் அதிகமானோர் அறிந்து கொள்வதில்லை. [அல்குர்ஆன் 7: 187]
எனினும் மேற்படி ஆய்வுக் குழுவின் அனுமானங்களின்படி தற்போதிலிருந்து சுமார் 22 பில்லியன் வருடங்களுக்குள் அந்த மாபெரும் அழிவை பிரபஞ்சம் சந்திக்க நேரிடலாம் என தங்களின் ஊகங்களை வெளியுட்டுள்ளனர்.
.
இஸ்லாம் கூறும் மறு உலக வாழ்கை
----------------------------------------------------
மனித விஞ்ஞானத்தால் பிரபஞ்சத்துக்குள் உட்பட்ட அம்சங்களைத்தான் ஆய்வு செய்யமுடியும். பிரபஞ்ச அழிவின் பின் புதியதோர் யுகம் பிறக்கும் என்பதை இப்பிரஞ்சத்தை நிர்வகிக்கும் சக்தியான நிகரற்ற இறைவனின் வேத வசனங்களை வைத்துத்தான் நாம் முடிவு செய்ய வேண்டும்.
மறு யுக வாழ்கை எனும் அந்த நிரந்தர யுகத்தைப் பற்றியும், அதற்காக மனித குலம் தயாராக வேண்டும் என்பதும், அதில்தான் மனிதனின் நம்பிக்கைகள், நல்லறங்களுக்கேற்ப சொர்க்கம், நரகம் எனும் நிரந்தர சன்மானங்கள் வழங்கப்படும் என்பதுதான் இறுதி வேதம் அல்குர்ஆனின் அடிப்படைப் போதனையாக உள்ளது.
இந்த மாபெரும் பிரபஞ்ச அழிவின் பின்தான் முழு மனித சமூகமும் மீண்டும் எழுப்பப்பட்டு, விசாரணைகள் மேற் கொள்ளப்பட்டு, ஏக தெய்வ விசுவாசம் கொண்டு அதன்படி வாழ்ந்தவர்களுக்கு பேரின்பம் நிறைந்த

சொர்க்கமும், நிராகரிப்பாளர்களுக்கும், இணைவைப்பாளர்களுக்கும் துன்புறுத்தும் நரகமும் பரிசுகளாக வழங்கப்படும் என குர்ஆன் கூறுகிறது.
ஆணோ, பெண்ணோ நம்பிக்கை கொண்டு, நல்லறம் செய்தால் அவரை மகிழ்ச்சியான வாழ்க்கை வாழச் செய்வோம். அந்நாளில் மக்கள் தமது செயல்களைக் காண்பதற்காகப் பல பிரிவினர்களாக ஆவார்கள்.
"அணு அளவு நன்மை செய்தவர் அதைக் காண்பார். "
"அணு அளவு தீமை செய்தவர் அதைக் காண்பார்.
[குர்ஆன் 99: 6.7,8]
ஸூர் ஊதப்படும். அல்லாஹ் நாடியோரைத் தவிர வானங்களிலும், பூமியிலும் இருப்போர் அப்போது மூர்ச்சையாவார்கள். பின்னர் மீண்டும் ஒரு முறை அது ஊதப்படும். உடனே அவர்கள் எழுந்து பார்ப்பார்கள். "
"பூமி தனது இறைவனின் ஒளியால் பிரகாசிக்கும். (பதிவுப்) புத்தகம் (முன்) வைக்கப்படும். நபிமார்களும் சாட்சிகளும் கொண்டு வரப்படுவார்கள். அவர்களிடையே நியாயமாகத் தீர்ப்பு வழங்கப்படும். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள். "
"ஒவ்வொருவருக்கும் அவர்கள் செய்தவை முழுமையாக வழங்கப்படும். அவர்கள் செய்வதை அவன் நன்கு அறிந்தவன்.
[அல்குர்ஆன் 39: 68-70]
பிரபஞ்சம் படைக்கப்பட்டதிலிருந்து அதன் முடிவு வரை இத்தனை தெள்ளத்தெளிவாக குர்ஆனைத் தவிர எந்த வேதமும் சொல்லியதில்லை .

## விஞ்'ஞானம்' என்னும் அறிவியல் 15

இமாம் மஹ்தி (அலை) அவர்கள்



இமாம் மஹ்தி (அலை) அவர்கள் மறுமையின் அடையாளங்களில் ஒன்றாக இருக்கின்றார்கள். அவர்கள் நபி ஈஸா அலை அவர்கள் இவ்வுலகில் இறங்கு முன்பு இவ்வுலகிற்கு வருகை தருவார்கள் என ஹதீஸ்கள் சான்று பகர்கின்றன.
இமாம் மஹ்தி (அலை) அவர்கள் இறுதித் தூதர் நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் வழித்தோன்றல் என்பதையும், இமாம் மஹ்தி (அலை) அவர்களின் இறுதி நாளின் சமீபமாக அவரின் வருகையினால் மனித சமூகம் தனது யதார்த்தமான வாழ்வை அடைந்து கொள்ளும் என்பதையும் ஹதீஸ்கள் அறிவிக்கின்றன.
என் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர், அரபிகளை ஆட்சி செய்யும் வரை இவ்வுலகம் முடியாது. அவரது பெயர் என் பெயரை ஒத்ததாகும். (இப்னு மஸ்ஊத் (ரலி) திர்மிதி, அபூதாவூத்)
என் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் ஆட்சியமைப்பார். அவர் பெயர் என் பெயரை ஒத்திருக்கும். (இப்னு மஸ்ஊத் (ரலி) திர்மிதி)
இவ்வுலகில், ஒருநாள் மட்டுமே எஞ்சியிருந்தால் என் குடும்பத்தைச் சேர்ந்த அவர் ஆள்வதற்காக அந்த நாளை அல்லாஹ் நீட்டுவான். (நூல்கள்: திர்மிதி 2332, இப்னுமாஜா
4085)
நபி ஈஸா (அலை) அவர்கள் உலகில் தரிசனம் பெற்ற பின்னரே இமாம் மஹ்தி (அலை) அவர்கள் இறையடி சேர்வார்கள்.
அவ்வாறு வெளிப்படும் போது இவர் தான் இமாம் மஹ்தி ( அலை) என்று அப்போது வாழும் மக்கள் சாதாரணமாகவே சிரமம் இன்றி புரிந்து கொள்வார்கள்

காரணம் இறைத்தூதர் நபி ( ஸல்) அவர்களால் அழிவு நாளின் அடையாளமாக முன்னறிவிப்பு செய்யப்பட்ட எந்த ஒன்றும் மனித சமுதாயம் அனைவரும் சுயமாக ஆய்வு செய்து தான் கண்டு பிடிக்க இயலும் என்ற நிலையில் இறைவனால் ஏற்படுத்த படவில்லை
என் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் அரபுகளை ஆட்சி செய்யும் வரை இவ்வுலகம் முடியாது.அவரது பெயர் என் பெயரை ஒத்ததாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் (அறிவிப்பவர்: இப்னு மஸ்வூது (ரலி), நூல்கள்: திர்மிதி 2331, அபூதாவூது 4269)
அவரது தந்தையின் பெயர் எனது தந்தையின் பெயரை ஒத்திருக்கும்...' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரலி), நூல்: அபூதாவூது 4269)
அவர் ஏழு வருடங்கள் ஆட்சி செய்வார்' என்று என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் (அறிவிப்பாளர். அபூஸயீத் அல்குத்ரீ
(ரலி), நூல்: அபூதாவூது 4272)

போரும் கொடுங்கோன்மையும் நிரம்பி இருக்கும் இப்பூமியில் அமைதியையும் நீதியையும் நிலை நிறுத்துவார்.அவர் ஏழு வருடங்கள் ஆட்சி செய்வார்' என்று என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் (அறிவிப்பாளர்: அபூஸயீத் அல்குத்ரீ (ரலி), நூல்: அபூதாவூது 4272)
முஸ்லிம்களின் மார்க்க அறியாமையை பயன்படுத்தியே பல கயவர்கள் தங்களை இமாம் மஹ்தி என்றும் ஈஸா நபி நான் தான் என்றும் வாதிட்டுள்ளனர்
அதற்கு காரணம் முன்னறிவிப்பு தொடர்பான ஹதீஸ்களை மக்கள் அறிந்து வைக்காமல் இருப்பதும் முன்னறிவிப்பு தொடர்பான சில ஹதீஸ்களை மறைப்பதும் தான் மூல காரணம்
ஆனால் நபியவர்களின் வழிகாட்டல் குழப்பத்திற்க்கு அப்பாற்பட்டது
இமாம் மஹ்தி ( அலை) அவர்களை பற்றி குறிப்பிட்டுள்ள இன்னும் சில ஹதீஸ்கள் பொய்யர்களை தோலுரிக்கும் விதமாக அமைந்துள்ளது

இமாம் மஹ்தி என்று வாதிடுவோர் எந்த பரம்பறை ? மஹ்தீ எனது குடும்பத்தைச் சேர்ந்தவராவார் பாத்திமாவின் சந்ததிகளில் உள்ளவராவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் ?(அறிவிப்பவர்: உம்முஸல்மா (ரலி), நூல்: அபூதாவூது 4271)
மஹ்தீ எனது சந்ததியைச் சேர்ந்தவராவார், அவர் படர்ந்த நெற்றியையும் எடுப்பான மூக்கையும் உடையவராவார்
போரும் கொடுங்கோன்மையும் நிரம்பி இருக்கும் இப்பூமியில் அமைதியையும் நீதியையும் நிலை நிறுத்துவார் அவர் ஏழு வருடங்கள் ஆட்சி செய்வார்' என்று என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் (அறிவிப்பாளர்: அபூஸயீத் அல்குத்ரீ (ரலி), நூல்: அபூதாவூது 4272)
உயரமானவராக இருக்க மாட்டார்கள்' என்பது நபிமொழி
(அறிவிப்பாளர்: அபூஸயீது அல்குத்ரீ (ரலி), நூல்: இப்னுமாஜா 4083)
இவ்வுலகின் ஒரு நாள் மட்டும் மீதமிருந்தால், எனது குடும்பத்திலிருந்து ஒரு மனிதரை அல்லாஹ் எழச் செய்வான் போர்களால் நிரம்பி இருக்கும் இந்த பூமியில் அவர் நீதியை நிலை நிறுத்துவார்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
(அறிவிப்பவர்: அலி (ரலி) நூல்: அபூதாவூது 4270)
இவ்வுலகின் ஒரு நாள் மட்டும் மீதமிருந்தால்' என்ற வார்த்தைகளும் உலக முடிவுக்கு மிக நெருக்கமாக மட்டுமே இமாம் மஹ்தி( அலை ) அவர்கள் வருவார் என்று தெளிவாக தெரிகிறது
1- இஸ்லாமிய ஆட்சியாளராக வருகை தருவார்
2- மக்களுக்கு செல்வத்தை வாரி வழங்கும் அளவு அரசாங்கத்தை வளப்படுத்தி இருப்பார்
3- பாத்திமா( ரலி) அவர்களின் பரம்பறையாகவே இருப்பார்
4-தன்னை நபி என்று வாதிட மாட்டார்
5- குர்ஆன் சுன்னாவை மட்டுமே கடைபிடிப்பார்
6- உலகம் முழுதும் போர்களமாக உள்ள சூழலில் தான் வருகை தருவார்
தன்னை மஹ்தி என்று வாதிட்ட காதியானிகளின் தலைவன் பொய்யன் மிர்ஷா குலாம் அஹ்மத் என்பவன் இதில் எந்த தகுதிகளையும் பெறவில்லை
மாறாக தன்னை நபி என்று வாதிட்டு புது கொள்கையை உருவாக்கி புது ஷரீஅத்தை உருவாக்கியவன் ஆவான்
இது மஹ்தியின் நூற்றாண்டு என்று சொல்வதற்கு காரணம்
1. குராசான் பகுதி கறுப்பு கொடி வந்தால் மஹ்தியை எதிர்பார்க்க வேண்டும். Ref: Ibn majah hadhis # 4222.
2. கருப்பு கொடி ஜெரூசலம் வந்து சேரும்வரை எந்த சக்தியும் அவர்களை தடுக்க முடியாது என்ற ஹதீஸ். அப்படி என்றால் ஜெருசலம் முஸ்லிம்களிடமிருந்து பறிக்கபடும்போது இது நடக்கும். Ref: Thirmidhi hadhis #2438.
3. ஒவ்வொரு நூற்றாண்டிலும் ஒரு மாற்றம் அல்லது முன்னேற்றம் நிகழும். அதனால் போன நூற்றாண்டில் கருப்புகொடி வந்தது இந்த நூற்றாண்டில் மஹ்தி அலை வரலாம். Ref Abudawood hadhis # 4291

4. 2050 ல் இஸ்லாம் அதிகரித்துவிடும் என்ற கணிப்பு உள்ளது. மஹ்தி அலை வருவதற்கு முன் ரோமர்கள்தான் அதிகம் இருப்பார்கள் ஹதீஸ். Ref Muslim hadhis # 7462
5. தபரியா ,ஜுஹ்ர் , யூப்ரிட்டஸ் நீர் நிலைகள் போன நூற்றாண்டு வரை நீர் அதிகம் இருந்தது. இந்த நூற்றாண்டு ஆரம்பத்திலேயே 80% வற்றிவிட்டது. Ref: muslim 7573 &7454
6. பைசன் தோட்டம் பழங்கள் கொடுக்காது. இப்போது அது சுற்றுலா நகரமாக மாறிகொண்டிருக்கிறது. Ref: Muslim hadhis 7573
7. சிரியாவில் பெண்கள் குழந்தைகள் என்று பார்க்காமல் கொல்லும் ஒருவன் (குறைஷி வம்சத்தை சேர்ந்தவன்) மஹ்தி அலை வருவதற்கு முன் தோன்றுவான். Ref mustadark Al hakim & Abu dawood hadhis # 4273
8. டமாஸ்கஸ் உம்யுன் என்ற இடத்தை தவிர மற்ற அனைத்து சிரியா பகுதிகளும் மஹ்தி அவருமுன் ரோமர்கள் கட்டுபாடிற்கு சென்றிடும். Ref Abu dawood book 42, hadhis #43
9. தஜ்ஜால் வருமுன் மழை மற்றும் பூமி நீர்மட்டம் குறந்து விவசாயம் அழியும். Ref Ibn majah hadhis 4215
10. ஈராக் சிரியா அழிவில் இருக்கும் அதன்பின் மஹ்தி அலை வருவார்கள் ref Muslim hadhis # 7499.

இமாம் மஹ்தி அலைஹிவஸ்ஸல்லம் அவர்களின் காலம் சம்மந்தமாக ஹதீஸில் கூறப்பட்ட சில சம்பவங்கள் ( போர்கள்).
1. குராசான்:-
இது அஃப்கானிஸ்தான் மற்றும் அதை சுற்றியுள்ள நாடுகளின் சில பகுதிகள். இங்கிருந்து கருப்புகொடி கூட்டம் வரும் அந்த கூட்டம் ஜெருசலத்தை அடையும் வரை எந்த சக்தியாலும் அவர்களை தடுக்க முடியாது. அவர்களிலிருந்து மஹ்தி வெளிபடுவார்கள். (Ref: இப்னுமாஜா 4222. 4220)

2. மக்கா மதீனா:
மஹ்தியின் அறிமுகம்
இங்குதான் மஹ்தி அவர்கள் தம் 40 ஆம் வயதில் மதீனாவிலிருந்து மக்காவிற்கு செல்வார்கள். ரமலானில் வானிலிருந்து பெரும் சப்தம் ஏற்படும் 70,000 பேர் மடிவார்கள், 70,000 பேர் செவிடாவார்கள். ஷவ்வாலில் புறச்சியேர்ப்படும், துல்காய்தாவில் ஹஜ் யாத்திரையாளர்கள் சூரையாடப்படுவார்கள். அது ஹஜ் மாதமாகும் மினாவில் சில இனத்தாரிடையே சண்டை நடக்கும் ஜும்ராத் வரை இரத்தங்கள் ஓடும்.(ref : Hammad book kithab Al fitn)
அரஃபாவில் தொழவைக்க இமாம் இருக்க மாட்டார் அந்த சமையம் காபத்துல்லாஹ்வில் மக்கள் மக்காமே இப்ராஹீமுக்கும் ஹஜ்ருல் அஸ்வத்துக்கும் இடையே ஒரு மனிதரை கண்டு பையத் செய்வார்கள்.
அப்போது மக்காவிற்கும் மதீனாவிற்கும் இடையே உள்ள பைதா என்ற இடத்தில் இவரை எதிர்க்க டமாஸ்கஸிலிருந்து குறைஷி வம்சம் சேர்ந்த கொடுங்கோளன் (பெண்களையும் குழந்தைகளையும் விட்டுவைகாமல் கொல்பவன்) இவன் அனுப்பும் ராணுவம் பூமிக்குள் புதையும். அப்போதுதான் அந்த மனிதர் மஹ்தி என்று அனைவரும் அடையாளம் காணுவார்கள். அதன்பின்
ஈராக் சிரியாவிலிருந்து கூட்டம் கூட்டமாக வந்து மஹ்திக்கு பையத் செய்வார்கள்.
முஹரம் மாதத்தின் ஆரம்பம் இந்த உம்மத்திற்கு கடும் துன்பமாக இருக்கும் மக்கள் அதிகம் கொல்லப்படுவார்கள், முஹரம் முடிவில் துன்பம் நீங்கிவிடும். (ref: tabrani),
மஹ்தியை எதிர்த்து குறைஷி வம்சத்தை சேர்ந்த அவன் ( டமாஸ்கஸை சேர்ந்தவன்) போர் தொடுப்பான். அல்லாஹ் மஹ்திக்கு வெற்றியை வழங்குவான். அதன்பின் மஹ்தி (அலை)
மதீனாவில் 7 அல்லது 9 ஆண்டுகள் கிலாபத் (நபி வழியில் ) ஆட்சி புரிவார்கள் பூமி செழிப்பாகும். (Ref: Abu dawood 4273. & Mustathar Al hakim.)

3. தயாலாம்:
ஈரானில் வடக்கே உள்ள ஒருஇடம் அதையும் துர்க்கியையும் மஹ்தி அவர்கள் தனக்கு உடமையாக்கி கொள்வார்கள்.( Ref Ibn majah 2884 book 24)

4.ஆமாக் மற்றும் டாபிக்
(அமாக் துர்க்கியின் தெற்கு பகுதியில் உள்ளது)மற்றும் டாபிக் ( சிரியாவின் மேற்கு பகுதியில் உள்ளது).
இங்கு ( இல்லுமினாட்டிகளான) ரோமர்களுக்கு எதிராக போர் செய்ய மதீனாவிலிருந்து படை செல்லும்.
( ரேமர்கள் :இஸ்ஹாக் அலை , மகன் ஏசா அவர்களின் வம்சத்தில் வந்தவர்கள் ரோமர்கள்).
இது மஹ்தி அவர்கள் காஃபிர்களுக்கு எதிராக செய்யும் முதல் போர். மிக பிரம்மாண்டமான போர். 80 கொடிகளின் கீழ் ரோம படை இருக்கும் , ஒவ்வொரு கொடி படையிலும் 12,000 பேர் இருப்பார்கள். அந்த மதீனா படையில் நூற்றுக்கு 99 பேர் ஷஹீத் ஆவார்கள். ஒரு பிரிவினர் புறமுதுகிட்டு ஓடும். அல்லாஹ் அவர்களை மன்னிக்க மாட்டான். ஒரு பிரிவினருக்கு அல்லாஹ் வெற்றியை தருவான். இந்த போருக்கும் கான்ஸ்டாட்டினோபல் வெற்றிக்கும் இடைப்பட்ட காலம் 6 வருடங்கள்.
( ref Muslim book 55: 7460, Abudawood book 39: 6)

5.கான்ஸ்டாட்டினோபல் வெற்றி :
இது துர்க்கியை குறிக்கும்.
இங்கு ஆயுதம் இன்றி போரில் வெற்றி கிடைக்கும்.
70,000 பனி இஸ்ஹாஃக் சந்ததியினர் ( ரோமர்கள், யூதர்கள் மற்றும் மற்ற இஸ்ரவேலர்கள்). ஒன்றுகூடி மஹ்தியை எதிர்ப்பார்கள். ஆனால் மஹ்தி படை ஆயுதம் ஏந்தி போரிடாமல் கலிமா தக்பீர் "லாயிலாஹா இல்லல்லாஹ், அல்லாஹு அக்பர்" என்று சொல்வார்கள் ஒரு பகுதி வீழ்ந்துவிடும். மறுமுறை சொல்வார்கள் படையின் மறுபகுதி வீழும். மற்றொரு முறை சொல்வார்கள் வாசல் திறந்துவிடும் வெற்றிகிடைத்துவிடும். தஜ்ஜால் வருகைக்கு 7 மாதங்களுக்கு முன் இந்த வல்லமைமிக்க வெற்றி கிடைக்கும். ( Muslim book 55:7517, 7460, Abudawood book 39: 5).

6. மஹ்தி அவர்களுடன் ஹிந்துஸ்தானிலிருந்து ஒரு படை ஜெருசலம் போகும்போது ஈசா அலை அவர்களை சந்திக்கும்.
(Musnad, hammad.( kithab Al fitan).

7. டமாஸ்கஸ்:
இது சிரியாவின் தலைநகரம். இங்குதான் ஈசா அலை அவர்களின் வருகை இருக்கும். ஈசா அலை அவர்களுடன் மஹ்தி தஜ்ஜால் படையை எதிர் கொள்ள தயாராக இருப்பார்கள். ஈசா அலை அவர்களின் மூச்சுக்காற்றை சுவாசிக்கும் எந்த இறைமறுப்பாளனும் உயிருடன் இருக்க மாட்டான். தஜ்ஜாலை பாலஸ்தீன் (இஸ்ரேலில்) லுது என்ற இடத்தில் ஈசா அலை அவர்கள் கொல்வார்கள். (Ref: Muslim book 55 : 7460, 7559)
ஹழ்ரத் மஹ்தீ (அலை) அவர்கள் வெளிப்படுவதிலிருந்து, சூர் ஊதப்படும் வரை ஏற்படும் அடையாளங்கள் பெரிய அடையாளங்கள் என்று கூறப்படும்.
பெரிய அடையாளங்கள் பத்தாகும்.
1) ஹழ்ரத் மஹ்தீ (அலை) அவர்கள் வெளிப்படுதல்.
2) தஜ்ஜால் வெளியாகுதல்.
3) ஹழ்ரத் ஈஸா (அலை) அவர்கள், வானத்திலிருந்து இறங்குதல்.
4) யாஜூஜ் மாஜூஜ் கூட்டத்தினர் வெளியாகுதல்.
5) மூன்று பெரும் பூகம்பங்கள் உண்டாகும். அவற்றில் ஒன்று கிழக்கிலும், இன்னொன்று மேற்கிலும், மற்றொன்று அரபு தேசத்திலும் ஏற்படும்.
6) வானில் இருந்து புகை மூட்டப்ப்படும். புகை கிளம்பும்.
7) சூரியன் மேற்கிலிருந்து உதயமாகும்.
😎"தாப்பத்துல் அர்ழு" எனும் ஒரு அதிசய ஆச்சர்யமான பிராணி பூமியிலிருந்து புறப்படும்.
9) யமன் தேசத்திலிருந்து நெருப்பு வெளியாகுதல்.
10) நறுமணமுள்ள ஒரு காற்று வீசுதல். அதனால் முஃமின்கள் அனைவரும் இறந்துவிடுவார்.
இந்த அடையாளங்கள் அனைத்தும் வந்த பின்னர் கியாமத் நாள் திடீரென்று ஏற்படும். (அபூ சுரைஹா(ரழி) முஸ்லிம்:7468).
இந்த பத்து அடையாளங்களில் மூன்று அடையாளங்கள் மிகவும் முக்கியமானவை. அந்த அடையாளங்கள் ஏற்படும் முன் ஒருவர் ஈமான் கொண்டால் மட்டுமே அதனால் பயன்கிட்டும். அந்த அடையாளங்கள் ஏற்பட்ட பின் ஈமான் கொண்டால், அந்த ஈமானுக்கு இறைவனிடம் மதிப்பே இருக்காது. அவற்றில் ஒரு அடையாள மாகவும் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு) அவர்கள் தஜ்ஜாலை குறிப்பிட்டார்கள்.
1) சூரியன் மேற்கில் உதிப்பது.
2) தஜ்ஜால்.
3)அதிசயப் பிராணி.
ஆகிய மூன்று அடையாளங்கள் தோன்றி விடுமானால், அவற்றுக்கு முன்பே ஈமான் கொண்டிருந்தாலே தவிர, எவருக்கும் அவரது ஈமான் பயனளிக்காது என்று முஹம்மது நபி (ஸல்லல்லாஹு) அவர்கள் கூறினார்கள் (முஸ்லிம், இப்னுமாஜா)

**மறை கூறும் மானிடவியல் 1**
(ஒரு லட்சம் ஆண்டுகளுக்கு முந்தைய ஆதி மனித இனம்)




சுமார் ஒரு லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு தற்போதைய மனித இனம் வாழ்ந்த அதே காலகட்டத்தில் வாழ்ந்த ஆதி மனித இனம் ஒன்றை இஸ்ரேலில் உள்ள ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.
இந்த ஆதி மனித இனம் வாழ்ந்திருந்தது இதற்கு முன்பு அறியப்படவில்லை. இஸ்ரேலில் உள்ள ராம்லா எனும் நகரத்தின் அருகே கண்டறியப்பட்டுள்ள இந்த எச்சங்கள் அந்த ஆதி மனித இனத்தில் "கடைசியாக வாழ்ந்திருந்தவர்களின்" எச்சங்கள் என்று அவர்கள் கருதுகிறார்கள்.
சுமார் ஒரு லட்சத்து 40 ஆயிரம் ஆண்டுகள் மற்றும் ஒரு லட்சத்து 20 ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய காலத்தில் வாழ்ந்த நபர் ஒருவரின் பகுதி அளவு மண்டை ஓடு மற்றும் தாடை எலும்பு ஆகியவையும் தற்போது கண்டறியப்பட்டுள்ள எச்சங்களில் அடக்கம்.
இந்தக் கண்டுபிடிப்பின் விவரங்கள் 'சயின்ஸ்' எனும் சஞ்சிகையில் வெளியிடப்பட்டுள்ளன.
நம் ஆதிபிதா (அலை) அவர்களின் காலம் இன்றைக்கு 8000 ஆண்டுகளுக்கு முன்தான் என்று கணிக்கப்படுகிறது. எனினும்,நம் ஆதம் (அலை) அவர்களுக்கு முன் ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆதம்கள் இவ்வுலகில் தோன்றியுள்ளனர் என்று முஹம்மது இப்னு பாக்கிர் (ரஹ்) கூறுகின்றார் .

இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தமது **'புத்தூஹாத்தில் மக்கிய்யா '** என்னும் நூலில், "நம் ஆதத்திற்கு முன் ஒரு லட்சம் ஆதமும் , அவருடைய கூட்டத்தினரும் தோன்றி மறைந்துள்ளரென்றும் , தாம் ஓரிரவு கஃபாவை இடம் சுற்றி வரும்பொழுது , நீண்டு உயர்ந்த சில மனிதர்களைக் கண்டு அவர்கள் எவவெரன விசாரித்த பொழுது , "ஆதத்திற்கு நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவ்வுலகில் வாழ்த்தவர்களின் ஆன்மாக்கள் " என்றனர் .
ஐரோப்பிய பகுதியில் நியாண்டர்தால் மனிதர்களும் அவர்களுக்கு நிகரான ஆசிய மனித இனத்திற்கும் தோற்றமாக அமைந்த, பல லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஓர் ஆதி கால மனித இனத்திலிருந்து தற்போது கண்டறியப்பட்டுள்ள மனித இனம் தோன்றி இருக்கலாம் என்று இந்த குழுவின் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.
தற்பொழுது புதிதாகக் கண்டறியப்பட்டுள்ள இந்த இனக்குழுவின் பரம்பரைக்கு 'நேஷெர் ராம்லா ஹோமோ' (Nesher Ramla Homo) என்று பெயரிட்டு அறிவியலாளர்கள் வகைப்படுத்தியுள்ளனர்.
மனித இனத்தின் பரிணாம வளர்ச்சி பற்றிய கதைக்கு, குறிப்பாக நியாண்டர்தால் மனிதனின் பரிணாம வளர்ச்சியை பற்றிய கதைக்கு, இந்தக் கண்டுபிடிப்பு மறுவடிவம் தருவதாக டெல் அவிவ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த முனைவர் ஹிலா மே தெரிவித்துள்ளார்.
"இது அனைத்தும் இஸ்ரேலில் தொடங்கியுள்ளது; இங்கு கண்டறியப்பட்டுள்ள எச்சங்கள்தான் பிற இனத்தினருக்கான தோற்றமளித்த ஆதாரமாக இருந்துள்ளது. இடைப் பனிக்காலத்தின் போது இந்த நேஷெர்

ராம்லா இன மக்கள் மத்திய கிழக்கு பகுதியில் இருந்து ஐரோப்பிய பகுதியை நோக்கி அலை அலையாக புலம் பெயர்ந்தனர்," என்று பிபிசி நியூசிடம் அவர் தெரிவித்தார்.
சுமார் 4 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு நியர் ஈஸ்ட் பகுதியில் நேஷெர் ராம்லா மனித இனத்தின் தொடக்ககால மனிதர்கள் வாழ்ந்தனர் என்று இந்த ஆராய்ச்சிக் குழுவினர் நம்புகிறார்கள்
ஐரோப்பிய கண்டத்தில் வாழ்ந்த நியாண்டர்தால் மனிதர்களுக்கு முந்தைய கால ஆதி மனிதர்கள் மற்றும் தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஆதிமனிதர்கள் ஆகியோரிடையே ஒற்றுமை இருப்பதையும் இந்த ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

லெவன்ட் (Levant) பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள வெவ்வேறு இனங்களுக்கு இடையே இருக்கும் தொடர்பை முதல்முறையாக எங்களால் அறிய முடிகிறது என்று டெல் அவிவ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த முனைவர் ரேச்சல் சரீக் தெரிவிக்கிறார்.
தற்போது நேஷெர் ராம்லா இனத்தில் புதிதாக கண்டுபிடிக்கப்பட்டுள்ள எச்சத்துடன் அவற்றின் வடிவங்களை ஒப்பிட்டு பார்க்கும்பொழுது அவற்றையும், புதிதாக கண்டறியப்பட்டுள்ள ஆதி மனித இனத்திற்கு உள்ளடக்க முடிகிறது என்று அவர் தெரிவிக்கிறார்.

இந்த ஆதி மனித இனம் நியாண்டர்தால் மனிதனின் முன்னோர்கள் என்று முனைவர் ஹிலா மே தெரிவிக்கிறார்.
தொடக்க காலத்தில் நியாண்டர்தால் மனிதர்கள் லெவன்ட் பகுதியில் இருந்தார்கள். பிற மனித இனங்களுடன் சேர்ந்து இனப்பெருக்கம் செய்யும்போது ஐரோப்பிய பகுதிக்கு இடம் பெயர்ந்தார்கள் என்று அவர் தெரிவிக்கிறார்.
மற்றவர்கள் கிழக்கு நோக்கிப் புலம் பெயர்ந்து தற்போது இந்தியா மற்றும் சீனா இருக்கும் பகுதிகளுக்கு சென்றனர். கிழக்காசியாவில் வாழ்ந்த அழிந்துபோன மனித இனத்துக்கும் ஐரோப்பாவில் வாழ்ந்த நியாண்டர்தால் மனித இனத்துக்கும் இடையே இதன் காரணமாக தொடர்பு இருக்கக்கூடும் என்று பேராசிரியர் இஸ்ரேல் ஹெர்ஷ்கோவிச் தெரிவிக்கிறார்.
கிழக்கு ஆசியப் பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்ட சில படிமங்கள் நேஷெர் ராம்லா மனித இனத்தை போலவே நியாண்டர்தால் மனித இனத்தின் கூறுகளை கொண்டுள்ளன என்றும் அவர் தெரிவிக்கிறார்.
இந்த ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளதாக கூறும் முடிவுகள் சர்ச்சைக்குரியதாக இருந்தாலும் இஸ்ரேலில் கண்டுபிடிக்கப்பட்ட மனிதப் படிமங்கள் மற்றும், ஐரோப்பிய மற்றும் ஆசிய பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்ட மனிதப் படிமங்கள் ஆகியவற்றின் இடையே இருக்கும் ஒற்றுமைகள் அடிப்படையில் தாங்கள் இவற்றை கூறுவதாக ஆய்வாளர்கள் தெரிவிக்கிறார்கள்.

லண்டனில் உள்ள நேச்சுரல் ஹிஸ்டரி அருங்காட்சியகத்தை சேர்ந்த பேராசிரியர் கிறிஸ் ஸ்ட்ரிங்கர் சீனாவில் வாழ்ந்திருந்த மனிதர்களின் எச்சங்களை சமீப காலமாக ஆய்வு செய்து வருகிறார்.
வெவ்வேறு மனித இனங்கள் ஒரே காலகட்டத்தில் ஒரே பகுதியில் வாழ்ந்து இருந்தனர் என்பதை நேஷெர் ராம்லா ஆதி மனித இனத்தின் கண்டுபிடிப்பு உறுதிப்படுத்துகிறது. மேற்கு ஆசியப் பகுதிகளிலும் இதே போல நடந்துள்ளது என்று அவர் கூறுகிறார்.
ஆனால் இஸ்ரேலில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள இந்த பழங்கால மனித படிமங்களை நியாண்டர்தால் மனிதர்கள் உடன் தொடர்புபடுத்துவது இப்பொழுதே, மிகவும் முன்கூட்டியே கணிப்பு என்று நான் கருதுகிறேன்.
நேஷெர் ராம்லா மனித இனத்தின் எச்சங்கள் மற்றும் சீனாவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள மனித படிமங்கள் ஆகியவற்றின் இடையே குறிப்பிட்ட தொடர்புகள் ஏதேனும் இருக்குமா என்பது பற்றியும் நான் ஆராய விரும்புகிறேன் என்று அவர் கூறுகிறார்.இதையே குர்ஆனில் இறைவனும் ....

மனிதர்கள் அனைவரும் (ஆரம்பத்தில் ஒரே மார்க்கத்தைப் பின்பற்றும்) ஒரே வகுப்பினராக இருந்தனர். பின்னரே (தங்களுக்குள் ஏற்பட்ட பொறாமையின் காரணமாக பல வகுப்பினராகப்) பிரிந்து விட்டனர். (குர்ஆன் : 10:19)
நேஷெர் ராம்லா இனத்தின் எச்சங்கள் வரலாற்றுக்கு முந்தைய கால மனிதர்கள் புழங்கிய பகுதியில் அமைந்திருக்கும் புதைகுழி ஒன்றிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டன.
இந்த பகுதியில் அவர்கள் காட்டு விலங்குகளை வேட்டையாடி இருக்கலாம். ஏனென்றால் ஆயிரக்கணக்கான கல் கருவிகளும் வேட்டையாடப்பட்ட விலங்குகளின் எலும்புகளும் இந்தப் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.
நம் மனித இனம் கடைசியாக பூமிக்கு வந்த ஆதத்தின் மக்கள் என்று இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தமது 'புத்தூஹாத்தில் மக்கிய்யா ' என்னும் நூலில் குறிப்பிடுவது வியப்பாக இருக்கிறதல்லவா ?

## மறை கூறும் மானிடவியல் 2

(மனித இனம் கடந்து வந்த வரலாறு)

பூமியில் மனித இனம் தோன்றிய குறுகிய காலத்தில் அது சாதித்தவை மிகவும் அற்புதமானவை
இன்றைக்கு தொலைத்தொடர்புச் சாதனங்கள், ஆகாய விமானங்கள், இன்டர்நெட், வீடு நிறைய மின்னணுக் கருவிகள்,ஆகியவையெல்லாம் இன்றைய மக்களுக்கு மிகச் சாதாராணமாகிவிட்டன. யாரும் அவற்றைக் கண்டு வியப்படைவதில்லை. அட, அலட்சியமாகக் கூடப் பார்ப்பது உண்டு. ஆனாலும், ஆழ்ந்து சிந்தித்தால், மனிதனின் சாதனைகள் உண்மையில் மகத்தானவை என்ற உண்மை புலப்படாமல் போகாது.
ஆனால் அன்றைக்கு காடுகளிலும் குகைகளிலும் வசித்துவந்த மனித இனம், கடந்து வந்திருக்கிற பாதை மெய்யாகவே அற்புதமானது. உயிர் பிழைத்திருப்பதற்கான போராட்டம் என்ற கட்டத்தையெல்லாம் தாண்டி, உலகத்தை உயிர் வாழப் பாதுகாப்பான இடமாக மாற்றியிருக்கிறோம்.

60 லட்சம் ஆண்டுகளுக்கு முன் மனித இனம் 'ஹோமோ' என்ற சிற்றினமாகப் பிரிந்தது. 28 லட்சம் ஆண்டுகளுக்கு முன் அதிலிருந்து இன்றைய மனித இனம் பரிணமித்தது.
இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முன் 'ஹோமோ சேப்பியன்' என்ற மதிநிறை மனிதர்கள் உருவானார்கள். அந்தக் காலகட்டத்தில் பூமியில் ஆறு விதமான மனித இனங்கள் தோன்றின. அவை எல்லாமே இன்றைய மனிதர்களுடன் பல வகைகளில் ஒத்திருந்தன.
ஆனாலும், அந்த இனங்களுக்குள் உருவத்திலும் மதிநுட்பத்திலும் வேறுபாடுகள் இருந்தன. அந்த இனங்களில் 'நிமிர்நிலை' மனித இனம் மட்டுமே இன்று வரை 20 லட்சம் ஆண்டுகளாகத் தப்பிப் பிழைத்திருக்கிறது.
மற்ற மனித இனங்கள் யாவும் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் முற்றாயழிந்துவிட்டன. அவை அவ்வாறு அழிந்துபோனதற்கு என்ன காரணம் என்பதை இன்று வரை ஆய்வாளர்களால் அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை. ஆனால் குர்ஆன் சொல்கிறது.
(மனிதர்களே!) அவன் விரும்பினால் உங்களைப் போக்கி தான் நாடிய எவரையும் உங்களுடைய இடத்தில் அமர்த்தி விடுவான். இவ்வாறே சென்று போன மற்ற மக்களின் சந்ததிகளிலிருந்து உங்களை உற்பத்தி செய்திருக்கிறான். (குர்ஆன் : 6:133)
ஒன்று, பூமியின் கால நிலையிலும் மேற்பரப்பிலும் ஏற்பட்ட மாற்றங்கள் மற்றும் சூழ்நிலைகளைத் தாக்குப்பிடிக்க முடியாமல், மனித இனங்கள் அழிந்திருக்கலாம். அல்லது வெவ்வேறு மனித இனங்கள் ஒன்றோடொன்று போரிட்டு அழிந்திருக்கலாம் என்று ஆய்வாளர்கள் ஊகிக்கிறார்கள்.

அக்காலத்தில் நடந்திருக்கக் கூடிய போர்கள், இன்றைய கோஷ்டிச் சண்டைகளின் அளவில் நூற்றுக் கணக்கான மனிதர்கள் மட்டுமே பங்குகொண்டவையாக இருந்தன. ஆண், பெண், குழந்தைகள் என்ற வேறுபாடின்றி எல்லாரும் கோஷ்டிச் சண்டைகளில் பங்கேற்றனர்.
வெற்றிபெற்ற கோஷ்டி, தோற்ற கோஷ்டியிலிருந்த ஆண்கள் எல்லாரையும் கொன்றுவிட்டுப் பெண்களையும் குழந்தைகளையும் கவர்ந்து சென்றுவிடும். இதன் மூலம் இனக் கலப்பு பரவலாக ஏற்பட்டாலும் ஒவ்வொரு கோஷ்டியும் தனக்கென்று ஒரு நிலப் பரப்பை வைத்துக் கொண்டு, பிற கோஷ்டிகள் உள்ளே நுழையாமல் பார்த்துக்கொண்டது.

மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மனித சமூகங்கள் கூட்டங்களாக வாழ்ந்து வந்தன. ஒவ்வொரு கூட்டமும் தனக்கென்று ஒரு மொழியை உருவாக்கிக்கொண்டு பேசியது.
சேர்ந்து வேட்டையாடுவது, கருவிகளை உருவாக்குவது, குழந்தைகளைப் பாதுகாப்புடன் வளர்ப்பது, குடிசைகள் அமைப்பது போன்ற பணிகளில் குழு உறுப்பினர்கள் எல்லோரும் பங்கேற்றனர்.இறந்தவர்களைக் குழிதோண்டிப் தாளியில் வைத்து புதைத்தனர்.
அடுத்த கட்டத்தில் எண்ணங்களை வாய் மூலமாக மட்டுமின்றி, கோட்டுப் படங்கள் மூலமாகப் பரிமாறிக்கொள்ளும் முறை உருவானது. குகைகளின் சுவர்களில் எழுதப்பட்ட படங்களும் குறிகளும் ஒருவருக்கொருவர் மட்டுமின்றி, அடுத்த தலைமுறையினருக்கும் செய்திகளைத் தெரிவிப்பனவாக அமைந்தன.
இதுதான் விலங்குகளிடமிருந்து மனிதர்களை வேறுபடுத்திக் காட்டுகிற அம்சம். விலங்குகள் தமது குட்டிகளுக்கு இரை தேடவும், வேட்டையாடவும் கற்றுக்கொடுக்கின்றன. ஆனால், சித்திர வடிவில் அவற்றைக் கற்பிக்கும் முறையைக் கண்டுபிடித்தது மனிதன்தான். பல குகைகளில் 'மம்மத்' யானையைக் கொல்ல பல மனிதர்கள் கையாண்ட உத்திகள் படமாக வரையப்பட்டிருக்கின்றன.

வேட்டையாடுவதைப் பற்றி மட்டுமல்லாது, தரையில் குடிசைகள் அமைப்பதைப் பற்றியும் குகைச் சுவர்களிலும் பாறைகளிலும் விளக்கப் படங்கள் வரையப்பட்டன.
நான்கு குச்சிகளை நட்டு, அவற்றின் மேல் முனைகளில் விலங்குகளின் தோல்களையும், இலைகளையும் மாட்டி கூரைகளும் சுவர்களும் அமைக்கப்படுவது சித்திரமாகப் பதிவுசெய்யப்பட்டது. அது அடுத்த

தலைமுறையினருக்கு வழிகாட்டிக் கையேடுபோல உதவியது. ஒவ்வொரு தலைமுறையும் வீடு கட்டும் கலையில் சிறுசிறு அபிவிருத்திகளையும் புதுப் புனைவுகளையும் அறிமுகப்படுத்தியது.
இதுபற்றி குர்ஆனில் இறைவன் : "உங்கள் வீடுகளை அல்லாஹ் உங்களுக்கு நிம்மதி தருவதாக அமைத்தான். கால்நடைகளின் தோல்களை நீங்கள் வீடுகளாக அமைக்க (வசதியான விதத்தில்) உங்களுக்காக அவன் படைத்திருக்கிறான்.(குர்ஆன் : 16:80)
இதுபோன்ற படிப்படியான திறன் வளர்ச்சி காரணமாக, இன்று உறுதியும் பாதுகாப்பும் வசதியும் மிக்க வானுயரக் கட்டிடங்களை அமைக்கும் திறமை ஏற்பட்டது.
50 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் மனித இனத்தின் அறிவிலும் திறனிலும் ஒரு திடீர் உயர்வு தோன்றியது. கருவிகள் மேன்மேலும் செம்மையும் செயல்திறனும் பெற்றவையாக உருவாக்கப்பட்டன. வாழ்க்கை முறையில் சிரமம் குறைந்தது. ஓய்வு நேரம் கூடியது.

வாய்மொழியாக இசையைப் பாடுவதும் கருவிகளைக் கொண்டு வாசிப்பதும் பிறந்தது. மக்கள்தொகை பெருகியது. திடீரென ஏற்பட்ட இந்த மறுமலர்ச்சிக்கு என்ன காரணம் என்பதை ஆய்வர்கள் கண்டுபிடிக்க முயன்றும் முழுமையாக வெற்றி கிட்டவில்லை.
12 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் மற்றுமொரு புரட்சி தோன்றியது. விவசாயம் செய்து உணவு தானியங்களைச் சாகுபடிசெய்யும் முறையைக் கண்டுபிடித்தான். விலங்குகளின் பின்னால் ஓடி வேட்டையாடியும், காய் கனிகளைப் பறித்து அல்லது சேகரித்து உணவுபெற வேண்டிய தேவை மறைந்தது. எல்லாப் பருவங்களிலும் தடையின்றி உணவு கிடைக்க விவசாயம் உதவியது.

விவசாயப் பயிர்களையும், ஜைத்தூன், பேரீச்சை, திராட்சை ஆகிய எல்லா கனிவர்க்கங்களையும் அவன் உங்களுக்கு உற்பத்தி செய்கிறான். நிச்சயமாக இதில் சிந்திக்கக் கூடிய மக்களுக்கு ஓர் அத்தாட்சி இருக்கிறது.(குர்ஆன் : 16:11)
இரை கிடைக்கும் இடத்தைத் தேடி இடம்பெயர வேண்டிய அவசியம் இல்லாது போயிற்று. ஓரிடத்தில் வீடு கட்டி வாழ்ந்து, விவசாயத்தின் மூலம் உணவு பெறுவது தொடங்கியது.
வளர்க்கும் மிருகங்களை உணவுக்காகவும், வாகனங்களாகவும் பயன்படுத்தினான். அவற்றின் உரோமங்களை ஆடையாக பயன்படுத்தினான். சிறுசிறு குடியிருப்புகள் உருவாயின.
வெள்ளாட்டின் உரோமங்கள் ஒட்டகையின் உரோமங்கள், செம்மறியாட்டின் உரோமங்கள் ஆகியவற்றிலிருந்தும் உங்களுக்கு ஆடைகளையும் குறிப்பிட்ட காலம் வரை (அவற்றில்) சுகத்தையும் அமைத்துத் தந்திருக்கிறான். (குர்ஆன் : 16:80)

சிறுசிறு குடியிருப்புகள் உருவாயின. ஒரு கிராமத்துக்கான தொடக்கமாக இது அமைந்தது. இத்தகைய சிறு கிராமங்கள் படிப்படியாக நகரங்களாக வளர்ச்சிபெற்றன. மக்கள் அதிக அளவில் பரஸ்பரம் தகவல்களைப் பரிமாறிக்கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது. அது பேச்சு வடிவ மொழியிலும் எழுத்து வடிவத்திலும் பெரும் முன்னேற்றம் ஏற்படக் காரணமாயிற்று.
சுமார் 500 ஆண்டுகளுக்கு முன் ஒரு புதிய புரட்சி தோன்றியது. அது அறிவியல் புரட்சி. உயிரியல், வானவியல், இயற்பியல், வேதியியல் போன்ற துறைகளில் அற்புதமான கண்டுபிடிப்புகள் நிகழ்த்தப்பட்டன.
அதையடுத்து, தொழிற்புரட்சி ஏற்பட்டது. மனிதர்களின் உற்பத்தித் திறன் பன்மடங்கு உயர்ந்தது. புதிய புதிய வாகனங்களும், கருவிகளும் உடல் உழைப்புக்கான தேவையைக் குறைத்து, ஓய்வுக்கும் உல்லாசத்துக்குமான அவகாசத்தை அதிகரித்தன. நுண் கலைகள் உத்வேகம் பெற்றன.

பூமியில் மனித இனம் தோன்றிச் சில லட்சம் ஆண்டுகளே ஆன நிலையில், இவ்வளவு குறுகிய காலத்தில் அது சாதித்தவை மிகவும் அற்புதமானவை. ஒவ்வோராண்டும் புதிய புதிய சாதனைகள் நிகழ்த்தப்படுகின்றன. 10 ஆண்டுகளுக்கு ஒருமுறை பழையன கழிந்து புதியன புகுந்து கொண்டிருக்கின்றன.
அமெரிக்காவில் இருக்கிற நண்பருடன் சென்னையில் இருந்தவாறு, நினைத்தபோது பேச முடிகிறது. அவரை தொலைக்காட்சித் திரையில் பார்த்துக்கொண்டேயும் அளவளாவ முடிகிறது. இதையெல்லாம் நமது கொள்ளுத் தாத்தா, பாட்டியால் கனவில்கூடக் கண்டிருக்க முடியாது.
ஆனால், எல்லா அறிஞர்களுக்கும் எழுகிற கேள்வி, “எல்லாம் இருந்தும், எல்லாம் கிடைத்தும், எல்லாம் தெரிந்தும்கூட மனிதர்கள் ஏன் ஒருவரையொருவர் கொன்று அழிக்கிறார்கள்?” என்பதுதான் அது. அதற்கு குர்ஆன் :
மனிதர்கள் அனைவரும் (ஆரம்பத்தில் ஒரே மார்க்கத்தைப் பின்பற்றும்) ஒரே வகுப்பினராக இருந்தனர். பின்னரே (தங்களுக்குள் ஏற்பட்ட பொறாமையின் காரணமாக பல வகுப்பினராகப்) பிரிந்து விட்டனர். (குர்ஆன் : 10:19)

**மறை கூறும் மானிடவியல் 3**
( ஆய்வு ரீதியில் ஆது மக்கள் )




ذٰ لِكَ مِنْ اَنْۢبَآءِ الْقُرٰى نَقُصُّهٗ عَلَيْكَ مِنْهَا قَآٮِٕمٌ وَّحَصِيْدٌ
(நபியே ! ) இவை (சிற்) சில ஊர்களின் வரலாறுகள் ஆகும்; இவற்றை நாம் உமக்கு எடுத்துரைத்தோம். இவற்றில் சில (இப்போதும்) உள்ளன; சில (அறுவடை செய்யப்பட்டவை போல்) அழிபட்டும் போயின.(குர்ஆன் : 11:100)
ஆது சமுதாய மக்கள் 70 அடி முதல் 75 அடி உயரம் இருந்ததாகவும் . ( படம் பார்க்கவும்) அத்தகைய பெரிய உடம்பில் உள்ள வலிமை அளப்பரியதாக இருந்ததாகவும் அதனால் அவர்களின் வாழ்நாட்கள் அதிகரித்து இருந்ததாகவும் கிதாபுகளில் காணக் கிடக்கிறது.
இவர்கள் 3 பிரிவினராக பிரிந்து யமன் நாட்டில் வாழ்ந்தனர் என்று வரலாற்று ஆங்கில ஆய்வாளர் வெல்லஸ்ட் ஜேம்ஸ் என்பவர் தன் ஆய்வில் குறிப்பிடுகிறார்
ஆதுக்களின் நபியாக ஹுது (அலை) அவர்கள் இருந்தார்கள். நபியவர்களும் 75 அடி உயரம்தான் இருந்திருப்பார்கள்.
பெரும் பெரும் மலைப்பாறைகளை எளிதாகக் தூக்கி எதிரிகளின் மீது போட்டு அவர்களை அழிப்பார்கள் .நாம பந்தை எறிந்து விளையாடுவதைப் போல சர்வசாதாரணமாக பெரிய பெரிய மரங்களை மூட்டோடு பிடுங்கி தாக்குவார்கள் .
ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஒட்டகத்தை அறுத்து சுட்டு உண்ணக் கூடியவர்கள். இதனால் இறைவன் பெருகும் ஒட்டகை மந்தைகளையும் , பேரீச்ச மரங்களில் செழிப்பையும் ஏற்படுத்தி இருந்தான். இதனைக் குறித்தே இறைவன் குர்ஆனில் ....
"உங்கள் உடலில் பலத்தை அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள்" குர்ஆன் (7 : 69 )
ராஸிகா - ( உணவு அளிக்கக்கூடியது)
ஹாஃபிதா - (பிரயாண பாதுகாப்பு அளிக்கக் கூடியது )
ஸாபிதா - (மழை பொழியச் செய்வது)
ஆகிய 3 கற்சிலைகளை செதுக்கி வழிபட்டனர் .
இறைவன் தொடர்ந்து 700 வருடங்களாக அம்மக்களுக்கு இறப்பை கொடுக்கவில்லை .இதனால் நமக்கு இறப்பு என்பது இல்லவே இல்லை. நம் வலிமையைக் கொண்டுதான் நாம் இவ்வாறு இருக்கிறோம் என்று நம்பினர்.
" இவர்கள் பிடிவாதக்கார முரடர்கள் "
குர்ஆன் ( 11 : 59 )
"நீங்கள் எவரையும் பிடித்தால் ஈவிரக்கமின்றி கொடுமையாக நடந்துகின்றீர்கள் " குர்ஆன் (20 : 129)
1990 ம் ஆண்டு ஆரம்பத்தில் மிக பிரபலமான பத்திரிக்கைகள், 'உபர்' என்ற பகுதியில் மணல் திட்டுகளுக்குள் சுமார் 12 மீட்டர் ஆழத்தில்."புதையுண்ட ஒரு அரபு நகரம் கண்டுபிடிக்கபட்டது" என்ற செய்தியை வெளியிட்டது. அது இறைவனின் கோபதிற்கு உள்ளான 'ஆத்' சமூதாயத்தினர் வாழ்ந்த நகரம் என்பது தொல்பொருள் ஆய்வாளர்களால் கண்டறியப்பட்டது.
யார் அந்த 'ஆத்'சமூகத்தார்கள்?
நபி நூஹ்(அலை) அவர்களின் சமுதாயத்தினருக்கு பின் தோன்றியது 'ஆது' சமூகத்தினர். அவர்களுக்கு நபி ஹூத்(அலை) அவர்களை இறை தூதராக இறைவன் அனுப்பி வைத்தான், அந்த சமூகத்தார்கள் மிக நேர்த்தியான

மாளிகைகள், அமைப்பதில் வல்லமை பெற்று விளங்கினர்,தங்களின் வலிமையை நினைத்து பெருமை கொண்டவர்களாக இருந்தனர்,அவர்கள் போன்ற ஒரு சமுதாயம் வேறு எந்த நாட்டிலும் படைக்க படவில்லை. (குர்ஆன் 89 : 8 )
நபி ஹூத் (அலை) அவர்களும் மற்ற இறைதூதர்கள் போல இறைவன் ஒருவனே அவனையே நீங்கள் வணங்க வேண்டும் என்ற ஓர் இறை கொள்கையை அச்சமுதாய மக்களிடம் எடுத்துரைதப் போது,அவர்கள் அதை ஏற்காததும் அவர்களின் பதிலையும் குர் ஆனில் அல்லாஹ் கூருகிறான்
அவர்களிடம் அவர்களுடைய சகோதரர் ஹூது'' நீங்கள் (இறைவனை) அஞ்ச மட்டீர்களா? '' என்று கூறிய போது 'நிச்சயமாக நான் உங்களுக்கு நம்பிக்கைக்குறிய (இறை) தூதன் ஆவேன். ஆகவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் எனக்கு வழி படுங்கள்.'மேலும், இதற்காக நான் உங்களிடம் யாதொரு கூலியும் கேட்கவில்லை நிச்சயமாக எனக்கு கூலி அகிலங்களின் இறைவனிடமே இருக்கிறது.
'நீங்கள் ஒவ்வோர் உயரமான இடத்திலும் வீணாக சின்னங்களை நிர்மாணிக்கின்றீர்களா?''
'இன்னும், நீங்கள் நிரந்தரமாக இருப்போம் என்று,(அழகிய வேலைப்பாடுகல் மிக்க) மாளிகைகளை அமைத்துக் கொள்கிறீர்களா?.''' இன்னும், நீங்கள்(எவரையும் ஏதங் குற்றங்களுக்காகப்) பிடித்தால் மிகவும் கொடியவர்கள் போல பிடிக்கின்றீர்கள். 'எனவே நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் எனக்கு வழி படுங்கள்.''
ஆனால் 'ஆத்' சமுதாயதினரின் பதிலோ (இதற்கு) அவர்கள், "நீர் எங்களுக்கு உபதேசம் செய்தாலும், அல்லது நீர் எங்களுக்கு செய்பவராக இல்லாதிருப்பினும் (இரண்டிமே) எங்களுக்கு சமம்தான்'' எனக் கூறினார்கள்.
'இது முன்னவர்களின் வழக்கமேயன்றி (வேறு) இல்லை.
'' மேலும், நாங்கள் வேதனை செய்யப்படவும் மாட்டோம் (இவ்வாறு கூறி) அவர்கள் அவரை பொய்ப்பித்தார்கள். ஆதலின் நாம் அவர்களை அழித்தோம் நிச்சயமாக இதிலே ஓர் அத்தாட்சி இருக்கிறது. (26:124-140)
எந்த சமுதாயம் இறைவனை நிராகரித்து இறை தூதரை நம்ப மறுத்ததோ,அவர்களுக்கு எச்சரிக்கப்பட்டது போல இறைவன் அவர்கள் மீது வேதனையை இறக்கினான்,
ஆனால் அவர்களோ (அவர்களுக்கு அனுப்பப்பட்ட வேதனை) அவர்கள் இருந்த பள்ளத்தாக்குகளை நோக்கி வேகமாக வருவதைக் கண்டதும்,'' இது நமக்கு மழையை பொழியும் மேகமாகும்'' என கூறினார்கள்
''அப்படியல்ல, இது நீங்கள் (எதற்காக) அவசரப்பட்டீர்களோ அது தான்(இது கொடுங்)காற்று.
இதில் நோவினை செய்யும் வேதனை இருக்கிறது.(46:24)
ஆத் கூட்டத்தார்கள் தங்களுக்கு வேதனை தரும் பேரழிவு கண்முன் கொண்டுவரப்படுவது அறியாமல், அதை மழை தரக் கூடிய மேக கூட்டங்களாக நினைத்தனர்.
ஏனெனில் பாலை மணல் வெளியில் உருவாகும் சுழல் காற்றானது தொலைவில் இருந்து பார்பவைகளுக்கு அடர்ந்த மழை தரும் கார்மேகங்கள் போலவே கட்சி அளிக்கும். ஆராய்சியாளர் டோ (Doe) அவர்கள் கூறுகையில் , முதல் அறிகுறியாக மணல் ஆயிரம் அடிகளுக்கு மேல் காற்றில் உயர்த்தப் பட்டு நீண்ட சுவர் போன்ற தோற்றத்தை கொடுக்கும், பின்பு காற்றின் வேகம் அதிகரித்து வட்ட வடிவில் சூராவளி பெரும் ஓசையுடன் சுழலும்.
மேலும் அல்லாஹ் திருமறையில் : "இன்னும்,ஆது கூட்டத்தாரோ பேரொலியோடு வேகமாகச் சுழன்று அடித்த கொடுங்காற்றினால் அழிக்கப்பட்டனர்.
அவர்கள் மீது, அதை ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் தொடர்ந்து வீசச் செய்தான்,எனவே அந்த சமுகத்தினரை, அடியுடன் சாய்ந்துவிட்ட ஈச்சமரங்களைப் போல் (பூமியில்) விழுந்து கிடப்பதை (அக்காலை நீர் இருந்திருந்தால்) பார்ப்பீர்.
ஆகவே, அவர்களின் எஞ்சிய எவரையும் நீர் காண்கிறீரா?
(குர்ஆன் 69: 6,7,8)

மீளவே முடியாத பயங்கரமான சுழன்று அடித்த மணல் காற்றினால் அழிக்கபட்டு அச்சமுதாயத்தினர் மண்ணில் உயிருடனே புதையுண்டு போனார்கள்.
அகழ்வராய்ச்சியில் அந்நகரம் எப்படி கண்டுபிடிக்கபட்டது ?
நிக்கோலக் க்லாப். இவர் ஓர் அனுபவமிக்க தொல்பொருள் ஆராய்சியாளர் மட்டுமின்றி, திருமறையில் கூறப்பட்ட 'ஆத்' சமூகத்தார் வாழ்ந்த (யுபர்) நகரை பெரும் முயற்சிக்கு பிறகு கண்டுபிடித்தவர் கூட,
அதற்கு அவர் இரண்டு வழிகளில் தன் முயற்சியை மேற்கொன்டார். ஒன்று NASA மூலம் குறுப்பிட்ட அந்த பகுதியை சாட்டிலைட் உதவியுடன் படம் பிடிக்க விண்ணப்பித்தார்,
இரண்டாவதாக கலிபோர்னியாவில் உள்ள ஹன்டிக்டன் நூலகத்தில் பழமையான வரைபடங்கள் (map) மற்றும் அதற்கான விளங்கங்கள் (manuscripts) பற்றி ஆராய்ந்தார்,

எப்படியாவது அந்த நில அமைப்பின் வரைபடத்தை கண்டுப்பிடிக்க வேண்டும் என்பதின் முயற்சியின் பலனாக, கி.பி 200 ஆண்டு கிரீக்-எகிப்த் புவியியல் வல்லுனர்களால் வரையபட்ட வரைபடம் அவருக்கு கிடைத்தது. அதற்கிடையில் NASA வில் இருந்து அவர் கேட்ட சாட்டிலைட் புகைபடம் கிடைக்கவே, அதில் குறிப்பிட்ட நில அமைப்பில் நிலத்திலிருந்து வெறும் கண்களால் காண முடியாத, முழு நில அமைப்பையும் வானில் இருந்து பார்த்தால் மட்டுமே தெரிய கூடிய நீண்ட வால் போன்ற தடம் (caravan) காணபட்டது,

அவரிடம் இருந்த பழைய வரைபடத்தையும் NASA வில் இருந்து கிடைத்த வால் பேன்ற அமைப்பான புகைபடத்தையும் வைத்து, குறிப்பிட்ட அந்த பகுதியில் ஒரு நகரம் இருந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்.
இறுதியாக திருமறையில் கூறபட்ட 'ஆத்' சமுதாயத்தினர் வாழ்ந்த புதையுண்ட நகரம் தோண்டும் பணி தொடங்கியது.
சரி.. அந்த நகரம் 'ஆத்' சமுகத்தினர் வாழ்ந்த 'இரம்' நகரம் தான் என்பதற்கு என்ன ஆதாரம்?
அந்த நகரம் தோண்டும் பனி பாதி நிறைவடைந்த நிலையில், அது 'ஆத்' சமுகத்தினர் வாழ்ந்த 'இரம்' நகரம் தான் என கண்டறியபட்டது ,அகழ்வாரய்ச்சியாளர் Dr.ஜரின்ஸ் கூறுகையில்,
" உயரமான தூண்கள் மற்றும் கோபுரங்கள் இது 'இரம்' நகரம் என்பதற்க்கு சான்றாகும் ஏனெனில்,' இரம்' நகரம் உயரமான் தூண்களை உடையதாக இருக்கும் என்று திருமறையில் அந்த நகரை பற்றி இறைவன் குறிப்பிடுகிறான்
"உம்முடைய இறைவன் ஆ(து கூட்டத்)தை என்ன செய்தான் என்பதை நீர் பார்க்கவில்லையா?
(அவர்கள்) தூண்களையுடைய 'இரம்' (நகர) வாசிகள்,
அவர்கள் போன்ற ஒரு சமுதாயம் எந்த நாடுகளிலும் படைக்கப்படவில்லை. (நீங்கள் போய் வரக்கூடிய வழியில்தான் ஏமன் ) அவர்கள் இருந்த இடங்கள் உங்களுக்கு நன்றாகவே தென்படுகின்றன " குர்ஆன் (89 : 6 - 😎
மேலும் ஏழு இரவுகளும், எட்டு பகலாகவும் அவர்கள் மீது மணல் காற்றால் சூழப்பட்டார்கள் என்ற இறை வசனத்தின்படி, தோண்டி எடுக்கபட்ட நகரம் 12 மீட்டர் அழமான மணல் அடுக்குகளால் மூடபட்டு இருந்ததை ஆய்வாளர்கள் கணக்கிட்டுள்ளனர்.
'ஆத்' சமுதாயத்தை நம் அனைவருக்கும் ஒரு படிப்பினையாக, வல்ல இறைவன் திருமறையில் கூறுகிறான் :

"அன்றியும் ஆது என்னும் மக்களோ, பூமியில் நியாயமின்றிப் பெருமைகொண்டு, எங்களைவிட பலசாலி யாரென்று கூறினார்கள். அவர்களைப் படைத்தவன் நிச்சயமாக அவர்களைவிட பலசாலி என்பதை அவர்கள் கவனித்திருக்க வேண்டாமா? (எனினும்,) அவர்கள் நம்முடைய (இத்தகைய) அத்தாட்சிகளையும் தர்க்கித்து நிராகரித்துக்கொண்டே இருந்தார்கள். (குர்ஆன் : 41:15)

## மறை கூறும் மானிடவியல் 4

( ஸமூது மக்களும் மலைப்பாறையும் )



நீங்கள் சிரியாவிலிருந்து என்னைக் கூட்டிக் கொண்டு மதீனா நோக்கி பயணப்பட்டால் , ஹிஜ்ர் நகரத்தை நான் காண்பிப்பேன் . ஹிஜ்ர் என்றால் பாறை குர்ஆனில் 15வது அத்தியாயம் ஹிஜ்ர் (கவனிக்கவும் மலைப்பாறை) ஆரம்ப காலங்களில் இந்நகரை " செலா" என்றழைத்தனர் . செலா என்றால் பாறை நவீன காலத்தில் கிரேக்கர் இந்நகரை பெட்ரா (petra) என்றனர் பெட்ரா என்றாலும் பாறை . ஆக குர்ஆன் சொன்ன ஹிஜ்ர்யை மாற்றி மாற்றி பாறையின் பொருள்பட எல்லோரும் பெயரிட்டனர்.(கவனிக்கவும் பாறை)

இந்தகரை கி.மு 312 ல் ஹூது (அலை) சமூத்தவரான ஆது மக்கள் (எடோனாமட்ஸ் ) வடிவமைத்தனர்.பின் ஸாலிஹ் (அலை) சமூகத்தவர்களான ஸமூது மக்களால் (நபாட்டியன்கள்) கலை அம்சத்தோடு பொலிவு பெற்றது ஹிஜ்ர் நகர். இதையே குர்ஆன்
"ஆது மக்களுக்குப் பின்னர் அவர்களுடைய பூமியில் உங்களைச் குடியேறச் செய்து அதன் சமவெளியில் மாளிகைகளைக் கட்டியும் , மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொள்கின்றீர்கள் ." குர்ஆன் ( 7 : 74)

ஸமூது மக்கள் சுமார் 600 வருடங்கள் ஹிஜ்ர் யை ஆட்சி செய்து ,தங்கள் வாழ்க்கை முழுவதும் பாறையாலும், ஒட்டகைகளாலும் சூழப்பட்டது .
அயல் நாட்டு வணிகர்களிடம் நுழைவு வரி , வியாபார வரி (உலகில் வியாபார வரி முதன்முதலாக ) விதித்து அதன் மூலம் வருமானத்தை பெருக்கி உள்ளனர்
ஸமூது மக்களின் வாழ்க்கையை ஆய்வு செய்தால், பெண் , பாறை , ஒட்டகம் , பேரீச்சம் பழம் , நீர் (நீரின் சுவை அலாதியானது) கிரேக்க சரித்திர ஆய்வாளர்கள்
தாஸ்டட்வரிஸ் , இஸ்ட்ராயூ போன்றவர்கள் பாறையின் சிற்பங்களை வியந்தாலும்,மேற் சொல்லப்பட்ட இந்த ஐந்து விஷயங்களின் ஸமூதுகளின் வாழ்க்கை உயர்ந்தையும் , அதன் மூலமாகவே தாழ்ந்தையும் குறிப்பிடுகின்றனர் .

ஹிஜ்ரை சுற்றி பலமான மலைகள் தக்க பாதுகாப்போடு இயற்கையாகவே அமையப் பெற்றதால் , எதிரிகளைப் பற்றி பயப்படவே இல்லை.
அழகிய சிற்பங்களை செய்து அதனை வணங்கினர் தலைமை பூசாரி காபூக் பின் உபைது . அவரது கனவில் " ஸமூது மக்களின் அழிவு நெருங்கி விட்டது காபூக்கின் மகனார் ஸாலிஹ்யால் மக்கள் நேர்வழி பெறுவர் "என்பதை அவர் கனவாக கண்டார் .
விடியலில் கோயிலுக்குப் போனார் சிலைகள் யாவும் தலைக்குப்புற வீழ்ந்து கிடக்க பூசாரி தூய்மையற்ற செயலை கோவிலுக்குள் செய்திருப்பார் எனவே அவருக்கு மரண தண்டனையை மன்னர் வழங்க ,
காபூக் இறைவனை வேண்ட , ஒரு மலைப் பாறையினுள் யாருக்கும் தெரியாமல் 40 வருடம் மறைத்தான் , (கவனிக்கவும் மலைப் பாறை) பின் வெளியே வரும் போது அந்த மன்னர் போய் வேறு மன்னர் இருந்தார் . பின் ஸாலிஹ் நபியைப் பெற்றார் .

ஏகத்துவ கொள்கையை மக்களிடம் நபி ஸாலிஹ் (அலை) எடுத்துரைக்க இவருக்கும் மரண தண்டனை , இறைவன் இவர்களையும் ஒரு மலைப்பாறையில் 40 வருடம் உறங்க வைத்தான் (கவனிக்கவும் மலைப்பாறை) . மீண்டும் பிரச்சாரத்தை தொடங்க , மன்னன் ஜுன்தாஹ் ,
" ஸாலிஹே ! அதோ உயர்ந்த அல்காத்திபா மலைப்பாறையில் இருந்து (கவனிக்கவும் மலை பாறை) சூல் கொண்ட நிறைமாத ஒட்டகம் வெளிவர வேண்டும். வந்ததும் கன்றை ஈன வேண்டும் .அப்படி நீர் செய்தால் சொல்வதை கேட்போம் .
" அதெப்படி உயிரற்ற மலைப் பாறை உயிருள்ள ஒட்டகத்தை எப்படி ஈனும் ? சரி, வெளிவந்த ஒட்டகம் ஆண் துணை இல்லாமல் எப்படி கன்றை ஈனும் ? ஸாலிஹ் அதிர்ச்சியுற்றார்கள் .
இறைவன், "ஸாலிஹே ! 4000 வருடங்களுக்கு முன்பே அப்படி ஒரு ஒட்டகத்தை அந்த அல்காத்திபா மலைப்பாறையில் மறைத்து வைத்துள்ளேன் " என்று கூற, மலைப்பாறை முணுமுணுக்க , பாறை பிளந்து ஒட்டகம் ஓடோடி வந்து இவர்களின் கண் முன்னே கன்றையும் ஈன்றது. (கவனிக்கவும் மலைப்பாறை)
இறைவனின் ஒட்டகத்தின் மேய்ச்சல் இடத்தையும்,கிணற்று தண்ணீர் பங்கீட்டுப் பற்றியும் முறை செய்யப்பட்டது இது பற்றி குர்ஆன் (54 : 28 ) வர்ணிக்கிறது .
இறைவனின் ஒட்டகத்தை கொல்லக் கூடியவன் இம்மாதம் பிறப்பதாக ஸாலிஹ் நபிக்கு வஹி வந்தது . உடனே ஸமூது மக்களிடம் கூற , இம்மாதம் பிறந்த 9 ஆண் மக்களை ஸமூது கொன்றனர் 10 வது பிறந்த " குதார்" (இவன் விபச்சாரத்தில் பிறந்தவன் ) என்பவனின் தகப்பனார் ஸாலூஃப் ஸமூதுகளின் தலைவர் எனவே அவனை கொல்லவில்லை . பிரச்சனை ஆரம்பம்
குதார் எந்த பிரச்சனை இல்லாமல் நன்கு வளர்ந்தான் . இப்படிதானே தம் மகன்களும் வளர்ந்திருப்பார்கள் என்று 9 பெற்றோர்கள் குமுற நபி ஸாலிஹை கொல்வதற்கு மலைப்பாறையில் மறைந்திருக்க (கவனிக்க மலைப்பாறை)
அந்த மலைப்பாறை இடிந்து 9 பேர்களும் மாண்டனர் .

ஸாலிஹ் நபி குனியக்காரர் எனவேதான் ஸமூது 9 பேர்கள் இறந்தனர் மேலும் இவர் சூனியத்தால் மலைப்பாறையில் இருந்தது வெளிவந்த ஒட்டகமும் சூனியம் தான் எனவே அதனையும் அதன் கன்றையும் கொல்ல முடிவு எடுத்தனர் .
"உனைஷா " என்ற பெரும் பணக்காரி யின் ஒட்டகங்களுக்கு மேய்ச்சல் கிடைக்காமல் ஸாலிஹ் ஒட்டகம் இருந்ததால் , அந்த ஒட்டகத்தை கொல்ல வாலிபனாக இருந்த குதாருக்கு தன் இரு மகள்களில் ஒருத்தியை தாரை வார்த்தாள்.
"ஸ்தூப் " என்ற பேரழகி தன் கணவரை ஸாலிஹ் நபி தன் மதத்திலிருந்து பிரித்து அவர் ஏகத்துவத்தை ஏற்றுக் கொள்ள செய்ததால், ஸாலிஹ் நபியை கொல்வதற்கு , பெரும் செல்வத்தையும் அதற்கு முன் பெண்சுகமாக தன்னையும் தருவதாக "மஸ்தஹ் " என்பவனை அவள் ஏற்பாடு செய்து , தன்னை அவனுக்கு விருந்தாக்கினாள் .
ரபியுல் ஆகிர் 16 ஆம் நாள் புதன்கிழமை உலக வரலாற்றில் துர்க்குறியான நாள். குதாரும் , மஸ்தஹும் மேலும் ஸமூதுகளில் கீழ்த்தரமான 7 பேர்களையும் சேர்த்துக் கொண்டு மது அருந்தி விட்டு , ஒட்டகம் நீரருந்தி விட்டு திரும்பும் வழியில் காத்திருந்தனர் ஆக இந்த ஒன்பது பேரை குர்ஆன் (27 : 48 ) விவரிக்கிறது ,
குதார் ஒரு மலைப் பாறையின் அடியிலும் மஸ்தஹ் அதற்கு எதிர்பாறையின் அடியிலும் மறைந்திருந்தனர் (கவனிக்கவும் மலைப்பாறை)

மஸ்தஹ் வின் அருகில் ஒட்டகம் வந்ததும் அவன் அம்பு எய்தான் அது ஒட்டகத்தின் கால் தசையிதுள்ள நரம்பை துண்டித்தது .
உடனே உனைஷா தன் மகள்களுக்கு கட்டளைப் பிறப்பிக்க அந்த கும்பல்களுக்கு தங்களது முகத்தை திறந்து காட்டினார்கள் . எப்பா..என்ன அழகு !
உடனே குதார் தனது வாளால் ஒட்டகத்தின் பின்னங் காலை பலமாக தாக்கினான் . தாய் ஒட்டகம் மிகப் பெரிய மூன்று பேரொலியை எழுப்பி தரையில் சாய்ந்தது அதன் கன்று அதே அல்காத்திபா மலைப்பாறையினுள் சென்று மறைந்தது (கவனிக்கவும் மலைப்பாறை). இந்த ஒட்டகக் கன்று தான் கியாமத் நாளின் போது வெளியாகும் அதுதான் "தாப்பத்துல் அர்ளு " என்று சொல்லப்படுகிறது .

பின் அந்த ஒன்பது பேர் கும்பல் நபியவர்களை கொல்ல திட்டம் தீட்டி குர்ஆன் (27 : 49,50 ) மலைப்பாறையினுள் பதுங்கினார்கள் அந்த மலைப்பாறையும் சரிந்து (கவனிக்கவும் மலைப்பாறை ) அவர்களுடைய சமூகத்தினர் அழிவதற்கு முன்பே இந்த 9 பேர்களும் மாண்டனர்,
ஒட்டகம் 3 பேரொளியை எழுப்பியதால் 3 நாட்கள் கெடு ஆரம்பமானது ஸமூது மக்கள் மரணத்திலிருந்து தப்பிக்க மலைப் பாறையின் அடியில் சுரங்கம் தோண்டி (கவனிக்கவும் மலைப்பாறை) காதில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டு பதுங்கி இருந்தனர் நான்காம் காலை பொழுது புலர்ந்தது ஒரே ஒரு இடி சப்தம்தான் .
"அவர்கள் செய்து கொண்டிருந்த அநியாயங்களின் காரணமாக அழிந்து போன அவர்களுடைய வீடுகள் இதோ பாழடைந்து கிடக்கின்றன. அறியக்கூடிய மக்களுக்கு நிச்சயமாக இதில் ஒரு நல்ல படிப்பினை இருக்கிறது " குர்ஆன் (27 : 52)

ஸமூத் மக்களைப் பற்றி குர்ஆனின் 15 வது அத்தியாயத்தில் குறிப்பிடுகிறது பெயர் " அல் ஹிஜ்ர் " ஹிஜ்ர் என்றால் மலைப்பாறை (கவனிக்கவும் மலைப்பாறை) - மீள்பதிவு

**மறை கூறும் மானிடவியல் 5** (யஃஜூஜ் – மஃஜூஜ் கூட்டம் ) யார் இந்த துல்கர்னைன் ?






துல்கர்னைன் என்றால் இரண்டு கொம்புக்காரர் அல்லது இரட்டை மணிமுடியார் என்பதாகும்.
ரோம், பாரசீகத்தை ஆட்சி செய்ததினால் இரட்டை மணிமுடியார் என்றும் அல்லது அவரது தலை கவசத்தில் இரண்டு கொம்புகள் போன்ற அமைப்பு இருந்ததால் இரண்டு கொம்புக்காரர் என்றும் அழைக்கப்படுவதாகவும், இவர் கிழக்கிலிருந்து மேற்கு வரை சென்றதால் சூரியனின் இரு கிரணங்களையும் அடைந்தவர் என்ற கருத்தில் துல்கர்னைன் (இரண்டு கிரணங்களை உடையவர் ) என்றும் அழைக்கப்படுகிறது .

இவர் ஓர் நல்ல இறையடியாராகவும், மேலும் மக்களை அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவராகவும் காணப்பட்டார். இவரின் இயற்பெயர் இஸ்கந்தர் என்றும், இவர் இப்றாஹீம் நபியின் காலத்தில் மன்னராக திகழ்ந்ததாகவும் வரலாறுகள் கூறுகின்றன. (பார்க்க தப்ஸீர் இப்னு கஸீர்)
அல்லாஹ் இந்த உலகத்தில் பல கோடி படைப்புகளைப் படைத்து, அந்த படைப்புகளை காலத்திற்கும், நேரத்திற்கும், ஏற்ப அல்லாஹ் வெளியாக்கிக் கொண்டிருக்கிறான். அல்லாஹ்வால் படைக்கப்பட்டு மறைக்கப்பட்ட படைப்புகளில் முக்கியமானதொரு படைப்பு தான் இந்த யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டமாகும்.
துல்கர்னும்,யஃஜூஜ், மஃஜூஜூம்...

துல்கர்ன் ஆட்சி காலத்தில் மலையடிவாரத்தில் இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டம் காணப்பட்டதாகவும், அவர்கள் பேசும் பாஷை புரியவில்லை என்றும் அவர்கள் மக்கள் நடமாட்டத்திற்கு இடையூறு செய்வதாகவும் அன்றைய மக்கள் துல்கர்னைன் மன்னரிடம் எடுத்து கூறி, மேலும் நாங்கள் எங்கள் பொருளாதாரத்தை தருகிறோம் இந்த (யஃஜூஜ், மஃஜூஜ்) கூட்டத்தை ஏதாவது செய்யுங்கள் என்று மக்கள் வேண்டிய போது, அல்லாஹ் எனக்கு நிறைய பொருளாதாரத்தை தந்துள்ளான். என்றாலும் உங்கள் உடல் ரீதியான ஒத்துழைப்பை தாருங்கள் என்று மக்களிடம் மன்னன் கூறி விட்டு,
இரும்பு பாலங்களை தூக்கி வாருங்கள் என்று துல்கர்னைன் கட்டளையிட்டார்.அதன் பின் யஃஜூஜ், மஃஜூஜ் இருந்த மலையடிவாரத்திற்கு மக்களோடு துல்கர்னைன் சென்றார்.

தூக்கி கொண்டு போயிருந்த இரும்பு பாலங்களை இரண்டு மலைகளுக்கு இடையில் அடுக்க சொல்லி, அதன் பிறகு அந்த இரும்பின் மீது நெருப்பை மூட்டச் சொன்னார். அதன் பிறகு உருக்கிய செம்பை அந்த எறிக்கப்பட்ட இரும்பின் மீது துல்கர்னைன் ஊற்றினார். இனிமேல் இவர்கள் உங்களுக்கு எந்த இடையூறும் தரமுடியாது, அல்லாஹ் என்றைக்கு நாடுகிறானோ அன்றைக்கு இந்த மலையை உடைத்து விட்டு வெளியேறுவார்கள் என்று துல்கர்னைன் சொன்ன இந்த சம்பவத்தை பின் வரும் குர்ஆன் வசனங்களின் (18:94-99) மூலம் காணலாம்.
எனவே எப்படி தஜ்ஜால் படைக்கப்பட்டு மறைக்கப்பட்டுள்ளானோ, அது போல யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டமும் படைக்கப்பட்டு, இரண்டு மலைகளுக்கு இடையில் அடைக்கப்பட்டுள்ளனர். யாராலும் கண்டு பிடிக்க முடியாத அளவிற்கு அந்த குறிப்பிட்ட நாள் வரைக்கும் மறைக்கப்பட்டுள்ளனர்.
அந்த நாள் வந்து விட்டால் வெள்ளம் பாய்ந்து வருவதைப் போல பல திசையின் பக்கம் விரைந்து வருவார்கள் என்பதை பின் வரும் குர்ஆன் வசனம் உறுதிப்படுத்கிறது.
“இறுதியில் யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினர் திறந்து விடப்படுவார்கள். உடனே அவர்கள் (வெள்ளம் போல் ஒவ்வொரு மேட்டிலிருந்தும்) விரைந்து வருவார்கள். (அல்குர்ஆன் 21:96)
...பின்னர், அல்லாஹ் “யஃஜூஜ்” “மஃஜூஜ்” கூட்டத்தாரை அனுப்புவான். அவர்கள் ஒவ்வோர் உயரமான பகுதியிலிருந்தும் வேகமாக(க் கீழே இறங்கி) வருவார்கள். அவர்களில் முதல் அணியினர் (ஜோர்தானில் உள்ள) “தபரிய்யா” ஏரியைக் கடந்து செல்லும்போது, அதிலுள்ள மொத்த நீரையும் குடித்துவிடுவார்கள். அவர்களின் இறுதி அணியினர் அதைக் கடந்து செல்லும்போது. “முன்னொரு காலத்தில் இந்த ஏரியில் தண்ணீர் இருந்திருக்கும்”என்று பேசிக் கொள்வார்கள்.
பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (தூர் மலையில்) முற்றுகையிடப்படுவார்கள். அப்போது (ஏற்படும் பட்டினியால்) அவர்களில் ஒருவருக்குக் காளை மாட்டின் தலை கிடைப்பது, இன்று உங்களில் ஒருவருக்கு நூறு பொற்காசுகள் கிடைப்பதைவிடச்
சிறந்ததாக இருக்கும்.
பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (அல்லாஹ்விடம் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான். அதனால் அவர்கள் அனைவரும் ஒரே நேரத்தில்
பலியாவார்கள்.
பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள். அப்போது பூமியின் எந்தவொரு சாண் அளவு இடமும், யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் (சடலங்களிலிருந்து வெளிவரும்) கொழுப்பாலும் துர்நாற்றத்தாலும் நிரம்பி இருப்பதையே காண்பார்கள். உடனே இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் அல்லாஹ்விடம் (அவற்றை அகற்றக்கோரிப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துகளைப் போன்று (பெரியதாக உள்ள) பறவைகளை அனுப்புவான். அவை அந்தப் பிணங்களைத் தூக்கிச் சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும்.
பின்னர் அல்லாஹ் மழை பொழியச் செய்வான். அந்த மழை எந்த மண் வீட்டிலும், எந்த முடிவீட்டிலும் படாமல் இருக்காது. இறுதியில், பூமியைக் கழுவி, கண்ணாடி போன்று (சுத்தமாக) ஆக்கிவிடும். பின்னர் பூமிக்கு, “நீ உன் கனி வர்க்கங்களை முளைக்கச் செய்வாயாக; உன்னிடமுள்ள வளங்களை மறுபடியும் தருவாயாக” என்று உத்தரவு பிறப்பிக்கப்படும்

அன்றைய நாளில் (எந்த அளவுக்கு வளம் கொழிக்குமெனில்), ஒரு குழுவினர் சேர்ந்து ஒரேயொரு மாதுளம் பழத்தை உண்பர். அதன் தொலி அவர்கள் அனைவருக்கும் நிழல் அளிக்கும்.

அவர்களுக்குப் பால் வளமும் கிட்டும். எந்த அளவுக்கென்றால், பால் தரும் ஓர் ஒட்டகம் ஒரு பெரும் கூட்டத்துக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் பசுவொன்று ஒரு குலத்தாருக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் ஆடொன்று உறவினர்கள் அடங்கிய ஒரு கூட்டத்திற்கே போதுமான தாயிருக்கும்.
இந்நிலையில் அல்லாஹ் தூய காற்று ஒன்றை அனுப்புவான். அது அவர்களின் அக்குள்களுக்குக் கீழே நுழைந்து அவர்களைப் பிடித்துக்கொள்ளும். இறைநம்பிக்கை கொண்ட ஒவ்வொரு முஸ்லிமின் உயிரையும் அது கைப்பற்றும். அதையடுத்து மக்களில் தீயவர்கள் (மட்டுமே பூமியில்) எஞ்சியிருப்பார்கள். அவர்கள் கழுதைகளைப் போன்று (வெட்ட வெளியில் வைத்துப் பகிரங்கமாக) உடலுறவு கொள்வார்கள். அவர்கள் மீதுதான் உலக முடிவு நாள் ஏற்படும். இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது. (முஸ்லிம் 5629)
மேலும் "யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் பைத்துல் முகத்தஸ் பகுதியில் உள்ள மலையில் ஏறுவார்கள். பூமியில் உள்ளவர்களை நாம் கொன்று விட்டோம். வாருங்கள் வானத்தில் உள்ளவர்களைக் கொல்வோம் என்று அவர்கள் கூறுவார்கள். தங்கள் அம்புகளை வானத்தை நோக்கி எய்வார்கள். அவர்களின் அம்புகளை ரத்தத்தில் தோய்த்து அல்லாஹ் திருப்பி அனுப்புவான் என நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.(முஸ்லிம்)
இந்தக் கூட்டத்தினர் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறிய சில விபரங்களையும் நாம் அறிந்து கொள்வோம்.

யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினர் வரும் வரை நீங்கள் போராடிக் கொண்டே இருப்பீர்கள். அவர்களின் முகங்கள் கேடயம் போல் அகன்றதாகவும், (வட்டமாகவும்) கண்கள் சிறியதாகவும் முடிகள் செம்பட்டையாகவும் அமைந்திருப்பார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: காலித் பின் அப்துல்லாஹ், (நூல்: அஹ்மத்)
இந்தக் கூட்டத்தினர் தனியான இனத்தவர் அன்று. ஆதம் (அலை) அவர்களின் சந்ததியில் தோன்றியவர்களே என்பதைப் பின்வரும் நபிமொழி அறிவிக்கின்றது.

யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தினர் ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகளாவர். அவர்கள் விடுவிக்கப்பட்டால் மக்களின் வாழ்க்கையைப் பாழாக்குவார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம் அல்லது அதற்கும் அதிகமான சந்ததிகளை உருவாக்காமல் மரணிப் பதில்லை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ரு (ரலி), (நூல்: தப்ரானி)
ஒவ்வொருவரும் ஆயிரம் சந்ததிகளைப் பெற்றெடுப்பார்கள் என்பதிலிருந்து அவர்களின் எண்ணிக்கை கணக்கிலடங்காமல் இருக்கும் என்று கருத முடிகின்றது. யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் எண்ணிக்கை மிகமிக அதிகமாக இருக்கும் என்பதை நபிகள் நாயகத்தின் பொன்மொழியிலிருந்து அறிய முடிகின்றது.
...உங்களில் ஒருவர் என்றால் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் ஆயிரம் என்ற கணக்கில் நரகவாசிகளின் எண்ணிக்கை இருக்கும் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.(புகாரி 3348)

யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டம் அழிக்கப்பட்ட பின் முஸ்லிம்கள் ஹஜ்ஜும் உம்ராவும் செய்வார்கள். ஹஜ் செய்வோர் யாரும் இல்லை என்ற நிலையில் தான் யுக முடிவு நாள் ஏற்படும் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள். (புகாரி 1593) (மீள்பதிவு

**மறை கூறும் மானிடவியல் 6** (ஆது சமுதாயமும், அமெரிக்க அபாயமும்



சாண்டி புயல், அமெரிக்காவின் கடற்கரையோர நகரங்களை நிலைகுலையச் செய்துள்ளது. 13 அடி உயரத்துக்கு மேல் எழும்பிய அலைகள் பெரும் சேதத்தை ஏற்படுத்தியுள்ளன.
மணிக்கு 80 கிலோமீட்டர் வேகத்தில் வீசிய காற்றால்,

மரங்கள் வேரோடு பெயர்ந்து விழுந்துள்ளன.அமெரிக்காவில் சாண்டி புயலால் 2,000 கோடி அமெரிக்க டாலர் (சுமார் ரூ.1.08 லட்சம் கோடி) அளவுக்கு சேதம் ஏற்பட்டுள்ளது.
11 மாகாணங்கள் இருளில் மூழ்கியுள்ளன. 62 லட்சம் பேர் மின்சாரம் இன்றித் தவித்து வருகின்றனர். புயல் பாதிப்பால் இதுவரை 70 க்கும் மேற்பட்டோர் உயிரிழந்துள்ளனர்.மேலும் 3 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் தங்கள் வீடுகளை விட்டு வெளியேறியுள்ளனர்.

போக்குவரத்து தொடர்ந்து முடங்கியுள்ளது. நியூயார்க்கின் ஜான் எஃப் கென்னடி விமான நிலையம் மூடப்பட்டு, 13 ஆயிரம் விமான சேவைகள் நிறுத்தப்பட்டுள்ளன.
அமெரிக்காவின் இந்த பேரழிவைக் காணுகிறபொழுது பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் அகங்காரத்தோடும் ஆணவத் திமிரோடும் வாழ்ந்து அழிந்துபோன ஆது சமுதாயம் நினைவிற்கு வருகிறது.அதிபயங்கர புயற்காற்றால் அழிவைச் சந்தித்த இந்த இரண்டு கூட்டத்திற்கும் எவ்வளவு பொருத்தம்?
ஆது உடல் வலிமை; அமெரிக்கா ஆயுத வலிமை!
இந்த சமூகத்தினர் வலிமை மிக்க உடலமைப்பைப் பெற்றிருந்தார்கள். பெரும் செல்வந்தவர்களாகவும் இருந்தனர். இவர்கள் ஹள்ர மவுத்திலிருந்து அம்மான் வரை பரவி வாழ்ந்து கொண்டிருந்தனர்.
''நூஹுடைய சமூகத்தாருக்குப் பின்னர் அவன் உங்களைப் பூமியில் பின்தோன்றல்களாக்கி வைத்து, உங்கள் உடலில் பலத்தையும் அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள் - எனவே அல்லாஹ்வின் அருட்கொடைகளை எல்லாம் நினைத்துப் பாருங்கள்; நீங்கள் வெற்றி பெறுவீர்கள்" (என்றும் கூறினார்) (அல்குர்ஆன் 7:69)
(அவர்கள்) தூண்களையுடைய 'இரம்' (நகர) வாசிகள், (அல்குர்ஆன் 89:7)

அவர்கள் போன்ற ஒரு சமுதாயம் எந்த நாடுகளிலும் படைக்கப்படவில்லை. (அல்குர்ஆன்89:8)
உலக படை வலிமையில் ஐக்கிய அமெரிக்கா முதலிடம் வகிக்கிறது. அணு ஆயுத வலிமையில் அமெரிக்கா குறைந்த நாடல்ல. உலகளவில் மிகப் பெரிய ஆயுத விற்பனை கார்ப்பரேட்டுகள் என லாக்ஹீட் மார்டின், பி,ஏ,ஈ சிஸ்டம்ஸ், போயிங், ரேய்தியான், நார்த்ராப் க்ரும்மன், ஜெனரல் டைனமிக்ஸ், தாம்சன் சி.எஸ்.எஃப் ஆகிய ஏழு நிறுவனங்கள். இவற்றில் முதல் ஆறும் அமெரிக்க நிறுவனங்கள். ஏழாவது மட்டுமே பிரான்சுடையது.

விதம் விதமான மாளிகைகள் கோபுரங்கள் கட்டுவதில் ஆது அமெரிக்கா இருவருமே ஆர்வம் காட்டியுள்ளனர். மலைகளைக் குடைந்து பல அறைகள் அமைத்து வாழ்ந்தவர்கள் ஆதுகள்.
132 அறைகள், 35 குளியல் அறைகள், 6 அடுக்கு மாடி இருப்பிடங்களை வெள்ளை மாளிகை 55000 சதுர அடி பரப்பளவில் கொண்டுள்ளது. மேலும் 412 கதவுகள், 147 ஜன்னல்கள், 28 எரிப்புகள், 8 மாடி படிக்கட்டுத்தொகுதிகள், 3 மின்னகர்த்திகள் ஆகியவற்றினையும் கொண்டுள்ளது. அமெரிக்க வெள்ளை மாளிகை

அல்லாஹ்வின் தூதர் ஹூது அலை அவர்கள் ஆது கூட்டத்தை நோக்கி கேட்டதை அல்குர் ஆன் கூறுகிறது:
"நீங்கள் ஒவ்வோர் உயரமான இடத்திலும் வீணாக சின்னங்களை நிர்மாணிக்கின்றீர்களா? (அல்குர்ஆன் 26:127)
இன்னும், நீங்கள் நிரந்தரமாக இருப்போம் என்று, (அழகிய வேலைப்பாடுகள் மிக்க) மாளிகைகளை அமைத்துக் கொள்கின்றீர்களா? (அல்குர்ஆன் 26:128)
இந்த வசதியாலும் வலிமையாலும் ஆணவம் தலைக்கேறி எங்களைப் போல உண்டுமா உலகில்? என்று ஆர்ப்பரித்தனர் ஆதுகள். அதேபோல் அமெரிக்காவும் ஆணவத்தால் ஆடுவது அனைவரும் அறிந்த உண்மை. தன் சுயநலத்திற்காக அப்பாவிகளை அடக்குமுறைக்கு ஆளாக்கி அளவுக்கு மீறி அநியாயம் புரிவது
இன்னும், நீங்கள் (எவரையும் ஏதுங் குற்றம் சுமத்திப்) பிடித்தால் மிகவும் கொடியவர்கள் போல் பிடிக்கின்றீர்கள். (அல்குர்ஆன் 26:129)
என்று ஹூது அலை அவர்கள் அந்த ஆது கூட்டத்தை நோக்கி கூறினார்கள்.
தங்கள் தலைகள் மீது பெரும் பாறாங்கற்களைத் தூக்கி சென்று அப்பாவிகள் மீது போட்டு அநியாயமாகக் கொல்வராம் ஆதுகள்.

அமெரிக்கா பல நாடுகளில் அத்துமீறி நுழைந்து அப்பாவி மக்களை அழித்துக் கொண்டே இருப்பது அகிலமே அறிந்தது. அமெரிக்காவின் குவாண்டமா சிறையில் ஆயிரக்கணக்கான அப்பாவிகள் படும் அவஸ்தை சொல்லி மாளாது.
அதுமட்டுமல்ல.. கொஞ்சம்கூட மனசாட்சி இல்லாமல் கொடூரமாக தாக்குவதில் அமெரிக்காவிற்கு நிகர் அமெரிக்காதான்.
ஜப்பான் நாட்டிலுள்ள 'ஹிரோஷிமா' நகரத்தின் மீது 1945 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 6 ஆம் தேதி அமெரிக்கா அணுகுண்டு போட்டது. அணுகுண்டு விழுந்தவுடன் பயங்கரச் சத்தத்துடன் வெடித்து.
2000 அடிகளுக்கும் மேல் தீப்பிழம்புகள் தெரிந்தன. மொத்தத்தில் சுமார் 16 கிலோ மீட்டர் நிலப்பரப்பில் இருந்த அனைத்தும் முழுமையாக அழிந்தது. கட்டங்கள் தரைமட்டமாயின.
மூன்று நாட்கள் கழித்து 'நாகசாகி' நகரத்தின் மீது அணுகுண்டைப் போட்டனர். இந்த அகோரக் குண்டு வீச்சினால் ஏற்பட்ட சாவும், சேதமும் இன்றுவரை துல்லியமாக மதிப்பிட முயன்றும் முடியவில்லை. வரலாறு காணாத சேதாரம் என்று மட்டுமே சொல்ல முடியும்.

சுமாராகக் கணக்கிட்டதில் ஹிரோஷிமாவில் மட்டும் குறைந்தபட்சம் 1,40,000 பேர் இக்குண்டு வீச்சினால் இறந்திருக்கிறார்கள் என்றும் 74,000 பேர் நாகசாகியில் மரணமடைந்தனர் என்றும் கணக்கிடப்பட்டுள்ளது. குண்டு விழுந்த பிறகு மாதக் கணக்காக, வருடக்கணக்காக சிலர் குற்றுயிரும் குலையுயிருமாக உயிருடன் இருந்து துன்பப்பட்டு, கதிர்வீச்சின் தாக்கத்தால் மடிந்தனர். 'இறந்தவர்களில் மிகப் பெரும்பான்மையினர் ஏதுமறியாத அப்பாவிப் பொதுமக்கள்' என்று ஆய்வறிக்கை கூறியது.
1950 முதல் 1990 வரை நடைபெற்ற ஆய்வில் அணுகுண்டுக் கதிர்வீச்சின் நச்சுத்தன்மை காரணமாக பல்லாயிரம் பேர் இறந்தனர் என்பது வெளிப்பட்டது. பல்லாயிரம் பேருக்கு இச்சம்பவம் நிகழ்ந்து பல்லாண்டுகளான பின்பும் சதைப் பிண்டங்களாக குழந்தைகள் பிறக்கின்றன. கை,கால், கண்,மூக்கு போன்ற உடல் பாகங்களின்றி ஊனமாகக் குழந்தைகள் பிறக்கின்றன.

ஆது (கூட்டத்தினரும், இறை) தூதர்களைப் பொய்ப்பித்தனர். (அல்குர்ஆன் 26:123)
அவர்கள் நபியை நோக்கி "நீர் எங்களுக்கு உபதேசம் செய்தாலும் அல்லது நீர் எங்களுக்கு உபதேசம் செய்பவராக இல்லாதிருப்பினும் (இரண்டுமே) எங்களுக்கு சமம்தான்" எனக் கூறினார்கள். (அல்குர்ஆன் 26:135)
"இது முன்னவர்களின் வழக்கமேயன்றி (வேறு) இல்லை. (அல்குர்ஆன் 26:136)
"மேலும், நாங்கள் வேதனை செய்யப் படவும் மாட்டோம்." (அல்குர்ஆன் 26:137)
(இவ்வாறு கூறி) அவர்கள் அவரைப் பொய்ப்பித்தார்கள்; ஆதலின் நாம் அவர்களை அழித்தோம்; நிச்சயமாக இதிலே ஓர் அத்தாட்சி இருக்கிறது எனினும் அவர்களில் பெரும்பாலோர் நம்பிக்கை கொள்வதில்லை. (அல்குர்ஆன் 26:138)
நபியைப் பொய்ப்பித்து நையாண்டி செய்தததால் அழிவு ஏற்பட்டது என்று அல்லாஹ் கூறுகிறான்.
அதேபோல நம் உயிரினும் மேலான நபி (ஸல்) அவர்களை நையாண்டி செய்து அமெரிக்கன் ஒருவன் எடுத்த திரைப்படத்திற்கு அமெரிக்கா 'கருத்து சுதந்திரம்' என்று வக்காலத்து வாங்கியது
அதன் தொடர்ச்சியாக கலிபோர்னியா மாகாணத்தில் கடுமையான நில நடுக்கமும் இப்போது பயங்கர சூறைக்காற்றும் அமெரிக்காவை சூறையாடிவிட்டது.
ஆது மக்களுக்கு ஏற்பட்ட புயற்காற்று அமெரிக்காவையும் ஆட்டிப் படைத்துவிட்டது.
அவர்களோ (அவர்களுக்கு அனுப்பப்பட்ட வேதனை) அவர்கள் இருந்த பள்ளத்தாக்குகளை நோக்கி மேகமாக வருவதைக் கண்டதும், "இது நமக்கு மழையைப் பொழியும் மேகமாகும்" எனக் கூறினார்கள்; "அப்படியல்ல, இது நீங்கள் (எதற்காக) அவசரப்பட்டீர்களோ அதுதான்; (இது கொடுங்)காற்று - இதில் நோவினை செய்யும் வேதனை இருக்கிறது (குர்ஆன் 46:24)

"அது தன் இறைவனின் கட்டளையினால் எல்லாப் பொருட்களையும் அழித்துவிடும்" (என்று கூறப்பட்டது). பொழுது விடிந்த போது, (அழிக்கப்பட்ட அவர்களுடைய) வீடுகளைத் தவிர (வேறு) எதுவும் காணப்படவில்லை - இவ்வாறே குற்றம் செய்யும் சமூகத்திற்கு நாம் கூலி கொடுக்கிறோம். (அல்குர்ஆன் 46:25)

அவர்கள் வேண்டிய வேதனை காற்று உருவத்தில் வந்தது ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் காற்று அவர்களைத் துன்புறுத்தி அணு அணுவாக அழிந்தது அல்லாஹுவின் வாக்கு நிறைவேறியது.
நிச்சயமாக நாம் அவர்கள் மீது, நிலையான துர்பாக்கியமுடைய ஒரு நாளில், பேரிறைச்சலைக் கொண்ட வேகமான காற்றை அனுப்பினோம். (அல்குர்ஆன் 54:19)

நிச்சயமாக: வேரோடு பிடுங்கப் பட்ட பேரீத்த மரங்களின் அடித்துறைப் போல் (அக்காற்று) மனிதர்களை பிடுங்கி எறிந்து விட்டது. (அல்குர்ஆன் 54:20)

ஆகவே, என் (கட்டளையினால் ஏற்பட்ட) வேதனையும் எச்சரிக்கையும் எப்படி இருந்தன? (என்பதைக் கவனிக்க வேண்டாமா?) (அல்குர்ஆன் 54:21)

இன்னும், ஆது கூட்டத்தாரோ பேரொலியோடு வேகமாகச் சுழன்று அடித்த கொடுங்காற்றினால் அழிக்கப்பட்டனர். (அல்குர்ஆன் 69:6)

அவர்கள் மீது, அதை ஏழு இரவுகளும், எட்டுப் பகல்களும் தொடர்ந்து வீசச் செய்தான், எனவே அந்த சமூகத்தினரை, அடியுடன் சாய்ந்துவிட்ட ஈச்சமரங்களைப் போல் (பூமியில்) விழுந்து கிடப்பதை (அக்காலை நீர் இருந்திருந்தால்) பார்ப்பீர். (குர்ஆன் 69:7)

ஆது கூட்டம் சவால் விட்டது. நீர் உண்மையாளராக இருந்தால் அந்த வேதனையைக் கொண்டு வாரும் பார்க்கலாம்.
அதன் பின்னால் வானத்தில் கருமேகம் வந்தது. இது நீண்ட நாள் பஞ்சத்திற்கு பிறகு நமக்கு நல்ல மழை தரும் மேகம் என்று ஆர்ப்பரித்தார்கள். ஆனால் அது மழை மேகம் அல்ல; அவர்களை அழிக்க வந்த கொலை மேகம் என்று பிறகுதான் புரிந்துகொண்டார்கள். முதன் முதலில் இந்த காட்சியைக் கண்டவள் மஹ்த் என்ற பெண்.

''நரகிலிருந்து தீப்பொறி பறந்துவருவதைப்போல கண்டேன். அவற்றின்மீது நீண்டு உயர்ந்த பெரிய மனிதர்கள் சிலர் தோன்றி அங்கு போ இங்கு போ என்று அந்த தீப்பொறி மேகங்களுக்கு ஆனையிட்டுக் கொண்டிருந்தனர். எனவே இது வேதனைக்குரிய மேகம்தான் என்றாள் அந்த மக்கள் அதை நம்பவில்லை. இவளுக்கு பைத்தியம் என்று கேலி செய்தார்கள்.

இதேபோல ஒரு காட்சி சமீபத்தில் இராமேஸ்வரம் தனுஷ்கோடி புயலில் அழிந்தபோது நடந்துள்ளது.
நூற்றுக் கணக்கான பயணிகளை ஏற்றிக்கொண்டு ஒரு ரயில் இராமேஸ்வரம்
பாலத்தில்,சென்றுகொண்டிருந்தது. அந்த நேரம் திடீரென கடும் புயற்காற்று வந்து கடல் கொந்தளிப்பு ஏற்பட்டு ரயில் கடலில் அடித்து செல்லப்பட்டது. அதில் பயணித்த ஒரு பெண்மணியின் உடலை உயிருக்கு போராடிக் கொண்டிருந்த நிலையில் மீட்டபோது அவள் கொடுத்த வாக்குமூலம்:
நான் கடல் அலைகளுக்கு மத்தியில் போராடிக் கொண்டிருந்தபோது ரயில் தண்டவாளத்தின் ஒரு கட்டை மிதந்து வந்தது. அதைப் பற்றிப் பிடித்துக்கொண்டேன். அந்த நேரம் ஆகாயத்தில் ஒரு அதிசயத்தைக் கண்டேன். கடும் காற்று வீசிக்கொண்டு இருந்த நிலையில் மேகங்களுக்கிடையே சில மனிதர்கள் தலையில் தலைப்பாகை அணிந்திருந்தார்கள். என் கண்ணால் கண்டேன் இங்கு போ அங்கே போ என்று மேகங்ளையும் காற்றையும் அதட்டிக் கொண்டிருந்தார்கள். என் காதால் கேட்டேன்''

ஆது சமுதாயம் மழைமேகம் என நம்பிய போது, இல்லை, அது அல்லாஹுவின் தண்டனை என ஹூத் (அலை) அவர்கள் எச்சரித்த சம்பவத்தை குர்ஆன் ஒளியில் அறிந்தோம். நபி(ஸல்) அவர்கள் மழை மேகத்தை காணும் போதெல்லாம் ஆது சமுதாயத்தின் நிலையை நினைத்து அஞ்சக் கூடியவர்களாகவே இருந்துள்ளார்கள்.

ஆயிஷா (ரழி) அவர்கள் கூறியதாவது:
நபி(ஸல்) அவர்கள் மழை மேகத்தை வானத்தில் கண்டால் முன்னால் நடப்பார்கள்; பிறகு திரும்பி நடப்பார்கள்; (தம் அறைக்கு) உள்ளே போவார்கள்; வெளியே வருவார்கள். (நிம்மதியற்று ஒருவிதத் தவிப்புடன் காணப்படுவார்கள்.) அவர்களின் முகம் மாறி விடும். வானம், மழை பொழிந்துவிட்டால் அந்த (தவிப்பான) நிலை அவர்களைவிட்டு நீங்கி விடும்.
எனவே, (ஒரு முறை) நான் அவர்களுக்கு அந்தத் தவிப்பான நிலை ஏற்படுவதை கவனத்திற்குக் கொண்டு வந்தேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், '(திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளபடி) ஆது சமுதாயத்தார், அந்த வேதனை (கொணரும் மேகம்) தாங்கள் வசித்த பள்ளத்தாக்குகளை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டபோது (தவறாகப் புரிந்து கொண்டு), 'இது நமக்கு மழை பொழிவிக்கும் மேகமாகும்" (திருக்குர்ஆன் 46:24) என்று கூறினார்களே அத்தகைய (வேதனையைக் கொணரக் கூடிய) மேகமாகவும் இது இருக்கலாம் எனக்குத் தெரியாது" என்று பதிலளித்தார்கள். (புகாரி - 3206)
இதுவரை ஆது சமுதாயத்தின் இறைநிராகரிப்பவர்கள், ஹூத்(அலை) அம்மக்களுக்குச் செய்த பிரச்சாரத்தையும், அதனை ஏற்க மறுத்த ஆணவக்கார ஆது சமுதாயம் அழிக்கப்பட்ட சம்பவத்தையும், திருமறை குர்ஆன் வாயிலாகவும், நபிமொழிகள் வாயிலாகவும் மூலமும் அறிந்து கொண்டோம்.

## மறை கூறும் மானிடவியல் 7

(வெயில் பிரதேசம்)

ثُمَّ اَتْبَعَ سَبَبًا
பின்னர், அவர் (துல்கர்னைன்) (மற்ற) ஒரு வழியைப் பின்பற்றி நடந்தார்.
حَتّٰۤى اِذَابَلَغَ مَطْلِعَ الشَّمْسِ وَجَدَهَا تَطْلُعُ عَلٰى قَوْمٍ لَّمْ نَجْعَلْ لَّهُمْ مِّنْ دُوْنِهَا سِتْرًا ۙ
அவர் சூரியன் உதிக்கும் (கிழக்குத்) திசையை அடைந்த பொழுது சில மக்களைக் கண்டார். அவர்கள் மீது சூரியன் உதயமாகி (அவர்கள் வெயிலில்) இருப்பதையும் கண்டார். அவர்களுக்கும் சூரியனுக்கும் இடையில் நாம் யாதொரு தடுப்பையும் ஏற்படுத்தவில்லை. (ஆடையணிந்தோ, வீடு கட்டியோ, சூரிய வெப்பத்தைத் தடுத்துக் கொள்ளக்கூடிய ஞானம் இல்லாதவர்களாக இருந்தனர்.)
كَذٰلِكَ وَقَدْ اَحَطْنَا بِمَا لَدَيْهِ خُبْرًا
(அவர்களுடைய நிலைமை உண்மையில்) இவ்வாறே இருந்தது. அவரிடமிருந்த எல்லா வசதிகளையும் நாம் நன்கறிவோம். (அல்குர்ஆன் : 18:89 -91)
சயீத் பின் ஜுபைர் (ரஹ்) : "அம்மக்கள் சிவந்த நிறமுடையவர்களாகவும் , குள்ளமானவர்களாகவும் இருந்தனர். மலைக்குகைகளில் வசித்து வந்தனர் . பெரும்பாலும் அவர்களின் வாழ்வாதாரம் மீனாக இருந்தது.
ஹசன் அல்பஸ் ரீ (ரஹ்) : அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதி கட்டங்களை கட்டும் நிலையில் இல்லை. சூரியன் உதித்ததும் அவர்கள் நீருக்குள்ளோ , அல்லது குகைகளின் உள்ளோ இருந்து விடுவர். சூரியன் மறைந்தே பின்னே வெளியே வருவர் . நூல் : அபூதாவூத் அத்தயாலிசீ .
தஃப்ஸீர் அல்குர்துபீ மற்றும் பிரிட்டானிகா தகவல் களஞ்சியத்தில்.....
வட ஆப்பிரிக்கா நாடான மொராக்காவின் தெற்கே உள்ள மாரக்கேஷ் நகரத்தை இது குறிக்கிறது எனலாம். அங்கு வாழ்ந்த பெர்பர் இன மக்களாக அவர்கள் இருக்கலாம்.

கி.மு 2000த்திலேயே அங்கு பெர்பர்கள் குடியேறி விட்டனர் என்று சொல்லப்படுகிறது .
வட ஆப்பிரிக்கா பெர்பர் இனக்குழு மிகவும் மர்மமான மக்கள்
மக்ரெப் நாடுகளில் உள்ள பெர்பர்களின் வரலாறு கிமு 2 மில்லினியத்தில் தொடங்குகிறது. அவர்கள் ஃபீனீசியன் மற்றும் பண்டைய ரோமானிய நாகரிகங்களில் இருந்து தப்பிப்பிழைத்தனர், அதன் தடயங்கள் பிரதேசத்தில் பாதுகாக்கப்பட்டுள்ளன.

மக்ரெப் நாடுகள் இப்பொழுது வரை எகிப்தின் மேற்கில் உள்ள ஆப்பிரிக்க நாடுகள் என்று அழைக்கப்படுகின்றன. பல எகிப்திய பாரோக்கள் மற்றும் "போப்ஸ்" பெர்பர் மக்களிடமிருந்து வந்தவர்கள். சித்தியன் பழங்குடி மக்களிலிருந்து போர்க்குணமிக்க பெண்களாக இருக்கின்றனர்.
அல்லது கிழக்கு ஆப்ரிக்காவில் உள்ள கறுப்பர்ககளை இது குறிக்கிறது என்பதற்கான சாட்சியங்கள் நிறைய இருப்பதாக வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள்
மொரோக்கோ - மாரக்கேஷ்
மாரக்கேஷ் : அட்லஸ் மலைகள் அடிவாரத்தில் மத்திய பகுதியில் அமைந்துள்ளது. - சுமார் 2.5 மணிநேர நெடுஞ்சாலையில் இயங்கும். 3 மணிநேரம் தொலைவில் உள்ளது. மார்கசேஷ் சுற்றுலா வழியிலும் சேர்க்கப்பட்டுள்ளது

1999 ஆம் ஆண்டில் யுனெஸ்கோ பட்டியலில் சேர்க்கப்பட்ட மனிதகுலத்தின் தொட்டில் - உலக பாரம்பரிய தளம் வரலாற்றின் வளர்ச்சியின் பார்வையில் இருந்து இது மிகவும் இயற்கைக்குரியது .
மனிதகுலத்தின் தொட்டிலில் இருக்கும் நினைவுச்சின்னம் என்ன?
இது 474 சதுர கிலோமீட்டர் பரப்பளவைக் கொண்டிருக்கும் சுண்ணாம்புக் குகைகள். 30 குகைகள் உள்ளன, அவற்றில் ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கிறது, ஏனென்றால் புராதன வரலாற்று மதிப்புள்ள புதைபடிவ மீன்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது
ஆப்பிரிக்க கண்டத்தில் முதன்முதலில் தோன்றிய முதல் மனித குடியிருப்புக்களை ஒழுங்கமைத்த முதல் ஆப்பிரிக்க பழங்குடியினரை மனித இனத்தின் தொட்டிலாகக் கருதப்படுகிறது.
தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள், பழங்கால மனித ஃபாஸில்கள் ஐந்து நூறு எஞ்சியுள்ளவற்றை கண்டுபிடித்து உதவினர், ஆப்பிரிக்க பழங்குடியினரால் செய்யப்பட்ட பல கருவிகளும் இருந்தன.
ஸ்டெர்கான்டைன் குகை;
அற்புத குகை;மலபா குகை; ஸ்வர்ட்ஸ்கிரான்ஸ் குகை
மனிதகுலத்தின் தொட்டில் என்பதற்கான மிகவும் சுவாரசியமான முக்கிய குகைகள்
குகைகளின் வயது சுமார் 20-30 மில்லியன் ஆண்டுகள், அவர்கள் 500 சதுர மீட்டர் பரப்பளவை ஆக்கிரமித்துள்ளனர்
மற்றொரு சுவாரசியமான குகை மாலப்பா குகை என்று அழைக்கப்படுகிறது. 8 ஆண்டுகளுக்கு முன்பு குகை தொல்பொருள் ஆய்வாளர்கள் அதன் வயது 1.9 மில்லியன் ஆண்டுகள் என்று கண்டறிந்துள்ளனர்
பண்டைய மக்களின் குகை "ஸ்வர்ட்ஸ்கான்ஸ்" மற்றும் குகை "ரைசிங் ஸ்டார்" ஆகியவற்றில் குறிப்பிடப்படுகின்றன. கடந்த காலங்களில், அகழ்வாராய்ச்சிகள் மிக நீண்ட காலத்திற்கு முன்னர் நடத்தப்பட்டன, 2013 முதல் 2014 வரையான காலப்பகுதிகளை உள்ளடக்கியிருந்தன, எனவே சுற்றுலா பயணிகள் பழமையான புதிய கண்டுபிடிப்பிற்காக காத்து இருக்கிறார்கள் .

## மறை கூறும் மானிடவியல் 8

( சேற்றுக் கடல் )
اِنَّا مَكَّنَّا لَهٗ فِى الۡاَرۡضِ وَاٰتَيۡنٰهُ مِنۡ كُلِّ شَىۡءٍ سَبَبًا ۙ
நிச்சயமாக நாம் அவருக்குப் (துல்கர்னைன் ) பூமியில் ஆதிக்கத்தைக் கொடுத்து வளமிக்க வசதி வாய்ப்பையும் அளித்திருந்தோம். ஒவ்வொரு பொருளையும் (தமது இஷ்டப்படி) செய்யக்கூடிய வழியையும் நாம் அவருக்கு அளித்திருந்தோம்.
فَاَتۡبَعَ سَبَبًا
அவர் (பூமியில்) ஒரு வழியைப் பின்பற்றிச் சென்றார்.
حَتّٰٓى اِذَا بَلَغَ مَغۡرِبَ الشَّمۡسِ وَجَدَهَا تَغۡرُبُ فِىۡ عَيۡنٍ حَمِئَةٍ وَّوَجَدَ عِنۡدَهَا قَوۡمًا قُلۡنَا يٰذَا الۡقَرۡنَيۡنِ اِمَّاۤ اَنۡ تُعَذِّبَ وَاِمَّاۤ اَنۡ تَتَّخِذَ فِيۡهِمۡ حُسۡنًا

சூரியன் மறையும் (மேற்குத்) திசையை அவர் அடைந்தபொழுது சேற்றுக் கடலில் சூரியன் மறைவதை(ப் போல்) கண்டார். அவ்விடத்தில் ஒருவகை மக்களையும் கண்டார். (நாம் அவரை நோக்கி) "துல்கர்னைனே! நீங்கள் (இவர்களைத் தண்டித்து) வேதனை செய்ய அல்லது அவர்களுக்கு நன்மை செய்ய (உங்களுக்கு முழு சுதந்தரம் அளித்திருக்கிறோம்)" என்று கூறினோம். (குர்ஆன் : 18:84 - 86)

ஹபீப் பின் ஹம்மாத் (ரஹ்) அவர்கள் : "நான் அலீ (ரலி) அவர்களுடன் இருந்த போது , அவர்களிடம் ஒருவர் துல்கர்னைன் பற்றி , " அவர் எப்படி பூமியின் கிழக்கு மற்றும் மேற்கு எல்லைகளை அடைந்தார் ? "

அதற்கு அலீ (ரலி) அவர்கள் : "தூயோன் அல்லாஹ் அவருக்கு மேகங்களை அடிபணியச் செய்து அதற்குரிய வசதி வாய்ப்புகளை வழங்கினான் .அவருக்கு தன் (அருட்) கரத்தை நீட்டினான் .
சுலைமான் ( அலை) அவர்களுக்கு காற்றை வசப்படுத்தி கொடுத்த மாதிரி குர்ஆன் (34 : 12 )
(இதனால் பூமியின் கிழக்கு மற்றும் மேற்கு தூரங்களின் பயணங்கள் துல்கர்னைன் அவர்களுக்கு இலேகுவாக இருந்தது. மேலும் ("ஒவ்வொரு பொருளையும் (தமது இஷ்டப்படி) செய்யக்கூடிய வழியையும் நாம் அவருக்கு அளித்திருந்தோம்) நூல் : அல்முக்த்தாரா
சூரியன் மறையும் (மேற்குத்) திசையை அவர் அடைந்தபொழுது சேற்றுக் கடலில் சூரியன் மறைவதை(ப் போல்) கண்டார். அவ்விடத்தில் ஒருவகை மக்களையும் கண்டார்.
சேற்றுக் கடலில் சூரியன் மறைவதாக கண்ட இடம் அநேகமாக செர்பியா (Serbia) நாடாக இருக்கலாம் .
இந்நாட்டின் தெற்கே ஆச்ரிடா (Ochrida) என்ற பெரிய ஏரியாக அந்த இடம் இருக்கலாம் .இது தென்கிழக்கு ஐரோப்பாவில் கிரீஸ் நாட்டுக்கு வடக்கே உள்ளது.

தெற்கு ஐரோப்பாவில் மத்திய மேற்கு பால்கன் தீபகற்பத்தில் உள்ள யுகோஸ்லாவியா நாட்டிலிருந்து பிரிந்ததே செர்பியா .
ஆச்ரிடா ஏரிக்கு ,தொலைவில் உள்ள ஊற்றுகளிலிருந்து நீர் வருகிறது .477 கி.மீ அளவில் நீர் உள்ளது .
அந்நீர் எப்போதுமே கலங்கலாகவும் , கறுப்பு நிறம் கொண்டதாகவும் இருக்கும். இதனால்தான் அந்த ஏரியின் நீர் கலக்கும் ஆறுக்கு "பிளாக் டிரைன் "
(Black Drin ) என்றே பெயர்.
செர்பியா பற்றி கூடுதல் தகவல் .....
செர்பியா என்றழைக்கப்படும் செர்பியக் குடியரசு மத்திய மற்றும் தென்கிழக்கு ஐரோப்பாவில் உள்ள ஒரு நிலஞ்சூழ் நாடு ஆகும். இதன் தலைநகர் பெல்கிரேட் ஆகும். நாணயம்: செர்பிய தினார்
இதன் வடக்கில் ஹங்கேரியும் கிழக்கில் ருமேனியா, பல்கேரியா ஆகியனவும் தெற்கில் அல்பேனியாவும் மெசெடோனியாவும் எல்லைகளாக அமைந்துள்ளன.
இந்தியர்களிடம் விசா கேட்காத ஒரே ஐரோப்பிய நாடு!
பிரமிக்க வைக்கும் இயற்கையழகு, மலைக்க வைக்கும் கட்டிடக்கலை, அழகிய ஆல்ப்ஸ் மலை, அமைதியான, மகிழ்வூட்டும் வாழ்க்கை என, சுற்றுலா பயணியரை கவரும் அத்தனை அம்சங்களும் கொண்ட நாடு செர்பியா.
இந்திய சுற்றுலா பயணியரையும், வணிகத் துறையினரையும் ஈர்க்கும் வகையில், செர்பியாவுக்கு வர விசா தேவையில்லை என்று அறிவித்துள்ளது செர்பிய அரசு.

செல்லத்தக்க பாஸ்போர்ட் கையில் இருந்தால் போதும்; தொடர்ச்சியாகவோ அல்லது விட்டுவிட்டோ, ஓர் ஆண்டில், 30 நாட்கள் வரை விசா இன்றி இனி இந்தியர்கள் செர்பியாவில் தங்கியிருக்க முடியும்.
செர்பியாவை சுற்றிப்பார்க்க, விமானக் கட்டணம் நீங்கலாக, 25 ஆயிரம் ரூபாய் விலையிலிருந்தே சுற்றுலா, 'பேக்கெஜ்'களை அளிக்கின்றன பயண ஏற்பாட்டு நிறுவனங்கள்.
ஒரு நடை செர்பியா போய்ட்டு வரது

## மறை கூறும் மானிடவியல் 9

சென்னை அருகே வாழ்ந்த ஆதி மனிதர்கள்: 3,85,000 ஆண்டுகளுக்கு முந்தைய வரலாறு
அல்-தப்ரானீயில் அபு நுஹைம் மற்றும் இப்னு அஸ்கர் ஆகியோர், அபு ஹுரைறா(ரழி) அவர்களும் அறிவிக்கின்ற ஹதீஸில் நபி ஆதம் (அலை) அவர்கள் இந்தியாவில் ஒரு பகுதி (ஸ்ரீலங்கா)யில் இறக்கப்பட்டதாக வந்துள்ளது.
சரந்தீபில் ( ஸ்ரீலங்கா ) இருந்த ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு கால்நடைகளை மேய்க்கவும், உழவு செய்து தானியங்களை உற்பத்தி செய்யவும் ஹழ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூலம் அல்லாஹ் கற்றுக் கொடுத்தான்.

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலம் இன்றைக்கு 8000 ஆண்டுகளுக்கு முன்தான் என்று கணிக்கப்படுகிறது. ஆனால் இவர்களுக்குமுன் ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆதம்கள் தோன்றியுள்ளார்கள் என்று இப்னு பாக்கிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள்.

இப்னு அரபி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம்முடைய **புத்துஹாத்துல் மக்கியா** என்னும் நூலில் ஆதத்திற்கு முன் ஓரிலட்சம் ஆதம்களும் அவர்களுடைய கூட்டத்தினர்களும் தோன்றி மறைந்துள்ளனர் என்று கூறுகின்றனர்.
சமீபகாலம் வரை கற்கருவிகளை பயன்படுத்தும் கலாசாரம், 90,000 வருடங்களிலிருந்து 1,40,000 வருடங்களுக்குள் இந்தியாவுக்கு வந்திருக்கலாம் என்று கருதப்பட்ட நிலையில், சென்னையைச் சேர்ந்த ஆய்வாளர்களின் இந்த கண்டுபிடிப்பு, மனித இனப் பரவல் குறித்த ஆய்வில் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சியுள்ளது.

சென்னையிலிருந்து சுமார் 60 கி.மீ. தூரத்தில் பூண்டி நீர்த்தேக்கத்திற்கு அருகில் கொசஸ்தலை ஆற்றின் அருகில் அமைந்திருக்கிறது அதிரம்பாக்கம். இந்தப் பகுதியில் 1999ஆம் ஆண்டிலிருந்தே ஷாந்தி பாப்புவும் அவரது குழுவினரும் ஆய்வுகளை மேற்கொண்டுவருகின்றனர்.
"முதலில் பழைய கற்காலத்தைச் சேர்ந்த கருவிகள் கிடைத்தன. அதற்குப் பிறகு அங்கு மனிதர்கள் வசித்ததற்கான தடயம் கிடைக்கவில்லை. பிறகு மீண்டும் இடைக் கற்காலத்தைச் சேர்ந்த கருவிகள் கிடைத்திருக்கின்றன.
இவை 3 லட்சத்து 85 ஆயிரம் வருடங்களிலிருந்து 3 லட்சத்து 25 ஆயிரம் வருடங்கள் வரை பழமையானவை. இதற்கு முன்பாக, இடைக்கற்காலம் என்பது இந்தியாவில் ஒரு லட்சத்து 40 ஆயிரம் வருடங்களுக்கு முன்பாகத்தான் துவங்கியது என்று கருதப்பட்டுவந்தது" என பிபிசியிடம் தெரிவித்தார் ஷாந்தி பாப்பு.
பழங்கற்காலத்திலிருந்து இடைக்கற்காலம் தோன்றிய போது அங்கு வசித்தவர்கள் பயன்படுத்திய கற்கருவிகளில் மாற்றம் ஏற்பட்டது
ஆனால், இடைக் கற்காலத்தைச் சேர்ந்த மனித எச்சங்கள் ஏதும் இதுவரை இங்கு கிடைக்கவில்லை. இந்தக் கண்டுபிடிப்பு குறித்த தகவல்கள் நேச்சர் இதழில் பதிப்பிக்கப்பட்டதையடுத்து, உலகம் முழுவதும் இது குறித்த விவாதம் தீவிரமடைந்திருக்கிறது.
பொதுவாக நவீன மனிதர்களும் மனிதர்களின் மூதாதையர்களும் கிழக்கு ஆப்பிரிக்காவில் தோன்றி உலகம் முழுவதும் பரவினார்கள் என்பது பொதுவான புரிதல். அவர்கள் எந்த காலகட்டத்தில் எந்தெந்த கண்டங்களுக்குப் பரவினார்கள் என்பது குறித்த விவாதத்தில், தற்போதைய கண்டுபிடிப்பு மாற்றத்தை ஏற்படுத்தலாம் எனக் கருதப்படுகிறது.
தற்போது நாம் கருதுவதைவிட சுமார் 1 லட்சம் வருடங்களுக்கு முன்பாகவே இந்த இடம்பெயர்தல் நடந்திருக்கலாம் என்பதை தற்போது கிடைத்துள்ள கற்கருவிகள் சுட்டிக்காட்டுவதாக சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

"நவீன மனிதர்கள் உருவான பிறகு அதாவது 1,25,000 வருடங்களுக்கு முன்புதான் இடைக்கற்கால மனிதர்கள் இங்கு வந்ததாக இதுவரை கருதப்பட்டுவந்தது. இருந்தபோதும் தற்போதைய கண்டுபிடிப்பை வைத்து உடனடியாக எந்த முடிவுக்கும் வந்துவிட முடியாது. இந்தியாவின் பல இடங்களிலும் கிடைத்திருக்கும் கற்கருவிகளை ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும்." என்கிறார் ஷாந்தி.
'சிந்துச் சமவெளி விட்ட இடமும் சங்க இலக்கியம் தொட்ட இடமும் ஒன்றே' 5,000 ஆண்டுகளுக்கு முன்பு பாலை நிலத்தில் பசுமை புகுத்திய சிந்து சமவெளி நகரம் மனித இன வளர்ச்சியில் பழைய கற்காலம் முடிந்து இடைக்கற்காலம் தோன்றிய காலகட்டம் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது.
சுமார் 3 லட்சம் வருடங்களுக்கும் 2 லட்சம் வருடங்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் இந்த மாற்றம் நிகழ்ந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது. அதுவரை மிகப் பெரிய கற்கருவிகளைப் பயன்படுத்திவந்த மனித இனத்தின் மூதாதையர், சிறிய, திருத்தமான கருவிகளைப் பயன்படுத்த ஆரம்பித்தது இந்த காலகட்டத்தில்தான்.
மரபியல் ரீதியான ஆய்வுகள், மனித எச்சங்கள், தொல்லியல் ஆய்வுகள் மூலமாகக் கிடைத்த தகவல்களை வைத்து, நவீன மனிதர்களுக்கு முந்தைய ஹொமினின்களின் பரவலை உறுதிசெய்வதும் கடினமான காரியமாகவே இருக்கிறது.

ஒரு கூற்றின்படி, இந்தியாவில் இடைக்கற்காலம் என்பது ஆப்பிரிக்காவில் இருந்து நவீன மனிதர்கள் வெளியேறிய காலகட்டத்தை ஒத்தது என்று கூறப்படுகிறது. இந்த காலகட்டம் 1,30,000 வருடத்திற்கும் 80 ஆயிரம் வருடங்களுக்கும் இடைப்பட்ட காலமாக கருதப்படுகிறது.
டோபா எரிமலைச் சீற்றத்திற்கு தப்பிய மாந்தர்களே இங்கு வந்ததாக நம்பப்படுகிறது. ஆனால், மற்றொரு கூற்று 71 வருடங்களுக்கும் 57 ஆயிரம் வருடங்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் இந்தப் பரவல் நடந்திருக்கலாம் என்று கூறுகிறது.
இந்த இரண்டு கூற்றுகளுக்கும் இடையில் மிகப் பெரிய காலகட்டம் இருக்கிறது. அகழ்வாராய்ச்சியில் கிடைக்கும் பொருட்களை கதிர்வீச்சு ஆய்வுக்குட்படுத்துவதில் உள்ள சிக்கல்களும் தெற்காசியப் பகுதிகளில் மனித எச்சங்கள் இல்லாமல் இருப்பதும்தான் இந்த காலகட்டத்தை நிர்ணயம்செய்வதில் பெரும் தடையாக இருக்கிறது என்கிறார்கள் ஆய்வாளர்கள்.
தற்போது அதிரம்பாக்கத்தில் கிடைத்திருக்கும் முடிவுகள், இந்தத் திசையில் ஓரளவுக்கு உதவக்கூடும். ஷர்மா மையத்தைச் சேர்ந்த ஷாந்தி பாப்பு, அகிலேஷ் உள்ளடங்கிய குழுவினர் கொசஸ்தலை ஆற்றின் கிளை நதி ஒன்றுக்கு அருகில் 1999ல் இந்த ஆய்வைத் துவங்கினர்.
பல்வேறு இடங்களில் 4 முதல் 9 மீட்டர் அளவுக்கு குழிகள் தோண்டப்பட்டன. இந்தக் குழிகளில் பல்வேறு காலகட்டங்களைச் சேர்ந்த மண் படிவுகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.
இந்தக் குழிகளில் உள்ள மண் படிவுகள் 8 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. 8 முதல் 6 வரையிலான பிரிவு பழங்கற்காலத்தைச் சேர்ந்தவை எனக் கருதப்படுகிறது. இவை, 17 லட்சம் முதல் 10 லட்சம் வருடங்களுக்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்தவை. 5 முதல் 1வது பிரிவு வரையிலான படிவுகள் இடைக்கற்காலத்தைச் சேர்ந்தவை.

இந்தப் பகுதியில் கிடைத்த கற்கருவிகளை ஆராய்ந்தபோது, கற்காலத்தைச் சேர்ந்தவர்களைப்போலவே, இடைக்கற்காலத்தைச் சேர்ந்த மனிதர்களும் அந்தப் பகுதியில் கிடைத்த கற்களை வைத்தே தங்கள் கற்கருவிகளைச் செய்திருக்கின்றனர் என்பதை அறியமுடிந்தது.
இதுதவிர பழைய கற்காலம் முடிந்து இடைக்கற்காலம் துவங்குவதற்கு இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்த கற்கருவிகள் ஏதும் இங்கு கிடைக்கவில்லை. இது டோபோ எரிமலை வெடித்த காலத்தோடு ஒத்துப்போவதால், பருவநிலை மாற்றத்தால் இங்கிருந்தவர்கள் வெளியேறியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.
இந்தியா முழுவதும் பல இடங்களில் பிந்தைய - பழைய கற்காலப் பகுதிகளைச் சேர்ந்த கருவிகள் கிடைக்கும் நிலையில், இங்கு அந்த காலகட்டத்தைச் சேர்ந்த கருவிகள் ஏதும் கிடைக்கவில்லை.
அதிரம்பாக்கத்தைப் பொறுத்தவரை, இங்கு கிடைத்த கற்கருவிகளை வைத்து இங்கு வசித்தவர்கள் நவீன மனிதர்களா அல்லது அதற்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்தவர்களா என்பதை உறுதிசெய்ய முடியவில்லை.நர்மதா நதிக்கரையில் கிடைத்த ஒரு மண்டை ஓட்டைத் தவிர, இந்தியாவில் இதுவரை மனித எச்சங்கள் ஏதும் கிடைக்கவில்லை.

"ஆனால், தற்போது கிடைத்திருக்கும் கருவிகளை வைத்து, இந்தியாவில் இடைக்கற்கால மனிதர்கள் 3.85 லட்சம் வருடங்களுக்கு முந்தைய காலகட்டத்திலிருந்து 1.72 லட்சம் வருடங்களுக்குள் வாழ்ந்திருக்கலாம் என்ற முடிவுக்குவர முடியும்" என்கிறார் அகிலேஷ்.
அதிரம்பாக்கத்தில் கிடைத்த கற்கருவிகளின் காலம் அகமதாபாதில் உள்ள ஃபிசிகல் ரிசர்ச் லபோரட்டரியில் கணிக்கப்பட்டது. பொதுவாக அகழ்வாராய்ச்சியில் கிடைக்கும் பொருட்கள் கார்பன் டேட்டிங் முறையில் காலக் கணிப்பு செய்யப்படுவது வழக்கம்.

ஆனால், லட்சக்கணக்கான வருடங்கள் பழைய பொருட்களை காலக் கணிப்புச் செய்ய அந்த முறை உதவாது. ஆகவே, Luminescence dating என்ற முறை கையாளப்படுகிறது. அதாவது ஒரு பொருளில் ஒளிகடைசியாக எப்போது பட்டது என்பதை வைத்து அதன் காலத்தைக் கணிக்கும் முறை. அதிரம்பாக்கத்தில் கிடைத்த பொருட்கள் இம்மாதிரியான சோதனைக்கே உட்படுத்தப்பட்டன.
இதற்கு ஃபிசிகல் ரிசர்ச் லபோரட்டரியைச் சேர்ந்த பேராசிரியர் ஏ.கே. சிங்கி பெரிதும் உதவினார் என்று குறிப்பிடுகின்றனர் ஷாந்தியும் அகிலேஷும். மிகச் செலவுபிடிக்கும் இந்த முறையிலான காலக்கணிப்பை, தன் செலவிலேயே செய்து கொடுத்திருக்கிறார் ஏ.கே. சிங்வி.
அதிரம்பாக்கம் அகழ்வாராய்ச்சித் தலம் என்பது சுமார் நூற்றி ஐம்பது ஆண்டுகளாகவே தொல்லியளாளர்களின் கவனத்தை ஈர்த்துவந்திருக்கிறது. 1863ல் முதன் முதலில் ராபெர்ட் ப்ரூஸ் ஃபூட் மற்றும் வில்லியம் கிங் ஆகியோரால இந்த இடம் அகழாய்வு செய்யப்பட்டது. அதன் பிறகு தொடர்ச்சியாக 1930களிலும் 60களிலும் இந்த இடம் ஆய்வுசெய்யப்பட்டது.
19ஆம் நூற்றாண்டிலும் 20ஆம் நூற்றாண்டிலும் இங்கிருந்து எடுக்கப்பட்ட கற்காலக் கருவிகள் உலகமெங்கும் உள்ள அருங்காட்சியகங்களில் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. தற்போதும் அதிரம்பாக்கம் பகுதியில் சுமார் 50,000 மீட்டர் பரப்பளவுக்கு கற்காலக் கருவிகள் சிதறிக்கிடக்கின்றன

### மறை கூறும் மானிடவியல் 10

(மெசொப்பொதாமியா நாகரிகத்தின் கடவுளர்கள் நட்சத்திரம், சந்திரன் , சூரியன்)




ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும், ஹழ்ரத் ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும் மகனாகப் பிறந்தவர்கள் ஹழ்ரத் ஷீத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்.

நபி ஆதம் (அலை) அவர்களின் 135 - வது வயதில் மூன்றாவது மகனாக ஷீத் (அலை) அவர்கள் பிறந்தார்கள் என்று பைபிள் கூறுகிறது .
இவர்களுக்கு மனித வர்க்கத்தின் மீதும், ஜின் வர்க்கத்தின் மீதும் ஆதிக்கம் செலுத்தக் கூடிய ஆற்றலைக் கொடுத்து அவர்களுக்கு நபித்துவத்தைக் கொடுத்தான்.
ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களது ஷரீஅத்தையே பின்பற்றி மக்களுக்கு உபதேசித்து வந்த இவர்களுக்கு அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவனது கட்டளைகள் கொண்ட 50 பலகைகள் இறங்கின. அதில் புவியில், கணிதம், சங்கீதம், மருத்துவம் போன்றவற்றின் ஞானம் விளக்கப்பட்டிருந்தது. இவர்கள் பெரும்பாலும் சிரியா நாட்டிலேயே வாழ்ந்து வந்தார்கள்.

சிரிய மொழியில் ஷீத் என்றால் " இறைவனின் அருட் பெருங்கொடை " என்று அர்த்தம் . ஷீத் (அலை) அவர்கள் மூலமே மனித குலத்திற்கு இறைவனின் அருட் பெருங் கொடைகள் வழங்கப்பட்டது .
மெசொப்பொதாமியா (Mesopotamia), பண்டைய அண்மை கிழக்கின் தென்மேற்கு ஆசியாவைச் சேர்ந்த ஒரு பிரதேசமாகும். இது டைகிரிசு ஆறு மற்றும் யூபிரட்டீஸ் ஆறு ஆகிய இரண்டு ஆறுகளுக்கு இடைப்பட்ட வளமான வண்டல் மண் பகுதியாகும். இது இன்றைய ஈராக், சிரியா மற்றும் வடமேற்கு ஈரான், துருக்கியின் தென்கிழக்குப் பகுதிகளை இது உள்ளடக்கியிருந்தது

டைகிரிஸ் யூபரிடஸ் நதிக் கரையில் சிறந்து விளங்கிய சுமேரிய நாகரிகம் இன்றைய ஈரான், ஈராக் மற்றும் சிரியா நாடுகளுக்கு சொந்தமானது. சுமேரிய நாட்டை மெசபடோமியா என்றும் அழைப்பர்.
சிறப்பான நாகரிகம் அங்கு இருந்ததை அங்கு அகழாய்வு செய்த பொருள்களைக் கொண்டு அறியலாம்.
விவசாயப் பொருள்கள், மண்பாண்டங்கள், அணிகலன்கள் என்று பல தரவுகள் கிடைக்கப் பெற்றதாலும், ஆய்வுகளின் அடிப்படையிலும் அவர்களது நாகரிகம் கி.மு. 3000 ஆண்டிற்கு முந்தையது என்று கணித்தனர்.
சுமேரிய நாகரிகம்கிடைத்த தரவுகளின் அடிப்படையில், பல ஆய்வாளர்கள் சுமேரிய நாகரிகத்திற்கும் தமிழர் நாகரிகத்திற்கும் தொடர்பு உள்ளது என்பதை ஆண்டாண்டுகளாக கூறி வந்துள்ளனர்.
அதில் குறிப்பாக மலேசியாவைச் சேர்ந்த முனைவர் லோகநாதன், சுமேரியர்கள் எழுதி வைத்திருக்கும் கியூனிபார்ம் முறை எழுத்துக்களையே தமிழில் படித்துக்காட்டி, நாகரிகத்தின் ஒப்புமையைக் காட்டி உலகோரை வியப்பில் ஆழ்த்தினார்.

தமிழரின் தொடர்பு சுமேரிய நகரத்தின் பெயரிலேயே தொடங்குகிறது என்று வைத்துக் கொள்வோம். அதை மறுப்போர் பலர் இருக்கலாம். ஆனால் கிடைத்த தரவுகள், அந்தப் பெயர் தமிழருடன் தொடர்பு இருக்கலாம் என்று கணிக்க உதவுகிறது.
" உர் " என்னும் ஊர் என்ற நகரம் யூபரிடஸ் நதியின் தென் கரையில் அமைந்தது. நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் இந்த ஊர் நகரத்தைச் சேர்ந்தவர்கள்.
ஊர் நகரை 1853ல் ஜான் சார்ஜ் டெய்லர் என்ற தொல்லியல் ஆய்வாளர் அகழாய்வு செய்தார். நம் கீழடியில் கிடைத்த உறைகிணறே அதற்குச் சான்று. தொல்லியல் ஆய்வாளர் உல்லி அகழ்ந்து காட்டிய ஊர் நகர உறைகிணறு, கீழடியில் அகழ்ந்து காட்டப்பட்ட உறைகிணறுக்கு இணையானது. ஆய்வாளர் உல்லி அதை சுமேரியர்களின் வடிகால் அமைப்பாக இருக்கலாம் என்று கணித்துள்ளார். அதன் காலம் கி.மு. 4000--2500 என்று கணிக்கப்பட்டது.

சுமேரிய நாகரிகம் இத்தகைய கண்டுபிடிப்பில் இந்தியாவில் சிறந்து விளங்கிய சிந்து சமவெளி நாகரிகத்தின் தொட்டிலாக விளங்கும் மொகன்சதாரோவில் இருக்கும் வடிகால் அமைப்பு போன்று ஊர் நகரில் இல்லை என்பதை அறியலாம்.
மொகன்சதாரோவைப் போன்று வீட்டிற்கு வெளியே நீர் ஓடும் வடிகால்களுக்கு பதிலாக ஊர் நகரில் அடுக்கு வடிகால் (நாம் உறைகிணறு என்றும் அழைக்கும்) அமைப்பு இருந்ததாகக் கூறுகின்றனர்.
செங்கல் வீடுகள் ஆய்வின் முடிவில் ஊர் என்ற நகரம் மெசபடோமிய வரலாற்றில் உபாய்த் காலத்தில் (கி.மு. 5000--4100) கிராமமாக இருந்திருக்கலாம் என்று அனுமானிக்கப்பட்டது. அங்கு முதுமக்கள் தாழி 1800க்கும் மேற்பட்ட, அதன் அருகே உறைகிணறுகள், கட்டட அமைப்புகள், விளையாட்டுப் பொருள்கள், தங்கத்தாலான அணிகலன்கள், மணிகள் என்று பல்வேறு தொன்மங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.
ஊர் நகரில் அன்றைய மக்கள் வணங்கிய கடவுளுக்கு ஒரு பெரிய ஆலயம் அமைக்கப்பட்டிருப்பதைக் காண முடிகிறது. அந்த ஆலயத்தினுள் சென்று நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் சிலைகளை சேதப்படுத்தியதாக குர்ஆன் கூறும் ஆலயமாக இருக்கலாம். அதற்கு அருகே பல செங்கலால் கட்டப்பட்ட வீடுகள் இருப்பதும் கண்டறியப்பட்டது.

சுமேரியர் வாழ்ந்த நகரங்களில் ஒன்றான ஊர் என்ற நகரில் நிலா, சூரியன், நட்சத்திரங்கள் வழிபாட்டுச் சின்னங்களாக புதைபொருள் ஆய்வுகளில் கிடைத்தன என்று எல். உல்லி, எச்.ஆர்.ஆல்ஸ் என்போரும் கூறியுள்ளனர். (படம் பார்க்கவும்)
ஊர் நகரைச் சேர்ந்த நபி இப்ராஹீம் (அலை)கள் :

"(ஒரு நாள்) இருள் சூழ்ந்த இரவில் அவர் (மின்னிக் கொண்டிருந்த) ஒரு நட்சத்திரத்தைக் கண்டு "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" என (தம் மக்களைக்) கேட்டு அது மறையவே, "மறையக்கூடியவற்றை (இறைவனாக எடுத்துக்கொள்ள) நான் விரும்பமாட்டேன்" எனக் கூறிவிட்டார்.
பின்னர் உதயமான சந்திரனைக் காணவே "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" எனக் கேட்டு, அதுவும் அஸ்தமித்து மறையவே (அதனையும் நிராகரித்துவிட்டு) "எனது இறைவன் எனக்கு நேரான வழியை அறிவிக்காவிட்டால் வழி தவறிய மக்களில் நிச்சயமாக நானும் ஒருவனாகிவிடுவேன்" என்று கூறினார்.
பின்னர் உதயமான (பளிச்சென்று நன்கு ஒளிரும்) சூரியனைக் கண்டபொழுது "இது மிகப்பெரியதாயிருக்கிறது. இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" எனக் கேட்டு, அதுவும் அஸ்தமித்து மறையவே அவர் (தம் மக்களை நோக்கி) "என் மக்களே! நீங்கள் (இறைவனுக்கு) இணையாக்கும் (இவை) ஒவ்வொன்றிலிருந்தும் நிச்சயமாக நான் விலகிக்கொண்டேன்" என்று கூறினார்"(குர்ஆன் : 6 :76,78)

ஊர் நகரில் கிடைத்த பொருள்கள் மூலம் அந்த இடத்தில் அரச வம்சத்தினர் வாழ்ந்திருக்க வேண்டும் என்றும், அதனருகே இருக்கும் ஒரு அரசியின் கல்லறையில் கிடைத்த பொருள்களின் அடிப்படையில் அந்த நாடு செழித்து விளங்கி இருக்கும் என்றும் குறிப்பிடுகின்றனர்.
நமக்கு கிடைத்தவை தொல்லியல் தகவலின்படி, தற்போது கிடைத்திருக்கும் கீழடி தொன்மங்களின் படி தமிழர்களுக்கும் சுமேரியர்களுக்கும் உள்ள தொடர்பை வெளிப்படையாக அறியும் வாய்ப்பு கிட்டியுள்ளது. லோகநாதனின் தமிழ் உச்சரிப்புகளுக்கும் கியுனிபார்ம் எழுத்தைப் படிக்கும் உச்சரிப்புகளுக்கும் இருக்கும் ஒற்றுமை உண்மையென நம்பும் வாய்ப்பும் ஏற்பட்டுள்ளது என்றே கூறலாம்.

சிந்துவெளி நாகரிகத்தை முறையாக ஆய்வு செய்த ஈராஸ் பாதிரியார், டாக்டர் அண்டர், வல்லி, எச். ஆர். ஆல்ஸ் போன்ற தொல்லியல் அறிஞர்கள் உலக நாகரிகங்களை ஆய்வு செய்த பேரறிஞர்கள்.
இந்நாகரிகங்கள் எல்லாம் பழந்தமிழர் நாகரிகங்களே என்று இவர்கள் சொல்லிச் சென்று ஒன்றரை நூற்றாண்டுகள் கடந்த பிறகும் நமது இந்த வரலாற்றை நாம் நம் தமிழர்களுக்கும் சொல்லித் தரவில்லை. உலக மக்களுக்கும் உணர்த்தவில்லை. சுமேரியர் தமிழரே, அவர்கள் பேசிய மொழி தமிழே. சுமேரிய, மெசொபெட்டோமியா ஆப்கானிஸ்தானம், பலூசிஸ்தானம் ஆகிய நாடுகளில் தமிழ் மொழியுடன் சம்பந்தப்பட்ட பிராகி என்னும் மொழி தோன்றியது என்று இவர்கள் கூறியதை இனியாவது உலகிற்கு உணர்த்துவோமா?
கிளிமண்ட் ஸ்கோனர் என்ற ஜெர்மானியர் மேலும் யூப்ரடிஸ், டைகிரிஸ் ஆற்றோரங்களில் ஆதியில் குடியேறியவர்கள் என்று அறியப்பட்ட சுமேரியரை ஒத்த மக்கள் இந்தியாவில் அன்றி வேறெங்கும் இல்லை என்கிறார்.

## மறை கூறும் மானிடவியல் 11

நபி இத்ரீஸ் (அலை) அவர்களைப் பற்றி குர்ஆனில் .




وَاذْكُرْ فِى الْكِتٰبِ اِدْرِيْسَ اِنَّهٗ كَانَ صِدِّيْقًا نَّبِيًّا ۙ
(நபியே!) இத்ரீஸைப் பற்றியும் இவ்வேதத்தில் (சிறிது) கூறுங்கள்: நிச்சயமாக அவர் மிக்க சத்தியவானாகவும் (நம்முடைய) நபியாகவும் இருந்தார்.
وَّرَفَعْنٰهُ مَكَانًا عَلِيًّا
அவரை மிக்க மேலான இடத்திற்கு உயர்த்தி விட்டோம்.
(அல்குர்ஆன் : 19: 56,57)

விண்ணகம் சென்ற இத்ரீஸ் (அலை) அவர்கள் மீண்டும் மண்ணகம் திரும்பாததைக் கண்ட நபி அவர்களின் தோழர் ஒருவருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவே இல்லை. ஒவ்வொரு நாளும் நபி அவர்களை நினைத்து கண்ணீர் உருகிக் கொண்டிருந்தார்.
அப்போது இப்லீஸ் அவரை அணுகி, அவருடைய வருத்தத்திற்கான காரணத்தை வினவினான். அவர் அதனை எடுத்துரைத்ததும், "விடும் உன் கவலையை !"இறைவனின் செயலாளர்கள் சாவதே இல்லை. (இன்ன அவுலியா அல்லாஹிலாயமூத்து ) எனவே அவரை போன்று நான் ஒரு சிலை அமைத்து தருகிறேன். அதனைப் பார்த்துக் கொண்டே இரும் ! உம் கவலை எல்லாம் போய்விடும்" என்று கூறினான்.
அதற்கு அவரும் இசைந்தார். அவ்வாறே அவனும் இத்ரீஸ் நபியவர்களைப் போல் சிலை செய்து கொடுத்தான். மேலும் இத்ரீஸ் நபியவர்கள் விண்ணகம் செல்ல மிருக வாகனத்தை பயன்படுத்தியதாக சொல்லி அதற்கும் ஒரு சிலையை வடித்துக் கொடுத்தான் இப்லீஸ் .
அதனைத் தம் இல்லத்தில் வைத்து இமை கொட்டாது பார்த்துக் கொண்டே இருந்தார் நபியவர்களின் நண்பர். சில நாட்களில் நண்பரும் இறந்துவிடவே, அவருடைய நண்பர்கள் அவரைக் காணாது அவருடைய இல்லம் சென்றனர். அங்கு தன் நண்பர் ஒரு சிலையை கட்டித் தழுவிக் கொண்டு இறந்து கிடப்பதைக் கண்டதும், அவர்களுக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவே இல்லை .
அப்போது இப்லீஸ் அங்கு தோன்றி, "இத்ரீஸும், அவருடைய இந்த நண்பரும் இந்த சிலைகளை வணங்கி வந்ததால்தான் அவர்களின் இறைஞ்சுதல்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. நீங்களும் அவ்வாறே செய்து வாருங்கள் மேன்மை அடைவீர்கள் !" என்று கூறினான்.
அவர்களும் அதற்கு ஒப்பி அவ்வாறே செய்து வந்தார்கள் இத்ரீஸ் (அலை) அவர்களின் சீடர்களில் முக்கியமானவர்கள் வாத், சுவாஹ், யாகூத் ,யாவூக் , நஸர்..இவர்கள் ஒவ்வொருவரும் இறக்க, இறக்க அவர்களுக்கும் மற்றவர்கள் சிலை எழுப்பினார்கள் அம்மக்கள்.
இத்ரீஸ் (அலை) மற்றும் அவரது சீடர்களின் சிலை செய்து அவற்றிற்கு கீழே அதன் வரலாற்றையும் கல்லிலேயே வடித்தார்கள்.
பின்னர் இப்லீஸ் அவர்களிடம் தோன்றி, " இவர்கள்தான் கடவுளர்கள் இவர்களை வணங்கி வாருங்கள் ! எல்லா நலனும் எய்தப் பெறுவீர்கள்." என்று கூறினான்.
அவனுடைய அத்தீய மொழியை உண்மையென நம்பி அவ்வாறு செய்யத் தொடங்கினார்கள் அம்மக்கள். இப்படிதான் சுமேரியா என்னும் மெசொப்பொத்தேமியாவில் (இன்றைய ஈராக்) நூற்றுக்கணக்கான கடவுளர் சிலைகள் தோன்றின .

## மறை கூறும் மானிடவியல் 12

(நூஹ் அலைஹிஸ்ஸலாம்)




ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இப்பூமியில் இறங்கி 1642 வருடம் கழித்து இவர்கள் தோன்றினர். அல்லது ஆதாமுக்கு 146 ஆண்டுகளுக்குப் பின்னர் (பைபிள் 126 ஆண்டுகள் என்கிறது) ஆதம் (அலை) அவர்களுடைய 8-வது தலைமுறையில் நோவா (குர்ஆனின் படி நூஹ்) என்பவர் தோன்றினார். இவர்களின் பெயர் ஸாகுப் என்றோ ஸகுன் என்றோ கூறப்படுகிறது.
நபிமார்களில் இவர்கள்தான் நீண்ட காலம் வாழ்ந்தவர்கள். அதனால் ஷைகுல் முர்ஸலீன் என்று பெயர் ஏற்பட்டது என்றும், கபீருல் அன்பியா என்றும் சிறப்புப் பெயர்கள் உண்டு.
இவர்கள் ஈராக்கில் வாழ்ந்ததாக கூறப்படுகிறது. இவர்களின் தந்தையின் பெயர் லாமக். அன்னை பெயர் ஃபுஸூஸ்ஃ.

ஹழ்ரத் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குப் பின் மக்கள் நேர்மையை மறந்து அல்லாஹ்வை மறந்தனர். அக்கிரம வாழ்க்கையில் ஈடுபட்டனர். எனவே மக்களை சீர்படுத்தி, நேர்மையாளர்களாக,சத்தியசீலர்களாக வாழ வழிகாட்டியாக நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அவர்களிடையே அனுப்பி வைத்தான்.
"நிச்சயமாக நாம் நூஹை அவருடைய கூட்டத்தாரிடம் அனுப்பி வைத்தோம். அவர்(தம் கூட்டத்தாரிடம்), "என் கூட்டத்தாரே! அல்லாஹ்வையே வணங்குங்கள், உங்களுக்கு அவனன்றி வேறு நாயனில்லை; நிச்சயமாக நான் உங்களுக்கு வர இருக்கும் மகத்தான ஒரு நாளின் வேதனைப்பற்றி அஞ்சுகிறேன் என்று கூறினார்.குர்ஆன் 7:59
ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும் ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த ஸுவாஃக், யகூஸ், யஊக், நஸர் போன்ற பெரியார்களின் பெயர்களில் (இவர்கள் நபி இத்ரீஸ் அவர்களின் முக்கிய சீடர்கள் முந்தையப் பதிவு ) சிலைகளைச் செய்து அவற்றை மக்கள் வணங்கி வர ஆரம்பித்தார்கள்.

மக்களுக்கு நேரிடையாக பிரச்சாரம் செய்தால் அந்த மக்கள் அவர்களை அடித்து குற்றுயிராக்கி விடுவார்கள். இரவு நேரங்களில் அல்லாஹ் மலக்குமார்களை அனுப்பி மருந்திடச் செய்து சுகப்படுத்தி விடுவான். இப்படி பலதடவை நடைபெற்றுள்ளது.
அவர்களில் ஒருவன், நூஹ் நபியின் சிரசில் ஒரு தடியைக் கொண்டு முழு பலத்தோடு அடித்தான். இதனால் அவர்களது சிரசில் பலமான காயம் ஏற்பட்டு இரத்தம் பீறிட்டு வெளிப்பட்டது.
இதற்குப் பிறகுதான் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தம் இரு கரங்களையும் வான்பக்கம் உயர்த்தி, 'யா அல்லாஹ்! நீ எல்லாம் அறிந்தவனாக இருக்கிறாய். எல்லாவற்றின் அந்தரங்கத்தை அறிகிறாய். வெளிரங்கத்தை அறிகிறாய். நான் இவர்களுக்கு உபதேசிக்கிறேன். ஆனால் இவர்கள் யாரும் நேர்வழி பெறுவதாக தெரியவில்லை. மாறாக என்னை துன்புறுத்துகிறார்கள். உன் அருள் இருந்தால் மட்டுமே இவர்கள் நேர்வழி பெற முடியும். இவர்களில் யார் நேர்வழி பெறுவார்கள் என்று எனக்குத் தெரியவில்லையே! என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ் பதில் சொன்னான்: உங்கள் மீது யார் விசுவாசம் கொள்ள வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டிருந்ததோ அவர்கள் ஈமான் கொண்டு விட்டார்கள்'
அதற்கு நூஹ் நபி அவர்கள், மீதமுடையவர்களின் சந்ததியினர்களிலாவது யாராவது என்மீது விசுவாசம் கொண்டவர்களாக வரக்கூடிய சந்தர்ப்பம் இருக்கிறதா? என்று கேட்டார்கள்.
யாருமில்லை என்றான் அல்லாஹ்.
அப்படியென்றால் அவர்களை அழித்து விடுவாயாக! என்று உள்ளம் உடைந்துபோய் கேட்டார்கள்.
'அவர்களை பிரளயத்தின் மூலம் அழிக்கப் போகிறேன். நீரும் உம்மைப் பின்தொடரும் அந்த ஒரு சிலரும் இந்த அழிவை விட்டும் பாதுகாப்பு பெறுவீர்கள்' என்றான் அல்லாஹ்.
அல்லாஹ் ஒரு கப்பலை கட்டுமாறு நூஹ் நபிக்கு உத்தரவிட்டான். ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூலம் மரங்களை நட்டு அதிலிருந்து ஒரு இலட்சத்து 24 ஆயிரம் பலகைகளை பெற்று, ஒவ்வொரு பலகையிலும் ஒவ்வொரு நபியின் பெயரை எழுதினார்கள்.

முதல் பலகையில் அல்லாஹ்வின் பெயரையும் இறுதியில் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பெயரையும் எழுதினார்கள். கடைசி பலகையை பொருத்தியபோது அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஒரு தொனி வந்தது. அதில் "நீர் தயாரிக்கும் கப்பல் நிறைவு பெற்றுவிட்டது" என்று.
மற்றொரு அறிவிப்பின்படி, கடைசி பலகைகளை பொருத்திய பின் நான்கு பலகைகள் பொருத்தக் கூடிய அளவிற்கு இடைவெளி இருந்தது. அதற்கு என்ன செய்ய வேண்டும் என்று ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் கேட்டார்கள்.
அவர்கள் மவுனமாக இருந்தார்கள். அல்லாஹ்வின் புறத்திலிருந்து எனது இறுதி நபியின் நான்கு பிரதிநிதிகளை(கலீபாக்களை) எழுதி பொருத்துங்கள் என்று சொல்லப்பட்டது. அவ்வாறு பொருத்தியதும் கப்பல் கட்டும் பணி நிறைவுற்றது.
கப்பல் கட்டி முடித்ததும் மக்கள் நூஹ் நபி அவர்களை கேலி செய்ய ஆரம்பித்தார்கள். மக்கள் அனைவரும் அந்தக் கப்பலில் போய் மலம் கழிக்க ஆரம்பித்தார்கள். இவர்களின் இச்செயல் நூஹ் நபி அவர்களை புண்படச் செய்தது.
அதேசமயம் பிரளயம் ஏற்படப் போகும் காலமும் நெருங்கியது. அல்லாஹ்விடமிருந்தும் கப்பலை தயாராக வைத்திருக்க உத்திரவு வந்தது. கப்பலின் பரிதாப நிலையை அல்லாஹ்விடம் முறையிட்டார்கள். அதற்கு அல்லாஹ் ஓர் அழகான உபாயம் செய்தான்.
அந்த மக்கள் அனைவருக்கும் சொரி, சிரங்கு நோயைக் கொடுத்தான். இரவும் பகலுமாக அவர்கள் சொரிந்து சொரிந்து, உடல் முழுவதும் இரணமாகி விட்டது. அந்த இரணத்தையும், சொரி, சிரங்கையும் போக்க அவர்கள் எடுத்த முயற்சி பயனளிக்கவில்லை.
இச்சமயத்தில் ஓரிரவு கப்பலில் மலம் கழித்து கொண்டிருந்த ஒருவன் அதில் தவறி விழுந்து விட்டான். பின் யாருக்கும் தெரியாது வீட்டிற்கு சென்று சுத்தமாகி கொண்டான். அத்தோடு அவனைப் பீடித்திருந்த சொறி, சிரங்கு போய்விட்டது. அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை.

இச்செய்தி மக்கள் அனைவருக்கும் தெரியவந்தது. தங்களுடைய சொறி, சிரங்கிற்கு மக்கள் அந்த மலத்தை எடுத்து தங்கள் உடம்பில் தேய்த்துக் கொண்டார்கள். இதனால் கப்பல் இம்மியளவும் அசுத்தமில்லாது சுத்தமாகிவிட்டது.
இந்தக் கப்பலின் அளவானது நீளம் 1980 அடிகள். அகலம் 990 அடிகள். இதில் மூன்று தட்டுகள் இருந்தன. மேல் பாகத்திலிருந்த முதல் தட்டு ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்காகவும், அவர்கள் மீது விசுவாசம் கொண்ட சிலருக்காகவும்,

நடுப்பாகத்திலுள்ள இரண்டாவது தட்டு விஷ ஜந்துகள், பறவையினங்களுக்காகவும்,
கடைசியிலிருந்த மூன்றாவது தட்டு ஐவாய் பிராணிகள், கால்நடைகளுக்காகவும் அமைக்கப்பட்டிருந்தன' என்று மஆரிஜுத் நுபுவ்வத் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.
பல்வேறு தப்ஸீர்களில் பல்வேறு விதங்களாக விவரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு உயிர்ப்பிராணிகளிலிருந்தும் ஒவ்வொரு ஜோடியைத் திரட்டிக் கொள்ளும்படி அல்லாஹ்விடமிருந்து உத்திரவு வந்தது. ஐவாய் மிருகங்களுக்கிடையே இருந்த பகைமை உணர்வை அல்லாஹ் நீக்கியதால் கால்நடைகள் அன்பாகப் பழக ஆரம்பித்தன.
பிறகு மனிதர்களும், மற்ற ஜீவராசிகளும் கப்பலில் ஏற ஆரம்பித்தன. கப்பலில் தங்கியிருக்கும் வரை உடலுறவு கொள்ளக் கூடாது என்றும், மனிதர்கள் அல்லாஹ்வின் உத்திரவு வரும்வரை சாப்பிடவோ, அருந்தவோ கூடாது என்றும் அல்லாஹ் உத்தரவிட்டான்.

கப்பலிலுள்ளவர்கள் ஒரு வருடத்திற்கு தேவையான ஆகாரங்களை சேமித்துக் கொள்ள வேண்டும் என்றும் ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அல்லாஹ் உத்தரவிட்டான்.
பிரளயம் வருவதற்கு கூறப்பட்ட ரொட்டி சுடக் கூடிய கல்லினால் ஆன பாத்திரத்திலிருந்து நீருற்று ஏற்படும் என்ற அடையாளம் தென்படத் துவங்கியது.
இந்தக் கல் ஹழ்ரத் ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ரொட்டி சுட்ட கல் ஆகும். உடனே நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தம் குடும்பத்தினர்களை கப்பலில் ஏறச் சொன்னார்கள்.
ஆனால் அவர்களது மகன் கன்ஆன் தம் தாய் தாகிலாவுடன் கப்பலை விட்டு தூர விலகி காபிர்களுடன் சேர்ந்து நின்று கொண்டு பிரளயம் வந்து என்னை ஒன்றும் செய்யாது. நான் மலைகளின் உச்சி மீது ஏறிக் கொண்டு தப்பித்து விடுவேன் என்று சொன்னான். நூஹ் நபி அவர்கள் எவ்வளவோ கேட்டுக் கொண்டும் அவன் கப்பலில் ஏற மறுத்துவிட்டான். இதனைக் குறித்து அல்லாஹ் :
பின்னர் அக்கப்பல், மலைகளைப் போன்ற அலைகளுக்கிடையே அவர்களை சுமந்து கொண்டு செல்லலாயிற்று. (அப்போது தம்மை விட்டு) விலகி நின்ற தம் மகனை நோக்கி "என்னருமை மகனே! எங்களோடு நீயும் (கப்பலில்) ஏறிக்கொள்; காஃபிர்களுடன் (சேர்ந்து) இராதே!" என்று நூஹ் அழைத்தார்.
அதற்கு அவன்: "என்னைத் தண்ணீரிலிருந்து பாதுகாக்கக் கூடிய ஒரு மலையின் மேல் சென்று நான் (தப்பி) விடுவேன்" எனக் கூறினான்; இன்றைய தினம் அல்லாஹ் யாருக்கு அருள் புரிந்திருக்கிறானோ அவரைத் தவிர அல்லாஹ்வின் கட்டளையிலிருந்து காப்பாற்றப்படுபவர் எவருமில்லை என்று கூறினார். அச்சமயம் அவர்களிடையே பேரலை ஒன்று எழுந்து குறுக்கிட்டது; அவன் மூழ்கடிக்கப்பட்டவர்களில் ஒருவனாகி விட்டான். அல்குர்ஆன் 11:42,43

நூஹ் நபி அவர்களுடன் தர்க்கம் செய்து கொண்டிருக்கும்போதே ஒரு அலை வந்து அவனை இழுத்துச் செல்ல ஆரம்பித்தது. அதனைக் காண சகியாத நூஹ் நபி அவர்கள் அல்லாஹ்விடம் முறையிட்டார்கள். அதற்கு அல்லாஹ்
அ(தற்கு இறை)வன் கூறினான்: "நூஹே! உண்மையாகவே அவன் உம் குடும்பத்தைச் சேர்ந்தவன் அல்லன்; நிச்சயமாக அவன் ஒழுக்கமில்லாச் செயல்களையே செய்து கொண்டிருந்தான். ஆகவே நீர் அறியாத விஷயத்தைப் பற்றி என்னிடம் கேட்க வேண்டாம்; நீர் அறியாதவர்களில் ஒருவராகி விடவேண்டாம் என்று திடமாக நான் உமக்கு உபதேசம் செய்கிறேன்." அல்குர்ஆன் 11:46 ல் விரிவாகக் கூறுகிறான்.
நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தாம் அழைத்துக் கொண்ட பரிவாரத்தோடு ரஜப் மாதம் 10 ஆம் கூபா அல்லது இந்தியாவிலிருந்து கப்பலில் புறப்பட்டார்கள். அவர்களோடு வந்த மக்களில் அவர்களின் முஸ்லிம் மனைவி அவர்களுடைய ஹாம், ஸாம், யாபிஸ் என்ற மூன்று மகன்களும், அவர்களுது மனைவிமார்களும் இருந்தனர். மனிதர்களாக அக்கப்பலில் இருந்தவர்கள் மொத்தம் 8 பேர்தான் என்றும் ஒரு குறிப்பில் காணக் கிடக்கிறது.
நூஹ் அலைஹிஸ்ஸலாம்அவர்கள் அங்கிருந்து புறப்பட்ட உடனே, உலகில் ஒரே இருள் கவ்விக் கொண்டது. அந்த இருளில் பகல்-இரவு என்ற வித்தியாசமே தெரியாது போய்விட்டது.
தொடர்ந்து 40 நாட்கள் இரவும்,பகலும் பலத்த மழை பெய்து முழு பூமியும் வெள்ளக்காடாகி விட்டது. பொங்குக் கடலுக்கும், பூமிக்கும் வித்தியாசமே தெரியாது போய்விட்டது. அந்தக் கப்பல் பூமியின் எல்லாப் பாகங்களிலும் வலம் வந்து கொண்டிருந்தது.

கஃபத்துல்லாஹ்வை பாதுகாக்க அல்லாஹ் அதனைச் சுற்றி ஓர் இயற்கையான தடுப்பை ஏற்படுத்தியிருந்தான். கப்பல் ஏழுமுறை கஃபாவை வலம் வந்தது.

சுமார்இரண்டு மாதங்கள் அல்லது 50 நாட்கள் வரை தண்ணீரில மிதந்து கொண்டே இருந்தது. உலகிலுள்ள அத்தனை இறை மறுப்பாளர்களும் அழித்தொழிக்கப்பட்ட பின்னர் வானம் மழையை நிறுத்தவும், பூமி தண்ணீரை உறிஞ்சவும் அல்லாஹ் உத்தரவிட்டான். அவ்வாறே நடந்தது. ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பல் ஜூதி மலை அருகே போய் தங்கி விட்டது.
நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கப்பலிலிருந்து இறங்கி பூமியில் கால் வைத்த நாள் முஹர்ரம் 10 ஆம் நாள் ஆகும். நீண்ட நாட்கள் இருட்டிலிருந்து வெளியே வந்ததால் கண்கள் கூச ஆரம்பித்தன. கண்களில் கூச்சம் தெளிவடையவும், கண்களில் பார்வை சக்தி பெறவும் அவர்கள் சுர்மா இட்டார்கள். இதிலிருந்துதான் கண்களுக்குச் சுர்மா இடும் பழக்கம் ஏற்பட்டது.
இதற்குப் பிறகு ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மலையடிவாரத்தில் வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழ்ந்து வருமாறு தம் மக்களுக்கு பணித்தார்கள்.
தம் மக்களை அழித்தொழிக்க இறைவனிடம் நூஹ் அலைஹிஸ்ஸலாம் வேண்டியதால் அவர்கள் நரகவாதிகளாகிவிட்டனர். பெரும் தொகையினரை நரகவாதியாக்கி எனக்கு உபகாரம் செய்து விட்டீர்கள் என்று இப்லீஸ் நூஹ் நபியைப் பார்த்து கூறினான்.
இதனால் அவர்கள் மிகவும் அழுது அழுது அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோரினார்கள். அழுது நிலைக்குலைந்து போயிருந்த அவர்களுக்கு மரணம் சமீபத்து விட்டதாக அல்லாஹ்விடமிருந்து அறிவிப்பு வந்து விட்டது.
உடனே ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது மகன் ஸாமை அழைத்து அவரைத் தமது பிரதிநிதியாக அமர்த்தி பல புத்திமதிகளை கூறினார்கள். அப்போது ஸாமின் வயது 448 வருடங்கள்.
அல்குர்ஆன் அத்தியாயம் 29 வசனம் 14 ல் :
மேலும்: திடனாக நாம் நூஹை அவருடைய சமூகத்தாரிடம் அனுப்பினோம். ஆக, அவர்கள் மத்தியில் அவர் ஐம்பது குறைய ஆயிரம் ஆண்டுகள் தங்கியிருந்தார்; ஆனால் அவர்கள் அநியாயக்காரர்களாக இருந்தமையால் அவர்களைப் பிரளயம் பிடித்துக் கொண்டது.

ஹழ்ரத் அப்பாஸ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுு அன்ஹுு அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஹழ்ரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 40 ஆம் வயதில் நபிப்பட்டம் கிடைத்தது.
950 வருடங்கள் தம் மக்களுக்கு உபதேசம் புரிந்து இஸ்லாத்தின் பால் அழைத்தார்கள். பிரளயத்திற்குப் பிறகு 200 வருடங்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் இவ்வுலகை விட்டுப் பிரியும்போது அவர்களுக்கு வயது 1450 வருடங்கள். இவர்கள் சிரியாவில் கர்க் என்ற இடத்தில் அடங்கப்பட்டுள்ளார்கள் என்றும், மக்காவில் அடங்கப்பட்டுள்ளார்கள் என்றும் இருவித கருத்துக்கள் உள்ளன.

## மறை கூறும் மானிடவியல் 13

(பூலோகத்தில் சொர்க்கம் கட்டிய ஷத்தாத்தும் அவனது சமூகமும் )



ஆது மக்களின் அரசனாக ஷத்தாத் முடிசூடிக் கொண்டான் . உருவச்சிலைகளை வணங்கும். அவனிடம் ஹூத் (அலை) ஏகத்துவத்தை போதித்தார்கள் .
"உங்களது உருவமற்ற இறைவனை வணங்கினால் என்ன கிடைக்கும் ? "
"சொர்க்கம் "

"எப்படி இருக்கும் சொர்க்கம் ?"
"தங்கத்தாலும், மணி, முத்துக்களாலும், வைர, வைடூரியங்களாலும் உருவாக்கப்பட்டது."
"அந்த சொர்க்கத்தை பூலோகத்திலேயே நானே உருவாக்கிக் கொள்கிறேன்" என்று தன் கீழ் உள்ள சிற்றரசர்கள் அத்தனை பேரிடமும் மேற்கண்ட தங்கம் போன்றவற்றை உடனடியாக கொண்டு வரச் சொன்னான் .
பூலோக சொர்க்கம் தன்னுடைய 600 வயதில் உருவாக்கப்பட்டு 900 வயதில் கட்டி முடிக்கப்பட்டது . இதற்கு "இறமதாத்தில் இமாத்" என்ற பெயரும் சூட்டப்பட்டது.
இறைவன் கூட " இதைப் போன்று ஒரு நகரம் இம்மண்ணில் உருவாக்கப்படவே இல்லை" என்று குர்ஆனில் (89 : 8 ) குறிப்பிடுகிறான் .
திறப்பு விழா . தன் சமூக மக்கள் புடை சூழ ஷத்தாத் அங்கு வந்தான் . அந்த இடத்தில் பொன் நிற மான் ஒன்று மேயக் கண்டான். ஏற்கனவே மயில்கள் குயில்கள் அன்னப்பறவைகள் முயல்கள் போன்றவற்றை கொண்டு அழகுப்படுத்தப்பட்ட பூலோக சொர்க்கத்தில் பொன் மான் மேய்ந்தால் இன்னும் அழகாக இருக்குமே...
பொன்மானை பிடிக்க விரட்டினான் ஷத்தாத் , கூடவே அவன் சமூகமும் விரட்டியது . அது இறக்கை கொண்டு பறக்க ஆரம்பித்தது . அந்த இடத்தில் பார்க்க அச்சமுற தோற்றத்தில் ஒரு ஆள்,
"பூலோகத்தில் சொர்க்கம் கட்டினால் இறப்பு வராது என்ற நினைப்போ ? "
"நீ யார் ?"
"இஸ்ராயீல் "
" இங்கு என்ன செய்ய வந்தீர் ?"
"உயிரை வாங்க "
ஒரே ஒரு சப்தம் ஷத்தாத் உட்பட அத்தனை பேரும் மாண்டனர் ... இப்படி ஒரு வரலாறு பேசுகிறது
இறமதாத்தில் இமாத் என்ற பூலோக சொர்க்த்தை திறக்க அதன் தலைவாயிலுக்கு வந்து ஷத்தாத் வலது காலை முன்வைத்து இடது காலை தூக்கும் அந்த இடவெளி நேரத்தில் அவன் உயிர் வாங்கப்பட்டது. இப்படி ஒரு வரலாறும் பேசுகிறது.
காலச் சக்கரம் சுழன்றது .
இறைவன் . "இஸ்ராயீலே , நீர் எப்போதாவது எவர் மீதாவது இரக்கம் கொண்டிருக்கிறீரா ?"
"ஆம் இறை பெரியோனே ....ஒரு தடவை நடுக் கடலில் கப்பல் ஒன்று புயல் காற்றில் அலைக்கழித்து கவிழ்ந்து அத்தனை பேரின் உயிரும் வாங்கப்பட்டது. அத்தருணத்தில் ,ஒரு கர்ப்பிணி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து மிதக்கும் சிறிய மரத்துண்டில் வைத்து நீந்தினாள் . அந்த சமயம் அவள் உயிரையும் வாங்க ஒரு மீன் அவளை கடித்து குதறி விழுங்கியது .இந்த நிகழ்வு என்னை இரக்கப்பட வைத்தது " என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள்.
"அடுத்து ?" என்று கேட்டான் இறைவன்
ஷத்தாத், பூலோக சொர்க்கத்தை சுகிச்சு சுகிச்சி கட்டினான் . அத்தனை வருடம் கட்டிய சொர்க்கத்தை ஒரு தடவையாவது அவன் முழுமையாக உள்ளே போய் பார்ப்பதற்குள் அவன் உயிர் வாங்கியது எனக்கு ரொம்பவும் இரக்கமாக இருந்தது " என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள் .
"தாயில்லாமல் அன்று கடலில் தத்தளித்த அந்த ஆண் குழந்தைதான்
இந்த ஷத்தாத் " - என்றான் இறைவன்
உயிர் வாங்கும் இஸ்ராயீல் (அலை) அதிர்ந்து விட்டார்கள்

## மறை கூறும் மானிடவியல் 14

( காலவெளியில் காணாமல் போன நபி ஸாலிஹ் (அலை)




சிரியாவிலிருந்து மதீனா நோக்கி பயணப்பட்டால் , ஹிஜ்ர் நகரம். இன்று "மதாயின் ஸாலிஹ்" என்றழைக்கப்படுகிறது
நூறு ஆண்டுகள் ஓர் இறை வழிபாட்டில் பிரச்சாரத்தை நிகழ்த்தியும், ஸமூது கூட்டத்தினர் நேர்வழி பெறாததைக் கண்டு நபி ஸாலிஹ் (அலை) அவர்களுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவே இல்லை .
ஒரு நாள் அவர்கள் தங்களின் தோழர்களை நோக்கி,மலை மீது சென்று தான் அங்கு தனித்து சிலநாள் வீற்றிருந்து இறைவனை வணங்கிவிட்டு வருவதாக கூறிச் சென்றார்கள்.
நபியவர்களுக்குத் தம் இனத்தார் மீது கோபம் கோபமாக வந்தது. அவர்கள் மீது அழிவையும்,இழிவையும் இறக்கி வைக்குமாறு இறைவனிடம் இருகரம் ஏந்த அவர்கள் தீர்மானித்து விட்டார்கள்.
அம்மலை மீது இருந்த ஒரு சுனையில் ஒலுகுச் செய்து, இறைவனை வணங்குவதற்காக அங்குள்ள ஒரு பொதும்பில் நுழைந்தார்கள். அங்கு பேரொளி ஒன்று தோற்றம் வழங்கியது.கஸ்தூரி மணம் கமகமவென்று பரிமளித்தது. அதிலே சொக்கி 40 ஆண்டுகள் அவர்கள் கண்மூடித் தூங்கி விட்டார்கள்.
ஸாலிஹ் (அலை) அவர்கள் திடீரென காணாமல் போனது ஸமூதுக் கூட்டத்தினருக்கு பெரும் வேடிக்கையாக இருந்தது. "தொலைந்தார் அவர். இனி நமக்கு தொல்லை இல்லை "என்று எண்ணி தங்களின் அலுவல்களை கவனிக்க தொடங்கினார்.

ஸாலிஹ் (அலை) அவர்களின் தோழர்களோ தங்களை வாழ்விக்க வந்த வள்ளலை காணாது தவியாய்த் தவித்தனர். எங்கு தேடினும் அவர்களை காணாது உள்ளம் வருந்தினர். ஊர் ஊராய் தேடியும் அவர்கள் காணாததால் உடல் மெலிந்தனர்.
நாட்கள் மாதங்களாகவும் ,மாதங்கள் ஆண்டுகளாகவும் மாறி ஓடிக்கொண்டிருந்தன. சிறியவர்கள் பெரியவர்களாகவும், பெரியவர்கள் முதியவர்களாகவும் ஆனார்கள். முதியவர்கள் இறப்பெய்தி இடுகாடு சென்றுகொண்டிருந்தார்கள்.

40 ஆண்டுகள் கழித்து ஒருநாள் ஸாலிஹ் (அலை) அவர்கள் உறக்கத்திலிருந்து விழித்தனர். சற்று நேரம் உறக்கத்தில் ஆழ்ந்திருந்த உணர்வுதான் அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது. மீண்டும் ஒலுகுச் செய்து, தொழுது, தம்முடைய கூட்டத்தினர் மீது இறைவன் சாபத்தை இறக்க வேண்டும் என்று நாடினார்கள் .
அப்போது ஒரு குரல் திடீரென முழங்கியது. "ஸாலிஹே ! நீர் அவர்களின் அழிவிற்கு இறைஞ்ச வேண்டாம் ! அவ்விதம் நீர் எண்ணியதன் காரணமாகவே 40 ஆண்டுகள் உறங்கினீர்கள்"
இப்பொழுதுதான் ஸாலிஹ் (அலை) அவர்களுக்கு தாம் 40 ஆண்டுகள் உறங்கிய உண்மை தெரியவந்தது. தான் செய்த தவற்றை எண்ணி வருந்திய அவர்கள் தன் நகர் நோக்கி அடி எடுத்து வைத்து நடந்தார்கள்.
நகரை அடைந்த அவர்களுக்கு எல்லாமே புதுமையாகத் தோன்றியது. பள்ளிவாயலை அடைந்த பொழுது அங்கு ஒருவரையும் காணோம். அது வெறிச்சென்று இருந்தது. அங்குமிங்கும் சில புதைகுழிகள் தென்பட்டன. அவற்றின்மீது நாட்டப்பட்ட கற்களில் அவர்களின் தோழர்கள் சிலரின் பெயர்கள் பொறிக்கப்பட்டிருந்தன. இவர்கள் தாம் இறந்துவிட்டார்கள் சரி , மற்றவர்கள் எல்லாம் எங்கே என்று விசாரித்த பொழுது, அவர்கள் தங்களின் முந்தைய மார்க்கத்திற்கு போய்விட்டதாக தெரியவந்தது.

அப்போது ஸாலிஹ் (அலை) அவர்களுக்கு இறைவனிடருந்து ஒரு செய்தி வந்தது. "ஸாலிஹே ! மீண்டும் உங்களுடைய மக்களிடம் சென்று அவர்களை ஒரே வழி இறைவழிபாட்டின் பக்கம் அழையும் "
இறைவனுடைய ஆணையை சிரமேற்கொண்டு ஸாலிஹ் (அலை) அவர்கள் தம் கூட்டத்திடம் சென்று, " மக்களே ! என்னுடைய மக்களே, இறைவன் ஒருவன் என்று கூறி அவனையே வணங்குங்கள். உருவத் தொழும்பை

விட்டொழியுங்கள். நானே முன்பு உங்களிடம் இறைத்தூதராக வந்தேன்.இப்போது இரண்டாவது முறையாக அப்பணியை மேற்கொண்டு வந்துள்ளேன்" என்று கூறினார்.
அப்போது ஜுன்தாஹ் மன்னன் அவர்களைப் முறைத்துப் பார்த்து, "நீர் யார் ? என்று அதட்டினான்.
"நான் காபூக்குடைய மகன் ஸாலிஹ்" என்று அமைதியாக மறுமொழி பகர்ந்தனர் . ஸாலிஹ் மறைந்து 40 ஆண்டுகள் ஓடி மறைந்துவிட்டனவே. நீர் பொய்யுரைக்கின்றீர்.நீர் ஸாலிஹ் என்றால், அவருக்கு உன்னை விட நாற்பது வயது அதிகமாக அல்லவா இருக்க வேண்டும். எனவே சூனியக்காரரேயன்றி வேறல்லை என்று கூறினான் .
அப்பொழுது மன்னன் தன் சிறிய தந்தையின் மகன் குஸைல் என்பவன் குறுக்கிட்டு, " நீர் எங்களுக்கு அறிவுரை கூற முன் வந்து உள்ளீர். எனினும் நாங்கள் உம்முடைய அறிவுரையை கேட்க தயாராக இல்லை " என்று கூறினான்.
அது கேட்ட ஸாலிஹ் ( அலை) அவர்கள் வெகுண்டு, " இன்று இத்தனை நாழிகைக்குள் நீ மரணம் அடைவாய்.உன்னுடைய அன்னையும், தந்தையும் இறப்பெய்துவார்கள் அதை கேட்டு குஸைல் நகைத்துவிட்டு அவன் இல்லம் சேர்ந்தான்.

ஸாலிஹ் (அலை) அவர்கள் விடுத்த எச்சரிக்கை கூட்டத்தினர் "அவர் உண்மையாளர் எனில் அவர் கூறியது பலிக்கும். பொய்யர் எனில் பலிக்காது பேசிக் கொண்டார்கள் .
நேரம் நெருங்க நெருங்க குஸைல் நெஞ்சம் படபடத்து இறுதியில் அவன் துடிதுடித்து இறந்து விட்டான். அது கண்ட அரசன் முதல் அவனுடைய உற்றார் உறவினர்கள் அனைவரும் அலறி துடித்து அழுதார்கள்.
அப்போது ஸாலிஹ் ( அலை) அவர்கள், அவர்களை அணுகி, தாம் அவனை உயிர்ப்பித்து விட்டால், அவர்கள் உருவ தொழும்பை விட்டொழித்து ஒரே இறைவழிபாட்டில் பக்கம் திரும்புவார்களா ? என்று வினவினார்.
அதற்கு அவர்கள் ஒப்புதல் தந்தார்கள். உடனே ஸாலிஹ் (அலை) அவர்கள் இருகரம் ஏந்தி இறைவனிடம் இறைஞ்சிய பின், குஸைலின் வெற்றுடலை நோக்கி , "குஸைலே ! என்று நபியவர்கள் அழைத்தார்கள்.
அவன் உடனே "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வையன்றி வேறு யாருமில்லை ஸாலிஹ் அவனுடைய திருத்தூதராக இருக்கிறார் " என்று கூறிக் கொண்டு எழுந்தான்.

இதுகண்டு அங்கிருந்தோர் அனைவரும் தங்களுடைய கண்களைத் தங்களால் நம்பவே இயலவில்லை." திட்டமாக இது ஸாலிஹ்னுடைய சூனியமேயன்றி வேறு இல்லை. மேலும் ,அவர் வயது முதிராமல் இளையவராக இருக்கும் போதே கவனித்தேன் .அவர் மிகப் பெரிய சூன்யத்தை கற்ற மாபெரும் சூனியக்காரர் " என்று மன்னன் ஜுன்தாஹ் கூறினான் .
அவர் காலவெளியில் அல்லவா காணாமல் போயிருந்தார் என்பதை யார் அம்மன்னனிடம் சொல்ல ?

## நவீன அறிவியலின் சாகசம் 1

(உடலின் உள்ளே நுண்துகள் ரோபாட் ! )



நாம்தாம் அவர்களைப் படைத்தோம். நாம்தாம் அவர்களுடைய அமைப்பையும் உறுதிப்படுத்தினோம் என்கிறது (குர்ஆன் : 76:28) வசனம் .

ஆனால் , ஒரு பெண் கர்ப்பமானதும் அவளுடைய முதல் நாற்பதாவது நாளில் அல்லாஹ்வின் சங்கையான வானவர் ஒருவர் வந்து கருவைப் பற்றி அல்லாஹ்விடம் எடுத்துக் கூறுவார்.
மீண்டும் இரண்டாவது நாற்பதிலும் வந்து அதன் நிலையைப் பற்றி அல்லாஹ்விடம் எடுத்துக் கூறுவார்.
மீண்டும் மூன்றாவது நாற்பதான நான்காவது மாதத்தில் அதாவது 120 நாட்களில் அந்த சங்கையான வானவர் வந்து, கருவில் உள்ள பிள்ளைக்கு அல்லாஹ்வின் உதவியுடன் நான்கு விஷயங்களைக் கொண்டு எழுத முற்படுவார்.
அதாவது நான்கு விஷயங்களை எழுதுமாறு பணிக்கப்படுகிறார். அந்த மனிதனின் வாழ்வாதாரம், வாழ்நாள், (செயல்பாடு), அவன் துர்பாக்கியசாலியா அல்லது நற்பாக்கியசாலியா ஆணா, பெண்ணா (ஆகியவை எழுதப்படும்). பிறகு அவனுள் உயிர் ஊதப்படும்.
அதில்தான் அந்தப் பிள்ளையின் உலக வாழ்க்கையில் ஏற்படுகின்ற இன்ப, துன்பங்கள் உட்பட அனைத்து நடவடிக்கையும் அடங்கியிருக்கும். அதுமட்டுமல்லாமல், மரணித்த பின் நாம் எதிர்பார்த்திருக்கும் மறுமையின் இறுதி முடிவான சுவனம், நரகம் என்பனவும் எழுதி முற்றுப் புள்ளியும் வைக்கப்படும்.
நிச்சயமாகக் கற்பமான ஒவ்வொரு பெண்ணிடத்திலும் தான் சுமந்திருக்கும் குழந்தையின் இந்நிகழ்வுகளை எழுதுவதற்காக ஒரு வானவர் வந்தே தீருவார் என்பது யாராலும் மறுக்க முடியாத உண்மையாகும்.
ஆனால் அந்த சத்தியமான, உண்மையான விஷயத்தில் நாமெல்லோரும் மிகவும் பொடுபோக்கானவர்களாக இருந்து விடுகின்றோம் என்பதே கவலையான விஷயமாகும்.

ஒரு மலக்கு தாயின் கருவறைக்குள் சென்று ,சிசுவைப் பற்றி தகவல்களை இறைவனுக்குச் சொல்கிறார் என்றால் பகுத்தறிவாளர்களால் நம்ப முடியுமா ?
அடுத்து,
“ஷைத்தான் மனிதனின் இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் தீய எண்ணம் எதையேனும் போட்டு விடுவான். அல்லது உங்கள் உள்ளங்களில் (சந்தேகம்) எதையாவது அவன் போட்டு விடுவான். அறிவிப்பவர் : ஸஃபிய்யா (ரலி), புகாரி (3281)

மனிதனின் இரத்த நாளங்களுக்குள் ஷைத்தான் ஓடுகிறான் என்பதையும் அவர்களால் நம்ப முடியுமா ?
ஆனால் , நவீன விஞ்ஞானம் நம்பும்படி செய்து காட்டுகிறது.
பென்டாஸ்டிக் வாயேஜ் (Fentastic voyuge) என்கிற ஹாலிவுட் திரைப்படத்தில் மருத்துவர்கள் நுண்துகள் அளவுக்குச் சுருக்கி சிறிய நீர் மூழ்கி கப்பலில் மனித மூளைக்குள் பயணம் செய்வார்கள். மூளையில் ஏற்பட்டிருக்கும் குறைபாட்டைச் சரி செய்வார்கள். இந்த அறிவியல் புனைகதை நிஜமாகும் சாத்தியம் இருப்பதாக வருண் ஸ்ரீதர் உள்ளிட்ட ஆய்வாளர்கள் தெரிவிக்கிறார்கள்.

மனித உடலின் ரத்த குழாய்கள் வழியே சில நானோ துகள்களை ரோபோட் போலச் செலுத்தமுடியும். நானோ துகள்கள் மீன்களைப் போல நீந்தி, நோய்க் கட்டி இருக்கும் பகுதிக்குச் செல்லும். கங்காரு வயிற்றில் குட்டி இருப்பது போல, நுண் ரோபட்டுகளுக்கு உள்ளே மருத்து இருக்கும்.ரோபாட் நோய் கட்டியை அடைந்ததும் அந்த மருந்தை நானோ துகள் ரோபாட் உமிழ்ந்துவிடும் .

ரோபாட் என்றதும் இயந்திர மனிதன் என்று கருதிவிட வேண்டாம். இவை கோள வடிவில் இருக்கும் பாலி கார்பன் நைட்ரேட் துகள்கள். இவற்றைதான் ஆய்வாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.
ரோபாட் நுண்துகள் எப்படி நீந்துகிறது ? அதன் இயக்கத்திற்கு ஆற்றல் எங்கிருந்து கிடைக்கிறது ? மிக நுணுக்கமாக இருப்பதால் அவற்றின் உள்ளே மின்கலம் போன்ற ஆற்றல் சேமிப்பு கலத்தைப் பொருத்த முடியாது ஒளிதான் நுண்துகள்களுக்கு ஆற்றல் தரும்.
ஒளிவழி வேதியல் விளைவு தூண்டல் மூலம் இந்த நுண்துகள் ரோபாட் நீந்தும். ஒளியை நோக்கி நுண்துகள் ரோபாட் செல்லும் என்பதால் உடலின் குறிப்பிட்ட பகுதி நோக்கி நம்மால் ரோபாட் நுண்துகளைச் செலுத்த முடியும்.
தூய நீரில் ரோபாட் நுண்துகள்களை நீந்த வைப்பது எளிது. ஆனால் உப்பு கலந்த உடலின் நிணநீரில் இந்த ரோபாட் நீந்த வைப்பது பெரும் சவால்.
இந்தச் சவாலை எதிர் கொண்டால்தான் உடலில் நீந்திச் செல்லும்படியான நுண்துகள் ரோபோட்களை உருவாக்க முடியும். பாலி கார்பன் நைட்ரேட் நுண்துகள்கள் உப்புக் கரைசலில் நீந்தும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.
இந்த கண்டுபிடித்த நுண்துகள் ரோபாட் உடல் திசுக்களுக்கு ஆபத்தை விளைவிக்காது. எனவே உடலுக்குள் செலுத்தி பயன்படுத்த சிக்கல் இருக்காது.

இதே நானோ துகள்களின் மருந்து இட்டு நிரப்பி நானோ துகள் ரோபாட்டை இயக்கலாம். அவை நீந்தி உடலின் குறிப்பிட்ட இலக்கை அடைந்த பின்னர் ஒளியால் தூண்டி, மருந்தை வெளிவர வைக்கவும் முடியும் என்கிறார்கள்.
ஆக மனித உடலுக்குள் மலக்குகள் முதல் ஷைத்தான் வரை நுழைந்து செயலாக்கம் செய்வதை பகுத்தறிவாளர்கள் நம்பாவிட்டாலும், நவீன அறிவியலின் கண்டுப்பிடிப்பான நுண்துகள் ரோபாட் சென்று வருவதை நம்பித்தான் ஆக வேண்டும் .

## நவீன அறிவியலின் சாகசம் 2

( பறவையைக் கண்டான், புல்லட் ரயிலைப் படைத்தான்)

ஆண்டுதோறும் கிட்டத்தட்ட 1500 க்கும் மேற்பட்ட நிலநடுக்கங்கள் ஜப்பானில் உருவாகின்றன. இருப்பினும் இவைகளில் சில நிலநடுக்கங்கள் மட்டுமே வீரியம் கொண்ட அச்சுறுத்தும் நிலநடுக்கங்கள் ஆகும்.
எவ்வளவு பெரிய இயற்கை பேரிழப்பு ஏற்பட்டாலும், அதிலிருந்து மீளும் ஜப்பானியர்களின் கடின உழைப்பு,விடா முயற்சி மற்றும் நம்பிக்கை முதலிய ஆயுதங்கள் உலகிற்கே ஒரு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.
உலகில் பரப்பாக பேசப்படும் "ஷின்கான்சென்" என்னும் புல்லட் ரயில் .ஜப்பானிய மொழில் ஷின்கான்சென் என்றால் புதிய பெருந்தடம் .

1964-ஆம் ஆண்டு ஷின்கான்சென் (515.4 கி.மீ.) தொடங்கியது. பின் விரிவாக்கப்பட்டு, தற்போது 2,615.7 கி.மீ. நீளமும், அதிகபட்சமாக மணிக்கு 240–320 கி.மீ. வேகமும் கொண்டது. புல்லட் ரயில்களில் ஒரு நாளைக்கு தோராயமாக 6 கோடி பேர் அந்த ரயில்களின் சேவையில் பயணிக்கிறார்கள்.
தொடக்கத்தில் இந்த ரயில்கள் ஏகத்துக்கும் சத்தத்தை உண்டாக்கின. மின்சாரத்தால் இயங்கும் இந்த ரெயில்களில் மின்கம்பியை தொடும் அமைப்புகள் (அந்த அமைப்புகளுக்கு பான்டோகிராஃப் (pantograph) என்று பெயர் )
காற்றைக் கிழித்துக் கொண்டு போகும்போது, ஏகத்துக்கும் 'உஷ்' என்ற சத்தம் எழுப்பின. மணிக்கு 320 கிலோ மீட்டர் வேகம் எனில் அது பெரும் சத்தத்தோடு, ரெயிலின் ஆற்றலையும் சேர்த்து குறைக்கிறது .
அடுத்து சிக்கல் , அந்த ரெயில்கள் சுரங்கத்துக்குள் நுழையும் போது அந்த சுரங்கத்துக்குள் இருக்கும் காற்று அழுத்த ஆரம்பிக்கிறது. சாதாரண வேகமெனில் சுரங்கத்துக்குள் இருக்கும் காற்று சுரங்கத்தின் மறுபுறம் எளிதாக வெளியேறிவிடும்.
ஆனால் தலை தெறிக்க ஓடி வரும் இந்த ரயில் சுரங்கத்துக்குள் நுழைந்து காற்று வெளியேறும் வேகத்தை விட ரெயில் வேகமாக வெளியேறும்.அப்போது சப்தஒலி அலைகள் வெளியேற நேரம் கிடைக்காமல், அழுத்தப்படும். அதனால் சுரங்கத்தை விட்டு ரெயில் வெளியேறும்போது, பெரிய சத்தமாக கேட்கும்.
ரெயில்கள் சுரங்கத்துக்குள் பயணிக்கும்போது காற்றை அழுத்தும் பணியில் ரயிலின் ஆற்றல் மிக வேகமாக வீணாகிறது. சப்தஒலியை வரம்புக்குள் கொண்டு வரவும், ரயிலின் வேகம், திறனை அதிகரிக்கவும், ஆற்றலை மிச்சம் பிடிக்கவும் வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.
அந்த ரயில்வே துறையில் தொழில்நுட்ப மேம்பாட்டு பிரிவில் பொது மேலாளரான எய்ஜி நகாட்ஷுவுக்கு (Eiji Nakatsu) பல ஆண்டுகள் தொழில்நுட்பத் துறையில் பழுத்த அனுபவம் கொண்டவராகவும் ஒரு பறவை ஆர்வலராகவும் இருந்துள்ளார்.
அவர் தன்னுடைய குழுவோடு ஆய்வில் ஈடுபட்டு இயற்கையிலிருந்து மூன்று பறவைகளின் அமைப்புகளை ரயில் வடிவமைப்பில் பொருத்துகிறார்.
முதல் பறவை ஆந்தை. மரப்பொந்துகளில் அமர்ந்து குறுகுறுவென பார்க்கும் இந்த வினோத பறவைகளின் இருட்டில் பார்க்கும் திறன் பற்றி நமக்குத் தெரியும். மேலும் 270 டிகிரி அளவுக்கு தலையை திருப்ப கூடிய திறன் கொண்டவை.
ஆனால் அவற்றுக்கு இன்னொரு தனிச் சிறப்பும் உண்டு. இருளில் அமைதியான நேரத்தில் வேட்டையாடுவதால், இறக்கைகளை அடித்து பறக்கும் சத்தம் அந்த அமைதியான நேரத்தில் தன் இரை உயிரினத்திற்கு நன்றாக கேட்டு , எச்சரிக்கை தந்துவிடும். எனவே பிரத்யேக இறக்கை வடிவமைப்பால் , சத்தமே இல்லாமல் ஆந்தை பறக்கும்.
பிற பறவைகள் பறக்கும் போது, காற்றில் சுழல்கள் உண்டாவதுபோல், ஆந்தை பறக்கும்போது காற்றில் கழல்கள் உண்டாவது இல்லை. அதன் இறகு வடிவமைப்பை அவர் ஷின்கான்சென் புல்லட் ரயிலின் மின்சாரக் கம்பிகளை தொடும் பகுதிக்கு அளிக்கிறார்.
அடுத்த பறவை அடில் பென்குயின் (Adele penguin) வளைந்த உடலமைப்பைக் கொண்ட இந்தப் பறவை அதிக உராய்வு இல்லாமல் பனியில் சறுக்கிக் கொண்டு போகும். அடில் பென்குயின்களைப் போன்று வளைவுகள் கொண்ட அமைப்பை ரயிலோடு மின்கம்பிகளைத் தொடும் அமைப்பு பொருந்தும் இடத்திற்கு அளிக்கிறார்.
கடைசிப் பறவைதான், சுரங்கத்துக்குள் நுழைந்து வரும்போது, வரும் சிக்கலை தீர்த்தது. அது மீன்கொத்திப் பறவை. பிற பறவைகளைப் போல் அல்லாமல் அதன் அலகு அமைப்பு சற்றே வேறுபட்டது. காற்றிலிருந்து தண்ணீருக்குள் பெரிய அதிர்வுகளை ஏற்படுத்தாமல், பாய்ந்து மீனைக் கொத்திக் கொண்டு வெளிவரும்.
தொபுக்கடீர் என்று உள்ளே குதித்தால் மீனெல்லாம் ஓடிப் போய்விடும் .அதனால், தண்ணீருக்குள் சத்தமின்றி நுழைய அவை தங்கள் அலகுகளால் நீரைக் கிழித்துப் பாய்கின்றன.
எனவே அதன் அலகு வடிவமைப்பை ஷின்கான்சென் ரயிலுக்கு அளித்தார் .
ஆந்தை, அடியில் பென்குயின் , மீன்கொத்தி மூன்றைப் போன்று வடிவமைக்கப்பட்ட புதிய ஷின்கான்சென் புல்லட் ரயில் 10 சதவீதம் அதிக வேகமாகவும், 15 சதவீதம் குறைவான ஆற்றலே கொண்டும் செயல்பட்டது.
இப்படி இயற்கையிடமிருந்து வடிவங்களை எடுத்து நாம் பயன்படுத்துவதை பயோமிமிக்ரி (Biomimicry ) என்கிறார்கள்

பொழுதுபோக்காகப் பறவைகளைக் கவனித்தது நகாட்ஷுவுக்கு தன் வேலையில் வந்த பெரிய சிக்கலை தீர்க்க உதவியது.
அன்றி, நீங்கள் என் கட்டளைப்படி களிமண்ணால் பறவையின் உருவத்தைப் போல் செய்து, அதில் நீங்கள் (ஈஸா) ஊதிய சமயத்தில், அது என் கட்டளையைக் கொண்டு பறவையானதை (நினைத்துப் பாருங்கள்) (குர்ஆன் : 5:110)
நபி ஈஸா (அலை) அவர்கள் களிமண்ணால் வெளவால் செய்து தன் ரூஹை ஊதிய போது , அது பறவைப் போல் பறந்தது.
நகாட்ஷு பறவைகளின் வடிவமைப்பை ரயிலில் பயன்படுத்த தன் அறிவுத் திறனை செலுத்திய போது அது புல்லட் ரயிலாக பாய்ந்தது .

## நவீன அறிவியலின் சாகசம் 3

(ஜீவராசிகளின் உரையாடல்கள் )




"தேனீக்களின் நடனம் கேள்விப்பட்டிருக்கிறீர்களா...? ''
"நடனமா.... பறக்கத்தானே செய்யும்...?''
"ஆமா... பறக்கும் போதே நடனமாடும் , நடனமாடிக் கொண்டே பறக்கும்... முன்னே அடையாளம் காட்டி செல்லும் தேனீக்கள், சூரியன் இருக்கும் திசையை அறிவிக்க ஒரு நடனம்...மலர்கள் இருக்கும் இடத்தைக் காட்ட ஒரு நடனம்... இன்னும் கூடு இருக்கும் இடத்தைக் காட்ட ஒரு நடனம் என்று நடனமாடியே தகவல் சொல்லும்.
தேனீ நடனம் கிமு 330 ஆம் ஆண்டிலேயே அரிஸ்டாட்டிலால் கவனிக்கப்பட்டு குறிப்பிடப்பட்டது.
ஜெர்மனியின் முனிச்சில் உள்ள விலங்கியல் பேராசிரியரான கார்ல் வான் ஃபிரிஷ், இந்த நடன மொழியில் தனது அற்புதமான ஆராய்ச்சிக்காக 1973 இல் நோபல் பரிசைப் பெற்றார்.
1967 இல் வெளியிடப்பட்ட அவரது புத்தகமான " தி டான்ஸ் லாங்குவேஜ் அண்ட் ஓரியன்டேஷன் ஆஃப் பீஸ் " , தேனீ தொடர்பு பற்றிய ஐம்பது ஆண்டுகால ஆராய்ச்சியை முன்வைக்கிறது. படிக்கும் போதே உங்களைப் பறக்கத் தூண்டும் புத்தகம் அது.

தேனீக்கள் மட்டுமல்ல, மீன்கள் கூட பேசிக் கொள்கிறது.கோரஸாக பாடுகிறது .அவைகள் இருளில் வேட்டையாடும்போது, தங்கள் துணையை ஈர்க்க அல்லது ஒன்றுக்கொன்று கண்காணிக்க அவை கோரஸாக பாடுகின்றன.

ஆஸ்திரேலியாவின் பெர்த்தில் உள்ள கர்டின் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர்கள், மேற்கு ஆஸ்திரேலிய கடற்கரையிலிருந்து அந்தி மற்றும் விடியற்காலையில் ஏழு தனித்துவமான மீன் கோரஸ் பாடல்கள் ஒலித்ததைப் பதிவு செய்துள்ளனர். கோரஸ் பாடலைக் கேட்கிறீர்களா ?
திமிலங்கம் பற்றி சற்று விரிவாக பார்ப்போம்

யூனுஸ் நபியின் சரித்திரத்தைப் படித்திருப்பீர்கள். அல்லாஹ் அவரை சிலை வணக்கத்தில் ஈடுபட்டுக்கொண்டிருந்த சுமார் நூராயிரம் பேரைக்கொண்ட நீனவா என்ற நகருக்கு நபியாக அனுப்பினான். அம்மக்கள் அவரது போதனையை ஏற்கவில்லை என்ற கவலையில் அவ்வூரை விட்டு அவர் கடலோரம் நடந்துசென்று ஒரு கப்பலில் ஏறினார். கப்பலில் ஆட்களின் எண்ணிக்கை அதிகம் என்பதால் அவர் கடலில் குதிக்கவேண்டியதாயிற்று. கடலில் குதித்ததும் ஒரு பெரிய மீன் அவரை விழுங்கியது. நாட்பது நாட்கள் அதன் வயிற்றுக்குள் அல்லாஹ் அவரை வைத்திருந்தான்.
அவர் தொடர்ந்தும் அல்லாஹ்வைத் துதி செய்து கொண்டிருந்ததால் அல்லாஹ்வின் கட்டளையால் அம்மீன் அவரை கரையிலே தள்ளியது. இவ்வாறு யூனுஸ் நபியின் சரித்திரத்தை அல்லாஹ் திருமறையில் பல இடங்களில் (37:141) குறிப்பிடுகின்றான்.
ஒரு மனிதனையே விழுங்கி உடலில் வைத்திருக்குமளவு மீன் என்றால் அனேகமாக அது திமிங்கிலமாகத்தான் இருக்கவேண்டும் என்பது அறிஞர்களின் கருத்து. எனவே அல்லாஹ்வின் இவ் அற்புத திமிங்கிலங்களின் வாழ்க்கை முறைகளைப் பற்றி சற்று அவதானிப்போம்.

உலகிலே உள்ள நீர் வாழ், நில வாழ் உயிர்கள் அனைத்துடனும் ஒப்பிடுகையில் மிகப் பெரிய உயிரினம் நீலத் திமிங்கிலம்தான் (Blue Whale). இது சுமார் 100 அடி நீளமும் 150 டன் எடையும் கொண்டதாக இருக்கும்.
நீலத் திமிங்கிலத்தின் நாக்கில் 50 பேர் உட்காரக்கூடிய அளவு இடமிருக்குமாம். இத்தகைய திமிங்கிலங்கள் மிகவும் சாதுவான குணம் கொண்டவை. பொதுவாக இவை 70 முதல் 100 ஆண்டுகள் வரை வாழக்கூடியவை.
பொதுவாக நாம் திமிங்கிலங்களையும் மீன்கள் என்றே கருதுகின்றோம். ஆனால் திமிங்கிலம் மீன் வகையைச் சார்ந்ததல்ல. மீன்களுக்கும் திமிங்கிலங்களுக்கும் நிறைய வேறுபாடுகள் காணப்படுகின்றன. திமிங்கிலம் வெப்ப இரத்தம்கொண்ட பிராணி. ஆனால் மீன்கள் குளிர் இரத்தம்கொண்ட பிராணி.
மீன்கள் கடலில் பாறை இடுக்குகளில் முட்டைகளை இட்டு குஞ்சு பொறிக்கின்றன. ஆனால் திமிங்கிலம் குட்டி ஈன்று அதற்குப் பால் கொடுத்து வளர்க்கின்றது.

திமிங்கிலத்தைப் பொறுத்தவரை அதன் உடலில் செதில்கள் காணப்படுவதில்லை. தோலும், மயிர்களும் அதன் உடலில் இருக்கும். ஆனால் மீன்களின் உடலில் செதில்கள் நிறைந்திருப்பதைக் காணலாம். இவ்வாறான பல்வேறு வித்தியாசங்கள் திமிங்கிலங்களை மீன்களிலிருந்து பிரித்துக்காட்டுகின்றன.
திமிங்கிலம் நுரையீரல் மூலம் சுவாசிக்கின்றது. மீன்களோ தமது இருபக்கமும் உள்ள செவுள்கள் (Gill) மூலம் சுவாசிக்கின்றன.
அவை மனிதனைப்போன்று நுரையீரலைக் கொண்ட பிராணிகள் என்பதால் எப்பொழுதெல்லாம் சுவாசிக்க வேண்டுமோ அப்பொழுதெல்லாம் நீரின் மேற்பரப்புக்கு வந்து காற்றை உள்ளிழுத்துச் செல்லவேண்டும்.
திமிங்கிலங்களின் நுரையீரல் மிகவும் பெரிதாக இருப்பதால் ஒரே தடவையில் பெருமளவிலான காற்றை உட்சேமிக்க முடியும்.
மேலும் இவைகளின் தலையின் மேற்பரப்பில் அமைந்துள்ள Blow hole என்ற சுவாசக் குழாய் அமைப்பு நுரையீரலுடன் நேரடியாக இணைக்கப்பட்டுள்ளதாலும் மற்ற பாலுட்டிகளைப் போன்று தொண்டையின் மூலம் சுவாசம் செல்ல வேண்டிய அமைப்பு இல்லை.
மற்ற விலங்குகளுக்குப் போலல்லாது இவற்றின் மூக்கை (Blow hole) அல்லாஹ் தலையின் மேற்பகுதியில் வைத்துள்ளான். அவை நீரின் மேல் மட்டத்திற்கு வந்து தேவையான அளவு காற்றை வாயாலும், தலைப்பகுதியில் அமைந்துள்ள மூக்கின் வழியாகவும் உள்ளிழுத்துக்கொண்டு நீருக்கடியில் சென்றுவிடுகின்றன. இவ்வாறு ஒருமுறை காற்றை நுரையீரலில் நிரப்பிக்கொள்ளும் திமிங்கிலங்கள் 7,000 அடி வரை நீரின் ஆழத்திற்கு சென்று இரை தேடும் வல்லமை பெற்றவை.

இத்தகைய சிறப்பமைவுக்கு மற்றுமொரு காரணமும் சொல்லப்படுகிறது. நாம் காற்றை சுவாசிக்கும்போது, அதில் இருந்து 15 சதவிகித ஆக்ஸிஜனை மட்டுமே நமது நுரையீரல் எடுத்துக்கொள்கிறது, ஆனால் திமிங்கிலங்கள், உள்ளிழுக்கும் காற்றில் இருந்து 90 சதவிகித ஆக்ஸிஜனை எடுத்துக் கொள்ளும் திறமை பெற்றிருப்பதே இவ்வகையான நீண்ட நேர மூச்சடக்கும் திறமைக்கு காரணமாகும். சுபஹானல்லாஹ்!
சுவாசிப்பதற்காக இவை தண்ணீரின் மேற்பரப்பிற்கு வரும் போது ஒரு வகையான பாடலைப்பாடிக்கொண்டு பெரும் சப்தத்தோடு தங்கள் தலையின் மேற்பரப்பில் அமைந்த சுவாசக் குழாய் (Blow hole) மூலம் தண்ணீரை 9 மீட்டர் உயரம் வரை நீர் கம்பம் (Water Spout) போல பீய்ச்சி அடிக்கின்றன.
மீன்கள் கடலில் பாறை இடுக்குகளில் முட்டைகளை இட்டு குஞ்சு பொறிக்கின்றன. ஆனால் திமிங்கிலம் குட்டி ஈன்று அதற்குப் பால் கொடுத்து வளர்க்கின்றது. திமிங்கிலத்தைப் பொறுத்தவரை அதன் உடலில் செதில்கள் காணப்படுவதில்லை. தோலும், மயிர்களும் அதன் உடலில் இருக்கும். ஆனால் மீன்களின் உடலில் செதில்கள்

நிறைந்திருப்பதைக் காணலாம். இவ்வாறான பல்வேறு வித்தியாசங்கள் திமிங்கிலங்களை மீன்களிலிருந்து பிரித்துக்காட்டுகின்றன.

நீரில் ஒலியலைகள் மிக வேகமாகப் பரவ வல்லவை. எனவே திமிங்கிலங்கள் ஒலி சமிஞ்ஞைகளை நீரில் பரவவிட்டு ஒன்றை ஒன்று தொடர்பு கொள்கின்றன.
ஒலி எழுப்பும்போது இவை வாயை மூடி மூக்குப் பகுதியால் அதிர்வெண் கூடிய ஒலியலைகளை எழுப்புகின்றன. இந்த ஒலியை நீரில் பல ஆயிரம் கிலோ மீட்டர்களுக்கு அப்பால் உள்ள மற்றைய திமிங்கிலங்களால் கூட உணர முடியுமாக இருக்கும். இந்த ஒலியை எம்மாலும் கேட்க முடியும். இது அழகான பாடல் போன்று
**இனிமையாக**
, வித்தியாசமாக இருக்கும்.
இனப்பெருக்க காலங்களில் ஆண் திமிங்கிலங்கள் நீண்ட இசையுடன் கூடிய சப்தங்களை தொடர்ச்சியாக எழுப்புகின்றன. இந்த இசையொலி அலைகளால் கவரப்பட்ட பெண் திமிங்கிலங்கள், துல்லியமாக ஆண் திமிங்கிலத்தின் இருப்பிடத்தை கண்டறிந்து வருகின்றன.

கருக்கொண்ட பெண் திமிங்கிலங்களின் கர்ப்ப காலம் 12 மாதம் முதல் 17 மாதங்கள் வரை ஆகும். இது இனத்திற்கு ஏற்ப வித்தியாசப்படும். பிரசவ காலத்தில் மற்ற திமிங்கிலங்கள் கர்ப்பிணியை சூழ்ந்து கொண்டு செவிலித் தாயார் போன்று உதவுகின்றன.
யூனுஸ் நபியை மீன் விழுங்கியபோது அவர் “லாஇலாஹ இல்லா அன்த சுப்ஹானக இன்னீ குன்து மினழ் ழாலிமீன்” என்று அல்லாஹ்வை துதிசெய்துகொண்டே இருந்தார். இவ்வாறு மட்டும் தஸ்பீஹ் செய்யாதிருந்திருந்தால் மறுமை நாள் வரை அந்த மீனின் வயிற்றிலேயே அவரை வைத்திருப்பேன் என்று அல்லாஹ் திருமறையில் கூறுகின்றான்.
“ஆனால் அவர் (மீன் வயிற்றினுள்) இறைவனைத் துதிசெய்து - தஸ்பீஹு செய்து – கொண்டு இருக்காவிட்டால், (மறுமையில் அவர்) எழுப்பப்படும் நாள்வரை, அதன் வயிற்றிலேயே அவரை தங்கியிருந்திருப்பார்” (37:144)
அவ்வாறு நடந்திருந்தால் ஒருவேலை யூனுஸ் நபியின் மீன் இன்றும் கடலில் எங்கோ ஒரு இடத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும். அல்லாஹ்வே மிகப்பெரியவன்! எதனையும் செய்யக் கூடியவன்!

## மறை கூறும் மானிடவியல் 15
( கனவெல்லாம் நனவானது )



சிரியாவில் பாபல் நகரம். பெரும் பெரும் கோவில் கொண்ட 5000 சிலைகள் உள்ள பாபல் நகரம். இரண்டரை லட்சம் மக்கள் தொகை கொண்ட பெரும் நகரம். இந்தியாவோடும் வாணிபத்தொடர்பு கொண்ட நகரம்.தேவதாசிகள் முறையும் அவர்களிடம் நிலவி வந்தது. (அப்துற் -றஹீம் நபிமார்கள் வரலாறு பக்கம் 338)
நம்ரூத் என்ற சொல் மரத் என்ற ஹீப்ரு சொல்லிலிருந்து பிறந்தது என்றும், அதன் பொருள் இறைவனுக்கு எதிராக புரட்சி செய்தவன் என்று கூறுகின்றனர். 'நமாரா' என்றால் பெண் புலி என்றும் புலிப்பால் குடித்து வளர்ந்ததனால் அவனுக்கு அப்பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர்.

நம்ரூதின் தந்தையாகிய கன்ஆன் ஒரு வித்தியாசமான பயங்கர தீயக் கனவுக் கண்டு, அதைப் பற்றிய விபரத்தை கனவுகளின் விளக்கம் சொல்லும் ஜோதிடர்களிடம் சொல்லி பலனை கேட்டான்.
கனவின் பொருள் : தன் மகன் தன்னைக் கொல்வான் என்பதை அறிந்து, அவன் தன் மகனைக் கொல்ல எண்ணிதாகவும், அவனுடைய மனைவி பேரரழகி ஸுல்கா அக்குழந்தையை ஓர் ஆட்டு இடையனிடம் ரகசியமாக வளர்க்க ஒப்படைத்ததாகவும்,
கறுப்பு நிறமும் தட்டை மூக்கும் வாய்க்கப் பெற்று இருந்த அக்குழந்தை காட்டு ஹைவான் முகஅம்சம் கொண்டதாகவும் இருந்ததைக் கண்டு, ஆட்டு இடையனின் ஆடுகள் கிடையை விட்டு விரைந்து ஓடின.
பார்த்தாலே பயம் ஏற்படும் அக்குழந்தையை அந்த இடையனின் மனைவி, இடையனுக்குத் தெரியாமல் குழந்தையை ஆற்றிலே தூக்கி எறிந்து விட்டதாகவும்,கரையில் ஒதுங்கிய அக்குழந்தைக்கு ஒரு புலி எடுத்து குகையில் வைத்து வளர்த்ததாகவும்,

பெரிய மனிதனானதும், கொள்ளைக் கூட்டத்தின் தலைவனாகி தன் தந்தையென அறியாது அவனைக் கொன்று, பேரரழகியான அவன் மனைவியை அதாவது தன் தாயையே மணம் முடித்தான் என்றும் பின்னர் பாபல் நாட்டின் மன்னனான். (ஆதாரம்: ஆங்கில இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் )
நம்ரூத் , ஹாரூத் , மாரூத் ஆகியோரிடம் சென்று மாந்திரீக வித்தைகளைக் கற்றான். பாபல் நகரில் மாரூத்தின் நினைவாக ஒரு கோயிலையும் கட்டினான்.

வாள் வித்தையிலும், மல்யுத்தத்திலும் தேர்ச்சிப் பெற்றான் என்றும் இப்ராஹீம் (அலை) அவர்களின் தந்தை ஆஸர் அவனுக்கு ஒப்பற்ற மாளிகையை நிர்மாணித்துக் கொடுத்தார் என்றும் அதிலுள்ள பறவைகளின் சிலைகள் தாமாகவே பாடின என்றும் ஒரு வரலாறு உண்டு (கிதாப் : தஃப்ரீக்குல் அஸ்கியா ஃபில் அஹ்வாவில் அன்பியா )
நம்ரூத்தும் ஒரு கனவு ஒன்றைக் கண்டான் .அதில் ஷாம் நாட்டில் இருந்து ஒரு நெருப்பு வெளியாகி மிஸ்ரின் மீது பாய்ந்து, அங்கு வீடுகள், கோட்டை , கொத்தளங்கள் ஆகியவற்றை சுற்றி வளைத்துக் கொண்டது போன்று கனவு ஒன்றை கண்டான் .
அக்கனவை கனவு நிமித்தகர்களான ஜோதிடர்களின் தலைவரும், நட்சத்திர கலையின் கணித நூல் ஆய்வாளருமான 'காலிக் பின் அஸ்' என்பவரிடம் கூற, அதற்கு அவர் , " பனீ இஸ்ராயீல்களில் ஒருவர் தோன்றி, நும் ஆட்சிக்கு முடிவு காண்பார்" என்று கூறினார் .

நம்ரூத் உடனே பாபல் நகரை நிர்மாணிக்க தனக்கு உறுதுணையாக இருந்த கூசுவின் வழித்தோன்றல்களே காரணமானவர்கள் என கருதி, அவர்களை இரவோடு இரவாக அவர்கள் அனைவரையும் கருவோடு அழித்து விடுமாறு கட்டளை இட்டான்.
நம்ரூத்,காலிக் பின் அஸ்ஸை அழைத்து , " இப்போது அவன் அழிந்து விட்டானா ? " என்று கேட்க,
"அவன் இன்று இரவு தானே தாயின் வயிற்றில் கருவுற இருக்கிறான் "
நம்ரூத் உடனடியாக "இன்று இரவு பெண்களை தவிர்த்து, ஆண்கள் அத்தனை பேரும் பாபல் நகரை விட்டு வெளியேறி விடவேண்டும்" என்னும் ஆணை பிறந்தது.
பாபல் நகரத்தின் அத்தனை ஆண்களையும் பின்தொடர்ந்து நம்ரூத்தும் தன் அமைச்சர்களுடன் பாபல் நகருக்கு வெளியே இருந்த திறந்த வெளியில் இரவைக் கழிப்பதற்காக தன் அரண்மனையை விட்டு வெளியேறினான்.
அன்றிரவு காமம் தடை செய்யப்பட்டு , இச்சைகள் தீர்க்கப்படாத வெற்றிரவாக கழிந்து கொண்டிருந்தது.
பாபல் நகருக்குள் யாரேனும் ஆண்கள் இருக்கிறார்களா என்பதை உளவறிந்து வர தம்முடைய ஆஸ்தான அமைச்சர் ஆஸரை அனுப்பி வைத்தான் நம்ரூத்.
ஆஸர் பாபல் நகர் முழுவதும் சுற்றிவிட்டு, நித்திரை களைப்போடு சற்று இளைப்பாற தன் வீட்டிற்குள் நுழைந்தார்.அங்கு தன் மனைவி உஷா எப்போதும் இல்லாத பேரழகோடு உறங்குவதைக் கண்ணுற்றதும், காமம் தலைக்கேறியது.
வந்த காரியத்தை மறந்து, மற்ற காரியத்தை வெகு விரைவாக முடித்துக்கொண்டு திறந்த வெளிக்கு அவரும் வந்து சேர்ந்தார் .

இரவின் கடைசிப் பொழுதில் கணித நூல் **ஜோதிடர் காலித் பின் அஸ்**, வீறிற்றார்
"மன்னாதி மன்னா ! நாம் மோசம் போய் விட்டோம். விண்மீன்களின் தோற்றத்தையும், வானியல் நூல்களையும் தொடர்பு கொண்டு ஆராய்ந்து கொண்டிருக்கும் போதே, விண்ணில் ஜென்ம நட்சத்திரம் தோன்றி,அது உச்சத்தை அடைந்து விட்டபடியால், அக்குழந்தை இன்று இரவே ஜனித்து விட்டது " என்றார்.
நம்ரூத்தின் கோபத்திற்கு அளவே இல்லை. இரவு இச்சை தீர்த்த அந்த கறுப்பு ஆடு யாராக இருக்கும் ? அவன் புத்திக்குத் தெரியவில்லை.
அவ்வாண்டு பாபல் நகரில் பிறந்த ஏழாயிரம் ஆண் பச்சிளம் குழந்தைகளின் தலைகளெல்லாம் சீவப்பட்டது .
தெருக்களில் ரத்த ஆறு ஓடியது. வீடுகளில் அன்னையர்களின் ஓலம் வானைப் பிளந்தது.
உஷாவும் கருவுற்றாள். தாம் கருவுற்றதை அறிந்ததும் உள்ளம் துணுக்குற்றாள்.
கர்ப்பம் தரித்து நான்காவது மாதத்தில் உஷா கனவொன்று கண்டாள் " அதில் ஓர் ஒளிப்பிழம்பு விண்ணிலிருந்து கீழே இறங்கி வந்து, மண்ணெல்லாம் உலா வந்து , அவளின் மடிமீது வந்து அமர்ந்தது. அவள் திடுக்குற்றாள்.

இந்த கனவை தன் கணவரிடம் கூற, தான் கருவுற்றிருப்பதையும் காதோடு காதாக கூறினாள்.அதுகேட்டு ஆஸர் திடுக்கிட்டார். பேறுகாலம் வரை யாருக்கும் தெரியாமல் மிகவும் ரகசியமாக உஷாவை இருக்க சொன்னார்.
பின் தம் மனைவியை இரவோடு இரவாக யாருக்கும் தெரியாமல் கூட்டிக் கொண்டு, இப்போதைய கஃபாவுக்கும், பஸராவுக்கு நடுவில் இருந்த "வர்க்கர் " என்ற இடத்திற்கு அழைத்துச் சென்று அங்கே விட்டுவிட்டு பாபல் வந்து சேர்ந்தார்.
இங்குதான் இப்ராஹிம் (அலை) பிறந்ததார்கள் என்றும், பருவம் எய்தும்வரை அவர்கள் அதை விட்டு அகலவில்லை என்றும் வாக்கிதி கூறுகிறார்.
இதனால்தானோ என்னவோ இப்ராஹிம் (அலை) அவர்கள் தன் இரண்டாம் தாரமான ஹாஜிரா (அலை) அவர்களையும், ஈன்றெடுத்த பச்சிளம் குழந்தை இஸ்மாயில் (அலை) அவர்களையும் இன்றைய கஃபா இருக்கும் பாரான் பள்ளத்தாக்கில் விட்டு விட்டு சிரியா வந்தார்களோ ? அல்லாஹ்வே அறிவான்

**மறை கூறும் மானிடவியல் 16**
( கனவும் நனவும் )



நபி ஹூத் (அலை) அவர்கள் ஏமன் நாட்டின் மேற்கு பகுதிலிருந்து இராக் வரை வாழ்ந்த ஆது மக்கள் சமுதாயத்திற்கு நபியாக இறைவன் அனுப்பினான்.
ஆதுக்களின் ஒரு கோட்டையில் வெல்ஸஸ்டட் ஜேம்ஸ் என்ற ஆங்கிலேயர் கண்டெடுத்த கல்வெட்டில், "நாங்கள் இக்கோட்டையில் வாழ்ந்தோம். அதுவும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தோம். நபி ஹூத் (அலை) அவர்களின் சட்டதிட்டங்களைப் பின்பற்றினோம். நபிமார்களின் அற்புதங்களையும், மறுமையும் நம்பினோம் "என்ற வாசகங்கள் பொறிக்கப்பட்டுள்ளதைக் காட்டுகிறார்.
நுகைல் இப்னு கலீ என்பவர் ஓரிறை வணக்கத்தை மேற்கொண்டு, நபி ஹூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பின்பற்றியவர் .
அவர் ஒருநாள் அயர்ந்து உறங்கும் பொழுது ஒரு கனவு கண்டார் . அதிலே ஓர் அசரீரி, " நுகைலே ! தலையை உயர்த்தி வானத்தைப் பாரும் " என்று முழங்கியது.
அவர் வானத்தை அண்ணாந்துப் பார்த்தார் மலை அளவு காரிருள் அதனை கவ்விக்கொண்டு இருந்தது. " இதுதான் ஆது கூட்டத்தினரிடம் அனுப்பப்படப் போகிற இறைவனின் வேதனை" என்று மீண்டும் ஓர் அசரீரி முழங்கியது.

திடுக்கிட்டு விழித்தெழுந்த நுகைல் வைகறையில், நபி ஹூத் (அலை) அவர்களை அணுகி, சென்ற இரவு தான் கண்ட கனவை எடுத்துரைத்தார் .
அப்பொழுது ஹூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவரை நோக்கி "நுகைலே..! இக்கனவை நீர் உம்முடைய கூட்டத்தினரிடம் எடுத்துரைப்பது உன் மீது கடமையாகும் " என்று கூறினார்.
கடமை உணர்ச்சியால் உந்தப்பட்டு, நுகைல் தம் கூட்டத்தினரை அணுகி தான் முந்திய இரவு கண்ட கனவை அவர்களிடம் எடுத்துரைத்தார். அதுகேட்ட அவர்கள் நகைத்தார்கள். "இவருக்கும் அவரைப் பிடித்த பைத்தியம் பிடித்துவிட்டது போல் இருக்கிறது " என்று கூறி சிரித்தார்கள். சிரித்ததோடு மட்டுமல்லாது அவரை நையப்புடைக்கவும் செய்தார்கள்.
இந்த விஷயம் கேள்விப்பட்ட மஸீத் இப்னு ஷஹீத் என்பவர் ஹூத் (அலை) அவர்களை அணுகி, " நான் உம்மிடம் வந்துள்ள நோக்கத்தை நீர் கூறுவீரானால், நான் உம்மை இறைவனுடைய திருத்தூதர் என்று ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொன்னார் .
அது கேட்ட ஹூத் (அலை) அவர்கள் புன்முறுவலை உதிர்ந்து விட்டு, " இதே நீர் சென்ற இரவு உம்முடைய மனைவியுடன் மருவினீர். அவள் அப்பொழுது தன் வயிற்றில் கருத்தரித்து விட்டதுபோல் உணர்வதாக கூறினாள்.

அதற்கு நீர் நாளை நான் ஹூதுவிடம் செல்வேன். அவர் இந்த மறைவான செய்தியை என்னிடம் கூறின் அவரை நான் இறைத்தூதர் என ஏற்றுக் கொள்வேன் என்று கூறினீர்கள் அல்லவா அதனை நீர் என்னிடம் சோதிப்பதற்காகவே இப்போது வந்து உள்ளீர்கள்" என்று கூறினார்கள்.
அடுத்த கணம் மஸீத் , ஹூத் (அலை) அவர்களின் அவர்களின் திருக்கரம் பற்றி ஓரிறை வணக்கத்தை மேற்கொண்டார்.
அதன்பின் மஸீத், நபியவர்களை நோக்கி, " இறைவனின் திருத்தூதரே..! என் மனைவி உண்மையில் கருவுற்றனளோ ?" என்று வினவினார் .
" ஆம். கருவுற்றாள்தான். இரட்டை குழந்தைகளை ஈன்றெடுப்பாள். அதன்பின் 10 சூழல்களிலே இரட்டை இரட்டையாக 20 குழந்தைகளை ஈன்றெடுப்பாள். அவர்கள் அனைவரும் ஓரிறை வணக்கத்தை மேற்கொள்வார்." என்று கூறினார்கள் .
அது கேட்டு பெரிதும் மகிழ்ந்த மஸீத் தன் மனைவியை அணுகி நடந்த விவரத்தை எடுத்துரைத்தார் அவரின் மனைவியும் அக்கணமே ஓரிறை வணக்கத்தை மேற்கொண்டார்.
நுகைல் இப்னு கலீ என்பவர் கனவில் கண்ட உண்மையை எடுத்துரைத்த போது, அடியும் உதையும் பெற்றார் .
மஸீத் இப்னு ஷஹீத் என்பவர் நனவில் நடந்த மறைவான செய்தியை நபியவர்களிடம் சோதிக்க கேட்டபோது ஈமானைப் பெற்றார்.
மேலும் ஒரு தகவல் ...
யமன் தேசத்திலுள்ள ஹள்ரமவுத் என்ற பகுதியிலிருந்து அலீ(ரழி) அவர்களைச் சந்திக்க ஒரு மனிதர் வந்தார். அவர்களிடம் அலீ(ரலி) அவர்கள்,
" உங்கள் ஊரில் சிவப்பு நிற மண்மேடு மற்றும் மணல் குன்று இலந்தை மரம், சுராக் மரம் ஆகியன இருக்குமே; அதன் அருகில் உத்தமன் என்ற பெயருடைய ஓடை ஒன்று ஓடுமே; அதனை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? என்று கேட்டார்கள்.
அந்த மனிதர் " ஆம், நான் பார்த்திருக்கிறேன். நீங்களும் பார்த்தது மாதிரியே கேட்கிறீர்களே?" என்று கேட்டார்.
அதற்கு அலீ(ரழி) அவர்கள். " அங்கு தானே ஹூத் (அலை) அவர்களின் மண்ணறை உள்ளது" என்றார்கள்,
உடனே நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?" என்றதும்,
அலீ(ரழி) அவர்கள் "இல்லை இவ்வாறு நான் கேள்விப்பட்டேன்" என்றார்கள்.
( இந்தக் குறிப்பு இப்னு ஜரீரில் இடம் பெற்றுள்ளது )

**மறை கூறும் மானிடவியல் 17**
(வானத்தில் இறைவன் இருக்கிறானா ? )



நெருப்புக் குண்டத்திலிருந்து இப்ராஹீமை காப்பாற்றிய இப்ராஹீமின் இறைவனை எவ்வாறாவது பார்த்து வரவேண்டுமென்று நம்ரூது எண்ணினான். அதுபற்றி அவன் தன் பாபல் நகர அமைச்சர்களுடன் ஆலோசனை கலந்தான் "விண் ஏறிச்சென்று அவனைப் பார்த்துவர மண்ணில் எவராலும் இயலாது" என்று அவர்கள் கூறினர்கள்.
"என்னால் அது இயலும். நான் எல்லாம் வல்லவன். அவனை பார்த்து வருவதோடு மட்டுமல்லாது அவனிடமிருந்து விண்ணையும், விண்ணாட்சியையும் பிடிங்கிக் கொண்டு வருவேன்"
அதன்பின் 'கைக்காஸ்' என்ற கட்டடக்கலை வல்லுநனை அழைத்து வரச்செய்து 5000 அடி உயரத்தில் விண்ணையும் உராயும் வண்ணம் ஒரு கோபுரத்தை எழுப்புமாறு ஆணையிட்டான்.
வான் கோபுரத்தை எழுப்புவதற்கான வேலை துவக்கப்பட்டது. கோபுரம் நொடிக்கு நொடி விண்ணை நோக்கி எழும்பிக் கொண்டிருந்தது. இனிமேல் இம்மி அளவும் எழுப்ப இயலாது, எழுப்பினால், எல்லாம் கீழே வீழ்ந்து விடும் என்ற நிலை ஏற்படும் வரையில் அது எழுப்பப்பட்டது.

கோபுர வேலை நிறைவு பெற்றதும் அதற்கு 'மிஜ்தல்' என்று பெயரிட்டான் நம்ரூத்.
இதன்பின் இரண்டு ஆண்டுகளாக நம்ரூத் நான்கு கழுகுகளை வளர்த்தான். அவற்றிக்கு ஒவ்வொரு நாளும் இறைச்சியும் மதுவும் அளித்து அவற்றை கொழுக்க வைத்தான். இனிமேல் அவை கொழுப்பதற்கு இடம் இல்லை.

கொழுத்தால் அது வெடித்து விடும் என்ற நிலை ஏற்படும் வரை அவற்றை கொழுக்க வளர்த்தான்.கழுகுகள் மெசபடோமியா நாகரிகத்தில் தனிச்சிறப்புப் பெற்றது.
அதன்பின் இருவர் வசதியாயிருக்கும் அளவிற்கு ஒரு பெட்டி செய்யுமாறு அவன் பணித்தான். அதற்கு மேலாக ஒரு திறப்பும், கீழாக ஒரு திறப்பும் அமைக்குமாறு உத்தரவிட்டான். அவ்வாறே பெட்டியும் செய்தாகிவிட்டது .
பின்னர் அவன் அப்பெட்டியை கொண்டு சென்று கோபுரத்தின் உச்சியில் வைக்குமாறு கட்டளையிட்டான். அதன் நான்கு மூலைகளிலும் நான்கு கம்பங்கள் நிறுவப்பட்டு, அவற்றில் இறைச்சித் துண்டங்கள் கொழுவப்பட்டன. இறைச்சியும் மதுவும் அளித்து வளர்க்கப்பட்ட அந்த நான்கு கழுகுகளும் இரண்டு நாட்கள் தண்ணீர் கூட அளிக்கப்படாது கூட்டிற்குள் பட்டனி போடப்பட்டது

மூன்றாவது நாள் காலையில் நம்ரூதும் அவனுடைய நண்பன் ஒருவனும் பெட்டிக்குள் புகுந்து கதவை தாழிட்டுக் கொண்டனர் அடுத்த கணம் கழுகு கூட்டின் கதவு திறக்கப்பட்டது.
திறந்ததும் வெளியே பாய்ந்த கழுகுகள் தம்முன் இறைச்சி துண்டங்கள் கழியில் கொழுவப்பட்டிருப்பதைக் கண்டதும், அவற்றின் மீது ஒரே பாய்ச்சலாக பாய்ந்து, அவற்றைத் தூக்கிக் கொண்டு அவற்றைத் தின்பதற்காக உயரப் பறந்தன. அத்துடன் சேர்ந்து பெட்டியும் மேலே சென்றது.
கழுகுகள் பறந்தன பறந்தன மேலே பறந்து கொண்டே இருந்தன. இப்போது நம்ரூத் பெட்டியின் மேல் திறப்பை சற்று திறந்து பார்த்தான். வானம் முன்புப் போலவே அவனுக்கு காட்சி வழங்கியது.
" என்ன..! இன்னும் நாம் வானத்தின் எல்லையை அடைய வில்லையே வானம் முன்பு போலதானே இருக்கின்றது " என்று அவன் தன் நண்பனைப் பார்த்து ஏமாற்றத்துடன் கூறினான்.
அதன்பின் அவன் அப்பெட்டியின் கீழ் திறப்பை சற்று நீக்கிப் பார்த்தான். பூமி முழுவதும் ஒரு பரந்த நீர்ப்பரப்பு போன்றும் மலைகளெல்லாம் எறும்புகள் போன்றும் காட்சி அளித்தன.
கழுகுகள் மேலே சென்று கொண்டே இருந்தன. மீண்டும் பெட்டியின் மேல் திறப்பை திறந்து பார்த்தான். வானம் முன்புபோலவே தான் இருந்தது. அங்கு இப்ராஹிமின் இறைவனை அவன் காணவில்லை. கீழ் திறப்பை மெதுவாக திறந்தான் மண் முழுவதும் இருள் மயமாக காட்சி அளித்தது. இப்போது நம்ரூதுக்கு அடங்கா சினம் ஏற்பட்டது.
"என்ன இப்ராஹீமின் இறைவன் தன்னை விண்ணிலே மறைத்துக்கொண்டு நம்முடன் விளையாடுகின்றன ? என்று அலறினான். தன் அருகே தயாராக வைத்திருந்த அம்பினை எடுத்து விண்ணை நோக்கி ஆங்காங்கே வேகமாக எய்தான்.
அப்பொழுது அவருடன் இருந்த நண்பர் அவனை நோக்கி, "இப்ராஹீமுடைய இறைவனை உம்மால் கொல்ல இயலாது. அவன் கஹ்ஹாராகவும் ( எதிரிகளை அடக்குபவனாகவும் ) அவன் ஜப்பாராகவும் ( மகா வல்லமை உடையவனாகவும்) இருக்கின்றான்" என்பதாக இப்ராஹீம் சொல்ல கேட்டிக்கிறேன்" என்று கூறினார்.
நண்பரின் இந்த வார்த்தையை எதிர்பாராத இடிமொழியாக நம்ரூதுக்கு அளவற்ற சினத்தை உண்டுபண்ணியது. சரேலென பாய்ந்து அவரை கீழே பிடித்து தள்ளினான். அடுத்த கணம் அவர் மண்ணை நோக்கி விழுந்து கொண்டிருந்தார். அப்பொழுது இறை ஆணை " ஜிப்ரிலே அவரை கீழே விழாது தாங்கிப்பிடித்து சுவனம் சேரும் " என்று கூற அவ்விதமே செய்தார் ஜிப்ரீல் .

விண்ணை நோக்கி எய்த அம்பு விண்ணை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அப்போது இறைவன் ஜிப்ரயீல் நோக்கி, "ஜிப்ரீலே எந்த விரோதியும் சரி, அவன் எத்தகைய விரோதியாக இருப்பினும் சரி, என்னுடைய சன்னிதானத்தில் இருந்து நிராசையாகத் திரும்புவதை நான் விரும்பவில்லை. எனவே அந்த அம்பில் மீன் ரத்தத்தை தேய்த்து, திருப்பி அனுப்பிவிடும்" என்று பிறப்பித்தான்.
உடனே ஜிப்ரீல் அம்பை எடுத்துக்கொண்டு, மீனிடம் வந்து, "உன் முதுகில் இருந்து ரத்தம் எடுத்து நம்ரூதிற்கு கொடுக்க இறைவன் கட்டளையிட்டுள்ளான். ஏனெனில் எவனும் அல்லாஹ்வின் திருமுன் வந்து வெறுங்கையுடன் திரும்புவதை அவன் விரும்பவில்லை " என்று கூறினார்.
அது கேட்டு மீன் அழுது, "இறைவா ! குற்றமற்ற என்னை உன்னுடைய விரோதியின் அம்பைக் கொண்டு காயப்படுத்துகிறாயே ! "என்றது.
அதற்கு இறைவன், "நான் இப்பொழுது உனக்கு தரும் துன்பத்தை தாங்கிக் கொள். இதன்பின் இத்தகு துன்பம் உனக்கும் உன் வழி வருபவர்களுக்கும் கொடுக்கப்பட மாட்டாது. உன் வழி வரும் அவற்றில் எதுவுமே இனிமேல் ஒருபோதும் கத்தியால் அறுக்க பெரும் துன்பத்தை எய்தப் பெற மாட்டாது என்று கூறினான்.
அன்றிலிருந்து மீன்களுக்கு கழுத்து அறுப்பட்டு செதில்கள் உண்டாயின .
இதன்பின் அந்த அம்பை மீனின் ரத்தத்தில் துவைத்து திருப்பி அனுப்பினார் ஜிப்ரயீல் .அது திரும்பி வந்து நம்ரூத் இருந்த பெட்டியிலேயே விழுந்தது. அதை கண்டு அளவிலா ஆனந்தமடைந்தான் நம்ரூத். "இப்ராஹீமின் இறைவனை நான் வெற்றி கொண்டு விட்டேன்" என்று கூறினான்
அதன் பின் இறைச்சி கொழுவப்பட்டிருந்த கழியை கீழ் நோக்கி பிடித்தான். அடுத்த கணம் கழுகுகள் கீழ்நோக்கி பறக்கத் தொடங்கின. விரைவில் நம்ரூத் மண்ணினை வந்தடைந்தான்.
மண்ணினை வந்தடைந்த அடுத்தநாள் மடமடவென்று ஒரு பேரொலி கேட்டது. அவன் அரும்பாடுபட்டு எழுப்பிய கோபுரம் கீழே விழுந்து சுக்குநூறாக தெறித்தது . அப்பெரும் சப்தஒலியைக் கேட்டு மக்களின் செவிகள் செவிடாயின. மூளை கலங்கியது. மனம் பேதலித்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக புலம்பத் தொடங்கி விட்டார்கள்.

ஒருவர் மொழி மற்றவருக்கு விளங்கவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு மொழி பேசத் தொடங்கிவிட்டனர். ஆங்கில இஸ்லாமிய கலைக்களஞ்சியம் மெசபடோமியாவில் அன்றிலிருந்து 73 மொழிகளைப் பேசினார்கள் என்கிறது .
இதே மாதிரி வானமேறி இறைவனைப் பார்த்து வர நபி மூஸாவின் எதிரியான ஃ பிர்அவ்னும் முயற்சித்தான் (நபிமார்களின் எதிரிகளெல்லாம் ஒரே மாதிரி யோசிக்கிறார்களோ ? ) என்பதாக குர்ஆனில் ...
وَقَالَ فِرْعَوْنُ يٰۤاَيُّهَا الْمَلَاُ مَا عَلِمْتُ لَـكُمْ مِّنْ اِلٰهٍ غَيْرِىْ فَاَوْقِدْ لِىْ يٰهَامٰنُ عَلَى الطِّيْنِ فَاجْعَلْ لِّىْ صَرْحًا لَّعَلِّىْۤ اَطَّلِعُ اِلٰٓى اِلٰهِ مُوْسٰى ۙ وَاِنِّىْ لَاَظُنُّهٗ مِنَ الْـكٰذِبِيْنَ
அதற்கு ஃபிர்அவ்ன் (தன் மக்களில் உள்ள தலைவர்களை நோக்கி) "தலைவர்களே! என்னைத் தவிர வேறொரு இறைவன் உங்களுக்கு இருப்பதாக நான் அறியவில்லை.
ஹாமானே! களிமண்(ணால் செய்த செங்கல்) சூளைக்கு நெருப்பு வை. (அச் செங்கற்களைக் கொண்டு வானளாவ) மாளிகையை நீ கட்டு. (அதில் ஏறி) மூஸாவினுடைய இறைவனை நான் பார்க்க வேண்டும். (அவர் தனக்கு வேறு இறைவன் இருப்பதாகக் கூறுகிறாரே!) இவ் விஷயத்தில் நிச்சயமாக அவர் பொய் சொல்வதாகவே நான் எண்ணுகிறேன்" என்று கூறினான். (குர்ஆன் : 28:38)

## மறை கூறும் மானிடவியல் 18

(நபி யாகூப் (அலை) என்ற ஜேக்கப் )



நபி யாகூப் (அலை) பற்றி அல்லாஹ் அதிகமாக சிலாகித்து தனது திருமறையில் குறிப்பிட்டிருக்கிறான். மேலும் வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள் யூதர்கள் என்ற இனமே நபி யாகூப் (அலை) அவரின் பெயரை வைத்துதான் தொடங்கியது என்று குறிப்பிடுகிறார்கள். நபி யாகூப் (அலை) அவர்களுக்கு இஸ்ராயீல் என்ற பெயரும் உள்ளதாக அல்லாஹ் திருமறையில் சாட்சி கூறுகிறான்.

நபி இஸ்ஹாக் (அலை) அவர்களுக்கு இரண்டு பிள்ளைகளை அல்லாஹ் அருளினான் அதில் மூத்தவர் ஈசு. இரண்டாவது பிள்ளை நபி யாகூப் (அலை) அவர்கள். மேலும் நபி இஸ்ஹாக் (அலை) தனது மூத்த மகன் ஈசுவின் மீது அதிக பிரியமாக இருந்தார்கள் என்று மார்க்க அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள்.
நபி இஸ்ஹாக் (அலை) அவர்களின் மனைவி “ரிப்கா”. அந்த அம்மையார் நபி யாகூப் (அலை) அவர்களிடம் " யாகூபே..! நீ தந்தையுடன் இணக்கமாக இருந்துகொள். அவரின் துஆவை நாடு என்று அறிவுரை கூறுகிறார்கள். இவ்வாறு இருக்க நாட்கள் ஆக ஆக நபி இஸ்ஹாக் (அலை) அவர்களுக்கு பார்வை மங்கிவிடுகிறது.
நபி இஸ்ஹாக் (அலை) அவர்கள் தனது மூத்த மகனிடம் ஒரு உணவை கேட்டார்கள். அதனை ஈசு அவர்கள் கொண்டு வருவதற்கு முன் அவர்களின் தாயார் தனது இரண்டாவது மகன் யாகூபிடம் அந்த பொருளை கொடுத்து மேலும் தனது மூத்த மகனின் சட்டையை போட்டு அனுப்பினார்கள்.
மேலும் நபி இஸ்ஹாக் (அலை) அவரால் யார் என்று கணிக்க முடியாத நிலையில் அவர் நீ யார் என்று கேட்க, நபி யாகூப் (அலை) அவர்கள், ‘நான் உங்களது மகன்’ என்று பதில் கொடுக்க, அந்த உணவை வாங்கி உண்டுவிட்டு அந்த மகனுக்காக உருக்கமாக நபி இஸ்ஹாக் (அலை) அவர்கள் துஆ செய்தார்கள்.

இவ்விஷயம் அறிந்த ஈசு நபி யாகூப் ( அலை) அவர்களை வெறுக்க தொடங்கினார்கள். எந்த அளவிற்கு என்றால் தனது தம்பியை கொன்றுவிடும் அளவிற்கு வெறுத்தார்கள். இதை அறிந்து கொண்ட யஃகூப் (அலை) அவர்கள் இரவோடிரவாக தங்கள் மாமன் வீட்டிற்கு ஓடினார்கள்.
இதனால் இவர்களுக்கு இரவில் சென்றவர் என்று பொருள்படும் 'இஸ்ராயீல்' என்னும் பெயர் ஏற்பட்டது. இவர்களின் வழித்தோன்றல்களே பனீ இஸ்ராயீல் என்று வழங்கப் பெற்றார்கள்.
இவ்வாறு நாட்கள் கழிய கழிய தனது தாய் தனது சகோதரன் லாபான் என்றவரிடம் நபி யாகூப் (அலை) அவர்களை அனுப்பி வைத்தார்.
போகும் வழியில் ஒரு இடத்தில் உறங்கும் வேளையில் அவர் ஒரு கனவை காண்கிறார். அதில் மலக்குகள் வானத்தின் பக்கம் போவதையும் கீழே இறங்குவதையும் காண்கிறார்கள். மேலும் அல்லாஹ் அவருக்கு சுபசெய்தியையும் அறிவிக்கிறான். அல்லாஹ் உங்களுக்கு ஒரு பொக்கிஷத்தை மிக விரைவில் அருளவிருக்கிறான் " என்று. இதனை கேட்டதும் நபி யாகூப் (அலை) அவர்கள் திருப்தி கொண்டவராக இருக்கிறார்கள்.

பிறகு நிம்மதியாக தனது தாய் மாமன் லாபான் வீட்டிற்கு சென்றார் நபி யாகூப் (அலை) அவர்கள்.லாபான் அவர்களுக்கு இரு மகள்கள் இருந்தார்கள். அவர்களில் மூத்தபெண் ரய்யா (மாறு கண் உடையவள் ) இரண்டாவது பெண் ராஹீல்.
நபி யாகூப் (அலை) அவர்களுக்கு இரண்டாவது மகள் ராஹில் பிடித்துபோக, தனது தாய்மாமன் லாபானிடம் பெண் கேற்க அவர் தனது ஆடுகளை ஏழு வருடங்கள் நீ மேய்த்து வந்தால் அதையே நான் மஹராக வைத்து கொண்டு ,உனக்கு திருமணம் செய்து தருகிறேன் என்று கூறினார்.
அவ்வாறே நமது தந்தை யாகூப் (அலை) அவர்களும் ஏழு வருட காலம் ஆடுகளை மேய்த்துவிட்டு,பிறகு வந்து திருமணம் செய்ய நாடியபொழுது லாபான் தனது மூத்த மகள் ரய்யாவை திருமணம் செய்து தருவதாக கூறினார். அதற்கு நபி யாகூப் (அலை) அவர்கள் நான் உங்களிடம் இரண்டாவது மகளை திருமணம் செய்ய கோரினேன் நீங்கள் இவ்வாறு கூறுகிறீர்களே என்று கேட்க,

லாபான், " மூத்த பெண் இருக்கும் பொழுது இரண்டாவது பெண்ணுக்கு திருமணம் செய்ய இயலாது என்று நம் சமூகம் இப்பொழுது கூறுவதை போல் கூறினார்.மேலும் இன்னும் ஏழு ஆண்டுகள் ஆடு மேய்தல் எனது இரண்டாவது மகளையும் திருமணம் செய்து தருகிறேன் என்று கூற, அவ்வாறே அவரும் மேய்த்து ராகில் என்ற அம்மையாரையும் திருமணம் செய்து கொண்டார்.

இப்பொழுது நமக்கு சந்தேகம் வரலாம் நாம் இரு சகோதரிகளை திருமணம் செய்யலாமா என்று ? அது அவர்களுடைய மார்க்கத்தில் அனுமதி உண்டு. நம்முடைய மார்கத்தில் அனுமதி இல்லை
நபி யாகூப் ( அலை) அவர்களுக்கு தாய்மாமன் லாபான் தனது இரு மகள்களையும் திருமணம் செய்து கொடுத்து இரு அடிமை பெண்களையும் குறிப்பிட்ட ஆடுகளையும் அவர்களுக்கு கொடுக்கிறார்.
நபி யாகூப் ( அலை) அவர்களுக்கு தனது குடும்பம் நினைவுக்கு வந்தவுடன் தனது சகோதரர் தன் மீது கோபத்துடன் இருப்பதால், நபி யாகூப் அலைஹிஸ்ஸலாம் அதில் ஒரு அடிமையையும் தனது ஆடுகளில் சிலவற்றையும் தனது சகோதரர் ஈசுவிடம் கொண்டு செல்லுமாறு கூறினார்.
மேலும் அவர் " உன்னை யார் என்று கேட்டால் நான் உங்களது அடிமை என்று கூறு மேலும் உன்னை யார் அனுப்பியது என்று கேட்டால், உங்களுடைய அடிமை யாகூப் அனுப்பி வைத்தார்கள் என்று கூறு " என்று அந்த அடிமையை அனுப்பினார்கள்.
இவ்வாறு ஈசு கேட்க தனது தம்பி யாகூப் (அலை) அவர்களின் மேல் உள்ள கோபம் தணிய யாகூப் (அலை) அவர்கள் தனது சகோதரரை காண வந்து அவரை கட்டியணைத்து ஏழு முறை மன்னிப்பு கேட்டதாக ஒரு குறிப்பு உள்ளது.
மேலும் நபி யாகூப் (அலை)அவர்களுக்கு மற்ற மனைவி மூலம் 10 குழந்தைகள் பிறந்தார்கள். ராகில் என்ற அம்மையாரின் மூலமாக இரண்டு குழந்தைகள் பிறந்தார்கள். அதில் மூத்தவர் நபி யூசுப் (அலை) அவர்கள் இரண்டாவதாக புன்யாமின் என்பவர். இந்த புன்யாமின் பிறக்கும் தருவாயில் ராஹீல் அம்மையார் பிரசவத்தில் இறந்துவிடுகிறார் புன்யாமீன் மீதும் மிகவும் பாசமாக இருந்தார். .
தனது மரண தருவாயில் தனது மகன்களிடம்,

أَمْ كُنتُمْ شُهَدَاءَ إِذْ حَضَرَ يَعْقُوبَ الْمَوْتُ إِذْ قَالَ لِبَنِيهِ مَا تَعْبُدُونَ مِن بَعْدِي قَالُوا نَعْبُدُ إِلَٰهَكَ وَإِلَٰهَ آبَائِكَ إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ إِلَٰهًا وَاحِدًا وَنَحْنُ لَهُ مُسْلِمُونَ
யஃகூபுக்கு மரணம் நெருங்கியபோது, நீங்கள் சாட்சியாக இருந்தீர்களா? அப்பொழுது அவர் தம் குமாரர்களிடம் "எனக்குப் பின் நீங்கள் யாரை வணங்குவீர்கள்?" எனக் கேட்டதற்கு, "உங்கள் நாயனை-உங்கள் மூதாதையர் இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக் ஆகியோரின் நாயனை-ஒரே நாயனையே வணங்குவோம் அவனுக்கே(முற்றிலும்) வழிப்பட்ட முஸ்லிம்களாக இருப்போம்" எனக் கூறினர்.
மேலும் நபி யாகூப் (அலை) அவர்கள் தான் மஸ்ஜிதுல் அல் அக்ஸா (ஜெருசுலம்) என்ற புனிதமிகு பள்ளியை கட்டியுள்ளார்கள். நபி யாகூப் (அலை) அவர்களுடைய அடக்கஸ்தலம் பலஸ்தீனத்தில் இருப்பதாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள் .

## மறை கூறும் மானிடவியல் 19

( நபி யாகூப் (அலை) கண்ட கனவுகள் )




ஓர் இரவு யாகூப் (அலை) அவர்கள் அயர்ந்து உறங்கும்போது, ஒரு கனவு கண்டார்கள். அதிலே 11 ஓநாய்கள் அவற்றின் இல்லத்தைச் சுற்றி வந்து அங்கிருந்த ஓர் ஆட்டைப் பிடித்து கொண்டு காட்டுக்குள் புகுந்தன.
அந்த ஆடு அலறிய அலறலில் ஓநாய்கள் அதனை காட்டில் விட்டுவிட்டு ஓடி விட்டன.
அந்த ஓநாயில் ஒன்று மீண்டும் திரும்பி வந்து, அந்த ஆட்டை பிடித்து ஒரு பாழ்கிணற்றில் கொண்டுபோய் போடுவது போலவும் கனவு கண்டு விழித்தார்கள்.
இக்கனவை அவர்கள் எவரிடமும் கூறாது தம் உள்ளத்தில் மறைத்து வைத்தார்கள் அதுவே பஞ்சுப்பொதியிலிட்ட தீக்கங்கு போன்று அவர்களின் உள்ளத்தை அணுவணுவாக கரித்துக்கொண்டிருந்தது.
அடுத்து சில நாட்களில் , யாகூப் (அலை) அவர்கள் இன்னொரு கனவு கண்டார்கள்.
தாம் ஒரு மலை மீது வீற்றிருப்பது போன்றும், யூசுஃப் (அலை) அவர்கள் அதன் அடிவாரத்தில் நடந்து செல்வது போன்றும், அப்பொழுது பல ஓநாய்கள் யூசுப் (அலை) அவர்களை கொன்று தின்னும் எண்ணத்துடன் அவர்கள் மீது பாய்வது போன்றும் ,

தம் மகனை அவற்றிலிருந்தது காக்க, தான் மலையிலிருந்து இறங்கி ஓடிவருவது போன்றும், அப்போது பூமி யூசுஃப் (அலை) அவர்களை விழுங்கிவிடுவது போன்றும் ,மூன்று நாட்களுக்குப் பின் அவர்கள் பூமியில் இருந்து வெளிவந்தது போன்றும் கனவு கண்டார்கள்.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது, " மனிதர்களை ஓநாய் தின்னுமா ? என்று வியப்புடன் யாகூப் (அலை) அவர்களின் மக்கள் யாகூப் (அலை) அவர்களிடம் வினவ,
அதற்கு அவர்கள் தான் சில நாட்களுக்கு முன் கண்ட கனவில் யூசுஃப் அவர்களை மறைத்து , "ஓநாய் மனிதனை தின்னும் " என்பதாக கூறினார்கள்

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இக்கனவைப் பற்றி கூறியதாவது , ஓநாய்கள் என்றால் யூசுஃபின் அண்ணன்மார்கள் என்றும் , பூமி பிளந்தது என்றால் கிணறு என்றும் விளக்கம் கூறினர்கள்
பின் நாட்கள் ஓடின யூசுஃப் (அலை) அவர்களும் ஏழு வயது பிராயத்தை அடைந்ததும், தன் முதல் மனைவியின் மக்கள் 11 பேர்களும் , தம் இரண்டாம் மனைவியின் மகனான யூசுஃப் (அலை) அவர்களை காட்டிற்கு கூட்டிக் கொண்டு செல்ல அனுமதி தம் தந்தையிடம் அனுமதி கேட்க ,
قَالُوْا يٰۤاَبَانَا مَا لَكَ لَا تَاْمَنَّا عَلٰى يُوْسُفَ وَاِنَّا لَهٗ لَنٰصِحُوْنَ
(பிறகு தம் தந்தையிடம் வந்து,) “எங்கள் தந்தையே! யூஸுஃபுடைய விஷயத்தில் நீங்கள் ஏன் எங்களை நம்புவதில்லை? மெய்யாகவே, நாங்கள் அவருக்கு நன்மையை நாடுபவர்களாகவே இருக்கின்றோம்.
اَرْسِلْهُ مَعَنَا غَدًا يَّرْتَعْ وَيَلْعَبْ وَاِنَّا لَهٗ لَحٰفِظُوْنَ

“நாளைக்கு அவரை எங்களுடன் அனுப்பி வையுங்கள். (காட்டிலுள்ள கனிகளைப்) புசித்துக் கொண்டும் விளையாடிக் கொண்டும் இருப்பார்; நிச்சயமாக நாங்கள் அவரைப் பாதுகாத்துக் கொள்வோம்” என்று கூறினார்கள்.

قَالَ اِنِّىْ لَيَحْزُنُنِىْ اَنْ تَذْهَبُوْا بِهٖ وَاَخَافُ اَنْ يَّاْكُلَهُ الذِّئْبُ وَاَنْـتُمْ عَنْهُ غٰفِلُوْنَ
(அதற்கு யஃகூப்,) “நீங்கள் அவரை அழைத்துச் செல்வது, நிச்சயமாக என்னைக் கவலைக்குள் ஆக்குகிறது; மேலும், நீங்கள் அவரை கவனியாது, பராமுகமாகயிருக்கும்போது அவரை ஓநாய் (பிடித்துத்) தின்றுவிடுமோ என்று நான் பயப்படுகிறேன்” என்று கூறினார்.
قَالُوْا لَـئِنْ اَكَلَهُ الذِّئْبُ وَنَحْنُ عُصْبَةٌ اِنَّاۤ اِذًا لَّخٰسِرُوْنَ
(அதற்கு) அவர்கள் “நாங்கள் (பலசாலிகளான) ஒரு கூட்டமாக இருந்தும், அவரை ஓநாய் தின்று விடுமானால், நிச்சயமாக நாங்கள் நஷ்டவாளிகளாக ஆகியிருப்போம்“ என்று கூறினார்கள்.
فَلَمَّا ذَهَبُوْا بِهٖ وَاَجْمَعُوْۤا اَنْ يَّجْعَلُوْهُ فِىْ غَيٰبَتِ الْجُبِّ‌ۚ وَاَوْحَيْنَاۤ اِلَيْهِ لَـتُنَـبِّئَـنَّهُمْ بِاَمْرِهِمْ هٰذَا وَهُمْ لَا يَشْعُرُوْنَ
(இவ்வாறாக) அவர்கள் அவரை அழைத்துச் சென்று ஆழமான கிணற்றில் தள்ளிவிட ஒன்று சேர்த்து முடிவு செய்த போது, “நீர் அவர்களின் இச்செயலைப்பற்றி அவர்களுக்கு (ஒரு காலத்தில்) உணர்த்துவீர். அது சமயம் அவர்கள் உம்மை அறிந்து கொள்ள மாட்டார்கள்” என்று நாம் யூஸுஃபுக்கு வஹீ அறிவித்தோம்.
وَجَآءُوْۤ اَبَاهُمْ عِشَآءً يَّبْكُوْنَ
இன்னும், அவர்கள் (அன்று) பொழுது சாய்ந்ததும் தங்களுடைய தந்தையாரிடம் அழுது கொண்டே வந்தார்கள்.
قَالُوْا يٰۤاَبَانَاۤ اِنَّا ذَهَبْنَا نَسْتَبِقُ وَتَرَكْنَا يُوْسُفَ عِنْدَ مَتَاعِنَا فَاَكَلَهُ الذِّئْبُ‌ۚ وَمَاۤ اَنْتَ بِمُؤْمِنٍ لَّنَا وَلَوْ كُنَّا صٰدِقِيْنَ
“எங்கள் தந்தையே! நாங்கள் யூஸுஃபை எங்களுடைய சாமான்களிடத்தில் விட்டுவிட்டு, ஓடி(யாடி விளையாடிக் கொண்டே வெகுதூரம்) சென்று விட்டோம்; அப்போது ஓநாய் அவரை(ப் பிடித்துத்) தின்று விட்டது - ஆனால் நாங்கள் உண்மையே சொன்ன போதிலும், நீங்கள் எங்களை நம்பவே மாட்டீர்கள்!” என்று கூறினார்கள்.(குர்ஆன் : 12:11-17)
நபி யாகூப் (அலை) அவர்கள் கண்ட கனவு குறித்து சிலர், "யாகூப் (அலை) அவர்களுக்குத்தான் கனவுக்கு விளக்கம் தெரியுமே, அவர்கள் அதன் பொருளை விளங்கி யூசுஃப் (அலை) அவர்களை அவர்களின் அண்ணன்மார்களுடன் அனுப்பாமல் இருந்திருக்கலாமே " என்று கூறியபோது..
" விதி வரும்முன் அறிவு மழுங்கி விடுகிறது" என்று இப்னு அப்பாஸ் (ரலி) பதில் கூறினார்கள்.

## கடையநல்லூர் அதாயி இஸ்லாமிய பெண்கள் கல்லூரியில் என் சிறப்புரை :





கடையநல்லூர்

# அதாயி இஸ்லாமிய பெண்கள் கல்லூரி

பெண்களுக்கான

## பிரம்மாண்ட விழா அழைப்பிதழ்

நாள் : மார்ச் 30 2022

புதன்கிழமை
மாலை 4:00மணி முதல்

பெண்களுக்கான கல்வி மற்றும் பாதுகாப்பு
**விழிப்புணர்வு**

பெண்களுக்கான மாபெரும்
**ரமலான் மாநாடு**

புகாரி ஷரிப் நிறைவு விழா துஆ
மற்றும்
**மாணவிகளுக்கு புகாரி திலாவத் ஸனது வழங்கும் விழா**

இறுதியாண்டு மாணவிகளின் ஆய்வு புத்தகங்கள்
**வெளியீட்டு விழா.**

பல சமய அறிஞர்கள், உயர் அதிகாரிகள்,
வணிகர்கள் பங்குபெறும்
இம்மாபெரும் நிகழ்விற்கு அனைவரும் வாரீர்...

### கல்வியாளர்கள்:

- **பழனிச்சாமி** M.A.,M.PHIL.,M.ED.,PH.D. (PRINCIPAL(EMERITUS) M.S UNIVERSITY)
- **செல்வராஜ்** (தென்காசி U.S.P காலேஜ் சேர்மேன்)
- டாக்டர்.**எஸ்.கயற்கண்ணி** M.SC.,M.A.,M.PHIL.,B.ED.,MBA.,PH.D. (முதல்வர் U.S.P காலேஜ்)யு.எஸ்.பி.கலை மற்றும் அறிவியல் கல்லூரி கொடிக்குறிச்சி,தென்காசி.
- டாக்டர்.**ஏ.மணிகண்டன்** M.A.,(HIS).,M.A.,(SOC).,M.SC.,(PSY),M.ED.,M.PHIL.,PH.D.,(EDU).,
- டாக்டர். **யு.முருகன்** M.A.,M.D.,M.PHIL.,PH.D.,ASS.PROFFESSER,USP B.ED.COLLEGE.
- எழுத்தாளர் **ரஹ்மத் ராஜகுமாரன்**
- K.K.**சிக்கந்தர்** (தலைமை ஆசிரியர்-தாருஸலாம்)
- **திப்பு சுல்தான்** (Management of al Azhar Matriculation School)
- **ஹபீபுல்லாஹ்** (Teacher of Masood Thaika School)
- **முருகையா** Alagappa University Centre Kadayanallur

### அரசு அதிகாரிகள்:

- **கே.அரவிந்த்** B.B.A., வருவாய் வட்டாட்சியர் கடையநல்லூர்
- **ஆர்.விஜயக்குமார்** (INSPECTOR OF POLICE KADAYANALUUR)
- **கனகராஜ்** (Sub. INSPECTOR OF POLICE KADAYANALUUR)
- **முத்துலட்சுமி** (INSPECTOR OF POLICE Tenkasi)
- **தேவி** (Sub. INSPECTOR OF POLICE KADAYANALUUR)
- **காசி லெட்சுமி** R.I (KDNL) வருவாய் ஆய்வாளர், கடையநல்லூர்
- **N.சங்கரநாராயனன்** (VAO) KRISHNAPURAM, KADAYANALLUR.
- **குமார்** (VAO) Courtallam
- **ஆரீப் ஷாகுல் ஹமீது** (VAO) KADAYANALLUR.
- **முருகையா** (VAO) கணகசபாபதிபேரி
- **தி.சீனிவாசன்** BCom., (நிலைய அலுவலர் தீயணைப்பு துறை)
- **பொ.சுந்தர ராஜன்** நிலைய அலுவலர் (போ) தீயணைப்பு துறை, கடையநல்லூர்

### தொழில் அதிபர்கள் :

- அல்ஹாஜ்.**பிஸ்மி அமீன்** அவர்கள் பிஸ்மி டைல்ஸ் கடையநல்லூர்.
- அல்ஹாஜ்.**ஷாகுல் ஹமீத்** அவர்கள் நேஷனல் டைல்ஸ், கடையநல்லூர்.
- உயர்திரு.**சண்முகவேல்** அவர்கள் டி.எஸ் காய்கறி மொத்த கடை.தினசரி மார்கேட், கடையநல்லூர்.
- உயர்திரு. **வெங்கடாச்சலம்** அவர்கள் P.C.Traders Rice Merchant, Kadayanallur.
- உயர்திரு.**செல்வா இளங்கோவன்** அவர்கள் P.C.Traders Rice Merchant, Kadayanallur

சூரத்துல் ஃபாத்திஹா வின் மொத்த எழுத்துக்கள் 114 .திருக்குர்ஆனின் மொத்த சூராக்கள் 114. இந்த சூராவை திரும்ப திரும்ப ஓதக்கூடிய வசனங்களாக தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்திலும் இறைவன் வைத்தானோ ? இது பற்றி குர்ஆனில்
وَلَقَدْ اٰتَيْنٰكَ سَبْعًا مِّنَ الْمَثَانِىْ وَالْـقُرْاٰنَ الْعَظِيْمَ
(நபியே!) நிச்சயமாக நாம் உங்களுக்கு திரும்பத் திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களை (உடைய "அல்ஹம்து" என்னும் அத்தியாயத்தை)யும், இந்த மகத்தான குர்ஆனையும் அளித்திருக்கிறோம்.
(அல்குர்ஆன் : 15:87)
ஒரு புத்தகத்தின் முதல் பக்க அட்டவணைப் பொருளடக்கம் போல் திருக்குர்ஆனின் பொருளடக்கத்தை சூரத்துல் ஃபாத்திஹாவில் அருளப்பட்டிருக்கிறது .இது நம்மை சிந்திக்க வைக்கிறது .
பாத்திஹா அத்தியாயத்தில் அரபி நெடுங்கணக்கில் இருளெழுத்துக்கள் என்று குறிக்கப்படும் ஏழு எழுத்துக்கள் . . . . ஃதே . ஜீம் . கே . . ஸே . . . ஷீன் . . . ளே . . ஃபே . . ஆகிய எழுத்துக்கள் தவிர்க்கப்பட்டுள்ளன
யாசீன் சூராவில் அல்லாஹ் மும்முறையும் . ரஹ்மான் நான்கு முறையும் வந்திருப்பது போன்று முல்க் சூராவிலும் அவ்விரு சொற்களும் அதே அளவில் இடம் பொற்றுள்ளன
22 வசனங்களைக் கொண்ட முஜாதலா அத்தியாயத்தில் அல்லாஹ் 40 முறை இடம் பொற்றுள்ளது . . ஆனால் கமர் ரஹ்மான் வாகிஆ ஆகிய சூராக்களில் அச் சொல் ஒரு முறை கூட இடம் பெறவில்லை
முஹம்மத் அத்தியாயத்தில் இரண்டைத் தவிர எஞ்சிய 36 வசனங்களும் மீமில் முடிவடைகின்றன
ஹூத் சூராவில் ஒரே வசனத்தில் 11: 48 ல் 16 மீம்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன
மேற்கண்ட வசனங்களில் மெஞ்ஞான ரகசியங்கள் நிரம்ப உள்ளதாக சொல்லப்படுகிறது தெரிந்தோர் சிரமம் பார்க்காமல் தெரியப்படுங்கள்.
திருக்குர்ஆனின் ரகசிய எழுத்துக்கள் அலிஃப் , லாம் , மீம் பற்றிய ஆய்வு
ஆதி ஆரம்பநாளில் எல்லாமாய் ஒன்று திரண்டு இருந்த 'அது' மிகப்பெரிய வெடிப்பு ( Big Bang ) ஏற்பட்ட போது உண்டான சக்தியின் துகள்கள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக் கொண்டு அந்த மஹா மஹா வெடிப்பின் சக்தியை அந்த துகள்களில் அப்போதே இயற்கை சேமித்து வைத்தது .
"நிச்சயமாக வானங்களும், பூமியும் (முதலில்) இணைந்திருந்தன என்பதையும், இவற்றை நாமே பிரித்(தமைத்)தோம் ". (குர்ஆன் : 21:30)
சூரிய மண்டலத்தில் நட்ட நடு மையத்தில் திகழும் சூரியனைத் தகர்த்தால் என்ன நடக்கும் ?
மொத்த சூரியனின் சக்தியும் கணக்கில்லாமல் அளப்பரிக்கும். அந்த சக்தியை எப்படி கட்டுப்படுத்த ? விஞ்ஞானிகள் யோசித்தார்கள் . சூரியன் பிறக்கும் போது கூடவே பிறந்த இந்த கனமான தனிமத்தின் (யூரேனியம்) அணுவிற்குள்ளும் சூரியனின் குணம் இருக்கும் அல்லவா ?

இந்த அணுவை பிளக்கவோ, சிதைக்கவோ செய்யும்போது , ஆதிகால வெடிப்பின் போது ஏற்பட்ட , அந்த அளப்பற்ற சக்தி வெளிப்படும் .அந்த சக்தியை கட்டாயமாகக் கட்டுப்படுத்தி ஆற்றலாக மாற்றி பயன் பெறலாம் .
**E=MC^2 இதில்**
**E = Energy ; M= Mass (பொருண்மை)**
**C= velocity of Light (மடங்கு விகிதத்தில் ஒளியின் வேகம்**
**3 லட்சம் கி.மீ / ஒரு நொடிக்கு )**
பொருளும் சக்தியும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்தவைகள் . அதாவது பொருள் அழியும் போது சக்தி வெளிப்படும் . மொத்த சக்தியும் ஒன்றாக பரிணமிக்கும் போது பொருள் திரளும் .
பொருண்மை - சக்தி சரி , இதனூடே ஏன் ஒளியின் வேகம் புகுத்தது ?
ஒரு பொருளை அழித்து சக்தியாக மாறும் போது பெறப்படும் சக்தியின் வேகம் ஒளியின் வேகம் .
அணுவின் (யூரேனியம்) உள்ளே பூட்டி வைத்திருக்கும் சக்தியின் அளவு கிட்டத்தட்ட நம்பவே முடியாதபடி அவ்வளவு அதிகமானது . அதாவது ஒன்பதாயிரம் கோடி மடங்கு உள்ளது .இதை கற்பனை செய்யக் கூட முடியாது.
ஒரு மணல் துகளைப் பிரித்து கொண்டே போவோம் .அதன் அணுநிலையை அடையும் வரை அவ்வாறு செய்வோம் . அதன் பிறகு அந்த அணுவையும் பிளந்தால் , இறுதியில் கதிர்வீச்சு ; அதாவது சக்தி அலை அலையாய் வெளிப்படும் .
நாம தொடங்கியது பொருளில் இருந்து அது முற்றிலும் மாறி இப்போது கிடைத்திருப்பது கதிர் வீச்சு .
பொருண்மைதான் சக்தி ; சக்திதான் பொருண்மை ; அவை இரண்டும் ஒன்று மற்றொன்றாக மாறக் கூடியவை.
ஏனென்றால் அவை இரண்டுமே ஒன்றுதான் . அது வேறு இது வேற அல்ல . உண்மையில் அகிலப் பிரபஞ்சம் என்பது ஒரே ஒன்றால்தான் படைக்கப்பட்டிருக்கிறது ! அது தான்
சக்தி - பொருண்மை என்படுவது
எவ்வளவு நிகர்சனமான உண்மை .
E=MC^2 என்பது பிரபஞ்சத்தின் சூட்சம ஒழுங்காக E ,M,C இருப்பதால் இந்த மிக முக்கிய மூன்று எழுத்துக்களும் குர்ஆனில் சொல்லப்படாமலா இருக்கும் ?
அலிஃப் - அல்லாஹுத்தலா
லாம் - ஜிப்ரயீல் (அலை) மூலமாக
மீம் -முஹம்மதாகிய நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட குர்ஆன்

E=MC^2 கணக்கற்ற கற்பனை செய்ய முடியாத சக்தியாக இருக்கும்பொழுது அலிஃப் , லாம் , மீம் அப்படிப்பட்ட மாபெரும் சக்தியாக கணக்கற்றதாக , கற்பனை செய்ய முடியாத ஆற்றலாக இருக்கிறதா ? பார்ப்போம்.
நபி (ஸல்) அவர்களுக்கு குர்ஆன் முழுமையாக அருளப்பட்டு நிறைவு பெற்றது. நபித்தோழர்கள் போட்டி போட்டுக் கொண்டு குர்ஆனை மனனம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

" யாரெல்லாம் மொத்த முழுக் குர்ஆனையும் நன்கு விளங்கி மனனம் செய்துள்ளார்கள் என்பதை சோதிக்க எண்ணி ஒரு போட்டி வைக்கிறார்கள் .
நபித்தோழர்களின் முன்னிலையில் மிக அழகான ஒரு குதிரை கொண்டு வரப்படுகிறது .
" தோழர்களே ..! இந்தக் குதிரையின் லகானைப் பிடித்து ஏறி அமர்வதற்குள் குர்ஆனை யார் ஓதி முடிக்கிறார்களோ அவர்களுக்கு இந்தக் குதிரை பரிசாக அளிக்கப்படும் .

இப்போட்டிக்கு யாருமே முன் வராதபோது அலி (ரலி) அவர்கள்,
நபி (ஸல் ) அவர்களிடமிருந்து குதிரையை வாங்கி ஒரு காலை குதிரையின் லகானில் மிதித்து ஏறி அமர்வதற்குள் " அலிஃப் , லாம் , மீம் என்று உரக்க சொல்லி அமர்ந்து புன்முறுவல் பூத்து குதிரை ஏறி வட்டமிடுகிறார்கள் .
நபி (ஸல்) அவர்கள், அலி(ரலி) அவர்களை வெற்றிப் பெற்றவர்களாக அறிவிக்கிறார்கள் .
ஆக மொத்த முழுக் குர்ஆனும் இந்த அலிஃப் , லாம் , மீம் என்ற 3 எழுத்துக்குள் அடங்கி விட்டதாக ஞானத்தின் தலைவாயிலான அலி (ரலி ) அவர்கள் விளங்கியிருக்கிறார்கள் .

சரி, அலிஃப் , லாம் , மீம் என்ற 3 எழுத்துக்களுக்கு மாபெரும் சக்தியாக கணக்கற்றதாக , கற்பனை செய்ய முடியாத ஆற்றலை எப்படி நிரூபிப்பது ?

" (நபியே!) நீர் கூறுவீராக: “என் இறைவனுடைய வார்த்தை(களை எழுதுவதற்)காக கடல் (முழுவதும்) மையாக ஆகுமானாலும், என் இறைவனுடைய வார்த்தைகள் (எழுதி) முடிப்பதற்குள் கடல் (நீர்) தீர்ந்து விடும்; அதைப் போல் (இன்னொரு மடங்கு கடலையே) நாம் உதவிக்குக் கொண்டு வந்தாலும் சரி!” (குர்ஆன் : 18:109)
கவனிக்கவும் "மடங்கு "
"மேலும், நிச்சயமாக இப்பூமியிலுள்ள மரங்கள் யாவும் எழுது கோல்களாகவும், கடல் (நீர் முழுதும்) அதனுடன் கூட மற்றும் ஏழு கடல்கள் அதிகமாக்கப்பட்டு (மையாக) இருந்த போதிலும், அல்லாஹ்வின் (புகழ்) வார்த்தைகள் முடிவுறா; நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவன்; ஞானம் மிக்கோன்.
(அல்குர்ஆன் : 31:27)

சரி ர.ரா ...E=MC^2 என்பதால் அலிஃப், லாம் , மீமில் ...மீமுக்கு மேலாக மடங்கு குறியீடு வேண்டுமே ..?
மேற்சொல்லப்பட்ட அலிஃப், லாம் , மீம் குர்ஆனில் 6 சூராக்களுக்கு முதல் வசனமாக வருகிறது .
**1) அல்பகரா**
**2) ஆல இம்ரான்**
**3 ) அல் அன்கபூத்**
**4) அர் ரூம்**
**5) லுக்மான்**
**6) அஸ் ஸஜ்தா**
இதில் அலிஃப், லாம் , மீம் மூன்று எழுத்துக்கள் முதல் வசனமாக 6 சூராக்களில் அருளப்பட்டாலும் 6 ஒரே மாதிரி அல்ல ; ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாதிரி.
இப்போ " ஆல இம்ரான் " சூராவின் முதல் வசனம் அலிஃப், லாம் , மீம் இந்த மீமுக்கு மேலே "ஜபர் " என்னும் அகரக் குறியீடு வழங்கப்பட்டுள்ளதை கவனியுங்கள் .
சூரா ஆல இம்ரானில் வரும்
அலிஃப், லாம் , மீம் ۤ الٓمّٓ= E=MC^2 ஆக இருக்கலாம் . அல்லாஹ்வும் அவன் ரசூல் (ஸல் ) அவர்களும் அறிவார்கள் .
وَلَقَدْ ضَرَبْنَا لِلنَّاسِ فِىْ هٰذَا الْقُرْاٰنِ مِنْ كُلِّ مَثَلٍ لَّعَلَّهُمْ يَتَذَكَّرُوْنَ
இன்னும், இந்த குர்ஆனில் மனிதர்களுக்காக எல்லாவித உதாரணங்களையும், அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதற்காக நாம் திடமாக எடுத்துக் கூறியுள்ளோம்.
(குர்ஆன் : 39:27)

சூரா மரியத்தில் (காப், ஹா, யா, அய்ன், ஸாத்) ஆய்வு
சூரா 19 மரியம். இதன் முதல் வசனம் மேற்கண்ட 5 எழுத்துக்களைக் கொண்டு துவங்குகிறது . இந்த சங்கேத எழுத்துக்களுக்கு சிலர் நீர் ,நிலம், நெருப்பு, ஆகாயம்,காற்று என்று 5 பஞ்ச பூதங்களைக் குறிப்பிடுகிறார்கள் சிலர் மெய், வாய், கண், மூக்கு, செவி என்று மனித உடல் உறுப்புகளைப் பற்றி சொல்கிறது என்கின்றனர்.
இந்த சூராவை அடிக்கடி ஆய்வு செய்ததில் , இரு நபிமார்களின் பிறப்பின் அதிசயத்தை குறிப்பிடுவதால் .பிறப்பின் ரகசியத்தை சூசகமாக சொல்ல வருவதாக எனக்குப் படுகிறது.
படைப்பின் பிறப்புகளை 5 வகையாக பிரிக்கப்படுகிறது.
1) வித்துக்களிலிருந்து புற்பூண்டு , பாசி, செடி, கொடி, மரம் போன்ற அனைத்து தாவரங்களும் பிறக்கின்றன.
2) முட்டையிலிருந்து பறவையினங்கள் பிறக்கின்றன.
3) சினையிலிருந்து மீன் வர்க்கங்கள் பிறக்கின்றன.
4) மக்கிப் போன பொருட்களின் வெப்பத்திலிருந்து புழுக்களும், பூச்சிகளும், கிருமிகளும் பிறக்கின்றன.
5) கருப்பப்பையிலிருந்து மனிதனும், மிருகங்களும் பிறக்கின்றன,
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்துக்கள் 5
உயிர்கள் உருவாகுதலில் உடல் உறுப்புகளில் பழுது மற்றும் குறைபாடுகள் இருந்தால் ஜீவராசிகள் தங்களின் சந்ததிகளை உருவாக்க முடியாமல் போகலாம்.
"இறைவா ! நிச்சயமாக என் எலும்புகள் பலவீனமாகி விட்டன. என் தலையும் நரைத்து விட்டது. என்னுடைய மனைவியோ மலடாகி விட்டாள் .நானோ முதுமையின் கடைசி பாகத்தை அடைந்து விட்டேன் .எனக்கு எப்படி சந்ததி
ஏற்படும் ? "
குர்ஆன் (19 : 4---8 )
என்று நபி ஜக்கரிய்யா (அலை) அவர்கள் கேட்க இறைவன் அவருக்கு " யஹ்யா "வை தந்தோம் என்று வாக்குறுதி கொடுக்கும் போது தன் 99-வயதில் தன் உடல் குறைகளைச் சுட்டிக் காட்டினார்கள் நபியவர்கள்.
பொதுவாக ஆண்களுக்கு 50 வயதிற்கு மேல் "டெஸ்டோஸ்டிரான் " என்ற ஹார்மோன் கொஞ்சம் கொஞ்சமாக குறைகிறது. இதனால்
1 ) பசி குறைதல்
2) எடை குறைதல்
3 ) உடல் சோர்வுடைதல்
4 ) ஞாபகக் கவனம் குறைதல்
5) வீரிய ஆற்றல் குறைகிறது.
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்துக்கள் 5
நபியவர்கள் குறிப்பிடும் போது எனது ஈஷாஉ ( 98 வயது) மனைவியோ மலடி என்கிறார்கள்
ஒரு பெண் கரு உண்டாகமல் போவதற்கு
1 ) பெண்ணின் சினைமுட்டை உற்பத்தி திறனில் குறைவு
2) மாதவிடாய் கோளாறுகள்
3) கருவகத்தின் குறைபாடுகள்
4) பெலோபிப்யன். டியூப் சிதைத்தோ அல்லது அடைப்போ இருத்தல்
5 ) கருப்பை குறைபாடுகள்

மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்துக்கள் 5
நபியின் மனைவிக்கு இதில் எந்த மாதிரி குறைபாடுகள் இருந்தன என்பதை அல்லாஹ்வே அறிவான். இருந்தாலும் ஜக்கரிய்யா (அலை) அவர்களுக்கு நபி யஹ்யா (அலை) பிறந்தார்கள்.
அடுத்து ஒரு பெண் கர்ப்பம் அடைவதற்கு குறைந்தது 5 தகுதிகள் கண்டிப்பாக இருந்தாக வேண்டும் .
1) பெண் பருவமடைந்து தாய்மைக்கு தயாராக இருக்க வேண்டும்
2) அவளுடன் இணையும் ஆணுக்கு மேற்கண்ட தகுதி இருந்தாக வேண்டும்.
3) மாதவிலக்குப் பிறகு இணைய வேண்டும்
4) ஆணின் விந்தில் போதிய அளவு உயிரணுக்கள் இருந்தாக வேண்டும்
5) பெண்ணின் சினைமுட்டை தகுதியானதாகவும் விந்தை கிறகித்துக் கொள்ளக் கூடியதாகவும் இருக்க வேண்டும் .
மேற்கண்ட சூராவின் ஆரம்ப எழுத்து 5
அன்னை மர்யம் (அலை) அவர்கள் ஆண் துணை இன்றி ஆண் குழந்தை நபி ஈஸா (அலை) அவர்களை பெற்றெடுத்தார்கள்.
நபி யஹ்யா (அலை) அவர்களின் பிறப்பு மருத்துவத்தில் அதிசயம் என்றால், நபி ஈஸா (அலை) அவர்களின் பிறப்பு ஆன்மீகத்தில் அதிசயம்.
இந்த இரண்டு நபிமார்களின் பிறப்பு இவைகளையெல்லாம் மீறி தன் வல்லமையை மனித குலத்திற்கு காட்டுவதற்காக இறைவன் நடத்தாட்டுகின்றான்.
இதனை சூசகமாக உணர்த்தவே
( காப்,ஹா,யா,அய்ன்,ஸாத்) என்று சூராவின் ஆரம்பத்தில் வைத்தானோ என்னவோ ?
அல்லாஹ்வே அறிவான் .இது சிறியோனின் சிற்றறிவுக்கு எட்டிய சிந்தனை .
வல்ல ரஹ்மான் மன்னிக்கட்டும்

**மறை கூறும் மானிடவியல் 20**
( நபி யூசுஃப் (அலை) கண்ட கனவுகள்)



யூசுப் (அலை) அவர்கள் ஏழு வயது பிராயத்தில் தம் தந்தையின் மடியில் தலை வைத்துப்படுத்திருக்கும்போது, கனவு ஒன்றைக் கண்டார்கள்.
திடுக்கிட்டு மகனார் விழித்தெழுந்தார். "அப்பா ஒரு கனவு கண்டேன். நான் என் அண்ணன்மார்களுடன் ஆடு மேய்த்துக் கொண்டு இருப்பதுபோன்று கனவு இருந்தது. பின்னர் நான் என் கைக்கோலை மண்ணிலே நட்டினேன். அண்ணன்மார்களும் தங்களின் கைக்கோலை நட்டினார்கள். அப்பொழுது என்னுடைய கைகோல் பச்சை பசேலென்று தளிர்த்து விண்ணுயர வளர்ந்து என் அண்ணன்மார்களின் கைக்க்கோலின் மீது வீழ்ந்து அவற்றை வேரோடு பிடிங்கி நான்கு புறத்திலும் வீசி எறிந்து விட்டது.
அதன் பின் அந்த வானளாவிய மரத்திலிருந்து தேன்மதுரக் கனிகள் அண்ணன்மார்கனின் தலை மீது சொரிய அவர்கள் அவற்றை ஆவலுடன் பொறுக்கி சுவைத்து உண்டார்கள். அதன் பின் அவர்கள் அனைவரும் என் முன் சிரம் பணிந்தார்கள்" என்று கூறினார்கள்.

அது கேட்டு யாகூப் (அலை) முதலில் பதறினார்கள்.அடுத்த கணம் கனவின் உட்பொருளை விளங்கி மகிழ்ச்சியுற்று "இதற்கு பெருமதிப்பு ஏற்படும் " என்று தங்களை அறியாமல் கூறினார்கள். இது யூசுஃபின் அண்ணன்மார்கள் காதுகளில் விழுந்தது.இந்தக் கனவுக்கு பின்தான் அவரின் சகோதரர்கள் யூசுஃபின் பகைவர்கள் ஆயினர்.

இதன்பின் யூசுப் (அலை) அவர்கள் பல கனவுகள் கண்டனர். ஒரு கனவில் தாமும் தன் அண்ணன்மார்களும் விறகு பொறுக்குவது போன்று தோன்றியது.
ஒவ்வொருவரும் விறகு பொறுக்கி தாங்கள் விறகுகளை தனித்தனியாக குவித்துவிட்டார்கள். அவர்களின் விறகுகள் அனைத்தும் கருப்பாகவும், யூசுஃப் (அலை) அவர்களின் குவியல் மட்டும் வெண்மையாகவும் இருந்தது அண்ணன்மார்களின் குவியல்கள் யூசுஃப் (அலை) அவர்களின் குவியலுக்கு சிரம் பணிந்தன.
அப்பொழுது வானளாவிய உயரத்தில் அங்கு ஒரு மனிதர் தோன்றி, யூசுஃப் (அலை) அவர்களின் குவியலை ஒரு தட்டிலும் அவர்களின் அண்ணன்மார்களின் குவியல்கள் அனைத்தையும் ஒரு தட்டிலும் வைத்தார்கள். யூசுஃப் (அலை) அவர்களின் குவியல் இருந்தத் தட்டு கனத்தது. அப்போது அவர்கள் அண்ணன்மார்கள் யூசுப் (அலை) அவர்களுக்கு பணிந்தார்கள்.

اِذْ قَالَ يُوْسُفُ لِاَبِيْهِ يٰۤاَبَتِ اِنِّىْ رَاَيْتُ اَحَدَ عَشَرَ كَوْكَبًا وَّالشَّمْسَ وَالْقَمَرَ رَاَيْتُهُمْ لِىْ سٰجِدِيْنَ
யூஸுஃப் தம் தந்தையாரிடம்: “என் அருமைத் தந்தையே! பதினோரு நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும் - (இவை யாவும்) எனக்குச் சிரம் பணிவதை மெய்யாகவே (கனவில்) நான் கண்டேன்” என்று கூறியபொழுது.
قَالَ يٰبُنَىَّ لَا تَقْصُصْ رُءْيَاكَ عَلٰٓى اِخْوَتِكَ فَيَكِيْدُوْا لَـكَ كَيْدًا اِنَّ الشَّيْطٰنَ لِلْاِنْسَانِ عَدُوٌّ مُّبِيْنٌ
“என் அருமை மகனே! உமது கனவை உன் சகோதரர்களிடம் சொல்லிக் காட்ட வேண்டாம்; (அவ்வாறு செய்தால்) அவர்கள், உனக்கு(த் தீங்கிழைக்க) சதி செய்வார்கள்; ஏனெனில் (அவ்வாறு சதி செய்யத் தூண்டும்) ஷைத்தான், நிச்சயமாக மனிதனுக்குப் பகிரங்க விரோதியாக இருக்கின்றான்.
(குர்ஆன் : 12: 4, 5)
இதில் "கண்டேன் (ரஅய்த்து) " என்று சொல்வதற்குப் பதிலாக , "நிச்சயமாக நான் கண்டேன் (இன்னீ ரஅய்த்து ) என்று " நான் " என்று யூசுஃப் (அலை) அவர்கள் கூறியதாலும், பின்பும் "எனக்கு அடிபணிந்தன " (லீஸாஜிதீன்) என்று பெருமைப்படக் கூறியதாலும் இதனால் பின்னர் அவர்கள் துன்புற நேரிட்டது என்று கூறுகிறார்கள்.
11 நட்சத்திரங்கள் என்பது யூசுப் ( அலை) அவர்களுடைய சகோதரர்கள் 11 பேர்களையும் அவரையும் சேர்த்து 12 பேர்கள் சூரியனும், சந்திரனும் அவருடைய தகப்பனார் மற்றும் தாயார் என்பதை குறிக்கும் என்பதாக குர்ஆன் விரிவுரையாளர்கள் குறிப்பிடுகின்றனர்.
இதையே விஞ்ஞான ரீதியாக இக் கனவு சொல்லப் பட்டிருக்கிறது என்பதாக வானியலாளர்கள் குறிப்பிடுகின்றனர். அதாவது
நம் சூரியக் குடும்பத்தைச் சுற்றி மிக அருகாமையில் 12 வகையான ராசிகள் எனப்படும் நட்சத்திர கூட்டங்கள் உள்ளன. ஒவ்வொரு நட்சத்திரக் கூட்டங்களிலுள்ள நட்சத்திரங்களை ஒன்றோடு ஒன்று கற்பனை கோட்டால் இணைத்தால், உருவங்கள் கிடைக்கும். உ தாரணமாக ஆடு (மேஷம்) காளை மாடு (ரிஷபம்) இப்படியாக 12 உருவ நட்சத்திர கூட்டங்கள்
நம் பூமி 23 மணி, 50 நிமிடம் 4 நொடிகளில் தன்னைத்தானே ஒரு முறை சுற்றிக் கொண்டு சூரியனை ஒரு முறை சுற்றி வர 365 நாட்கள் 6 மணி 9 நிமிடம் எடுத்துக் கொள்கிறது.
இவ்வாறு பூமி சுற்றி வரக்கூடிய பாதையில் இந்த 12 ராசிகள் என்றழைக்கப்படும் நட்சத்திர கூட்டங்கள் அமைந்துள்ளன .

12 ராசிகளும் ஏறத்தாழ சமஅளவு இடையில் உள்ளன எனவே வருடத்தின் 12 மாதங்களில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு நட்சத்திரக் கூட்டத்தில் சரிசமமாக பூமி கடந்து போகிறது.

ஒரு யூதர் நபி (ஸல்) அவர்களிடம் யூசுப் (அலை) அவர்கள் கனவில் கண்ட பதினோரு நட்சத்திரங்களை எனக்கு கூற வேண்டும் .
உடனே ஜிப்ரயீல் ( அலை) நபி (ஸல்) அவர்களுக்கு கூற, நபி (ஸல்) அவர்கள் அந்த யூதரிடம் " கூறினால் இஸ்லாத்தை ஏற்பீரா ? அவரும் சம்மதித்தார். நபி (ஸல்) அவர்கள் அவற்றின் பெயரை கூறினார்கள்
1) ஜரியான், 2) உதாரிக் , 3) தய்யான், 4) காபிஸ், 5) சமூதான்,
6) பலீக்கு , 7) முஸப்பஹ் , 😎லநூஹ், 9)பர்கு 10) வந்தாபு 11) துல்கத்பைன் என்பதாக ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் (தஃப்ஸீர் ஹமீதிய்யா)

**மறை கூறும் மானிடவியல் 21**
நபி அய்யூப் (அலை) அவர்கள் பொறுமையின் சிகரம்



நபி அய்யூப் (அலை) அவர்கள் உலகின் மிக செல்வந்தராக, பெரும் ஆட்சி அதிகாரங்களோடு வாழச்செய்தான். மிக உயர்ந்த நிலையில் இருந்த போதும் நபியவர்கள் ஒரு வினாடி நேரம் கூட அல்லாஹ்வை மறக்கவில்லை. எப்பொழுதுமே இறைவன் நினைப்பில் அவனை துதிசெய்து கொண்டே இருந்தார். இது சைத்தானுக்குப் பிடிக்கவே இல்லை. அல்லாஹ்விடம் இதுபற்றி வாக்குவாதம் செய்தான் சைத்தான்.
'இறைவனே, உன் அடியானுக்கு சகல வசதிகளையும் நீ கொடுத்திருக்கும் போது அவன் உன்னை வணங்குவதில் என்ன ஆச்சரியம் உள்ளது. அவனுக்கு நீ சோதனையை, வேதனையைக் கொடு. அப்போது தான் அவனது இறைபக்தி எந்த அளவுக்கு உண்மையாக இருக்கிறது என்பதை நீ அறிய முடியும். எனக்கு நீ அனுமதி கொடுத்தால் அவனுக்கு சோதனைகளைக்கொடுத்து, உன் நினைவில் வாழும் அவரை மாற்றிக்காட்ட என்னால் முடியும்?' என்றான் சைத்தான் .

அல்லாஹ் கூறினான்: "அய்யூப்பின் இறைபக்தியை நீ அவ்வளவு எளிதாக எண்ணி விடாதே. உனக்கு அனுமதி தருகிறேன், அவரை எல்லா நிலைகளிலும் சோதித்துப் பார். அவரின் நம்பிக்கையை மாற்ற உன்னால் மாற்ற முடியாது என்பது எனக்குத் தெரியும்".
ஆனால், சைத்தான் 'என்னால் முடியும்' என்றான்.
அதன் பின்னர் சைத்தான், நபி அய்யூப் (அலை) அவர்களிடம் சென்று தனது துர்போதனைகளை தொடங்கினான். 'உன் விதியின்படி எழுதப்பட்ட அனைத்து நன்மைகளும் உனக்கு கிடைத்துள்ளது. இதில் இறைவனின் பங்கு என்ன உள்ளது? ஏன் எப்போதும் இறைவனை நினைத்துக்கொண்டு இருக்கிறாய்?'.
நபி அய்யூப் (அலை) அவர்கள் "விரட்டப்பட்ட சைத்தானின் அத்தனை கேடுகளிலிருந்தும் அல்லாஹ்வே உன்னிடமே நான் உதவி தேடுகிறேன்" என்று சொல்லியவர்களாக, "ஏ சைத்தானே! என்னை விட்டுச் சென்று விடு. இனிமேலும் என் முன்னால் வந்தால் மிகவும் கடுமையான தண்டனையை எதிர்நோக்க வேண்டியதிருக்கும்" என்றார்கள்.

"அய்யூபே! நீங்கள் என்னை ஒதுக்கினாலும், நானே உங்களுக்கு பெரும் சோதனையைத் தரமுடியும். பொறுத்திருந்து பாருங்கள்" என்று சொல்லி விட்டு சைத்தான் கோபமாய் வெளியேறி விட்டான்.
அல்லாஹ் தனக்கு வழங்கிய அனுமதியைக் கொண்டு,நபி அய்யூப் (அலை) அவர்களைச் சோதிக்கத்தொடங்கினான் சைத்தான். அவரது செல்வங்கள் அத்தனையுமே நெருப்பின் துணை கொண்டு எரித்து சாம்பலாக்கி விட்டான். ஒரே நாளில் எல்லாம் இழந்து ஏழையாய் நடுவீதிக்கு வந்து விட்டார்கள் . இத்தனை பாதிப்பு ஏற்பட்ட போதும் நபி அய்யூப் (அலை) அவர்கள் கொஞ்சம் கூட கவலை கொள்ளவில்லை, கலங்கவில்லை. "அத்தனையுமே அல்லாஹ் கொடுத்தது. அவனிடமே திரும்பிச் சென்றிருக்கிறது. அல்லாஹ் நாடினால் மீண்டும் திரும்ப வரலாம்" என்றார்கள். அல்லாஹ்வின் நினைப்பில் இருந்து அவர்கள் கொஞ்சம் கூட விலகவில்லை. வணக்க வழிபாடுகள் முன்பைவிட அதிகமாகியதே தவிர குறையவில்லை.

நபி அய்யூப் (அலை) அவர்களுக்கு பதினான்கு பிள்ளைகள் இருந்தனர். ஒவ்வொரு பிள்ளையாக அத்தனைப் பேரையும் சைத்தான் மரணிக்கச் செய்தான். அடுத்தடுத்து பிள்ளைகளை இழந்து துயரத்தில் தவித்தாலும், நபியவர்களின் மனம் இறைவனை விட்டு விலகவில்லை. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை அதிகரித்தது.

எதற்கும் கலங்காத நபி அய்யூப் (அலை) அவர்கள் உறுதியைக் கண்டு கடும் கோபம் கொண்ட சைத்தான், தீராத நோயைக்கொண்டு அவரை சோதித்தான். கடுமையான அந்த நோய் தாக்குதலிலும் அய்யூப் நபிகள் பொறுமை காத்தார்கள். இறைவன் மீது கொஞ்சமும் நம்பிக்கையை இழக்கவில்லை.

அய்யூப் நபியின் தீராத வியாதியைப் பற்றி அறிந்த ஊர் மக்கள், அந்த நோய் நம்மையும் பாதித்து விடுமோ என்ற பயத்தில் அவரை ஊர் எல்லையான கடற்கரையில் ஒதுங்கி இருக்குமாறு கூறினார்கள்.
நபி அய்யூப் (அலை) அவர்கள் ஆட்சி அதிகாரத்தில் இருந்தது எழுபது ஆண்டு காலம். ஆனால் நோய்வாய்ப்பட்டுக் கஷ்டப்பட்டது பதினான்கு ஆண்டு காலம். நாளுக்கு நாள் சிரமம் கடுமையாகி கொண்டே போனது. அந்த நிலையிலும் இறைவனை வணங்குவதில் அவர்கள் பின்தங்கவில்லை. கஷ்டங்கள் எந்த அளவுக்கு அதிகமானதோ அந்த அளவுக்கு இறையச்சமும், வணக்க வழிபாடுகளும் அதிகரித்தது.
“இறைவா! எனது உடல் முழுவதும் நோயால் பாதிக்கப்பட்டு விட்டாலும் அவை ஒன்றும் உன்னை ‘திக்ரு’ செய்வதில் இருந்து என்னை திசை திருப்பவில்லை. ஆனால் என் நாவை பாதிக்கச் செய்து விடாதே. அதன் மூலம் தானே நான் உன்னை போற்றி புகழ வேண்டும்” என்றார்கள்.

நபி அய்யூப் (அலை) அவர்களின் மனைவியோ தன் கணவருக்கு தொண்டு செய்வதை பாக்கியமாக கருதினார்கள். ஊரில் உள்ள வீடுகளுக்குச் சென்று வீட்டு வேலை செய்து கிடைக்கும் அற்ப தொகையின் மூலம் அன்றாட வாழ்க்கையைத் தள்ளினார்கள். அதனையும் தடை செய்தான் சைத்தான்."தொற்று நோய் இருக்கும் கணவரிடம் இருந்து வருவதால், அவர்களும் நோய் பரவ காரணமாகி விடுவார்கள்" என்று சொல்லி அவர்களின் வேலை வாய்ப்பையும் பறித்து விட்டான்.
நபி அய்யூப் (அலை) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்த போது அவர்களின் மனைவி வீட்டு வேலை செய்து கணவரின் உணவுத் தேவைகளை நிறைவேற்றுவார்கள்.
ஒருமுறை ஒரு வீட்டினருக்கு ரொட்டி சுட்டுக் கொடுத்த போது, வீட்டுக்காரர்கள் அன்னையின் மீது இரக்கப்பட்டு தங்களுடைய மகனுக்காக எடுத்து வைத்திருந்த அவனுக்குப் பிடித்தமான இனிப்புப் பண்டத்தை, அவன் தூங்கிக் கொண்டிருந்த நிலையில் அந்த அன்னையிடம் கொடுக்கிறார்கள்.
அதை தன் கணவரிடம் கொண்டு சென்ற போது, " இது எப்படி உனக்குக் கிடைத்தது ? எனக் கேட்க, விபரத்தை மனைவி கூறிய போது நபி அய்யூப் (அலை) அவர்கள், அதை உடனே கொண்டு போய் திருப்பிக் கொடு.. ஏனெனில் அந்த சிறுவன் எழுந்தவுடன் அதைக் கேட்பான். அவனுடைய உரிமையை நாம் பறித்து விடக் கூடாது" என்று திருப்பி அனுப்பினார்கள். அவ்வாறே அவர்களிடம் மனைவி அதைக் கொண்டு போய் திருப்பிக் கொடுத்தார்கள்
ஒரு நாள் கடுமையான பசி. ஊருக்குள் சென்ற மனைவி, அந்த காலத்தில் வணிகப் பொருளாய் கருதப்பட்டு வந்த தன் தலைமுடியை இழந்து உணவை வாங்கி வந்தார்கள். கடைசி வாய்ப்பு அதுவும் பயன்படுத்தப்பட்டு விட்டது. இதற்கு மேல் என்ன செய்வது என்ற நிலையில் சைத்தான் மீண்டும் மனைவியை அணுகினான்.
“பதினான்கு ஆண்டு காலம் உன் கணவனுக்கு பணிவிடை செய்து விட்டாய். இனி மேலும் அவருக்கு சுகம் கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லை. என்னிடம் ஒரு மருந்து இருக்கிறது. அதனை உட்கொண்டால் உடனே சுகம் கிடைக்கும். ஆனால் ஒரு நிபந்தனை, ‘இந்த நோய் இறைவனால் அல்ல, இந்த மருந்தால் தான் குணமாகியது’ என்று உன் கணவன் சொல்ல வேண்டும்” என்றான்.

மனைவியின் மனம் சற்று தளர்ந்தது. கணவனிடம் சென்று முறையிட்டார்கள். அய்யூப் நபிகள் கோபத்தின் எல்லைக்கே சென்று விட்டார்கள். ‘மருந்தைக் கொண்டு இறைவனுக்கு இணை வைக்கச் சொல்கிறாயா? நோயைத் தருபவனும் அவனே, அதனை நிவர்த்தி செய்பவனும் அவனே’ என்று சொல்லிவிட்டு இறைவனை நோக்கி, “நிச்சயமாக நோய் என்னைப் பிடித்து கொண்டது, அதை நீக்கி விடு. நீயோ கிருபையாளர்களில் எல்லாம் மகா கிருபையாளன்” என்று பிரார்த்தனை செய்தார். (திருக்குர்ஆன் 21:83)
அதைத் தொடர்ந்து, “இறைவா, நிச்சயமாக சைத்தான் எனக்கு துன்பத்தையும் வேதனையையும் கொடுத்து விட்டான்” என்று கூறினார். (திருக்குர்ஆன் 38:41)
தனது அடியானின் பிரார்த்தனையை ஏற்ற இறைவன் அவருக்கு உடனே அருள்புரிந்தான். இதை திருக்குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது:
(அதற்கு நாம்) “உங்களுடைய காலை(ப் பூமியில்) தட்டுங்கள்” (என்று கூறினோம். அவர் தட்டவே ஓர் ஊற்று உதித்தோடியது. அவரை நோக்கி) “இதோ நீங்கள் குளிப்பதற்கான குளிர்ந்த நீர். (இதுவே உங்களது) பானமுமாகும்” என்று கூறினோம். (அதனால் அவருடைய நோய்கள் குணமாகி விட்டன.) (திருக்குர்ஆன் 38:42).
ஒரு வெள்ளிக்கிழமை நபியவர்களை பீடித்திருந்த பீடை நோய் குணமாக , ஜிப்ரயீல் (அலை) அவர்கள் , "நபியே ! உம்முடைய வலக் காலை மண்ணிலே அடியும் ! என்றார்கள் . அடித்ததும் வெந்நீர் ஊற்று தோன்றியது . " இதோ நீர் குளிப்பதற்கான நீர் . நபியவர்கள் குளித்தார்கள் .
40 அடி தள்ளி , " உம்முடைய இடது காலால் அடியும் " . குளிர்நீர் ஊற்று தோன்றியது . " இதோ நீர் குடிப்பதற்கான நீர் "
இந்த இரு நீர் ஊற்றுகள் சிரியாவின் உர்துன் மாநிலத்தில் நாவா என்னும் ஊருக்கு அருகில் இன்றும் "அய்னே ஐயூப்" என்ற பெயருடன் நீர் ஊற்றுகள் உள்ளது. நோயாளிகள் குளித்து நோய் நீங்கப் பெறுவதாக ரௌஸதுஸ் ஸபாவில் எழுதப்பட்டுள்து .

“பின்னர் நம்முடைய அருளாகவும், அறிவுடையவர்கள் நல்லுணர்ச்சி பெறுவதற்காகவும் நாம் அவருக்கு பிரிந்திருந்த குடும்பத்தையும் அதைப் போன்றதையும் கொடுத்து அருள் புரிந்தோம்” (திருக்குர்ஆன் 38:43)

சைத்தானின் அத்தனை முயற்சிகளும் தோற்று விட்டன.நபி அய்யூப் (அலை) அவர்களின் உறுதிப்பாட்டை அவனால் குலைக்க முடியவில்லை. எத்தனை கஷ்டங்களைச் சந்தித்தாலும் அல்லாஹ்வின் நினைப்பிலிருந்து அய்யூப் நபிகள் விலகவில்லை. இறைநம்பிக்கையில் உறுதியாய் இருந்தார்கள்.
அல்லாஹ் அந்த நிகழ்வைப் பற்றி குறிப்பிடும் போது ‘நபிமார்களிலேயே இத்தனை கடுமையான நோய்வாய்ப்பட்டிருந்தும் கொஞ்சம் கூட கலங்காமல் பொறுமை காத்தார், பொறுமையின் பொக்கிஷம் அய்யூப் நபிகள்’ என்று பெருமிதத்தோடு குறிப்பிடுகிறான்.
உண்மையில் இத்தகைய சோதனைகள் தங்களுக்கு ஏற்பட வேண்டும் என்று ஐயூப் (அலை) அவர்களுக்கு முன் எழுபது நபிமார்கள் இறைஞ்சினர் என்றும், இறைவன் ஐயூப் (அலை) அவர்களையே அதற்கென தேர்ந்தெடுத்தான் என்றும் கூறப்படுகிறது.

## மனோசக்தி 1



பிரச்னைகள் நிறைந்ததுதான் வாழ்க்கை. பிரச்னைகளைப் பெரிதாக நினைத்துக் கொண்டால், தைரியம் குறைந்து, பயம் வந்து வாழ்க்கை மோசமாகிவிடும். பிரச்னைகள் பலவிதம்; ஒவ்வொன்றும் ஒருவிதம். ஒருவருக்குப் பிரச்னையாக இருப்பது வேறொருவருக்கு பிரச்னையாக இருக்காது.

ஒருவர் தமது பேச்சாலும், செயல்பாட்டாலும் தமக்கு உருவாக்கிக் கொள்ளும் பிரச்னைகள் ஒருபக்கம். மற்றவர்களாலும், இயற்கையாலும் உண்டாகும் பிரச்னைகள் மறுபக்கம்.
மற்றவர்களாலும், இயற்கையாலும் வரும் பிரச்னைகளுக்குத் தமது அனுபவம், அனுபவசாலிகள், பெரியோர்களது ஆலோசனை ஆகியவற்றின் உதவியால் தகுந்த தீர்வு பெறமுடியும்.
சில சமயங்களில் ஒரு பிரச்னைக்குப் பல தீர்வுகள் கிடைக்கும். எதை ஏற்றுக்கொள்வது என்று குழப்பமாயிருக்கும். இதுபோன்ற பிரச்னைகளை ஆழ்மனதுக்கு அனுப்பிவிட்டால், சரியான தீர்வு கிடைக்கும். நம்மால் தீர்க்கக்கூடியவை, நம்மால் தீர்க்க முடியாதவை என்றவகையில் பிரச்னைகளைப் பிரித்துவிட்டால், மிகச்சுலபமாக அவைகளைக் கையாள முடியும்.
“எதற்காகத் தூங்குகிறோம்” எனக்கேட்டதற்கு, “தூக்கம் வருகிறது; அதனால் தூங்குகிறோம்” என்று பலர் கூறினர். நம் உடல் செல்கள் சோர்வடைந்த தம்மைப் புதுப்பித்துக்கொள்ளவும், சக்தி ஓட்டப் பாதைகளில் (Meridians) உள்ள நரம்புகளைப் பழுது நீக்கவுமே தூக்கம் வருகிறது.
“பொதுவாக நமது எண்ணங்கள்தான் உறக்கத்திலே காட்சிகளாக வடிவம் பெற்று கனவுகள் என்று பெயர் பெறுகின்றன. – இது சிலர் கூற்று;
”நம் ஆழ்மனதின் வெளிப்பாடே கனவுகள்” –இது ஆராய்ச்சியாளர்களின் முடிவு;
”உறக்கத்தில் மனதில் அனுபவம், உருவம், சப்தம், உணர்ச்சி இவற்றின் தொடர் காட்சிகளே கனவுகள்” – இது ஆன்மீகவாதிகளின் அறிவிப்பு.
ஆனால் நபிமொழி ஹதீஸ் : "உண்மைக் கனவுகள் நபித்துவத்தின் 46 பங்குகளில் ஒரு பங்காகும்".

‘கனவு என்பது தூக்கத்தில் வருவதல்ல. உன்னைத் தூங்கவிடாமல் செய்வது’ என்றார் இன்றைய இளைஞர் இயக்கத்தின் நிறுவனர் முன்னாள் பாரத குடியரசுத்தலைவர் அப்துல்கலாம் அவர்கள்.
ஒரு மனிதனின் சராசரியான வாழும் காலத்தில் 10ல் 1 பங்கு கனவுக் காலமாய் கழிகிறது. தினமும் சுமார் 2 மணிநேரம் கனவு காண்கிறோம்.

ஒரு மணி அல்லது ஒன்றரை மணிநேர இடைவெளியில் 5 முதல் 15 நிமிட நேரம் நீடிக்கும். காட்சிகளைக் கனவாய் காண்கிறோம். அதிகாலைக் கனவுகள் 15 நிமிடங்களுக்கும் அதிக நேரம் நீடிக்கும்.
ஆண்களைவிடப் பெண்களுக்கு அதிக அளவில் கனவுகள் வருகின்றன.
நேர் மறையானதை விட எதிர்மறையான காட்சிகளே அதிகம் வருகின்றன (பல பிரச்னைகளில் சிக்கித் தடுமாறுவது, உயிருக்கு பயந்து ஓடுவது போன்றவை).
நமது மனத்தை மூன்று நிலைகளாகப் பிரித்து வைத்துள்ளனர்.

**மேல் அல்லது புறமனம் Conscious Mind**

**நடுமனம் Sub-Conscious Mind**

**ஆழ்மனம் Super Conscious Mind**

மேல் மனம் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் செயல்படும்; அவற்றைப் பதிவு செய்யும்.
நடுமனம் பழக்கத்தின் அடிப்படையில், விருப்பத்தின் அடிப்படையில் செயல்படும்; அவைகளைப் பதிவு செய்யும்.
ஆழ்மனம் விருப்பு வெறுப்பின்றி, நியாய உணர்வுடன், தெய்வீக சிந்தனையுடன் செயல்படும்; அவைகளைப் பதிவு செய்யும். தீர்க்க முடியாத பிரச்னைகளுக்கான சரியான தீர்வைத் தேடிக் கண்டுபிடித்துக் கொடுக்கும்.
ஒரு பூட்டு தயாரிக்கும்போதே, அதற்குப் பல சாவிகள் தயாரிப்பது போல, எந்தப் பிரச்னையும் வரும்போதே, பலவிதமான தீர்வுகளுடனேயே வருகின்றது.
நபருக்கு நபர் பிரச்னைகளும், தீர்வுகளும் வேறுபடும்.
ஒருவருக்குள்ள பிரச்னை தீர ஒருவிதமான செயல்பாடு தேவையென்றால், வேறொருவருக்கு இதே பிரச்னைக்கு இதே செயல் தீர்வாக அமையாமலும் போக வாய்ப்புண்டு.
இந்நிலையில் இவற்றுள் எந்த ஆலோசனைப்படி செயல்பட்டால், பிரச்னை சரியாகும் என்று எண்ணி உறங்கச் செல்ல வேண்டும். தொடர்ந்து எண்ணும்போது சரியானதீர்வு அவருக்கு ஏதோ ஒரு காட்சி மூலம் கனவாகத் தெரியும்.

கையால் தைக்கும் ஊசியில் நூல்கோர்க்கும் துவாரம், கூர்மையான பகுதிக்கு எதிர்ப்பகுதியில் இருக்கும். ஆனால் தையல்மிஷினில் உள்ள ஊசியில் கூர்மையான பகுதியிலேயே நூல்கோர்க்கும் துவாரம் இருக்கும். இதைக்கண்டு பிடித்தவர் பல நாட்களாக முயன்றும் தீர்வு கிடைக்காத நிலையில், இதே நினைவாக உறங்கும்போது, அவர் கண்ட கனவிலிருந்து, கூர்மையான பகுதியில் துவாரமிட்டு ஊசியை வடிவமைத்தார். உறக்கத்தில் கண்ட கனவில் இவர் ஆதிவாசிகள் வாழும் காட்டுப்பகுதிக்குச் சென்றுவிட்டார். அவர்கள் இவரைத் தம் தலைவனிடம் அழைத்துச் செல்கின்றனர். தலைவனோ, இவரை கொதிக்கும் எண்ணெய் கொப்பரையில் போட்டு, வேகவைத்து, விருந்துண்ணுமாறு ஆணையிட்டான்.

மகிழ்ச்சியில் ஆதிவாசிகள் கையிலிருந்த ஈட்டி போன்ற கூர்மையான ஆயுதத்தால் நிலத்தைத் தொடர்ந்து தொட்டுத்தொட்டு, இவரைச் சுற்றி ஆடிவந்தனர். இந்தக் காட்சி தையல் மிஷினை ஞாபகப்படுத்திற்று. கூர்மையான பகுதி கீழே மேலே சென்று வருவதைக் கண்ட இவருக்கு, அந்தப்பகுதியில் துளைபோட்டு நூலைக்கோர்க்கும் எண்ணம் வந்தது. தூக்கம் கலைந்தது. கனவு முடிந்தது. தையல் ஊசி கண்டுபிடிக்கப்பட்டது. இதுபோல் பலவற்றைக் கூறலாம்.

"உண்மைக் கனவுகள் நபித்துவத்தின் 46 பங்குகளில் ஒரு பங்காகும்".
எனவே, எந்தப் பிரச்னையாலும் தீர்வுகள் இல்லாமல் வருவதேயில்லை எனத் திடமாக நம்ப வேண்டும்.
அந்தத் தீர்வுகளைத் தேடித் தாகத்துடன் உறங்கச் செல்ல வேண்டும்.
முழுமன ஈடுபாடு, கட்டாயம் தீர்வுகளுடன் உறக்கத்திலிருந்து நம்மை எழுப்பும்.

## மனோசக்தி 2

(மௌனம்)



மௌனம் பல்வேறு பரிமாணங்களில் நம்மை ஆட்கொள்கிறது. வெற்றியின்போது அடக்கமாகவும், தோல்வியின்போது பொறுமையாகவும், உறவுகள் பிரியும்போது துக்கமாகவும், பிரார்தனையின்போது இறைவனை உணர்த்தும் சக்தியாகவும்,
உண்மையானவர் வெற்றி பெறும்போது மகிழ்ச்சியாகவும், தனிமையின் போது ஊன்றுகோலாகவும், எதிரிகள் ஏளனம் செய்யும்போது கேடயமாகவும், இன்னல்களை எதிர்கொள்ளும் போது வலிமை மிக்க வன்முறையற்ற ஆயுதமாகவும் மௌனம் விளங்குகிறது. மௌனம் பற்றி திருக்குர்ஆன்
மர்யம் (அலை) அவர்கள் கன்னியாக வளர்ந்தார்கள். பக்குவமும் ஒழுக்கமும் நிறைந்த பெண்ணாகத் திகழ்ந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் குளிப்பதற்குத் தயாராகி தனித்திருந்த போது மனித தோற்றத்தில் வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்தார்கள்.
தான் தனித்திருக்கும் போது ஒரு ஆண் வருவதைக் கண்டு பயந்த மர்யம், அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடினார்கள். அப்போதுதான் வந்தவர், தான் வானவர் என்றும், உனக்கு ஒரு ஆண் குழந்தை கிடைக்கப் போகிறது என்றும் கூறினார்.
இதைக் கேட்டு மர்யம் (அலை) அவர்கள் அதிர்ச்சி அடைந்தார். “எந்த ஆணும் என்னைத் தொட்டதில்லை. நான் கெட்டவளும் இல்லை. இப்படி இருக்க எனக்கு குழந்தை கிடைக்குமா?” என்று கேட்டார்கள்.
“இது உன் இறைவனின் ஏற்பாடு. அவன் அனைத்திற்கும் ஆற்றல் உடையவன். உனக்கு ஒரு குழந்தை கிடைக்கும். அந்தக் குழந்தை இறுதி நாளுக்கான அத்தாட்சியாக இருக்கும்” என்று கூறி மர்யமின் கற்பில் ரூஹை ஊதினார். குர்ஆன் (19 : 20 - 22)

மர்யம் (அலை) அவர்கள் கர்ப்பவதியானார்கள். ஒருநாள் கர்ப்ப வேதனை அதிகரித்தது. குழந்தை கிடைத்தால் குழந்தையின் தந்தை யார் ? என மக்கள் கேட்டு கேவலப்படுத்துவார்களே... என்று மரியம் அவர்கள் கவலைப்பட்டார்கள்.
அப்போது ஒரு சத்தம் கேட்டது. "ஒரு ஈத்த மரம் இருக்கிறது. அதை உசுப்பினால் அதிலிருந்த ஈத்தம் பழங்கள் விழும். அதை உண்டு வாழவும், ஒரு நீரோடை இருந்தது. அதில் நீர் அருந்துமாறும் அல்லாஹ் கட்டளை இட்டான். யாரும் பேசினால் அவர்களுடன் பேச வேண்டாம் என்றும், தான் உண்ணாவிரதம் இருப்பதாகவும் கூறச் சொன்னது " . தாயார் மௌனம் கடைப்பிடித்ததால் பிறந்த தொட்டில் குழந்தை பதில் பேசியது

وَّبَرًّۢابِوَالِدَتِىْ وَلَمْ يَجْعَلْنِىْ جَبَّارًا شَقِيًّا
“என் தாயாருக்கு நன்றி செய்பவனாக (என்னை ஏவியிருக்கின்றான்;) நற்பேறு கெட்ட பெருமைக்காரனாக என்னை அவன் ஆக்கவில்லை.
(அல்குர்ஆன் : 19:32)
وَالسَّلٰمُ عَلَىَّ يَوْمَ وُلِدْتُّ وَيَوْمَ اَمُوْتُ وَيَوْمَ اُبْعَثُ حَيًّا

“இன்னும், நான் பிறந்த நாளிலும், நான் இறக்கும் நாளிலும் (மறுமையில்) நான் உயிர் பெற்று எழும் நாளிலும் என் மீது சாந்தி நிலைத்திருக்கும்” என்று (அக்குழந்தை) கூறியது. (அல்குர்ஆன் : 19:33)
எவர் வாய்மூடி இருக்கிறாரோ அவர் முக்தி பெற்றவர் என்று முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மொழிந்ததை இயம்புகிறார் இப்னு உமர் (ரலி) நூல்- திர்மிதீ.
நல்ல சொல் அல்லாஹ்வின் நெருக்கத்தை ஏற்படுத்தும். நவிலும் சொல்லில் நன்றல்லாதது ஒன்றான இறைவனிடம் ஒன்றாது தடுத்து விடும் என்ற தாஹா நபி (ஸல்) அவர்களின் தகவலைத் தருகிறார் அபூஹுரைரா (ரலி) நூல்- புகாரி, முஸ்லிம், திர்மிதீ, முஅத்தா.

இனிய நபி (ஸல்) அவர்களின் இக்கருத்துகளைக் கவனமாக கடைபிடிப்பதற்காக நபி தோழர் முதல் கலீபா அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் தேவையற்ற பேச்சுகளை பேசாதிருக்க வாயில் கூழாங்கற்களை அடைத்துக் கொள்வார்கள்.
" சுருங்க சொல்லி விளங்க வைக்குமாறு நான் கட்டளை இடப்பட்டு இருக்கிறேன்" . நபி (ஸல்) அவர் கூறியதாக அபூஹுரைரா (ரலி) நூல் - திர்மிதீ, முஅத்தா.
வார்த்தைகள் இல்லாத புத்தகமாக மௌனம் விளங்குகிறது. மௌனமாக சிந்திக்கும் போதுதான் மனதில் புதிய கருத்துகள் ஒளிர்கின்றன. எண்ணங்கள் பளிச்சிடுகின்றன.
சிலர் ஒரு வரியில் பேச வேண்டியதை ஒன்பது வரியில் பேசி, கேட்பவர்களைக் கொட்டாவி விட வைப்பார்கள். அதிகம் பேசுகிறவனை உலகம் விரும்புவதில்லை. எப்போதும், மௌனமாக இருக்க கற்றுக் கொண்டால் பிரச்சனை ஏதும் இல்லை.
மௌனமாக இருப்பவர்களை ஒன்றும் தெரியாதவர்கள் என்று சிலர் எண்ணுவார்கள். அந்த சமயத்தில் மௌனத்தைக் கலைத்து ஏதேனும் சொல்லி உண்மையில் மூடர் என்பதை நிரூபிக்கக் கூடாது. சங்கடமான நேரங்களில் மௌனமாக இருப்பதே சாலச் சிறந்தது.
கோபம் எதிர் கொண்டோரை பேச்சு அழிக்கும். ஆனால், கோபத்தில் நாம் காக்கும் மௌனம் நமக்கு பாதுகாப்பாக விளங்குகிறது. இதைத்தான் வள்ளுவரும், "யாகாவராயினும் நாகாக்க' என்றார்.
மௌனம் என்ற மரத்தில்தான் அமைதி கனிகள் காய்க்கும். மௌனம் கடவுளின் மொழி, அலைகள் பேசினாலும் , பூக்கள் பேசுவதில்லை என்றார் ஒரு கவிஞர்.

மௌனம் பிறருக்கு நாம் செய்த உதவிகளை மற்றவர்களிடம் பகிரங்கப்படுத்தி உதவி பெற்றவர்களைப் பங்கபடுத்தாது பாதுகாக்கும்.
பிறர் நம்மிடம் நவிலும் ரகசியங்களை எந்த சூழ்நிலையிலும் எவரிடத்தும் வெளிப்படுத்தாமல் பாதுகாக்க சாதகமாக அமையும். அதனால்தான் மௌனம் பலம் பொருந்திய கோட்டை என்று கூறினார் அபூசுலைமான் தாரானி (ரஹ்).
தொழுகையை முறையாக தொழுது நாவைச் சீராய் காத்தால் சகல செயல்களும் சீரகாக இருக்கும் என்று இயம்பினார் யூனுஸ் இப்னு உபைத் (ரஹ்).
வீண் பேச்சினால் வேலையை இழந்தவர்கள் உண்டு. அதிக பேச்சு அமைதியைக் குலைக்கும். மனஅமைதியும் பறிபோகும். சுற்றுச்சூழலையும் பாதிக்கும். சிந்தித்து சிக்கனமாய் பேசுவது சிறப்பைத் தரும். அமைதி காக்க வேண்டிய இடத்தில் அனாவசிய பேச்சு ஆபத்தை உண்டாக்கும்.
மன்சூர் இப்னு முஅதஸ் என்ற பெரியார் இரவு- இஷா தொழுகைக்குப்பிறகு எதுவும் பேசாமல் நாற்பது ஆண்டுகள் மௌனம் காத்தார்.
இன்னொரு பெரியார் ரபீவு இப்னு கைதம் உலக விவகாரங்கள் பற்றி இருபது ஆண்டுகள் பேசாது மௌனம் காத்தார்.
மௌனம் என்பது இறை மொழி. மற்றவை மாற்றமான மொழிபெயர்ப்புகள் என்று மொழிந்தார்.
மௌலானா ரூமி (ரஹ்).
வாய்மூடி இருந்தால் மனம் மூடும். மனம் மூடினால் ' நான் ' என்ற மமதை மறையும். ' நான் ' என்ற மமதை மறைந்தால் இறை பேற்றைப் பெறலாம்.
இதனையே குணங்குடி மஸ்தான்,
" நான் என்பது அற்று
நீ என்பது உற்று
நான் நீ ஆவது எக்காலமோ? " _என்று பாடினார்.

**மனோசக்தி 3**
( ஆழ்மனம் )



ஒரு மனிதனின் வெற்றி - தோல்வியையும், அவன் பலங்கள், பலவீனங்களையும் தீர்மானிப்பது அவன் ஆழ்மன நிலையே தான். ஏன் ஒருவர் இன்று எப்படி இந்த உலகில் வாழ்கிறார் என்பதைத் தீர்மானிப்பதும் ஆழ்மனமே. இது நூறு சதவீதம் உண்மை. சுமார் 250 வருடங்களுக்கு முன்னால் மெஸ்மர் ஹிப்னாடிசம் மூலம் மனிதனின் தீராத நோய்களைக் கூட தீர்க்க முடியும் என்று கண்டு பிடித்தார். ஹிப்னாடிசம் என்பது ஆழ்மனதை வசப்படுத்துவது தான்.
ஆழ்மனதில் எதை மனிதன் நம்புகிறானோ அதுவே அவனுக்கு உண்மையாகிறது என்பதைப் பின்னால் நடைபெற்ற பல விஞ்ஞான ஆராய்ச்சிகள் உறுதிப்படுத்தின.
ஹிப்னாடிசம் செய்து ஏர்கண்டிஷன் அறையில் இருக்கும் ஒருவரிடம் நீங்கள் சஹாரா பாலைவனத்தில் இருக்கிறீர்கள், உங்களுக்கு வெயில் தாங்க முடியவில்லை என்று சொன்னால் அவருக்கு உடனடியாக வியர்வை கொட்ட ஆரம்பித்து விடும்.

சாதாரண தரையில் நின்று கொண்டிருக்கும் ஒருவரிடம் நீங்கள் கடலில் படகில் சென்று கொண்டிருக்கிறீர்கள், இப்போது உங்கள் படகு அலைகளில் சிக்கி தத்தளிக்கிறது என்று சொன்னால் அவர் நிஜமாகவே அலையில் சிக்கிய படகில் இருந்தால் எப்படி தள்ளாடுவாரோ அப்படியே ஆட ஆரம்பித்து விடுவார். இது போன்ற ஆராய்ச்சிகளில் நிரூபிக்கப்பட்ட சம்பவங்கள் ஏராளம்.

அமெரிக்காவின் ஸ்டான்ஃபோர்டு பல்கலைகழகத்தில் சென்ற நூற்றாண்டில் ஹிப்னாடிசம் குறித்து எர்னெஸ்ட் ஹில்கார்டு (Ernest Hilgard) 1970களில் செய்த சோதனை ஒன்றில் நன்றாகக் காது கேட்கும் சக்தி உள்ள ஒரு குருடனை ஹிப்னாடிசத்திற்கு உள்ளாக்கி 'உன்காதுகள் கேட்கும் சக்தியை இழந்து விட்டன' என்று அவன் ஆழ்மனதை நம்ப வைத்தார்.
பின் அவனிடம் கேட்ட எந்த கேள்விகளுக்கும் பதில் இல்லை. எத்தனை பெரிய சத்தத்தை உண்டாக்கினாலும் அவனிடம் எந்த பாதிப்பும் இல்லை. காதுக்கு அருகே ஏற்படுத்தப்பட்ட சத்தங்கள் கூட அவனை எதுவும் செய்யவில்லை. டமாரச் செவிடு என்பார்களே அது போலவே ஹிப்னாடிசத்தில் இருந்து வெளிவரும் வரை அவன் இருந்தான்.
அவர் செய்த இன்னொரு ஆராய்ச்சி ஐஸ் தண்ணீரில் கைகளை வைப்பதைப் பற்றியது. நல்ல தெளிவு நிலையில் இருக்கும் ஒருவரால் சில வினாடிகளுக்கு மேல் அதில் கைகளை வைத்து இருக்க முடியவில்லை. வலி மிகுதியால் உடனடியாக அவர்கள் கைகளை எடுத்துக் கொண்டார்கள்.
ஆனால் ஹிப்னாடிசத்தில் சிலரை ஈடுபடுத்தி அவர்களிடம் அது சாதாரண தண்ணீர் என்று அவர்களை கைகளை வைக்கச் சொன்ன போது அவர்களால் பல நிமிடங்கள் எந்த பாதிப்பும் இல்லாமல் கைகளை வைத்திருக்க முடிந்தது.
இதிலிருந்து மிகப்பெரிய உண்மை ஒன்றை நாம் புரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு மனிதருக்கும் ஆழ்மனம் நம்புவது தான் நிஜம். அதன்படியே அவர்கள் உணர்கிறார்கள். அதன்படியே அவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். அது பொய்யான தகவலாகவே இருந்தாலும் உண்மை என்று ஆழ்மனம் எடுத்துக் கொண்டால் அதுவே அவர்களுக்கு உண்மையாகிறது. அதன்படியே அவர்கள் அனுபவம் அமைகிறது.
துரதிர்ஷ்டவசமாக இது ஆராய்ச்சிகூடத்தில் ஒரு ஹிப்னாடிஸ்ட் மூலமாகத்தான் செய்யப்படுகிறது என்ற நிலைமை இல்லை. தினசரி வாழ்க்கையில் இது சர்வசகஜமாக நடக்கிறது.

ஒரு வேடிக்கைக் கதையை நீங்கள் படித்திருக்கலாம். நன்றாக ஆரோக்கியமாக உள்ள ஒருவன் காலையில் உற்சாகமாக வீட்டை விட்டுக் கிளம்புகிறான். முன்பே பேசி வைத்துக் கொண்டிருந்த அவன் நண்பர்கள் அவன் போகிற பாதையில் ஒவ்வொருவராகக் கிடைக்கிறார்கள்.
முதலாமவன் "என்ன ஆயிற்று. ஏன் என்னவோ போலிருக்கிறாய்?" என்று கேட்கிறான்.
நம் ஆள் "இல்லையே நன்றாகத்தானே இருக்கிறேன்," என்கிறான்.
சிறிது தூரம் கழித்து இன்னொரு நண்பன் அவனிடம் "என்ன உடம்பு சரியில்லையா?" என்று கேட்கிறான்.
இப்படியே ஒவ்வொருவரும் அவன் உடல்நிலை பற்றி மோசமாகவே கேட்க நம் ஆள் நிஜமாகவே நோய்வாய்ப்பட்டு படுத்து விடுகிறான். இது கதை ஆனாலும் நிஜமாக நம் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் நடக்கக் கூடியதே.
நாம் மற்றவர்கள் கருத்து மூலமாகவும், நம் தவறான புரிந்து கொள்ளல் மூலமாகவும் நம் ஆழ்மனதிற்குத் தவறான அபிப்பிராயங்களை உண்மை என அனுப்பினால் அதுவே நம் வாழ்வில் உண்மையாகி விடும்.
"நான் அதிர்ஷ்டம் இல்லாதவன். எனக்கு நல்லது எதுவும் அமையாது" என்று ஆழ்மனதில் பதித்து வைத்திருக்கும் மனிதர்கள் துரதிர்ஷ்டசாலிகளாகவே கடைசி வரை இருந்து விடுகிறார்கள். "நான் பலவீனமானவன்", "என்னால் இது முடியாது", "எனக்கு ஆரோக்கியம் சரியில்லை" என்ற ஆழ்மனப்பதிவுகள் பலவீனர்களையும், இயலாதவர்களையும், நோயாளிகளையுமே கண்டிப்பாக உருவாக்கும்.
இதற்கு உதாரணங்களைப் பார்க்க ஆராய்ச்சிக் கட்டுரைகள் எல்லாம் படிக்க வேண்டியதில்லை. நம்மைச் சுற்றிலும் பார்த்தால் போதும், நூற்றுக் கணக்கான உதாரணங்களை நாமாகவே அறிந்து கொள்ளலாம். அதே போல் வெற்றியாளர்களைக் கூர்ந்து பார்த்தால் அவர்கள் ஆழ்மனப்பதிவுகள் தோல்வியாளர்கள் ஆழ்மனப்பதிவுகளுக்கு நேர் எதிராக இருக்கும்.
நாம் பல சமயங்களில் நம்மை அறியாமலேயே சுயமாக நம்மை நாமே ஹிப்னாடிசம் செய்து கொண்டு கருத்துகளைப் பதிவு செய்து கொண்டு விடுகிறோம்..
அது போல சில சமயங்களில் நாம் மிகவும் நம்பும் அல்லது மதிக்கும் மனிதர்களை நம்மை ஹிப்னாடிசம் செய்து கருத்துகளை நம் மனதில் பதிக்க அனுமதித்து விடுகிறோம். அந்தக் கருத்துகள் உயர்ந்ததாகவும், பலம் வாய்ந்ததாகவும் இருக்கும் போது நாம் சாதனையாளர்கள் ஆகிறோம். மாறாக அவை தாழ்ந்ததாகவும், பலமிழந்தும் இருக்கிற போது தோல்வியாளர்களாகவும் மாறி விடுகிறோம்.
தினந்தோறும் நூற்றுக் கணக்கான தகவல்களை மேல் மனம் தந்தபடி இருக்க அவற்றை ஆழ்மனம் மனதில் பதித்துக் கொண்டும், ஒழுங்கு படுத்திக் கொண்டும், புதுப்பித்துக் கொண்டும் இருக்கிறது. ஓரிரு எண்ணங்கள் தவறாகவும், பலவீனமாகவும் உள்ளே செல்வதில் பெரிய பாதிப்பு இருக்காது. தொடர்ந்து அதே போல் எண்ணங்கள் ஆழ்மனதில் பதிய ஆரம்பித்தால் தான் பிரச்னை.
எனவே மேல்மனம் எடுத்து உள்ளே அனுப்பும் தகவல்களில் மிக கவனமாக இருங்கள். மேல்மனம் அனுப்பும் தகவல்கள் தொடர்ந்து பயம், பலவீனம், கவலை, தாழ்வு மனப்பான்மை கொண்ட எண்ணங்களாக இருந்தால் அவை பலப்பட்டு அப்படியே பதிவாகி அதை மெய்ப்பிக்கும் நிகழ்வுகளாக உங்கள் வாழ்வில் கண்டிப்பாக வரும். அதற்கு எதிர்மாறாக தைரியம், வலிமை, தன்னம்பிக்கை, மகிழ்ச்சி, உற்சாகம் போன்ற தகவல்களாக மேல்மனம் உள்ளே தொடர்ந்து அனுப்பினால் அதுவும் அப்படியே உங்கள் நிஜ வாழ்வில் பிரதிபலிக்கும் என்பது உறுதி.
இப்போது ஒரு கேள்வி எல்லோர் மனதிலும் எழலாம். ஹிப்னாடிசம் மூலமாக யாரையும் எப்படியும் மாற்ற முடியுமா? அதற்கு ஒரு நிகழ்வைச் சொல்லலாம்.

ஒரு ஆராய்ச்சியாளர் ஒரு பெண்ணை ஹிப்னாடிசம் செய்து பல வியக்க வைக்கும் அற்புதங்களைச் செய்து காட்டினார்.
கடைசியில் அந்தப் பெண்ணை ஆடைகளைக் களையச் சொன்ன போது மட்டும் அந்தப் பெண் அப்படிச் செய்யாமல் பேசாமல் நின்றாள். "ஏன்?" என்று கேட்ட போது "அது தவறு" என்ற பதில் வந்தது.
நம் ஆழ்மனதில் முன்பே ஆழமாகப் பதிந்துள்ள நமது ஒழுக்கத்திற்கோ, நம்பிக்கைகளுக்கோ, மதிப்பீடுகளுக்கோ எதிராக யாரும் நம்மை ஹிப்னாடிசம் மூலமாக செயல்படுத்தி விட முடியாது. இதை எத்தனையோ சோதனைகள் நிரூபித்துள்ளன.
இதையெல்லாம் வைத்து யோசித்துப் பார்த்தால் நம் இன்றைய நிலைக்கு மிகப் பெரிய பொறுப்பு வகிப்பது நம் ஆழ்மனமே. இப்போதைய வாழ்க்கை நிலை போதாது என்று தோன்றினால் நாம் ஆழ்மனப் பதிவுகளை மேம்படுத்தி புதுப்பித்துக் கொள்வதே வழி.

ஆழ்மன சக்தி பெறத் தடையாக இருக்கும் குணங்களில் மிக முக்கியமானது அவநம்பிக்கை என்று முன்பு சொன்னதன் காரணம் இப்போது மேலும் நன்றாக விளங்கி இருக்கும் என்று நம்புகிறேன்.
இந்த சக்திகள் எல்லாம் நமக்கு வராது என்று ஆழ்மனதில் அழுத்தமான எண்ணம் இருந்தால் அந்த சக்திகள் கண்டிப்பாக கைகூட வாய்ப்பே இல்லை. அது போல் ஆழ்மன சக்திகள் வகைகளில் எதெல்லாம் சாத்தியம் என்று நீங்கள் உறுதியாக நம்புகிறீர்களோ அதையெல்லாம் கண்டிப்பாக நீங்கள் வெளிப்படுத்த முடியும்.
பைபிளில் இந்த உண்மையை விளக்கும் ஒரு சம்பவம் அழகாக சொல்லப்பட்டு இருக்கிறது.
இயேசு கிறிஸ்துவிடம் குருடர்கள் வந்தார்கள். அவர்களிடம் இயேசு கேட்டார். "என்னால் உங்களைக் குணப்படுத்த முடியும் என்று நீங்கள் நம்புகிறீர்களா?" அவர்கள் கூறினார்கள். "ஆமாம் பிரபு" இயேசு அவர்களுடைய

கண்களைத் தொட்டு கூறினார். "உங்கள் நம்பிக்கையின் படியே உங்களுக்கு ஆகக் கடவதாக!". அவர்கள் கண்கள் திறந்தன (பார்வை பெற்றார்கள்)". (மாத்யூ 9:28:30)
இங்கு இயேசு பிரான் அவர்களுடைய ஆழ்மன நம்பிக்கையைத் தான் குறிப்பிடுகிறார். அந்த நம்பிக்கையின் படியே அவர்கள் பார்வை பெற்றனர் என்பதைக் கவனிக்கவும்.

சலமா பின் அல்அக்வஉ (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு அருகில் இடக் கையால் உணவு உண்டார்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "வலக் கையால் உண்பீராக!" என்று சொன்னார்கள்.
அவர், "என்னால் முடியாது" என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உம்மால் முடியாமலே போகட்டும்!" என்று சொன்னார்கள். அகம்பாவமே அவரை (அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கட்டுப்படாமல்) தடுத்தது. அவ்வாறே, அவரால் தமது வாய்க்குக் கையை உயர்த்த முடியாமல் போனது. ( முஸ்லிம் 4110)
ஆழ்மன சக்திகளுக்கு எதிரான பண்புகளோ, நம்பிக்கைகளோ உங்கள் ஆழ்மனதில் இருக்கின்றனவா என்று நீங்கள் கணக்கெடுக்க வேண்டிய நேரம் இது. அப்படி இருந்தால் அதற்கு எதிர்மாறான பண்புகளையும், நம்பிக்கைகளையும் சிறிது சிறிதாக வளர்த்துக் கொள்ளுங்கள்.
அதற்குத் தேவையான நூல்களைப் படியுங்கள். தேர்ச்சி பெற்ற அறிஞர்களின் அனுபவங்களைப் படியுங்கள். அவர்களது பேச்சுகளைக் கேளுங்கள்.
வெற்றியாளர்களுடன் தொடர்பு வையுங்கள். சிறிது சிறிதாக உங்கள் ஆழ்மனம் பழைய பதிவுகளை மாற்றி புதிய தகவல்களைப் பதித்துக் கொள்ளும்.

## மனோசக்தி 4
(காலவெளியிலிருந்து வரும் தூது )



மனித உடலை விட மனித மனம் மிக முக்கியமானது. இயற்கையின் பௌதீக விதிகளை விட வெளியில் தெரியாத கண்ணுக்குப் புலனாகாத வேறு பல விதிகளும் மனித வாழ்க்கையின் மீது ஆதிக்கம் செலுத்துகிறது. இந்த பௌதீக விதிகளை மீறும்போது விபத்துக்கள் ஏற்படுவதைப்போல் கண்ணுக்கு புலனாகாத இந்த விதிகளை மீறும்போது மனிதன் தண்டிக்கப்படுவது குறித்து விஞ்ஞானி அலெக்ஸி கேரல் ஆய்வுசெய்து நோபல் பரிசையும் பெற்றார்.
உடல்,மனம், பிரபஞ்சம் ஆகிய மூன்றுக்கும் உள்ள தொடர்பினை விஞ்ஞானம் ஆராய்ந்து மனித இனத்துக்கு உணர்த்த வேண்டும் என்றும்,
மனம் என்பது நம் உடலிலுள்ள மூளையைப் பொறுத்த விஷயமாக மட்டுமில்லாமல், அது இயற்கையோடு பிரபஞ்சவெளியில் ஏதோ ஒரு வகையில் தொடர்பு கொள்ளும் விஷயமாகவும் இருப்பதை விஞ்ஞானத்தால் நன்கு உணர முடிந்தது.
மாபெரும் விஞ்ஞானிகளான நியூட்டனும், ஐன்ஸ்டைனும் அறிமுகப்படுத்திய பிரபஞ்சத்தை, அதோடு மனிதனுக்குள்ள தொடர்பை ஆராய்வது அவசியம் என்றும் அலெக்ஸி கேரல் விரும்பினார்.
மனிதனுக்கும் பிரபஞ்சத்திற்கும் உள்ள தொடர்பினை மெஞ்ஞானம் அல்லவா விவரிக்கிறது. அதை விஞ்ஞானிகளால் ஏற்றுக்கொள்ள முடியுமா ?

மனிதனைப் பற்றிய விஞ்ஞானத்திற்கும் இதர பொருட்களைப் பற்றிய விஞ்ஞானத்திற்கும் நிறைய வேறுபாடு இருக்கிறது. வான் ஆராய்ச்சி, இயந்திரவியல், பௌதீகம் , வேதியல் போன்ற விஞ்ஞானத்துறையில் கண்டறிந்த உண்மைகளை தெளிவாகவும், விளக்கமாகவும் கணித மொழியில் வெளியிட்டு விட முடியும்.

...ஆனால், மனிதனின் உடல் இயக்கம் பற்றியோ அல்லது அவனுடைய மனம் செயல்படுகின்ற தன்மையை பற்றியோ கணித மொழியில் வரையறுத்து சொல்வது முடியாத காரியமாகவே இன்னும் விஞ்ஞானம் பின்தங்கியே இருக்கிறது.
"உணர்வுக்கு மூளை என்பது ஒரு தூதன்" என்று கி.மு ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த 'ஹிப்பாக்ரிடஸ்' என்பவர் சொன்னார்.
மூளைக்கும் உடலைத் தாண்டி அப்பாற்பட்ட ஒரு உணர்வு இருப்பதை அவர் அப்போதே சொன்னார் .
மூளையும்,நரம்பு மண்டலமும் செயல்படுவதை எவ்வளவு நுணுக்கமான கருவிகளைக்கொண்டு கவனித்தாலும், "நினைவு உணர்வு" அது எங்கே இருக்கிறது என்பதை விஞ்ஞானத்தால் கண்டுபிடிக்க இயலவில்லை .
நாமாக 'உடல்' என்றும் 'ஆத்மா' என்றும் பிரித்துப் பேசுகிறோமே தவிர, உண்மையில் இரண்டுக்கும் ஒன்றுக்குள் ஒன்று மறைந்து இருக்கும் அம்சங்கள் போலவே தோன்றுகின்றன.
ஒருவேளை ஆத்மா பிரபஞ்சத்தின் ஓர் அம்சமாகவும் இருக்கலாம். பௌதிக விஞ்ஞானிகள் இதை அலட்சியப்படுத்தி இருக்கலாம்.' ஒளி ' என்கிற சக்தியைவிட 'ஆத்மா ' என்கிற விஷயம் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கலாம். பிரிந்து போன ஆத்மா ஒளியைப் பெற்று திரும்பவும் வந்திருக்கலாம் என்பதாக விஞ்ஞானிகள் நம்புகிறார்கள்.

اَوَمَنْ كَانَ مَيْتًا فَاَحْيَيْنٰهُ وَجَعَلْنَا لَهٗ نُوْرًا يَّمْشِىْ بِهٖ فِى النَّاسِ كَمَنْ مَّثَلُهٗ فِى الظُّلُمٰتِ لَـيْسَ بِخَارِجٍ مِّنْهَا‌ كَذٰلِكَ زُيِّنَ لِلْكٰفِرِيْنَ مَا كَانُوْا يَعْمَلُوْنَ
(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன. (அல்குர்ஆன் : 6:122)

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த வேத அறிவிப்பு (வஹீ) தூக்கத்தில் கண்ட உண்மைக் கனவுகளாகவே இருந்தது. அப்போது அவர்கள் எந்தக் கனவு கண்டாலும் அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போன்று (தெளிவாகவே) இருக்கும்.
பின்னர் தனிமையிலிருப்பது அவர்களின் விருப்பமாயிற்று. (எனவே) அவர்கள் ஹிரா குகையில் தனித்திருந்து தம் வீட்டாரிடம் திரும்பி வருவதற்கு முன் பல இரவுகள் வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டு வந்தார்கள்.
குகை கனவில் கண்ட அந்த பரிசுத்த ஆத்மா என்னும் ஜிப்ரயீல் (அலை) அவர்களை அடிவானத்தின் கடைக்கோடியில் அசனமிட்டு அமர்ந்திருப்பதை நிதர்சனமாக கண்டார்கள்.

وَلَقَدْ رَاٰهُ بِالْاُفُقِ الْمُبِيْنِ
அவர் திட்டமாக அவரை (ஜிப்ரீலை) தெளிவான அடிவானத்தில் கண்டார்.
(அல்குர்ஆன் : 81:23)
மேலும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: ஹாரிஸ் பின் ஹிஷாம் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! தங்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) எப்படி வருகின்றது? " என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "சில வேளைகளில் மணியோசையைப் போன்று என்னிடம் வேத அறிவிப்பு (வஹீ) வரும். இவ்வாறு வருவது எனக்கு மிகக் கடுமையான சிரமம் தரக்கூடியதாக இருக்கும். மணியோசை மூலம் அவர் (வானவர்) கூறியதை நான் மனனமிட்டுக் கொண்ட நிலையில் அது நிறுத்தப்படும். இன்னும் சில வேளைகளில் வானவர் ஒரு மனிதரைப் போன்று எனக்குக் காட்சியளித்து என்னுடன் உரையாடுவார். அப்போது அவர் கூறுவதை நான் நினைவிலிருத்திக் கொள்வேன்" என்று பதிலளித்தார்கள்.
மேலும் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்குக் கடுமையான குளிர்வீசும் நாளில் வேத அறிவிப்பு (வஹீ) வருவதை நான் பார்த்துள்ளேன். வேத அறிவிப்பு நின்றபின் அவர்களது நெற்றியிலிருந்து வியர்வை சொட்டும். (ஹதீஸ் புகாரி )

## மனோசக்தி 5

(இன்னும் அறியப்படாத மனிதன்)

மனித மனத்தை செல்களின் இயக்கத்தில் விஞ்ஞானம் தேடியபோது, மனிதன் எப்படி செயல்படுகிறான் என்பதை நிர்ணயித்து சொல்வது கடினமாகிறது.
செல்களில் இருப்பதாகச் சொல்லப்படும் "புரோட்டோபிளாசம்" என்பதுகூட செல் நியூக்ளியஸ்சிலும் இல்லை அதைச் சுற்றியுள்ள அமைப்பிலும் இல்லை. அதன் செயல்பாட்டை உணர முடியுமே தவிர, அது என்ன எனக் கண்டறிவது சாத்தியமாக இருக்கவில்லை.
நியூக்ளியஸ் என்பது ஒரு அதிசயமான ஒரு பொருள். அதன் ரசாயனத் தன்மை பற்றி விஞ்ஞானிகள் கூறுவதெல்லாம் வெறும் மயக்கமே.

நியூக்ளியஸ் என்னும் பொருளில் காணப்படும் 'ஜீன்கள்' மனித இனப்பாரம்பரியத்தின் பல போக்குகளை உள்ளடக்கியதாக இருக்கிறது. அதன் தன்மைகளை ஆராய்ச்சிகளின் மூலம் நம்மால் அறிய முடிகிறதே தவிர, அவை என்னவென்று அறிந்து கொள்வதற்கு வழி இல்லை.
அமைப்பில் செல்கள் ஏறத்தாழ ஒரே மாதிரியாக இருந்தாலும், மனிதனுக்கு மனிதன் அதன் குணாதிசயங்கள் வேறுபடுகின்றன. இந்த வேறுபாடு எதில் அடங்கி இருக்கிறது என்கிற விஷயம் புரியாத புதிராகவே இன்னும் இருக்கின்றது.

وَفِىْۤ اَنْفُسِكُمْ اَفَلَا تُبْصِرُوْنَ
உங்களுக்கு உள்ளாகவும் (பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அவைகளை) நீங்கள் ஆழ்ந்து கவனித்துப் பார்க்க வேண்டாமா? (அல்குர்ஆன் : 51:21)
உடலில் உள்ள ரத்தம் உட்பட அனைத்துமே முழுமையான மனித விளக்கத்திற்கு இன்னும் கட்டுப்படவில்லை. மனித உடலில் உள்ள பொருட்களைப் பற்றி உடல் ரீதியாக நம்மால் விளக்கம் தர முடிகிறதே தவிர, அவற்றின் செயல்பாடுகள் இந்த விளக்கத்தை தாண்டிய ஏதோ ஒன்று இருப்பதை நம்மால் உணர முடிகிறது.
அந்த ஒன்று என்ன ?
சீசரின் இலட்சியம், நியூட்டனின் ஆழ்ந்த சிந்தனை, பீத்தோவனின் சங்கீத ஞானம், கௌது நாயகம் (ரஹ்) அவர்களின் கடும்தவம், இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களின் மார்க்க ஞானம்... இப்படிப் பல பிரபலங்களின் சிறப்பான மனோ சிந்தனை, அந்த ஆற்றல் எங்கிருந்து எப்படித் தோன்றுகிறது என்பதற்கான விளக்கத்தை உடல் பற்றிய ரசாயன ஆராய்ச்சிகளால் இதுவரை தர இயலவில்லை.
ஒன்று மட்டும் விஞ்ஞான உலகம் கண்டு உள்ளது.அதுதான் உடலுக்குள் நிகழும் அத்தனை காரியங்களும் மிகத் துல்லியமாக திட்டமிட்டபடி ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு மிகத் தெளிவாக செயல்பட்டுக் கொண்டே இருக்கிறது.
"வானத்திலிருந்து பூமி வரையிலுள்ள காரியத்தை அவனே ஒழுங்குப்படுத்துகிறான்." குர்ஆன் ( 32: 05 )
மனிதன் உருவத்தில் சிறியவனாக இருக்கலாம். ஆனால் சிறப்பை வைத்து பார்க்கும்போது படைப்பில் அணுவுக்கும் நட்சத்திரத்திற்கும் இடைப்பட்ட நிலையில் அவன் இருப்பதாகவே கருத வேண்டும் .
ஏனெனில் நம்முடைய உடலில் உள்ள செல்களும், திசுக்களும் ஒருங்கிணைந்து வேலை செய்கின்ற விதமும் நாம் நினைவு உணர்வு உடலைத் தாண்டிய காலவெளியில் வைத்துள்ள அதன் தொடர்பும் படைப்பில் உன்னதமான நிலையை நாம் அடைந்திருப்பது தெளிவுபடுத்துகின்றன

ءَاَنْتُمْ اَشَدُّ خَلْقًا اَمِ السَّمَآءُ بَنٰىهَا.
(மனிதர்களே!) நீங்கள் பலமான படைப்பா? அல்லது வானமா? அவன்தான் அவ்வானத்தைப் படைத்தான்.(அல்குர்ஆன் : 79:27)

## மனோசக்தி 6

( டெலிபதி )



டெலிபதி (Telepathy) என்பது கிரேக்க சொற்களான tele (தூரம்) மற்றும் patheia ( உணர்வு) இருந்து வந்தது..
இது மனித மற்றும் பிற உயிரினங்களுடன் வார்த்தை மொழி , உடல் மொழி அல்லது எந்த ஒரு பிற உபகரணங்களின்றி ஆழ்மனத்தின் மூலம் தொடர்பு கொள்ளும் மனோசக்தி முறையாகும்.
"இப்பத்தான் உன் கூட பேச நினைச்சேன். அதற்குள் நீ போன் பண்றே " என்று நண்பர்களுக்குள் அடிக்கடி கூறுவார்கள். நம்முடைய எண்ணங்கள் அலைவடிவில் பரவி, அது நாம் யாரைப் பற்றி நினைக்கிறோமே அவர்களைச் சென்றடைகிறது. இதனை 'டெலிபதி' என்று கூறுவார்கள்.

பதின்வயது ஆங்கிலப் பெண்ணான ஜெம்மா ஹக்டன் ( Gemma Houghton) அன்று மிகுந்த பரபரப்புடன் காணப்பட்டாள். ஏதோ விபரீதம் நடக்கப்போவதாக அவள் உள்ளுணர்வு எச்சரித்துக் கொண்டே இருந்தது. இருந்தும் அது என்னவென்று முழுமையாக அவளுக்குப் புலப்படவில்லை. சில நிமிட யோசனைக்குப் பிறகு அவளின் இரட்டைச் சகோதரியான லீயன்னெவின் ( Leanne Houghton) முகம் அவள் மனதில் தோன்றி மறைந்திருக்கிறது. உடனே, தன்னுடன் பிறந்த இரட்டைச் சகோதரியான அவளுக்கு ஏதோ ஓர் ஆபத்து என்று அவளுக்குப் பொறி தட்டியிருக்கிறது.
மாடியில் அவளின் அறைக்கு ஓடியிருக்கிறாள். அங்கே, குளியலறை டப்பில் அரை மயக்க நிலையில் தண்ணீரில் மூழ்கிக்கொண்டிருந்தாள். சரியான நேரத்தில் தன் சகோதரியை வெளியே இழுத்து முதலுதவி செய்து ஆம்புலன்ஸ் வரவைத்து, உயிரைக் காப்பாற்றியிருக்கிறாள் ஜெம்மா.

இது 2009-ம் ஆண்டு டெலிக்ராஃப் தளத்தில் வெளியான செய்தி. இது ஓர் உதாரணம் மட்டுமே. இரட்டைப் பிறவிகள் பலர் இது போல தங்களுக்கு நேர்ந்த அனுபவங்களை நிறைய முறை விவரித்து ஆச்சர்யப்படுத்தியிருக்கிறார்கள். இதை ஆங்கிலத்தில் Twin Telepathy அதாவது "இரட்டையர்களின் டெலிபதி " என்கிறார்கள்.
காதலர்கள், தம்பதியர்கள் கூட, " நான் நினைச்சேன் நீ சொல்லிட்ட..என்னுடைய மனசுல இருக்கிறதை நீ புரிஞ்சிக்கிட்ட " என்பார்கள். அதுபோன்ற ஒரு டெலிபதியை இப்போது அறிவியல் பூர்வமாக நிரூபித்துள்ளனர். ஒருவர் மனதில் நினைக்கும் செய்தி ஒன்றை டெலிபதி மூலம் ஆயிரம் மைல்களுக்கு மேல் உள்ள ஒருவருக்கு பரிமாற முடியும் என்பதை சோதனை முயற்சியாக நாடு விட்டு நாடு அனுப்பி விஞ்ஞானிகள் நிரூபித்துள்ளனர். சமீபத்தில் இந்தியாவிலிருக்கும் ஒருவருக்கும், பிரான்ஸ் நாட்டில் இருப்பவருக்கும் இடையே புதிய தொழில்நுட்பம் மூலம் செய்தி அனுப்பி சோதனை செய்து பார்க்கப்பட்டது.
டெலிபதி மூலம் ஒரு மனிதன் மூளையிலிருந்து இன்னொருவரின் மூளைக்கு செய்தி அனுப்பியது உலகில் இதுதான் முதல் முறை.

சக்தி வாய்ந்த சாதனம் ஒன்றின் உதவியால் ஒருவர் மனதில் நினைக்கும் செய்திகள் மின் அலைகள் மூலம் பைனரியாக மாற்றப்பட்டு அனுப்பப்படுகின்றன.
இந்த செய்தி பல ஆயிரம் மைல்கள் தொலைவில் உள்ள மற்றொருவரின் மூளையில் சென்றடைந்து, பின்னர் அந்த பைனரி செய்தி எழுத்து வடிவில் கம்ப்யூட்டர் உதவியால் மாற்றப்படுகிறது.
இனி வரும் காலங்களில் தற்போது கம்ப்யூட்டர் அல்லது செல்போன் மூலம் வீடியோ சாட்டிங்கில் பேசிக்கொள்வது போல மனித மூளையுடன் நேரடியாக தகவல்களை பரிமாறிக்கொள்ளும் நாள் வெகுதொலைவில் இல்லை என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். இது குறித்து ஹாவார்டு பல்கலைகழக விஞ்ஞானிகள் ஆராய்ச்சியில் ஈடுபட்டு வருகின்றனர்.
நுட்பமான தொழில்நுட்பத்தை இதற்கு பயன்படுத்துகிறோம். இது ஒரு தொழில் நுட்பம்தான் மாயமில்லை மந்திரமில்லை என்று இது குறித்து ஆராய்சியாளர் குலியோ ருபினி கூறியுள்ளார். அப்போ இனி பைசா செலவில்லாமல் எஸ்.எம்.எஸ் அனுப்பும் நாள் வெகு தொலைவில் இல்லை.
எந்த அறிவியல் சாதனங்களும் கண்டுப்பிடிக்கப்படாத சுமார் 1400 வருடங்களுக்கு முன்பு ஒரு நெருக்கடியான நாளில் ...
ஒரு முறை உமர் (ரலி) அவர்கள் ஸாரியா என்பவரை தளபதியாக நியமித்து ஒரு படையை அனுப்பிவைத்தார்கள். அதன் பிறகு உமர் (ரலி) ஸஹாபாக்களிடம் பிரசங்கம் செய்துகொண்டிருக்கும்போது இடையில் "யா ஸாரியா மலை" என்று சப்தமிட்டார்கள். சென்ற படை வெற்றியோடு திரும்பியது .
வந்தவர்கள் உமர் (ரலி)அவர்களிடம் ஆச்சரியமான ஒரு செய்தியை கூறினார்கள். "அமீருல் முஃமினீன் அவர்களே..! நாங்கள் எதிரிகளை சந்தித்த ஆரம்பத்தில் தோல்வியை சந்தித்தோம். அந்நேரத்தில் ' யா ஸாரியா மலை' என்ற உங்களுடைய சப்தத்தை கேட்டோம். நாங்கள் எல்லோரும் மலையின் பக்கம் திரும்பினோம் வெற்றி பெற்றோம் என்று கூறினார்கள். நூல். மிஸ்காத். பாபு கராமத். பக்கம்.546.

## மனோசக்தி 7

(ஜீவராசிகளிடத்தில் டெலிபதி பரிசோதனை )

லண்டனில் வசிக்கும் மனோதத்துவ ஆராய்ச்சியாளரான டாக்டர் ராபர்ட் மாரிஸ் ஆச்சரியமான சற்று கொடூரமான சோதனை ஒன்றை நடத்திக் காட்டினார்.
மனோசக்திகளை துல்லியமாக எடுத்துக் காட்டிய விபரீதமான பரிசோதனை அது
மாரிஸ் சோதனைக் கூண்டிற்குள் 19 எலிகள் விடப்பட்டன அவற்றின் மீது 1,2,3.4,........என்று 19 எண்களை மார்க் செய்தார்
பிறகு ஒரிரு நாட்களுக்குப் பிறகு 2,4,6,8,10,12,14,..எண்களைக் கொண்ட எலிகளை எலக்ட்ரிக் மூலம் மின்சாரம் கொடுத்து கொல்லப்பட வேண்டும் என்று மனசை ஒரு முகப்படுத்தி கொல்ல ஆரம்பிக்கிறார்.
2, -அவுட் ,4_அவுட், 6 அவுட், 8 அவுட்...கொல்லப்பட்டவுடன் மீதி இருந்த 10,12,14,16,18, ஆகிய எலிகள் அச்சத்தால் நடுக்க ஆரம்பித்தன.அதிலும் குறிப்பாக 10 நம்பர் எழுதின எலி கூண்டிற்குள் நிலை கொள்ளாமல் ரொம்வும் பரபரப்பாக சுற்றிக் கொண்டு இருந்தது

அதே நேரத்தில் 1,3,5,7,9,11,13,15,17,19 நம்பர் எலிகள் சாதாரணமாகப் பயமில்லாமல் அதே கூண்டிற்குள் வளைய வந்தன
8 நம்பர் கொல்லப்பட்ட பிறகு அடுத்து 10 நம்பர் நான்தான் என்கிற கணிதமும் , லாஜிக்கும் எலிகளுக்குத் நிச்சயமாக தெரிய வாய்ப்பு இல்லை
ஆனால் டாக்டர் மாரிஸ் தன் மனதிற்குள் எடுத்திருந்த முடிவை சம்பந்தப்பட்ட எலிகள் ஏதோ உள்ளுணர்வினால் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.
மாரிஸ் இந்த சோதனையை நடத்திக் காட்டியவுடன் மேற்பார்வையிட்ட விஞ்ஞானிகள் குழு விளக்கம் சொல்ல முடியவில்லை நீங்கள் கூட சோதித்துப் பாருங்கள் நிச்சயமாக ஆழ் மன உள்ளுணர்வின் சக்தி உங்களை வியப்பில் ஆழ்த்தும் என்கிறார் டாக்டர் மாரிஸ்
............ ............. ................. ................ ....................
கடலில் மூழ்கித் தத்தளிக்கும் மனிதர்களை டால்பின்கள் தங்கள் முதுகில் சுமந்து கரை சேர்த்திருக்கின்றன. அதைவிட ஆச்சரியம் மருத்துவத்தால் குணப்படுத்தமுடியாத குறிப்பிட்ட சில நோய்களை டால்பின்கள் குணப்படுத்துவதாக டாக்டர்கள் சொல்கிறார்கள். அதுவும் டெலிபதி மூலமாக!
மேலை நாடுகளில் Dokin's syndrom போன்ற மூளை பாதிப்பு நோயால் பாதிக்கப்பட்ட குழந்தைகளுடன் டால்பின்களோடு சில மணி நேரம் விளையாடினால் அந்த குழந்தைகளின் உடல்நிலை பெருமளவு முன்னேற்றம் கண்டது நாளடைவில் முழுமையாக குணமே அடைந்தார்கள் .

க்ரிகெரி எல்வீன் என்ற விஞ்ஞானி முழுமையாக பார்வை இழந்த பெண்ணை டால்பின்களோடு விளையாடச் செய்தார். விவரிக்கமுடியாத நிம்மதியும் மகிழ்ச்சியும் அந்த பெண்ணுக்கு ஏற்பட்டது. சில நாட்களில் அவைகள் தண்ணீரில் அவருக்கு வழிகாட்ட ஆரம்பித்தன டெலிபதி மூலமாக !
தண்ணீரில் எறியப்பட்ட பந்து எங்கே இருக்கிறது என்பதைக்கூட அந்தப் பார்வை இழந்த பெண்ணால் கண்டுபிடிக்க முடிந்தது. நேரடியாக அந்த பந்தை நோக்கி நீந்திச் என்றாள்.
ஒருநாள் பார்வை இழந்த அந்த பெண்ணிற்கு டால்பின்கள் வித விதமான எண்ணங்களை மாற்றி மாற்றி காட்டின அவளின் மனக்கண்முன். இந்த மானசீகமான டால்பின்களின் அபிநயத்தை பார்வை இழந்த பெண்ணால் நன்கு உணர முடிகிறது .
ஜீவராசிகள் டெலிபதி மூலமாக தங்கள் இனத்தோடு மிக எளிதாக தொடர்பு கொள்கின்றன என்பதையும் விஞ்ஞான ஆய்வுகள் நிரூபிக்கப்பட்டுள்ளது .

## மனோசக்தி 8

( ஆதியில் ஒரு டெலிபதி அழைப்பு )
இறைத்தூதர் இப்ராஹீம் ( அலை) அவர்கள் தம் அடிமைப் பெண் ஹாஜரையும், புதல்வர் இஸ்மாயீல் ( அலை) அவர்களையும் மனித சஞ்சாரமற்ற பாரான் என்ற பள்ளத்தாக்கில் குடியமர்த்திவிட்டு, அல்லாஹ்விடம் :
رَبَّنَآ اِنِّىْۤ اَسْكَنْتُ مِنْ ذُرِّيَّتِىْ بِوَادٍ غَيْرِ ذِىْ زَرْعٍ عِنْدَ بَيْتِكَ الْمُحَرَّمِۙ رَبَّنَا لِيُقِيْمُوْا الصَّلٰوةَ فَاجْعَلْ اَ فْـِٕدَةً مِّنَ النَّاسِ تَهْوِىْۤ اِلَيْهِمْ وَارْزُقْهُمْ مِّنَ الثَّمَرٰتِ لَعَلَّهُمْ يَشْكُرُوْنَ:
“எங்கள் இறைவனே! நிச்சயமாக நான் என் சந்ததியாரிலிருந்தும், சங்கையான உன் வீட்டின் (கஃபாவின்) அருகே, விவசாயமில்லாத (இப்)பள்ளத்தாக்கில், எங்கள் இறைவனே! - தொழுகையை அவர்கள் நிலை நிறுத்தாட்டுவதற்காகக் குடியேற்றியிருகின்றேன்; எனவே (உலக) மக்களில் ஒரு தொகையினரின் இதயங்களை அவர்கள்பால் சாய்ந்திடச் செய்வாயாக! இன்னும் அவர்கள் நன்றி செலுத்தும் பொருட்டு கனிவர்க்கங்களிலிருந்து அவர்களுக்கு நீ ஆகாரமும் அளிப்பாயாக!” (அல்குர்ஆன் : 14:37)

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் திருக் கஃபாவை கட்டி முடித்தவுடன் , ஹஜ்ஜுக்கு வரும்படி ஜனங்களை அழைக்குமாறு அல்லாஹ்தஆலா கட்டளையிட்டான் .
அதற்கு நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் " மனித சஞ்சாரமற்ற இந்த பாலை வன பிராந்தியத்தில் என் சப்தம் அவர்களுக்கு எட்டாதே " என்று கூறினார்கள் .
" அறிவிப்பது உமது கடமை . அது கிடைக்குமாறு செய்வது என் பொறுப்பு "
உடனே ஸஃபா மலையின் மீது ஏறி இப்ராஹீம் (அலை ) அவர்கள் தமது இரு விரல்களையும் தம் இரு செவிப்புலன்களிலும் வைத்து , தெற்கு, வடக்கு, மேற்கு , கிழக்கு ஆகிய நான்கு திசைகளிலும் திரும்பி,
" ஜனங்களே ! அறிந்து கொள்ளுங்கள் : உங்களது றப்பு ஒரு ஆலயத்தைக் கட்டி , பழமையான அந்த ஆலயத்துக்கு வர வேண்டும் என உங்கள் மீது விதித்திருக்கிறான். உங்களது றப்புக்கு நீங்கள் பதிலளியுங்கள் . அவனது சங்கையான ஆலயத்திற்கு வந்து ஹஜ்ஜு செய்யுங்கள் .
ஏனெனில் , அதனைக் கொண்டு உங்களுக்கு அவன் சுவர்க்கத்தைப் பிரதிபலனாக அளிப்பான். இன்னும் (நரக ) நெருப்பை விட்டு உங்களுக்கு ஈடேற்றமளிப்பான் "
இச்சொல்லை வானுக்கும் . பூமிக்கும் இடையிலுள்ளவர்கள் செவியேற்றனர். இச் சப்தத்தைக் கேட்ட யாவரும் "லப்பைக், அல்லாஹும்ம் லப்பைக் " ( பணிந்தேன் . றப்பே பணிந்தேன்) என்று கூறி வராமல் இருக்கவில்லை . வருவார்கள் . அவர்கள் கால்நடையாகவும் உங்களிடம் வருவார்கள்; இளைத்த ஒட்டகங்களின் மீது வெகு தொலை

தூரத்திலிருந்தும் வருவார்கள். அதிக தூரத்தில் இருந்து வருவதால் களைப்பின் காரண ஏற்பட்ட இளைத்தல் ஆகும்.
وَاَذِّنْ فِى النَّاسِ بِالْحَجِّ يَاْتُوْكَ رِجَالًا وَّعَلٰى كُلِّ ضَامِرٍ يَّاْتِيْنَ مِنْ كُلِّ فَجٍّ عَمِيْقٍ ۙ
(அவரை நோக்கி) "ஹஜ்ஜுக்கு வருமாறு நீங்கள் மனிதர்களுக்கு அறிக்கையிடுங்கள். (அவர்கள்) கால்நடையாகவும் உங்களிடம் வருவார்கள்; இளைத்த ஒட்டகங்களின் மீது வெகு தொலை தூரத்திலிருந்தும் (உங்களிடம்) வருவார்கள். (குர்ஆன் : 22:27)
" ஒரு முறை பதில் கூறியவர் ஒரு முறை ஹஜ்ஜு செய்வார் . இரு முறை அல்லது அதிகமாகப் பதில் கூறியவர் இருமுறை அல்லது அதிகமாக ஹஜ்ஜு செய்வார் "
மனித சஞ்சாரமற்ற ஓர் இடத்தில் இருந்து நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் அழைத்தது எப்படி இதுவரை ஹஜ்ஜு செய்தவர்களுக்கும், இனிமேல் பிறந்து ஹஜ் செய்ய வரப்போகும் மனிதர்களுக்கும் எப்படி கேட்கும் ?
وَ اِذْ اَخَذَ رَبُّكَ مِنْ بَنِىْٓ اٰدَمَ مِنْ ظُهُوْرِهِمْ ذُرِّيَّتَهُمْ وَ اَشْهَدَهُمْ عَلٰٓى اَنْفُسِهِمْ اَلَسْتُ بِرَبِّكُمْ قَالُوْا بَلٰى ۛ شَهِدْنَا ۛ اَنْ تَقُوْلُوْا يَوْمَ الْقِيٰمَةِ اِنَّا كُنَّا عَنْ هٰذَا غٰفِلِيْنَ ۙ
(நபியே!) உங்களது இறைவன் ஆதமுடைய மக்களை அவர்களுடைய (தந்தைகளின்) முதுகுகளிலிருந்து அவர்களுடைய சந்ததிகளாக வெளியாக்கி, அவர்களையே அவர்களுக்கு சாட்சியமாகவும் வைத்து (அவர்களை நோக்கி)
"நான் உங்கள் இறைவனாக இல்லையா?" என்று கேட்டதற்கு,
"ஏன் இல்லை (நீதான் எங்கள் இறைவன்! என்று) நாங்கள் சாட்சியம் கூறுகிறோம்" என்று அவர்கள் கூறியதை (நீங்கள் அவர்களுக்கு) ஞாபகமூட்டுங்கள்.
ஏனென்றால் (இதனை ஒருவரும் எங்களுக்கு ஞாபகமூட்டாததால்) நிச்சயமாக நாங்கள் இதனை (மறந்து) விட்டுப் பராமுகமாகி இருந்தோம்" என்று மறுமை நாளில் சொல்லாமல் இருப்பதற்காகவும், (குர்ஆன் : 7:172)
ஆலம் அர்வாஹ் என்கிற உடல் இல்லாத ரூஹ் என்கிற ஆவியாக மட்டும் இருக்கிற அந்த ஆவிலோகத்தில் இறைவன் நம்மோடு பேசியதையும்,நாம் அவனுடன் பேசியதையும் , நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஹஜ்ஜ் செய்ய நம்மை அழைத்த அழைப்பையும் , அதற்கு பதில் கூற நம்மை வைத்ததையும் வேதத்தில் பதிவு செய்கிறான் இறைவன்.
அல்லாஹ் உடலால் நம்மை படைப்பதற்கு முன்பு ரூஹ் கொண்டு ஏற்கனவே படைத்து வைத்துள்ளான். நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் அழைப்பை அன்று எந்த ரூஹெல்லாம் கேட்டதோ, அந்த ரூஹெல்லாம் இன்று ஹஜ்ஜுக்கு செல்ல முடிகிறது .
5000 வருடங்களுக்கு முந்திய டெலிபதி அழைப்பு இன்னும் தொடர்ந்து கொண்டே கியாமத் நாள் வரை ஒலிக்கும். ஹஜ் பயணங்கள் தொடரும்.

